ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமொழி.

[மூன்றும் ஸம்புடம்.]



பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளால்

எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு
எளிய நடையில் தெளிய எழுதப்பட்ட
"திவ்யார்த்த தீபிகை" என்னும் உரையுடன்,

சென்னை:
M. R. கோவிந்தஸாமி நாயுடுவால்,
மாடல் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு
வெளியிடப்பட்டது.




சுக்லவரு,



1930.

ஸ்ரீமத். உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி விரிவுரை | 3 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை | 1 | 0 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை | 1 | 8 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | 1 | 4 |
| திருச்சந்த விருத்தம் விரிவுரை | 1 | 4 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | 1 | 0 |
| பெரிய திருமொழி விரிவுரை 1,2 பத்துகள் | 3 | 0 |
| ஷை 3, 4, 5 பத்துக்கள் | 3 | 8 |
| முதல் திருவந்தாதி விரிவுரை | 1 | 8 |
| இரண்டாந்திருவந்தாதி விரிவுரை | 1 | 4 |
| மூன்றாந்திருவந்தாதி விரிவுரை | 1 | 4 |
| நான்முகன் திருவந்தாதி விரிவுரை | 1 | 4 |
| திருவிருத்தம் விரிவுரை | (அச்சில்) | |
| திருவாசிரியம், பெரிய திருவந்தாதி விரிவுரை | 2 | 0 |
| திருவெழுகூற்றிருக்கையும், திருமடல்களும் ஷை | 2 | 4 |
| இராமாநுச நூற்றந்தாதி ஷை | 0 | 12 |
| கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 4 |
| ஸ்ரீ வசநபூஷணஸாரம் (மூலத்துடன் கூடியது.) | 1 | 0 |
| ஆசார்யஹ்ருதய ஸாரம் | (அச்சில்) | |
| முகுந்தமாலையின் தெளிவுரை | 0 | 6 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை | 0 | 12 |
| ஸுதர்சநசதகம் மிகத்தெளிவான தமிழுரை | 1 | 0 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் தெளிவுரை | (அச்சில்) | |
| சேஷாவதாரச் சிறப்பு | 0 | 2 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதகம் | 0 | 3 |
| ப்ரணவாதிகார தத்துவம் | 0 | 4 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | 0 | 2 |
| விதவாவபந வித்வம்ஸநம் | 0 | 4 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்த லிபி) ஸம்ஸ்க்ருத பாஷை | 0 | 6 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் ஷை ஷை | 0 | 4 |
| வேதாத்யயநஸர்வஸ்வம் ஷை ஷை | 0 | 12 |

தெலுங்குலிபிப் பிரசுரங்கள்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஸ்ரீவரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் இவற்றின் விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் | 1 | 8 |
| அதிமாநுஷஸ்தவத்தின் ஷை | 0 | 12 |
| திருப்பல்லாண்டு விரிவுரை | 0 | 4 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் | 0 | 3 |
| ரஹஸ்ய மூலம் | 0 | 6 |

இன்னும் பல புஸ்தகங்களும் உள்ளன.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி.

[பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

## ஆரும்பத்து—முதல் திருமொழி,

## வண்டுணு நறுமலர்.

அவதாரிகை:—இவ்வாழ்வார் வாடினேன்வாடி யென்று தொடங்கி முதல் திருமொழியிலே, தமக்குத் திருமந்திரம் லபித்தபடியைப்பேசி, அந்தத் திருமந் திரத்தின் அர்த்தத்தையும் கூடவே ஆராய்ச்சி செய்தருளித் திருமந்த்ரார்த்தத் துக்கு எல்லைநிலமான திவ்யதேசங்களிலே சென்று எம்பெருமானை ஸேவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருமந்திரத்தை வெளியிட்டருளின எம் பெருமான் எழுந்தருளி யிருக்குமிடமான ஸ்ரீபதரிகாச்ரமத்தைத்தேடி வடக்கே எழுந்தருளினவளவில் 'திருப்பிரிதி' என்னுந் திவ்யதேசம் நேர்பட, இரண்டாந் திருமொழியால் அதனை அனுபவித்து, அதன்பிறகு வதரியைவணங்கி, அதற் குப்பிறகு ஸ்ரீபதரிகாச்சிரமத்தில் ஸந்நிதிகொண் டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந் நாராயண மூர்த்தியைக் கைதொழுது, பிறகு ஸாளக்ராமம், நைமிசாரணியம், சிங்கவேள்குன்றம், திருவேங்கடம் என்னுந் திருப்பதிகளை யாத்திரையடைவே மங்களாசாஸநஞ் செய்து அவ்வளவோடு வடநாட்டுத் திருப்பதிகளின் அநுப வத்தைத் தலைக்கட்டி, அதன்பிறகு இரண்டாம்பத்தின் இரண்டாந் திருமொழி முதலாகத் தொண்டைநாட்டுத் திருப்பதிகள் சிலவற்றை யநுபவிக்கத்தொடங்கி, ஒன்பதாந் திருமொழியோடே அவ்வநுபவத்தைத் தலைக்கட்டி, அதன்பிறகு திருக்கோவலூர் திருவயிந்திரபுரமென்னும் நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டை யும் இரண்டு திருமொழிகளாலநுபவித்து, அதன்மேல் மூன்றும் பத்தின் இரண் டாந் திருமொழி முதலாகச் சோழநாட்டுத் திருப்பதிகளை யநுபவிக்கத்தொடங் கித் தில்லைத்திருச்சித்திரகூடம், காழிச்சீராமவிண்ணகரம், திருவாலி, திருநாங் கூர்ப் பதினொருதிருப்பதிகள், திருவிந்தளூர், திருவெள்ளியங்குடி, புள்ளம் பூதங்குடி, கூடலூர், திருவெள்ளறை, திருவரங்கம், திருப்பேர்நகர், நந்திபுர

விண்ணகரம் ஆகிய இத்திருப்பதிகள் வரையில் அநுபவித்துத் தலைக்காட்டினார் இத்திலே ஐந்தாம் பத்து முடிய.

இனி, திருவிண்ணகர் என்னுந் திருப்பதியை மூன்று திருமொழிகளால் மங்களாசாஸநஞ் செய்யத் திருவுள்ளம்பற்றி, அவற்றுள் முதல் திருமொழியாலே 'திருவிண்ணகரப்பனே! ஸம்ஸாரத்தில் எனக்குப் பிறந்திருக்கும் அருசி வாசாம கோசரம்; இனி இந்நிலத்தில் என்னை நீ வைத்திருக்கத்தகாது' என்று தமக்கு பகவத்விஷயத்திலுண்டான ருசியையும் ஸம்ஸார வாழ்ச்சியிலுண்டான அருசியையும் பரக்க விண்ணப்பஞ் செய்கிறார். .... .... .... *

வண்டுணு நறுமலரிண்டை கொண்டு
பண்டைநம் வினைகெடவென்று * அடிமேல்
தொண்டருமமரரும் பணியநின்று, அங்
கண்டமோடகலிடமளந்தவனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (க)

| | | | |
|---|---|---|---|
| அமரரும் | தேவர்களும் | அகல் இடம் | பரந்த பூமியையும் |
| தொண்டரும் | (மற்றுமுள்ள) பக்தர்களும் | அளந்தவனே | (திருவடிகளால் வியாபித்து) அளந்துகொண்டவனே! |
| நம் பண்டை வினை கெட என்று | 'நமது முன்னைத்தீவினைகளெல்லாம் தொலைய வேணும்' என்று மனோரதித்து, | ஆண்டாய் | அடியேனை ஆண்டுகொண்ட பெருமானே! |
| வண்டு உணும் நறு மலர் இண்டை கொண்டு | வண்டுகள் மதுவுண்ணப் பெற்ற மணம் மிக்க பூக்களினாலாகிய மாலைகளை ஏந்திக்கொண்டு | விண்ணகர் மேயவனே | திருவிண்ணகரில் நித்ய வாஸம் செய்பவனே! |
| அடி மேல் பணிய நின்று | திருவடிகளிலே விழுந்து ஸேவிக்கும்படியாக நின்று | உன்னை காண்பது ஓர் அருள் | உன்னை நான் ஸேவிக்கும் படியான க்ருபையை |
| அங்கு | அப்போதே | எனக்கு அருளுதி எல் | என்விஷயத்தில் செய்தருள்வாயாகில் |
| அண்டமொடு | அண்டங்களையும் | மனை வாழ்க்கையை | (இனி) ஸம்ஸார வாழ்க்கையை |
| | | வேண்டேன் | விரும்பமாட்டேன். |

* * *—இவ்வுலகமெல்லாம் பிறர் வசப்பட்டிருக்கையில் தன் திருவடிகளைப் பரப்பி இலச்சினைபட நடந்து அவற்றை ஆட்படுத்திக் கொண்டதுபோலவே அடியேனையும் ஆட்படுத்திக்கொள்ள வேணும்; உனது ஸ்வரூபரூபகுண விபூதிகளையெல்லாம் அடியேன் ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கும்படி அருள்புரிய வேணும்; இவ்வளவே அடியேன் வேண்டுவது; இப்பாழும் ஸம்ஸாரத்தில் அடியேனுக்கு இனி வாழ்வுவேண்டா; திருவிண்ணகரிலே வந்து நித்ய ஸந்நிதி பண்ணியிருப்பது ஸபலமாகும்படி இத்தனையருள்செய்யவேணும் என்றாராயிற்று.

உலகளந்தபோது "பல தேவரேத்தப்படிகடந்தான்" என்கிறபடியே பல

தேவர்கள் புஷ்பங்களைத் திருவடிகளிற் பணிமாறி வழிபாடுகள் செய்தமை முன்னடிகளிற் கூறப்பட்டது. ‘வண்டுணும்’ என்ற அடைமொழியினால் மது வெள்ள மொழுகப்பெற்ற மலர்கள் என்றதாம். உணும்—உண்ணும்; தொகுத்தல். இண்டை—பூமாலை. அருளுதியேல்—அடியேன் பக்கல் அருள்செய்யத் திருவுள்ளமாகில், எனக்கு உன்னைக் காண்பதோரருள் (செய்யத்தக்கது); இவ்வருளையன்றி மனைவாழ்க்கையை வேண்டேன் என்று முரைப்ப.

இத்திருமொழி வஞ்சிவிருத்தத்தினா லமைந்தது. இறுதிப்பாட்டொழிந்த ஒவ்வொரு பாட்டிலும் “ஆண்டாய்....மேயவனே” என்ற அளவடியிரண்டும் தனிமகுடம். இவ்வுண்மைபுணராமல் ஒவ்வொரு பாட்டும் இரண்டடியென்றும் ‘ஆண்டாயுன்னை’ இத்யாதியான இரண்டடிகள் சேர்ந்து நான்கடியாகின்றதென்றும் பலர் கருதுவது பொருந்தாது. அத்யாபகர்கள் நான்கடிகளை இரண்டடியாகக்கொண்டு இயல் ஸேவித்துவருவது முன்னோர் முறை. .... (௬)

அண்ணல்செய் தலைகடல் கடைந்து அதனுள்
கண்ணுதல் நஞ்சுண்ணக் கண்டவனே *
விண்ணவ ரமுதுண வமுதில் வரும்
பெண்ணமு துண்ட வெம்பெருமானே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (௨)

அண்ணல் செய்து — ‘தானே ஸர்வஸ்வாமி’ என்பதைக் காட்டிக் கொண்டு
அலை கடல் கடைந்து — அலையெறிகின்ற கடலைக் கடைந்து
அதனுள் நஞ்சு — அக்கடலினின்று தோன்றின காலகூட விஷத்தை
நுதல் கண் — நெற்றிக்கண்ணனான ருத்ரன்
உண்ண — உட்கொள்ளும்படியாக
கண்டவனே — நியமித்தவனே!,
விண்ணவர் — தேவர்கள்
அமுது உண — அம்ருதபானம் பண்ணுகிற்க
அமுதில் வரும் பெண் அமுது — அந்த அம்ருதத்திலிருந்து ஸாரமாகக் கிளர்ந்த பிராட்டியாகிற அம்ருதத்தை
உண்ட — அநுபவிக்கப் பெற்ற
எம் பெருமானே!—;
ஆண்டாய் * * * வேண்டேன்—.

* * *—துர்வாஸமாமுனிவர் தாம் தேவேந்திரனுக்கு அன்புடன் அளித்திட்ட பூமாலையை அவன் அலக்ஷியஞ் செய்தது கண்டு ‘இப்படி செல்வச்செருக்குற்ற உன்னுடைய செல்வமெல்லாம் கடலில் ஒளிந்து போகக்கடவன’ என்று சபிக்கவே அப்படியே போய்விட, அசுரர் வந்து பொருது அமரரை வென்றிட்டனர்; பிறகு தேவர்களெல்லாரும் திரண்டு வந்து எம்பெருமானைச் சரணமடைய, திருமால் திருவருள்கூர்ந்து கடல்கடைந்து அமுதமளித்து வாழ்வித்தனன் என்பது ப்ரஸித்தம். கடல் கடைகையில் காலகூட விஷம் கடலினின்று தோன்றிற்றாக, அதனை ஆர்க்குக் கொடுப்பதென்று பார்க்கையில் அக்ராதாம்பூலம்

வேண்டிநிற்கும் சிவபிரானுக்கே கொடுப்பது தகுதியென்று துணிந்து அப்பிரானுக்கு உண்ணக்கொடுத்த வரலாறு முதலடியிற் கூறப்பட்டது.

அக்கடலில் புறவமுது, உள்ளமுது என இரண்டு அமுதமுண்டாயின; புறவமுதாகிய உப்புச்சாறு தேவர்கட்களிக்கப்பட்டது; "சீதக்கடல் உள்ளமுது" எனப்பட்ட பிராட்டியாகிய உள்ளமுது தன்னால் ஸ்வீகரிக்கப்பட்டது என ரஸோக்தியாக அருளிச்செய்வது இரண்டாமடி.

'ஆண்டாயுன்னைக்காண்பதோர்' என்ற தொடரை ஒன்பது பாட்டிலுஞ் சேர்த்து அநுஸந்திப்பது. பகவத்விஷய ப்ராவண்யத்திலும் விஷயாந்தர விரக்தியிலும் தமக்குள்ள உறுதியை ஒருகாலுக்கு ஒன்பதின்காலாக உரைக்கிறபடி.

அண்ணல் செய்து = தன்னுடைய ஸ்வாமித்வத்தைப் பிரகாசிப்பித்துக் கொண்டு என்றாவது, தன்னுடைய ஔதார்யத்தைக் காட்டிக்கொண்டு என்றாவது, பொருள் கொள்ளலாம். அலைகடல் = அலைகளையுடைய கடல் என்றால் தூர வொற்றுமிகும்; அலையெறிகின்ற கடல் என்க. சிவனுக்கு நெற்றியில் மூன்றாவது கண் உள்ளதனால் 'நுதற்கண்' எனப்படுவான். .... .... (உ)

குழல்நிற வண்ண நின்கூறுகொண்ட
தழல்நிற வண்ணன் நண்ணார் நகரம்
விழ * நனிமலை சிலைவளைவுசெய்து, அங்
கழல்நிற வம்பது வானவனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (ங)

| | |
|---|---|
| குழல் நிறம் வண்ண | திருக்குழலின் நிறம் போன்று நீலமான நிறத்தையுடையவனே!, |
| நின் கூறு கொண்ட | உனது திருமேனியிலே ஒரு பகுதியை இடமாக வுடையனும் |
| தழல் நிறம் வண்ணன் | நெருப்பின் நிறம்போன்ற நிறமுடையனுமான ருத்ரனால் |
| நண்ணார் நகரம் விழ | பகைவரான அசுரர்களின் முப்புரம் முடியும்படியாக |
| நனி மலை | மிகப் பெரிதான மேருமலை போன்ற |
| சிலை | வில்லை |
| வளைவு செய்து | வளைத்து |
| அங்கு | அதுதன்னிலே |
| அழல் நிறம் அம்பு அது ஆனவனே | நெருப்புப்போன்ற அம்பில் ஆவேசித்து நின்றவனே! |
| ஆண்டாய் * * * வேண்டேன்—. | |

* * *—முற்காலத்தில் தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம் பெற்று வானத்துப் பறந்துசெல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களை யடைந்து மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த விடங்களிற் பறந்து சென்று பலவிடங்களின் மேலும் இருந்து அவ்விடங் களைப் பாழாக்கிவருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர்

முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்த்ரஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில்நாணியாகவும் கொள்ள, வாயுவாகிய சிறகமைந்த அக்நியை முனையாகவுடைய அம்பின் ஸ்தானத்திலே விஷ்ணு நிற்க, இவ்வளவு அமைப்புடனே யுத்தஸந்நத்தனாய்ச்சென்று போர் தொடங்கும்போது சிரித்து அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன்—என்பது சிவபிரான் திரிபுரமெரித்த வரலாறு. இந்த த்ரிபுர ஸம்ஹாரம் செய்தது சிவனேயாகிலும் இது நிறைவேறியதற்கு முக்கிய காரணம் திருமாலே யென்க. மஹாபாரதத்தில் கர்ணபருவத்தில் இருபத்தினான்கா மத்தியாயம் முதலாக நான்கு அத்யாயங்களில் இவ்வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது; அங்கு "சிந்தயித்வா ஹரிம் விஷ்ணுமவ்யயம் யஜ்ஞவாஹநம்। ஶரம் ஸங்கல்பயாம் சக்ரே விஶ்வகர்மா மஹாமநா:" என்றும், "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:। தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம் ஸ விஷேஹே மஹேஶ்வர:." என்றுமுள்ள ச்லோகங்கள் காண்க. எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாக இருந்ததனாலும் அம்பாக அமைந்ததனாலும் இக்காரியம் எளிதாகக் கைகூடிற்றென்கை. திருவாய்மொழியில் "புரமொரு மூன்றெரித்து" (1—1—8.) என்று த்ரிபுரதஹநத்தை எம்பெருமானுடைய காரியமாகவே சொல்லிற்றும் இதுபற்றியே.

குழல்நிறவண்ண—கரிய திருமேனியுடையாய்! என்றபடி. நின்கூறு கொண்ட தழல்நிற வண்ணன்=எம்பெருமானுடைய ஸௌசீல்யகுணத்தைப் பற்றிப் பேசும்போது தாமஸ தெய்வமான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனென்று ஆழ்வார்கள் ஈடுபட்டருளிச்செய்வது வழக்கம்; திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் "பஶ்யைகாதஶ மே ருத்ராந் தக்ஷிணம் பார்ஶ்வமாஶ்ரிதாந்=பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்ம வசநத்தை எடுத்துக் காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். "தபஸா தோஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா। ஸ்வபார்ஶ்வே தக்ஷிணே ஶம்போர் நிவாஸ: பரிகல்பித:=தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா, ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ: பரிகல்பித:." என்றொரு வசநமும் இருபத்தினாலாயிரப்படியிற் காண்பதுண்டு. [சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தாந மமைத்துக் கொடுத்தருளினன்—என்பது இதன் பொருள்.]

"ஏறாளுமிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளுந்தனியுடம்பன்" என்றும், "அக்கும் புலியினதளுமுடையா ரவரொருவர் பக்கம்நிற்க நின்ற பண்பர்" என்றும் ("நின்கூறுகொண்ட தழல்நிறவண்ணன்" என்று இவ்விடத்

னும்) இங்ஙனே ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப்பற்றி யிருக்கிறார்களோ? என்றொரு சங்கை பிறக்கக்கூடும்; இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன: கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப்பாசுரத்தின் வியாக்கியானங்களிலே—"ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே யிருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹாகுணமாகையாலே ஆழ்வார்கள் எப்போது மொக்க அருளிச்செய்துகொண்டு போருவர்கள்; ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கனக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஒரோ கலஹங்களிலே அடையவளைத்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந்தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமாபோலே." என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

உன்னிடத்தில் உள்ளன்பு இல்லாத தாமஸர்களிடத்திலும் ஸௌசீல்யங்காட்டி அபிமானித்துக் காரியங்கள் செய்தருளுகிறாயே, பரமபக்தனான அடியேன்பால் திருவுள்ளமிரங்கி உன்னைக்காண்பதோரருள் அருளலாகாதோ? என்றவாறு. .... .... .... .... .... .... (௩.)

நிலவோடு வெயில்நில விருசுடரும்
உலகமு முயிர்களு முண்டொருகால் *
கலைதரு குழவியி னுருவினையாய்
அலைகட லாலிலை வளர்ந்தவனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஒரு கால் | (பிரளயகாலமாகிற) ஒரு ஸமயத்தில், | கலைதரு | மிகச்சிறியவடிவுகொண்ட |
| நிலவொடு வெய்யில் நிலவு இரு சுடரும் | நிலாவோடும் வெய்யிலோடும் கூடி ஸஞ்சரிக்கிற சந்திரஸூரியர்களையும் | குழவியின் உருவினை ஆய் | குழந்தைரூபியாய்க் கொண்டு |
| உலகமும் | உலகங்களையும் | அலை கடல் | அலையெறிகின்ற கடலினிடையே |
| உயிர்களும் | (அங்குள்ள) பிராணிகளையும் | ஆல் இலை வளர்ந்தவனே | ஆலந்தளிரில் கண்வளர்ந்தருளினவனே! |
| உண்டு | திருவயிற்றிலே வைத்து நோக்கி | | ஆண்டாய் * * * வேண்டேன்—. |

* * *—திருவிண்ணகர்மேயவனே! ஸம்ஸார வாழ்க்கையில் வெறுப்புற்று உன்னைக் காண்பதில் காதல்கொண்டுள்ள எனக்கு அருள்புரிவது உனக்கு அரு

மையோ? அரிய பெரிய காரியங்களையும் எளிதாகச் செய்தவனல்லையோ நீ; சந்த்ரிகையோடு கூடின சந்திரன், ஆதபத்தோடுகூடின ஆதித்யன் முதலான எல்லாத் தேசுப்பொருள்களையும் பிரளய வெள்ளங்கொள்ளாமே திருவயிற்றில் வைத்துக்காத்து ஒரு சிறு குழந்தையாய்க்கொண்டு அவ்வெள்ளத்தினிடையே தோன்றியதோர் ஆலமரத்தினிலையிலே துயில்கொண்டனையே; இவ்வரிய காரியம் உனக்கு எளிதானபோது எனக்கு அருள்செய்வதுதான் அரிதோ? என்றவாறு.

கலைதருகுழவி=' கலா ' என்னும் வடசொல் 'பதினாறில் ஒருபங்கு' என்று பொருள்படும் முகத்தால் மிகச்சிறுமையை உணர்த்திற்றாகும்: இளங்குழந்தை என்றபடி. இனி, உலகத்திலுள்ள குழந்தைகள் போலன்றியே அறிவுமிக்க குழந்தை என்னவுமாம்; அப்போது சாஸ்த்ரமென்னும் பொருளதான 'கலா' சப்தம் இலக்கணையால் அறிவுக்கு வாசகமாகும். .... .... (ச)

பாரேழு கடலேழு மலையேழுமாய்ச்
சீர்கெழு மிவ்வுலகேழு மெல்லாம் *
ஆர்கெழு வயிற்றினி லடக்கிநின்று அங்கு
ஓரெழுத்தோருருவானவனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (ரு)

| | |
|---|---|
| பார் எழும் | எழுதீவுகளோடு கூடிய பூமிக்கும் |
| கடல் எழும் | ஸப்தஸாகரங்களுக்கும் |
| மலை எழும் | ஸப்தகுலாசலங்களுக்கும் |
| ஆய் | நிர்வாஹகனாயிருந்து கொண்டு |
| அங்கு | அப்படிப்பட்ட பிரளயம் வந்த காலத்து, |
| சீர் கெழும் | அழகு மிக்க |
| இ உலகு எழும் எல்லாம் | இவ்வுலகங்களேழையும் |
| ஆர் கெழு வயிற்றினில் | அழகுமிக்க திருவயிற்றிலே |
| அடக்கி நின்று | அடக்கிவைத்திருந்தவனாய் |
| ஓர் எழுத்து ஓர் உரு ஆனவனே | அகாரத்திற்கு முக்கியமான பொருளாயிருப்பவனே! |

ஆண்டாய் * * * வேண்டேன்—.

* * *—எம்பெருமானுடைய அகடிதகடநா ஸாமர்த்தியத்தையே மீண்டு மருளிச்செய்கிறார்.

பாரேழு கடலேழு மலையேழுமாய்=" நாவலந்தீவே இறலித்தீவே, குசையின்தீவே கிரவுஞ்சத்தீவே, சான்மலித்தீவே தெங்கின்தீவே, புட்கரத்தீவே யெனத்தீவேழே, எழ்பெருந்தீவிற்கு மேழ்பொழிலெனப்படும்" என்ற திவாகர நிகண்டின்படி எழுவகைப்பட்ட தீவுகளையுடைத்தான பூமி என்று பொருள்படப் 'பாரேழும்', எனப்பட்டது.

கடலேழும்=" உவரோடு கரும்பு மது நெய் தயிர் பால் புனல், மாகடலேழென வகுத்தனர் புலவர்" என்னப்பட்ட ஸப்தஸாகரங்களும்.

மலையெழும்=“ இமயமந்தரம் கைலை வடவிந்தம், நிடதமேமகூடம் நீலகிரியெனக், குலவரையேழுங் கூறுமென்ப ” என்னப்பட்ட ஸப்தகுலபர்வதங்களும். ஆய் என்றது இவற்றுக்கெல்லாம் எம்பெருமானே நிர்வாஹகனென்கை. இவற்றின் ஸ்திதியெல்லாம் எம்பெருமானுடைய ஸங்கல்பாதீநமென்றபடி.

ஓரெழுத் தோருருவானவனே !=1. “ அகரமுதலவெழுத் தெல்லாம் ” என்றபடியே எல்லாவெழுத்துகட்கும் மூலமான யாதொரு அகாரமுண்டு, அதற்குப் பொருளானவனே ! என்கை. அகாரமானது எழுத்துகட்கெல்லாம் மூலகாரணமாயிருப்பதுபோலே உலகுகட்கெல்லாம் மூலகாரணமாயிருப்பவனே ! என்பதும் விவக்ஷிதம். .... .... .... .... (ரு)

கார்கெழு கடல்களும் மலைகளுமாய்
ஏர்கெழு முலகமுமாகி * முத
லார்களு மறிவரு நிலையினையாய்ச்
சீர்கெழு நான்மறை யானவனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (சூ)

| | |
|---|---|
| கார் கெழு | மேகங்கள் மிகப்படிந் திருக்கப் பெற்ற |
| கடல்களும் | ஸமுத்ரங்களுக்கும் |
| மலைகளும் | மலைகளுக்கும் |
| ஆய் | தாரகனும் |
| ஏர் கெழும் | ஒழுங்குபட்டிருக்கிற |
| உலகமும் ஆகி | லோகங்களுக்கும் நிர்வாஹகனும் |
| முதலார்களும் | பிரதாநரான பிரமன் முதலியோர்க்கும் |
| அறிவு அரு நிலையினை ஆய் | அறியமுடியாத ஸ்வபாவத்தை யுடையவனும் |
| சீர் கெழு நால் மறை ஆனவனே | சிறந்த நான்குவேதங்களுக்கும் ப்ரதிபாத்யனுயிருக்கும் பெருமானே !, |
| ஆண்டாய் * * * வேண்டேன்—. | |

* * *—மேகங்கள் நீர்கொண்டெழுவதற்காகப்படியும் கடல்களையும் மலைகளையும் ஸ்வஸங்கல்பத்தால் நிலைநிற்கச் செய்தருள்பவனே !, ஸகலசராசரங்களையும் சரீரமாகக் கொண்டுள்ளவனே !, பிரமன் சிவனிந்திரனென்று பெருமதிப்பாகச் சொல்லப்படுகின்ற தேவர்களாலும் ‘இப்படிப்பட்டது, இவ்வளவுடையது’ என்று அளவிட்டறியமுடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடையவனே !, நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுமவனே ! நீ இப்படிப்பட்டவனு யிருக்கிறுயென்பதை நான் எட்டிலே கேட்டுப்போவதல்லாமல் உன்னுடைய அஸாதாரணுகாரத்தை நான் ஸாக்ஷாத்கரிக்கும்படி. என்பக்கலிலே அருள்செய்வாயாகில் நானும் மெய்யே இந்த ஸம்ஸாரவாழ்க்கையை அருவருத்தேனுவேன் என்ருராயிற்று.

நம்மைப்போலே ஜனனமரணங்களை யுடையரான பிரமன் சிவன் முதலிய தேவர்களை ‘முதலார்களும்’ என்ற சொல்லாற் கூறியது—அவர்களை முழுமுதற்

1. திருக்குறள்—1.

கடவுளாக நினைத்துப் போற்றும் பிறரது கொள்கையாலென்ப. இனி, "முதலாவார் மூவரே" என்ற பொய்கையார் ஸ்ரீஸூக்திகொண்டு மென்னலாம்.

நான்மறையானவனே !=நால்வேதங்களையும் பயந்தருளினவனே! என்னவுமாம். .... .... .... .... .... .... (கூ)

உருக்குறு நறுநெய்கொண் டாரழலில்
இருக்குறு மந்தணர் சந்தியின்வாய் *
பெருக்கமோடமரர்க ளமர நல்கும்
இருக்கினி லின்னிசை யானவனே *
ஆண்டா யுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (எ)

| | |
|---|---|
| இருக்கு உறும் அந்தணர் | வேதம்வல்லவரான பிராமணர்கள் |
| அமரர்கள் | தேவதைகளினால் |
| பெருக்கமொடு அமர | (தாங்கள்) செல்வம்பெருகி வாழும்படியாக |
| சந்தியின் வாய் | ஸந்தியாகாலந்தோறும் |
| உருக்குறு நறு நெய் கொண்டு | உருக்கின மணம்மிக்க நெய்யைக் கொண்டு |
| ஆர் அழலில் | ஆர்ந்த அக்னியில் |
| நல்கும் | ஹோமம் பண்ணுவதற்குறுப்பான |
| இருக்கினில் | வேதத்திலுள்ள |
| இன் இசை ஆனவனே | பிரணவத்திற்குப் பிரதிபாத்யனானவனே ! |
| ஆண்டாய் * * * வேண்டேன்—. | |

* * *—வேதமோதியுணர்ந்த அந்தணர்கள் ஸந்த்யாகாலந்தோறும் உருக்கின நெய்யைக் கொண்டு அக்நியில் ஹோமம் செய்வதற்கு மந்திரமாகிய யாதொரு வேதமுண்டு, அதன் உறுப்பாகிய பிரணவத்தினால் ப்ரதிபாத்யனா யுள்ளவனே !.

வேதத்தில் "வாயவ்யஂ ஶ்வேதமாலபேத பூதிகாம:" என்றும் "சித்ரயா யஜேத பஶுகாம:" என்றும் "பார்ஹஸ்பத்யஂ ஶிதிப்ருஷ்டமாலபேத க்ராமகாம:" என்றும் "வைஶ்வதேவம் பஹுரூபமாலபேதாந்நகாம:" என்றும் ஒவ்வொரு பலனுக்கும் ஸாதநமாக யஜ்ஞங்கள் சொல்லப்பட்டுள்ளன; அவற்றை விதிப்படி அனுட்டிப்பவர்கள் அப்பலன்களைப் பெற்று மகிழ்கின்றனர்; இதுபற்றியே 'பெருக்கமோடு அமர நல்கும்' எனப்பட்டது. பெருக்கமாவது செல்வம்; செழிப்புமாம். 'அமரர்கள்' என்றது அமரர்களினால் என மூன்றும் வேற்றுமைப் பொருள்பட நின்றது. இந்திரன் வருணன்முதலிய தேவர்களினால் தாங்கள் செழிப்புற்று அமர்வதற்காக அவர்களை உத்தேசித்து ஹோமஞ்செய்கிறவென்றபடி.

இருக்கு='ருக்' என்ற வடசொல்விகாரம்; இச்சொல் வேதங்களுக்குப் பொதுப் பெயரும் ஒருவேதத்துக்குச் சிறப்புப்பெயருமாக வழங்கும். சந்தி—ஸந்த்யா.

இன்னிசையானவனே—‘இசை’ என்னுஞ் சொல் லக்ஷிதலக்ஷணையால் பிரணவத்தைச் சொல்லும்; எங்ஙனேயெனில், இசையாவது ஸ்வரம்; ஸ்வர மென்பது பிரணவத்திற்கும் வாசகம்; “யவேதாதௌ ஸ்வரஃ ப்ரோக்தஃ” என்றது காண்க. “ஓங்காரோஹமவாநு விஷ்ணுஃ” என்றது முணர்க. .... (எ)

காதல்செய் திளையவர் கலவிதரும்
வேதனை வினையது வெருவுதலாம் *
ஆதலி னுனதடியணுகுவன் நான்
போதலர் நெடுமுடிப் புண்ணியனே *
ஆண்டாயுனைக்காண்பதோர் அருளெனக் கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| போது அலர் நெடு முடி | உரியகாலங்களிலுண்டான புஷ்பங்களையணிந்த நீண்ட திரு வபிஷேகத்தையுடைய | கலவி அது | கலவிக்கு அடியாகவுள்ள |
| புண்ணியனே | பரிசுத்தனே!, | வினை | கருமமானது |
| இளையவர் | இளம்பெண்கள் | வெருவுதல் ஆம் | (எனக்கு) அச்சந்தருவதாக வுள்ளது; |
| காதல் செய்து | அன்பு செய்து | ஆதலில் | ஆகையினால், |
| தரும் | கொடுக்கிற | உனது அடி நான் அணுகுவன் | (அந்தக் கருமந்தொலையும் படி) உனது திருவடி களை நான் வந்து பணிகின்றேன்; |
| வேதனை | துக்கரூபமான | ஆண்டாய் * * * வேண்டேன்— | |

* * *—நான் செய்த தீவினைகளை நினைக்கப்புகுந்தால் எனக்கு உடல் நடுங்கு கின்றது; அநாதிகாலங்களிலே தொடங்கி மூட்டும்படியான விஷயாந்தர போகங் களுக்குக் காரணமான தீவினைகள் பல்லாயிரம் நான்செய்துளே னாதலால் அத் தீவினைகளின் பலனாக இன்னமும் நாம் எவ்வளவு வேதனைகளை யநுபவிக்க நேருமோவென்று மிகவும் அஞ்சாநின்றேன்; திருவிண்ணகர்மேயவனே! உனது திருவடிகள் அஞ்சினார்க்குப் புகலிடமாதலாலும், நீ தானும் ஆச்ரிதரக்ஷணம் பண்ணக்கடவேனென்று விரதம் சூடியிருக்கிறா யாதலாலும் என் அச்சந்தீர உன் திருவடிகளை வந்து பணிந்தேன்; உன்னையொழிந்த விஷயங்களில் ருசியைப் போக்கின நீயே உன்னை நான் கண்ணாலேகாணலாம்படி என்மீது அருள்புரிவா யாகில் நன்று என்றாராயிற்று.

இளையவர் காதல்செய்து தருங்கலவி—புருஷனிடத்துள்ள ஸர்வஸ்வத்தை யும் கொள்ளைகொள்வதற்காக மேனுக்கு அளவற்ற ஆசையைக் காட்டிப் பெண் கள் ஸம்ச்லேஷிப்பர்களே, அதைச் சொல்லுகிறது. அதுதான், கண்டார்க்குக் கவிழ்தலையிட்டுத் திரியவேண்டும்படியும் மேல் நரகமாகும்படியும் ஸ்வரூபஹா நியை விளைக்கக்கடவதாகையாலே வேதனை என்கிறது. .... .... (அ)

சாதலும்பிறத்தலு மென்றிவற்றைக்
காதல்செய்யாதுன கழலடைந்தேன் *
ஓதல்செய்நான்மறையாகி உம்ப
ராதல்செய் மூவுருவானவனே! *
ஆண்டாய்! உனைக்காண்பதோர் அருளெனக்கருளுதியேல் *
வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே! (கூ)

ஓதல் செய் { பரம்பரையாக ஓதப்பட்டு வருகிற
நால் மறை ஆகி { நான்கு வேதங்களுக்கும் நிர்வாஹகனாய்
உம்பர் ஆதல் செய் மூ உரு ஆனவனே { மேன்மையுடையவராகச் செய்யப்பட்டிருக்கின்ற பிரமன் சிவனிந்திரனாகிய மூவர்க்கு நியாமகனாயிருப்பவனே!
சாதலும் பிறத்தலும் என்ற இவற்றை } சாவதும் பிறப்பதுமான ஸம்ஸாரத்தை
காதல் செய்யாது } விரும்பாமல்
உன கழல் அடைந்தேன் { உனது திருவடிகளை அடைந்தேன்;
ஆண்டாய் * * * வேண்டேன்—.

* * *—1. "சாமாறுங் கெடுமாறும் தமருற்றார் தலைத்தலைப்பெய்து, ஏமாறிக்கிடந்தலற்று மிவை யென்னவுலகியற்கை" என்று ஞானிகள் வெறுக்கும் படியான இந்த ஸம்ஸாரஸ்வபாவத்தை என் சொல்வோம்!; மரணஸமயத்திலே படும் கஷ்டங்களையும் பின்பு நரகங்களிற் படுங்கஷ்டங்களையும் மறுபடியும் கருக்குழியிலே வந்து புகுந்து படும் கஷ்டங்களையும் நினைத்து நினைத்து வெறுத்து 'இருள்தருமா ஞாலத்து ளினிப்பிறவி யான்வேண்டேன்' என்று இந்நிலத்திற் பிறவியைக் காறியுமிழ்ந்து, நித்ய விபூதிப்ராபகமான உன் திருவடிகளைப் பணிந்தேன்; அருள்புரியவேணும் திருவிண்ணகர் மேயவனே! என்கிறார்.

ஓதல்செய் நான்மறையாகி=2. "[illegible]" என்னுமாபோலே எட்டில் எழுதப்படுகையின்றியே பரம்பரயா அத்யயநம் பண்ணியே வருகின்ற நான்கு வேதங்களுக்கும் ப்ரவசந கர்த்தாவாயிருப்பவரென்கை.

உம்பராதல்செய் மூவுருவானவனே!=3. "ஸப்ரஹ்மா ஸஶிவஸ்ஸேந்த்ர:" என்னும்படியாகச் சிறப்பித்துச் சொல்லப்பட்டுள்ள ப்ரஹ்ம ருத்ர இந்திரர்களைச் சரீரமாகக்கொண்டு அவர்களுக்கு அந்தராத்மாவாயிருந்து காரியங்கள் நடத்துமவனே! என்கை. .... .... .... .... (கூ)

பூமரு பொழிலணி விண்ணகர்மேல் *
காமருசீர்க் கலிகன்றிசொன்ன *
பாமரு தமிழிவை பாடவல்லார் *
வாமன னடியிணை மருவுவரே. (க0)

1. திருவாய்மொழி 4-9-2. 2. தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணம்-காடகம்-3-9.
3. நாராயணாநுவாகம்.

| | |
|---|---|
| பூமரு | (எப்போதும்) பூக்கள் பொருந்தியிருக்கப் பெற்ற |
| பொழில் | சோலைகளாலே |
| அணி | அலங்கரிக்கப்பட்ட |
| விண்ணகர் மேல் | திருவிண்ணகர்த் திருப்பதி விஷயமாக, |
| காமரு சீர் கலிகன்றி சொன்ன | விரும்பத்தக்க ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மியை யுடையரான திருமங்கையாழ்வார் அருளிச்செய்த |
| பா மரு தமிழ் இவை | தமிழ்ப்பாசுரங்கள் நிறைந்த இத்திருப்பதிகத்தை |
| பாட வல்லார் | ஓதவல்லவர்கள் |
| வாமனன் | ஸர்வேச்வரனுடைய |
| அடி இணை | உபயபாதங்களை |
| மருவுவர் | பொருந்தப்பெறுவர். |

* * *—பூமாறாத பொழில்களால் சூழப்பட்டு நித்ய வஸந்தமாயுள்ள திருவிண்ணகர்த் திருப்பதி விஷயமாகத் திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள், "வேண்டேன் மனைவாழ்க்கையை" என்று இவர் வேண்டாததைத் தவிர்ந்து "ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக்கருளுதியேல்'! என்று வேண்டின திருவருளைப்பெற்றுப் பொலிவர் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. .... (௧0)

அடிவரவு:—வண்டு அண்ணல் குழல் கலையொடு பார் கார் உருக்குறு காதல் சாதல் பூமரு பொறுத்தேன்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறாம்பத்து—இரண்டாந்திருமொழி,

# பொறுத்தேன் புன்சொல் நெஞ்சில்.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் "ஆண்டாயுன்னைக் காண்பதோ ரருளெனக்கருளுதியேல் வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே!" என்று ஒருகால் சொன்னாப்போலே ஒன்பதின்கால் சொல்லி ஸம்ஸாரவாழ்க்கையில் தமக்குண்டான வெறுப்பை விண்ணப்பஞ் செய்தாராழ்வார்; அப்படி விண்ணப்பஞ் செய்யச்செய்தேயும் எம்பெருமான் கடுக ஓடிவந்து அதனைத் தவிர்த்துத் தன்னைக் கொடுத்தருளிற்றிலன்; இன்னமும் இங்கே இவரைக் கொண்டு காரியங்கொள்ளத் திருவுள்ளம்பற்றி யிருப்பவனாதலால் அது செய்

திலன்; ஆழ்வாரோவென்னில், 'நாம் இப்படி துடிக்கச்செய்தேயும் இவன் அருள்புரிகின்றானில்லை; கீழ்க்கழிந்த காலமெல்லாம் நாம் விஷயாந்தரங்களிலே மண்டிக் கைகழிந்து போனதுபோல் இன்னமும் போய்விடுவோமென்று எம்பெருமான் நினைத்திருக்கிறான் போலும்; இப்போது நமக்கு மெய்யே ஆர்த்தி விளைந்ததை விண்ணப்பஞ் செய்தோமாகில் ஒருகால் திருவுள்ளமிரங்கக் கூடும்' என்றெண்ணி, அநாதிகாலம் தாம் ஸம்ஸாரத்திலே உழன்றபடியையும் பலயோனிகளிலும் பிறந்து வருந்தினபடியையும் அர்த்த காமங்களை விரும்பிப் போந்தபடியையும் இந்திரியங்களுக்கு வசப்பட்டொழிந்தபடியையும், இப்போது மேல்வரக்கடவதான நரகயாதனையை நினைத்து அஞ்சுகிறபடியையும் பரக்க விண்ணப்பஞ்செய்து 'இவை என்னால் கழித்துக்கொள்ளக் கூடியவையாயில்லை; என்னுடைய குற்றமொன்றையும் பாராதே நமக்கு இங்கொழிக்கவொழியாத படியான ஸம்பந்தத்தையே பார்த்து, பிராட்டியின் பரிக்ரஹமாயிருக்கிறே னென்பதையும் திருவுள்ளம்பற்றி அடியேனை ஸ்வீகரித்தருளவேணும் என்று திருவிண்ணகரப்பன் திருவடிகளிலே விழுந்து கதறுகிறதாயிருக்கிறது இத்திருமொழியும் மேல்திருமொழியும். .... .... .... . .... *

பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில் பொருளின்பமென விரண்டும்
இறுத்தேன் * ஐம்புலன்கட் கடனாயின வாயிலொட்டி
அறுத்தேன் * ஆர்வச்செற்றமவை தன்னை மனத்தகற்றி
வெறுத்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே! (க)

| | |
|---|---|
| புன் சொல் | (பிறர் சொல்லும்) அற்பமான வார்த்தைகளை |
| நெஞ்சில் | நெஞ்சிலே |
| பொறுத்தேன் | பொறுத்துக் கொண்டிருந்தேன்; |
| ஐம்புலன்கள் கடன் ஆயின | பஞ்சேந்திரியங்களுக்கும் கடமையாக ப்ராப்தமாயுள்ள |
| பொருள் இன்பம் என இரண்டும் | அர்த்தம், காமம் என்ற இரண்டையும் |
| இறுத்தேன் | அநுபவித்துத் தீர்த்தேன்; |
| ஆர்வம் செற்றம் | (வேண்டியவர்களிடத்தில்) ப்ரீதியென்ன, (வேண்டாதவர்களிடத்தில்) பகை யென்ன ஆகிய இவற்றை |
| வாயிலொட்டி | 'அவசியம் நிறைவேற்றி விடக்கடவேன்' என்று பிரதிஜ்ஞைபண்ணி |
| அறுத்தேன் | நிறைவேற்றிவிட்டேன்; |
| அவை தன்னை | அந்த ராகத்வேஷங்களை |
| மனத்து அகற்றி | (இப்போது) நெஞ்சில் நின்றும் நீக்கினவனாய்க் கொண்டு |
| வெறுத்தேன் | அவற்றில் வெறுப்புற்றவனாகி, |
| திரு விண்ணகர் மேயவனே நின் அடைந்தேன் | திருவிண்ணகர்ப் பெருமானே! உன்னைச் சரணம் புகுந்தேன். |

* * *—புன்சொல் நெஞ்சில் பொறுத்தேன்=இதற்கு இரண்டு படியாகப் பொருளுரைக்கலாம்; ஆபாஸ பந்துக்கள் பேசும்படியான இழிவான சொற்களையெல்லாம் தாங்கிக்கொண்டிருந்தேன் என்னுதல்; ஸமஸ்த கல்யாண குணநிதி

யாய்ச் செந்தாமரைக் கண்ணனுயிருக்கிற ஸர்வேச்வரனை ஸ்துதிக்கவேண்டிய பாசுரங்களைக்கொண்டு நீசர்களை 'பனியிருங் குழலாளன்' 'சுந்தரத்தோள் படைத்தான்' என்றிப்படி புகழ்ந்து கவிபாடும்படி புன்மையான கவிகளை நெஞ்சிலே தரித்துக்கொண்டிருந்தேன் என்னுதல். முதற்சொன்ன பொருளின் கருத்து யாதெனில்;—விபீஷணாழ்வான் ராவணனுக்கு ஹிதமான வார்த்தைகள் சொல்லச்செய்தேயும் அவன் அவற்றை மதியாமல் "த்வாம் து திக் குலபாம்ஸநம்" [இக்குலத்திற்கு இழுக்கான நீ ஒழிந்து போ] என்று திரஸ்கரித்து வார்த்தை சொல்ல, அதனால் நெஞ்சு புண்பட்ட விபீஷணன் 'இனி நாம் இந்த பிராகிருதரோடு இருக்கத்தகாது' என்று உடனே அவர்களை விட்டொழிந்து பெருமாள் திருவடிகளிலே வந்து புகுந்தான்; அப்படியே நானும் ஆபாஸபந்துக்களின் நீசபாஷணங்கள் செவியில்விழும்போதே அவர்களை வெறுத்தொழிந்து சடக்கென வந்து உன் திருவடிகளிலே விழ வேண்டியது ப்ராப்தமாயிருந்தும் அது செய்யாதே நெடுநாள்வரையில் அந்த பிராகிருதர்களின் புன்சொற்களையெல்லாம் ஜுகுப்ஸையின்றி நெஞ்சிலே தாங்கிக் கொண்டிருந்தேனே! என்று பூர்வவ்ருத்தத்திற்கு அநுதாபப்படுகிறபடி.

**ஐம்புலன்கட் கடனாயின பொருளின்பமென விரண்டு மிறுத்தேன்**=தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று நால்வகைப்பட்ட புருஷார்த்தங்களில் தர்மத்தையும் மோக்ஷத்தையும் உபேக்ஷித்து அர்த்தகாமங்களை விரும்பியொழிந்தேனென்கை. இவ்விரண்டும் பஞ்சேந்திரியங்களுக்குக் கடன்போலும்; கடன்பட்டால் அது எப்படி அவசியம் கொடுத்தே தீரத்தக்கதோ அப்படி இந்திரியங்களுக்கு அவசியம் விளைவிக்கவேண்டியவை அர்த்த காமங்கள் என்க. **இறுத்தேன்**—கடனைக் கொடுத்தேதொலைப்பாரைப்போலே அர்த்தகாமங்களை இந்திரியங்களுக்குச் செலுத்தினேனென்கை.

**ஆர்வச்செற்றம் வாயிலொட்டி யறுத்தேன்**=அநுகூலரிடத்திலுண்டாகும் ப்ரேமம் ஆர்வமென்கிறது; பிரதிகூலர் பக்கலுண்டாகும் த்வேஷம் செற்றமென்கிறது; அர்த்தகாமங்களை ஸாதிக்க முயற்சி செய்யும்போது அவற்றுக்குச் சிலர் அநுகூலராகவும் சிலர் பிரதிகூலராகவும் ஏற்படுவர்; அநுகூலரிடத்து ஆர்வமும் பிரதிகூலரிடத்துச் செற்றமும் உண்டாவது இயல்வு; அவை உண்டானவாறே அநுகூலரை நோக்கி 'நான் என் உயிரையளித்தாகிலும் உமக்கு வேண்டிய நன்மைகளைச்செய்கிறேன்' என்றும், பிரதிகூலரை நோக்கி 'உன்னைக்கூண்டோடு கொலைசெய்து விடுகிறேன்' என்றும் பிரதிஜ்ஞைகள் செய்வதும் வழக்கம்; அப்படியே நானும் பிரதிஜ்ஞைசெய்து அதைக் காரியத்தாலும் தலைக்கட்டி விட்டேனென்கிறார். **வாயில்**—வாயினால், **ஒட்டி**—பிரதிஜ்ஞைசெய்து, **அறுத்தேன்**—செய்தும் முடித்தேன். ஆக இவ்வளவும் தமது முன்னிய நிலைமைகளைச் சொல்லி, மேல் இப்போதைய ஆபிமுக்யத்தை அருளிச்செய்கிறார் '**அவை தன்னை மனத்தகற்றி வெறுத்தேன் நின்னடைந்தேன்**' என்று. 'அவைதன்னை' என்றது—முதலடியிற் சொன்ன பொருளின்பங்களை என்றவாறு, மூன்றாமடியிற்

சொன்ன ஆர்வச்செற்றங்களை யென்றுவது கொள்ளலாம். அர்த்தகாமங்களில் நசையொழிந்து, (அல்லது, ராகத்வேஷங்களைத் தவிர்ந்து) நின்னடைந்தேன் என்றாராயிற்று. .... .... .... .... .... (க)

மறந்தே னுன்னைமுன்னம் மறந்தமதியில்மனத்தால் *
இறந்தே னேத்தனையும் அதனாலிடும்பைக்குழியில் *
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான்! திருமார்பா! *
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே! (உ)

திருவிண்ணகர் மேயவனே !—;

| | |
|---|---|
| உன்னை | (எப்போதும் ஸ்மரிக்கத் தகுந்தவனான) உன்னை |
| முன்னம் | முதலிலே |
| மறந்தேன் | மறந்தொழிந்தேன் ; |
| | (அதற்குமேலே) |
| மறந்த மதி இல் மனத்தால் | இப்படி மறந்தோமே! என்கிற அநுதாப வுணர்ச்சியுமில்லாத மனத்தையுடைமையினால் |
| எத்தனையும் | மிகவும் [அசித்தைக் காட்டிலும்] |
| இறந்தேன் | நிஹீநனாகக் கெட்டுப் போனேன் ; |
| அதனால் | ஆகையினாலே |
| இடும்பை | துக்கங்களுக்கு ஆஸ்பதமான |
| குழியில் | கர்ப்பக்குழியில் |
| பிறந்தே | இடைவிடாத ஜனன மரணங்களை யுடையனாய்க் கொண்டு |
| எய்த்து ஒழிந்தேன் | அநர்த்தப்பட்டுப் போனேன் ; |
| திரு மார்பா பெருமான் | பிராட்டியை மார்விலே யுடைய பெருமானே! |
| நின் அடிக்கே | உனது திருவடிகளுக்கே |
| சிறந்தேன் | (இப்போது) தகுந்தவனாக அமைந்தேன். |

* * *—முமுக்ஷுவுக்கு அர்த்த பஞ்சகஜ்ஞானம் முக்கியமானது ; எம்பெருமானை உணர்தல், தன்னைபுணர்தல், உபாயத்தைபுணர்தல். பேற்றைபுணர்தல், பேற்றின் விரோதியைபுணர்தல், ஆகிய இவை அர்த்த பஞ்சகஜ்ஞானமெனப் படும். இதில் முதலதான பரஸ்வரூபஜ்ஞானம் தமக்கு இல்லாமையை அருளிச் செய்கிறார் **மறந்தேனுன்னை முன்னம்** என்று. முதல் முதலாக உன்னையன்றோ நான் மறந்தொழிந்தேனென்கிறார். **முன்னம்** என்பதற்கு அநாதிகாலமாக என்றும் பொருள் கொள்ளலாம். கீழ்ப்பாட்டிற் சொன்னபடி பொருளின்பங்களை ஆதரித்ததுபோல ஒரு மூலையில் உன்னையும் நான் ஆதரித்திருக்கலாமே, அந்தோ! அது செய்யப்பெற்றிலேன்!, உன்னை மறந்தே போனேன். ஒருகாலும் நெஞ்சிலும் நினைக்கக்கூடாதவற்றை [அர்த்தகாமங்களை] இடைவிடாது சிந்தித்தேன்; ஒருநொடிப்பொழுதும் மறக்கவொண்ணாத உன்னை இறைப்பொழுதும் நினையாதொழிந்தேனந்தோ!. "யெூயொ நாராயணஸூடி—த்யேயோ நாராயணஸ் ஸதா" என்று சாஸ்த்ரங்கள் முறையிடாநிற்க, பாவியேன் விபரீதனானேனென்கிறார். கீழ்க்கழிந்த காலங்களில் உன்னை நான் ஒருநாளும் **அறிந்திலேன்**' என்றன்றோ இங்குச்சொல்லவேண்டும்; அப்படி சொல்லாமல் **மறந்தேன்** என்னலாமோ? சிலகாலம் அறிந்திருந்து பின்னை அவ்வறிவு மாறினாலன்றோ

'மறந்தேன்' என்று பிரயோகிக்கலாம்; இதுவரையில் உன்னைப்பற்றின அறிவு ஒருகாலுமெனக்கு உண்டாயிருக்கவில்லையென்று சொல்லவேண்டுமிடத்து மறந்தேனென்னலாமோ? என்று ஒரு சிறிய சங்கை பிறக்கக்கூடும்; இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்வது காண்மின்:—"உன்னை யென்கிற விடத்திலே ஸம்பந்தத்தை ஸ்மரித்தவராகையாலே, அந்த ஸம்பந்தம் ஸ்வாபாவிகமேயாகையாலே சிலநாள் ஸ்மரித்து மறந்தாப்போலே தோன்றிற்று." என்று.

இவ்விருள்தருமாஞாலத்தில் எம்பெருமானை மறப்பதென்பது ஸஹஜமே; இது வியப்பன்று; ஆயினும், 'இப்படி மறந்தொழிகின்றோமே!' என்கிற அநுதாபவுணர்ச்சியாகிலும் இடையிடையே தோன்றுமாயின் நன்றாகும்; அந்தோ! அவ்வநுதாபமு மில்லாமையாலே கெட்டேனென்கிறார் **மறந்த மதியில் மனத்தாலிறந்தேன்** என்று. **இறந்தேன்** என்றது சைதந்யம் கெட்டு அசேதநமேயாகப் பெற்றேனென்கை. "அஸந்நேவ ஸ பவதி, அஸத் ப்ரஹ்மேதி வேத சேத்" என்ற உபநிஷத்துக்காண்க. 'எத்தனையும் இறந்தேன்' என்கையாலே அசித்திற்காட்டிலும் கடைகெட்டவனானேன் என்பது பெறப்படும். அசித்துக்கு அடியோடு உணர்ச்சியில்லாமையாலே அது பகவத்விஷயத்தை நினையாதிருப்பது ஸஹஜம்; அறிவுக்கு நிலமான நான் அறிவின் காரியம் பெறாமையாலே அசித்திலும் கடைகெட்டேனென்கை.

**அதனாலிடும்பைக்குழியில் பிறந்தே எய்த்தொழிந்தேன்**=அநுதாபமு மில்லாமையால்தான் மேன்மேலும் துக்கங்களையே விளைக்கக்கடவதான ஸம்ஸாரத்திலேயே பிறப்பது மிறப்பதுமாய் அநர்த்தப்பட்டுப்போனேன். இதைக்கடாக்ஷித்தே ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் "நிரந்தரமயமிஹ ஹதா ஹ்ருதயம்" என்றருளிச்செய்தா ரென்னலாம்.

**எய்த்தொழிந்தேன்** என்றதற்குப் பெரியவாச்சான்பிள்ளை மருமமறிந்து வெளியிட்ட ஆழ்பொருள் காண்மின்;—"[எய்த்தொழிந்தேன்] இன்னும் பிறக்கைக்கடியான கர்மவாஸனைபுண்டேயாகிலும் பிறக்கைக்கு த்ரவ்யமில்லாதபடியானேன்;—கர்மவாஸனைகிடந்து பிறக்கவேண்டினாலும் பிறக்கைக்கு க்ஷமனல்லேன்" என்று. பலபல யோநிகளிற் பிறந்து பிறந்து, நித்யமான ஆத்மவஸ்துவுங்கூட உருவழிந்து போகப்பெற்றேன், இனி கர்மசேஷங்கள் கிடந்தாலும் என்னால் ஜனிக்கமுடியாது என்றவாறு. இது ரஸோக்தி. **திருமார்பா! நின்னடிக்கே சிறந்தேன்**=இப்படி அஸத்தான என்னை எப்படி அங்கீகரிப்பது! என்று விசாரிக்கவேண்டாமல் குற்றங்களையும் நற்றமாக உபபாதிக்கிற பெரிய பிராட்டியார் திருமார்பிலேயே இடைவிடாது இருந்துகொண்டு புருஷகாரம் செய்யும்போது இனி எனக்கு என்ன குறை? நான் உன் திருவடிகட்குத் தகுந்தவனே. .... .... .... .... .... .... (உ)

மானேய்நோக்கியர்தம் வயிற்றுக்குழியிலுழைக்கும் *
ஊனேயாக்கைதன்னை உதவாமை யுணர்ந்துணர்ந்து *
வானே மாநிலமே வந்துவந்தென் மனத்திருந்த
தேனே * நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௫)

| | |
|---|---|
| வானே மா நிலமே | நித்யவிபூதிக்கும் லீலா விபூதிக்கும் நிர்வாஹகனே !, |
| உவந்து வந்து | (பரமபதத்தில் நின்றும்) உவப்போடே வந்து |
| என் மனத்து இருந்த தேனே | என்மனத்தில் நித்யவாஸம் பண்ணுகின்ற பரமபோக்யனே ! |
| திரு விண்ணகர் மேயவனே !—; | |
| மான் எய் நோக்கியர் தம் | மானைப்போன்ற கண்ணழகை யுடையரான ஸ்த்ரீகளினுடைய |
| வயிறு குழியில் | கர்ப்பக்குழியில் இருந்து கொண்டு |
| உழைக்கும் | கஷ்டப்படுமதாய் |
| ஊன் எய் | மாம்ஸாதிகள் நிறைந்ததான |
| ஆக்கை தன்னை | சரீரத்தினுடைய |
| உதவாமை உணர்ந்து உணர்ந்து | உபயோகமற்ற தன்மையை நன்றாக அறிந்து |
| நின் அடைந்தேன் | உன்னைவந்து பற்றினேன். |

* * *—இந்த உடல் எப்படிப்பட்டது? ஸ்த்ரீகளின் கர்ப்பப்பையிலே கிடந்து படாதபாடுகளும்பட்டு 1. "தீண்டாவழும்பும் செந்நீரும்சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றம் மிகுமுடல்" என்கிறபடியே மாம்ஸாதிகள் மலிந்துகிடப்பது; இப்படிப்பட்ட உடற்பிறவி நமக்குத்தகாதென்று நன்குணர்ந்தேன்; அது தொலைவதற்காக உன் திருவடிகளிலே வந்து சேர்ந்தேன் திருவிண்ணகர்மேயவனே !.

ஸாதாரணமாக, 'மாதர்களுடைய வயிற்றுக்குழியிலுழைக்கும்' என்று சொல்லவேண்டுமிடத்து 'மானேய் நோக்கியர்தம்' என்று அவர்களுடைய கண்ணழகை வருணித்துப்பேசுவது அவசியமன்றே; கலவிக்கு உரிய மாதர்களைச் சொல்லுவதானாலன்றோ அப்படி வருணித்துப் பேசவேணும்; இங்கே வருணித்துப்பேசினதேன்? என்னில்; தங்களுடைய பருவமும் பேதைமையும் கிடக்கச் செய்தே 'ஒருப்ரஜை உண்டாகவேணும்' என்று நோன்பு நோற்கிறார்களே !, ஒரு ஆத்மாவை ஸம்ஸாரியாக்கிக் கெடுப்பதற்கன்றோ அவர்கள் இப்படி நோன்பு நோற்பது !, தங்கள் கண்ணழகு முதலியவற்றால் காதலரைப் பிச்சேற்றிக் கொண்டு போதுபோக்காமல் பல நோன்புகள் நோற்று ஒரு ஆத்மாவை இந்த இருள்தருமாஞாலத்தில் வரவழைத்து அநர்த்தப்படுத்துகிறார்களே! என்கிற கருத்துப்படவாம்.

இரண்டாமடியில், "ஊனேயாக்கை," "ஊனேராக்கை" என்பன பாட பேதங்கள். இப்படிப்பட்ட தேஹம் உபயோகமற்றதென்று நன்கறிந்து நின்னடைந்தேன்.

1. திருவரங்கக்கலம்பகம்.

வானே! என்பதனால் நித்யவிபூதிநாதத்வமும், மாநிலமே! என்பதனால் லீலாவிபூதிநாதத்வமும் ஆக உபயவிபூதிநாயகத்வம் சொல்லப்பட்டது.

'வந்துவந்து' என்றவிடத்து 'வந்து உவந்து' என்று பிரிப்பதேயன்றி, 'வந்து வந்து' என்று இரட்டைக்கிளவியாகவுங் கொள்வர். பலகாலும் வந்து என்றபடி. அதாவது—என்மனத்திலே புகுரவேணுமென்று நீ ஆசைகொண்டு வருவாய், நான் நெட்டித்தள்ளுவேன், மறுபடியும் வேறொரு ஸமயம்பார்த்து வருவாய்; அப்போதும் நான் ஏமாராதேயிருந்து நெட்டித்தள்ளுவேன்; இப்படி நீ பலகாலும் வந்து வந்து ஸ்வசக்தியாலே என்மனத்தை இருப்பிடமாகக் கொண்டு விட்டாய் என்றவாறு. இதனால் எம்பெருமானுடைய அபிமாந விசேஷம் விளங்கும். .... .... .... .... (௩)

பிறிந்தேன் பெற்றமக்கள் பெண்டிரென்றிவர் பின்னுதவா
தறிந்தேன் * நீபணித்தவருளென்னு மொள்வாளுருவி
யெறிந்தேன் * ஐம்புலன்களிடர்தீர வெறிந்துவந்து
செறிந்தேன் * நின்னடிக்கே திருவிண்ணகர் மேயவனே! (௪)

திரு விண்ணகர் மேயவனே!—;

| | |
|---|---|
| பெற்ற மக்கள் | வயிற்றில்பிறந்த பிள்ளைகள் |
| பெண்டிர் | மனைவியர் |
| என்ற இவர் | இத்யாதிகளான பந்துக்கள் |
| பின் உதவாது அறிந்தேன் | முடிவுகாலத்துக்குத் துணையாகமாட்டார்க ளென்பதைத் தெரிந்து கொண்டவனாய் |
| பிறிந்தேன் | (அவர்களை) விட்டொழிந்தேன்; |
| நீ பணித்த அருள் என்னும் | (முன்பு திருத்தேர்த் தட்டிலே) நீ அருளிச் செய்த சாமச்லோக மாகிற |
| ஒள் வாள் | ஒளிபொருந்திய கத்தியை |
| உருவி | உறையில் நின்றும் கழற்றி, |
| ஐம்புலன்கள் இடர் தீர | சப்தாதிவிஷயங்களாலே உண்டாகிற துயர் தொலையும்படி |
| எறிந்தேன் | வீசினேன்; |
| வெறிந்து வந்து | அகிஞ்சனனாய்க் கொண்டு வந்து |
| நின் அடிக்கே செறிந்தேன் | உனது திருவடிகளுக்கே பொருந்தினேன். |

* * *—அறிவுடையார், மக்களென்றும் மனைவியரென்றும் சில பந்துக்களை ஆதரித்துப்போருவது எதுக்காகவென்னில், உடல் இளைத்தவாறே அருகில் இருந்துகொண்டு கர்ணமிருதமாக எம்பெருமான் திருநாமங்களைச் செவியிலே ஓதுவர்களென்பதற்காக; அந்த பந்துக்கள் தாம் செய்வதென்னென்னில், ஸமயங்களிலே ஸர்வஸ்வத்தையுங் கொள்ளைகொண்டும் மரணஸமயத்திலும் விடாதே 1. "சோர்வினாற் பொருள்வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து" என்கிறபடியே 'எந்த சந்து பொந்துகளில் என்ன பொருள் புதைத்து வைத்திருக்கிறாய், சொல்லு' என்று பிச்சிக்கொண்டிருப்பர்களேயன்றி, பகவந்

1. பெரியாழ்வார் திருமொழி 4—5—3.

நாமமாகிற அமுதத்தை லவலேசமும் செவியிலே ஊட்டமாட்டார்கள்; ஆகவே இந்த ஆபாஸ பந்துக்களெல்லாம் * துணையும் சார்வுமாகுவார்போல் அட்டைகள் போல் சுவைப்பவரேயன்றி நல்வழிக்குச் சிறிது முதவார்கள் என்பதை நன்கறிந்துகொண்டு அவர்களிடத்து நசையைவிட்டுத் தொலைத்தேனென்கிறார் முதலடியால்.

ஆபாஸ பந்துக்களைவிட்டு, ஆப்தபந்துவான நீ திருவாய்மலர்ந்தருளிய சரமச்லோகத்தைப் பற்றினேனென்கிறார்மேல். "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:." என்கிற சரமச்லோகம் அர்ஜுநனை நோக்கி அருளிச்செய்ததாகிலும், அவனொருவனை வியாஜமாகக்கொண்டு ஸகல சேதநர்க்குமே உஜ்ஜீவநமாக அருளிச்செய்ததாகையாலும், கண்ணபிரானுடைய நிர்ஹேதுக கிருபைதானே அந்த ஒரு ச்லோகமாகப் பரிபக்வமாயிற்று! என்னலாம்படி யிருக்கையாலும், 'நீ பணித்த அருள்' என்ற சொல்லாலே சரமச்லோகத்தைக் குறிப்பிடுகிறார். அருள் என்பதும் சரமச்லோகமென்பதும் பர்யாயம் போலும். அதில் சொன்ன அர்த்தத்தைக்கடைப்பிடித்து என்னுடைய துன்பங்களையெல்லாம் தொலைத்துக்கொண்டேன் என்கிறாரென்க. சரமச்லோகத்தினுள் "மாம் ஏகம் = என்னொருவனையே" என்றருளிச்செய்த வாக்கியத்தையே சிக்கனப்பிடித்துக்கொண்டபடி.

ஒள்வாளுருவியெறிந்தேன் = சரமச்லோகத்தைக் கத்தியாக உருவகப்படுத்திக் கூறினதற்கேற்ப மேலே ஐம்புலன்களிடர் என்றதை வினைத்தூறுகக்கொள்க. கத்தியினால் தூறுகளை அறுத்தொழிக்குமாபோலே சரமச்லோகார்த்த ஜ்ஞானத்தினல் வினைத்தூறுகளை வேரறுத்தேனென்கை. ஆசார்ய ஹ்ருதயம் இரண்டாம் பிரகரணத்தில் "ஒள்வாளுருவி வினைத்தூற்றை வேரறுவித்து" என்றதுங் காண்க.

"இடர்தீரவெறிந்துவந்து" என்றவிடத்து 'வெறிந்து வந்து' என்று மெடுக்கலாம், 'எறிந்து வந்து' என்றுமெடுக்கலாம். வெறிந்துவந்து—வெறுமையை உடையேனாய் வந்து; "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" இத்யாதிப்படியே அகிஞ்சநனாய் வந்து என்றபடி. 'எறிந்துவந்து' என்னில், 'ஒள்வாளுருவி யெறிந்தேன்' என்று கீழ்ச்சொன்ன எறிதலை அநுவதித்ததாகும்; "வாடினேன்வாடி....கூடினேன்கூடி....ஓடினேனோடி....நாடினேன்நாடி" என்னுமாபோலே. .... .... .... .... (ச)

பாண்டேன் வண்டறையுங் குழலார்கள் பல்லாண்டிசைப்ப *
ஆண்டார்வையமெல்லா மரசாகி * முன்னாண்டவரே
மாண்டாரேன்றுவந்தார் அந்தோ மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (ரு)

| | |
|---|---|
| பாண் | இசைப்பாட்டையுடையன வாய் |
| தேன் | தேனைப் பருகுகின்ற |
| வண்டு | வண்டுகள் |
| அறையும் | ரீங்காரம் செய்யப்பெற்ற |
| குழலார்கள் | கூந்தலையுடையரான மாதர்களால் |
| பல்லாண்டு இசைப்ப | மங்களாசாஸனம் பண்ணப் பெற்று |
| அரசு ஆகி | அரசர்களாயிருந்துகொண்டு |
| வையம் எல்லாம் | பூமண்டலம் முழுவதையும் |
| ஆண்டார் | ஆட்சிபுரிந்தார்கள், |
| முன் ஆண்டவரே மாண்டார் | (இப்படி) முன்பு ஆண்டு வந்த அவர்களே மாண்டு போனார்கள், |
| என்று வந்தார் | என்ற சொல்லுக்கு இலக்காய்க்கொண்டு வருகிறார்கள்; |
| அந்தோ | ஐயோ!; |
| திரு விண்ணகர் மேயவனே!—; | |
| மனை வாழ்க்கை தன்னை வேண்டேன் | (இப்படி நிலையற்றதான) ஸம்ஸாரவாழ்க்கையை வெறுத்தவனாய்க் கொண்டு |
| நின் அடைந்தேன் | உன்னைப் பற்றினேன். |

* * *—திருவாய்மொழியில் "ஒரு நாயகமாயோட வுலகுடனாண்டவர், கருநாய் கவர்ந்தகாலர் சிதைகியபானையர், பெருநெடுகாண இம்மையிலே பிச்சை தாங்கொள்வர்" என்றும், "அடிசேர்முடியினராகி அரசர்கள்தாந்தொழ, இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்ப விருந்தவர், பொடிசேர்துகளாப்போவர்கள்" என்றும் "வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பரென்பதில்லை" என்று அருளிச்செய்தவைபோலே யிருக்கிறது இப்பாசுரம். பிராகிருதமான செல்வம் நிலைநிற்க மாட்டாதாகையாலும், கைங்கரியமாகிற அப்ராக்ருத செல்வமே நிலைநிற்பதாகையாலும் இம்மைச்செல்வத்தை வெறுத்து மறுமைச்செல்வத்தை விரும்பி உன்னடி பணிந்தேனென்கிறார்.

"கண்டார்வணங்கக் களியானைமீதே கடல்சூழுலகுக்கொரு காவலராய் விண்டோய் நெடு வெண்குடைநீழலின்கீழ் விரிநீருலகாண்டு" என்றாப்போலே நிலமுழுது மாளுமரசர்களைச்சுற்றி வண்டார் பூங்குழல்மாதர் பலரிருந்து 'இச் செல்வம் மாறாதே நிலைநிற்கவேணும்' என்று பல்லாண்டு பாடுவர்களாம், அதனைச்சொல்லுகிறது முதலடி.

**அரசாகி வையமெல்லாம் ஆண்டார் முன்னாண்டவரே மாண்டாரென்று வந்தார்**=இதுவரையில் நீர்க்குமிழிபோலேயிருந்து கழிந்த அரசர்கள் பல்லாயிரம் பேர்களுண்டு; ஆள்பவர் ஆண்டுகொண்டே யிருக்கின்றனரென்பதில்லை. இப்போது ஆள்பவர் முன்பு ஆண்டு மாண்டவருடைய கணக்கிலே பதிவுபெறுகின்றனரென்றவாறு. திருவாய்மொழியில் "சொன்னால் விரோதம்" (3-9-1.) என்னுந் திருவாய்மொழியின் ஈடுமுப்பத்தாறாயிரப்படி ப்ரவேசத்தில் இப்பாசுரத்தை உதாஹரித்துப் பரமரஸமாக அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் ஸேவிக்கத்தக்கன.

இவ்வுலகத்துப் போகங்கள் இப்படிப்பட்டனவாதலால் இவ்வுலகவாழ்வில் வெறுப்புற்று நித்யைச்வர்யம் பெறுவதாக நின்னடைந்தேனென்றாராயிற்று.

கல்லா வைம்புலன்களவை கண்டவாறு செய்யகில்லேன் *
மல்லா மல்லமருள் மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா * மல்லலஞ்சீர் மதிள்நீரிலங்கையழித்த
வில்லா * நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| கல்லா | கல்வியயிலாத [—சாஸ்த்ர நெறியில் நிற்கமாட்டாத] | மல்லா | மல்தொழில்வல்லவனே!, |
| ஐம்புலன்கள் அவை | பஞ்சேந்திரியங்களானவை | மல்லல் அம் சீர் | மிகவும் அழகிய செல்வத்தை யுடைத்தாய் |
| கண்ட ஆறு | செய்யநினைத்த விதமாக | மதிள் | மதிள்களால் சூழப்பட்டதாய் |
| செய்ய கில்லேன் | நான் செய்யமாட்டு கின்றிலேன்; | நீர் | சுற்றிலும்நீர்க்கோட்டையை யுடைத்தான |
| மல்லா | வலிமையுள்ள பெருமானே!, | இலங்கை | லங்காபுரியை |
| மல் அமருள் | மற்போரில் | அழித்த | நாசஞ்செய்த |
| மல்லர் மாள | (சாணூரன்முதலிய) மல்லர்கள் முடியும்படியாக | வில்லா | சார்ங்கத்தையுடையவனே! |
| | | திருவிண்ணகர் மேயவனே!—; | |
| மல் அடர்த்த | (அவர்களுடைய) வலியையழித்த | நின் அடைந்தேன்—. | |

* * *—"விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும். பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதிஸம்யுதா = விசித்ரா தேஹஸம்பத்தி ரீச்வராய நிவேதிதும்—பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதிஸம்புதா." என்று செவி வாய் கண் மூக்கு முதலிய கரணங்கள் உன்னுடைய திருப்புகழ்களைக்கேட்பது மொழிவது முதலிய காரியங்களுக்காக ஏற்பட்டவை; அப்படிப்பட்ட அவை இவ்வழியில் நில்லாதே அல்வழியிற் செல்லுகின்றனவே பாவியேனுக்கு; அவை இழுத்துக்கொண்டு போகிறவழியே நான் செல்லுவதென்றால் இது என்னாலாகுமோ? "பூணாரமார்பனைப் புள்ளூரும் பொன்மலையைக் காணாதார் கண்ணென்றுங் கண்ணல்லகண்டாமே" என்றும் "தொண்டர்க்கினியானைக் கேளாச்செவிகள் செவியல்ல கேட்டாமே" என்றும் உறுதிகொண்டிருக்கிற நான் விஷயாந்தரங்களில் மண்டித்திரிகிற நெஞ்சை அநுஸரித்து நடக்கவுரியவனோ? என்கிறார் முதலடியால்.

மல்லர்மாள அடர்த்த வரலாறு:—கம்ஸன் தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரத முனிவர் சொல்லக்கேட்டு அதிக கோபங்கொண்டு எவ்வகையினாலாவது கண்ணனைக்கொல்ல நிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம்வைத்துக் கண்ணபிரானையும் பலராமனையும் அழைத்துவரும்படி நியமிக்கப்பட்ட அக்ரூரனுடைய பிரார்த்தனைக்கிணங்கக் கண்ணபிரான் நம்பி மூத்தபிரானுடன் புறப்பட்டு மதுரையிற் புகுந்து நடுவழியில் ஒரு துஷ்ட வண்ணானைக்கொன்று அவனிடமிருந்த சிறந்த ஆடைகளை யெடுத்துச் சாத்திக்கொண்டு ராஜவீதியில் வருகிறவளவிலே மாலாகாரரையும்

கூனியையும் அநுக்ரஹித்துப் பின்பு கம்ஸனரண்மனையை நோக்கிச்செல்லுகையில் அவ்வரண்மனை வாயில்வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர்தொலைத்திட்டு உள்ளே கம்ஸஸபையிற் செல்லுகையில் அவர்களையெதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனாலேவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர்செய்ய அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர் என்பதாம். கண்ணபிரான் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ்சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அநேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸனமொன்றையமைத்து அவ்வாஸனத்தின்மீது தன்னை வீற்றிருக்கச்சொல்ல, அங்ஙனமே தான் அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற்பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கிப் பிலவறையில் செல்லுமளவில் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையுங் கால்களையுங் கொண்டு எதிர்த்து அப்பிலவறையிலிருந்த மல்லர்களை மடிவித்த வரலாறும் அறியத்தக்கது. மற்போராவது ஆயுதங்களின் உதவியின்றியே தேஹவலிமையையேகொண்டு நடத்தும் யுத்தம்.

மல்லலஞ்சீர்மதிள் நீரிலங்கை=முதலிலே அநுமான் இலங்கையிற்புகுந்து அந்நகரின் சீர்மைகளைக்கண்டு வியந்து "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர:। ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி ரக்ஷிதா= யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர:—ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா" [இந்த ராக்ஷஸ ராஜனிடத்தில் அதர்மம் ஒன்று மாத்திரம் இல்லாதிருந்தால் இந்திரலோகத்தையும் அடக்கி ஆளக்கூடியவனன்றோ இவன்] என்று சொன்னது இங்கு நினைக்கத்தக்கது. மல்லல்—மிகுதி, வலி, வளம். .... .... .... .... .... (சு)

வேறுயானிரந்தேன் வெகுளாது மனக்கொளெந்தாய் *
ஆறுவெந்நரகத்து அதடியேனை யிடக்கருதி *
கூறுவைவர்வந்துகுமைக்கக் குடிவிட்டவரை *
தேறுதுன்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (எ)

திருவிண்ணகர் மேயவனே!—;

| | | | |
|---|---|---|---|
| எந்தாய் | ஸ்வாமிந்!, | வெகுளாது | சீற்றமின்றி |
| யான் | அடியேன் | மனக்கொள் | திருவுள்ளம் பற்றவேணும்; |
| வேறாக | விலக்ஷணமாக | ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |
| இரந்தேன் | யாசிக்கின்றேன்; | அடியேனை | அடியேனை |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆரு வெம் நரகத்து | ஓய்வில்லாதகொடிய ஸம்ஸாரநரகத்திலே | | குடி விட்டவரை | (நீ என்னை நல்வழிப் படுத்துகைக்காக ஸ்ருஷ்டிகாலத்தில் என்னிடத்தில்) குடியிருக்கச் செய்த அந்த இந்திரியங்களை |
| இட கருதி | தள்ளநினைத்து | | தேரூது | நம்பாமல் |
| கூறு ஆ | என்னைத் தங்களுக்குப் பாகமாகக் கொண்டு | | | உன் அடைந்தேன்—. |
| வந்து | என்னைக் கிட்டி | | | |
| குமைக்க | ஹிம்ஸிக்க, | | | |

* * *—வேரு யானிரங்தேன்=உலகத்தில் வேண்டுகோள் இரண்டுவகைப் படும்; வேண்டினவுடனே பெறவேண்டிய நிர்ப்பந்தமின்றிக் காலக்கிரமத்தில் பெறலாம்படியான பொருள்களைப்பற்றின வேண்டுகோள் ஒன்று; வேண்டின வுடனே கிடைத்தாலன்றி உயிர்தரிக்க முடியாமல் அப்போதே பெறவேண்டின பொருளைப்பற்றின வேண்டுகோள் மற்றொன்று. இவ்விரண்டுவகையான வேண்டு கோளில் இரண்டாவதுவகையான வேண்டுகோளை இப்போது அடியேன் செய் கின்றேனென்றவாறு. 'வேரு' என்பதன் கருத்து இது. பஞ்சேந்திரியங்க ளாகிற படுகொலைக்காரர்கையில் இனி நான் ஒரு நொடிப்பொழுதும் நலிவுபட முடியாததலால் இந்த க்ஷணத்திலே அடியேனை உனதருளால் வாங்கிவிடவேணு மென்று பிரார்த்திக்கின்றேனென்கை.

யான் இரங்தேன்='இரங்தேன்' என்றாலே போதும்; 'யான்' என்னும் எழுவாய் தன்னடையே வந்துபுகும்; அப்படியிருக்கவும் "யானிரங்தேன் என்ற தற்கு ஒரு கருத்துண்டு; 1. "எதிர்சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய விதிசூழ்ந்ததா லெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே" என்னுமாபோலே என்னைத் திருத்திப் பணிகொள்வதற்காகப் படாதபாடுகள் நீ படுகிறாய் என்று பிரஸித்தமாயிருக்கின்றது; தன் ஸொத்துக்கு ஒரு கெடுதல் நேர்ந்தால் அதனைத்தீர்த்து மகிழ்தல் ஸ்வாமியின் கடமையாதலால் உன்னுடைய ஸொத்தாகிய அடியேனுடைய கெடுதியைத் தீர்ப்பது உனக்கே பணியாயிருந்தும் இது என்னுடைய காரியம்போலே நான் வேண்டும்படியாயிற்றே!, 'அந்தோ! நம் காரியத்திற்கு இவன் வேண்டிக்கொள்ளுகிறானே!' என்று திருவுள்ளம் பற்றியாகிலும் இரங்கலாகாதோ? என்றவாறு. "நீ இரக்க, மறுத்துத்திரிந்த நானன்றோ இப்போது இரக்கிறேன்" என்பர் பெரியவாச்சான் பிள்ளையும்.

எந்தாய்! வெகுளாது மனக்கோள்=நான் இப்போது வேண்டிக்கொள்வது தேவரீர் திருவுள்ளத்திற்கு மிக்க சீற்றமேயாகும்; 'நெடுநாள் நாம் எதிர்பார்த் திருந்தபோதெல்லாம் நம்மை அலக்ஷியஞ் செய்தொழிந்த இவன் இப்போது ஏதுக்கு நிர்ப்பந்திக்கிறான்?' என்று பாவியேன்மீது திருவுள்ளம் சீறக்கூடும்; அங்ஙனே யாகவொண்ணாது; எந்தையான முறைமையை நினைத்துச் சீறாமல் திருவுள்ளம் பற்றவேணுமென்கிறார். "[எந்தாய்!] என்னாலழித்துக்கொள்ள வொண்ணாத ப்ராப்தியைக்கொண்டு பொறுக்கையொழிய, செய்த குற்றத்தைக்

கணக்கிட்டுக் கைவிடலாம்படியோ தேவரோடுண்டான ப்ராப்தியிருப்பது'' என்பர் பெரியவாச்சான் பிள்ளையும்.

தம்முடைய விவக்ஷிதத்தை விண்ணப்பஞ் செய்கிறார் ஆருவெந்நரகத்தென்று தொடங்கி. இந்திரியங்களினுடைய எண்ணம் மிகவும் பொல்லாதாயிருக்கின்றது; 'தேவரீர்க்கு எல்லாவடிமைகளும் செய்யப் பெறவேணும்' என்று பாரித்திருக்கிற வென்னை அஹங்காரமமகாரங்களுக்குக் குடிமை செய்யும் ஸம்ஸாரத்திலே தள்ள நினைத்து நலிகின்றனவே இந்திரியங்கள்; இந்த நலிவு என்னாலே பொறுக்கப் போகிறதில்லை, இன்னமும் என்னென்ன தீங்குகள் செய்ய நினைத்திருக்கின்றனவோ தெரியவில்லை; அஞ்சினாருடைய அச்சமெல்லாம் தீருமாறு திருவிண்ணகரிலே நித்யஸந்நிதி பண்ணியிருக்கிற தேவரீரைச் சரணம் புகுகின்றேன், காத்தருளவேணுமென்கை.

அஃறிணையான ஐம்பொறிகளை ஐவர் என்று உயர்திணையாகச் சொன்னது இழிவினாலும் சிறத்தின் மிகுதியாலுமென்க; திணைவழுவமைதி.

குடிவிட்டவரை="விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்— விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்'' என்கிறபடியே உன்னை வழிபடுவதற்குப்பாங்காக உன்னாலே இவ்வுடலில் குடியிருக்கச் செய்யப்பட்ட பஞ்சேந்திரியங்களென்கை. தேறுது=இவை உன்னுடைய உத்தேசத்தின்படி நடவாமல் விபரீதமான மார்க்கத்திலே நடக்கத் துணிந்தமையால் இவற்றை நான் நம்பாமல், உன்னைவந்து பணிந்தேன். இதனால் இந்திரியங்களைத் தாம் வென்றமை வெளியிடப்பட்டதாகும். .... .... .... .... (எ)

தீவாய் வல்வினையார் உடனின்று சிறந்தவர்போல் *
மேவாவெந்நரகத்து இடவுற்று விரைந்துவந்தார் *
மூவா வானவர்தம்முதல்வா மதிகோள்விடுத்த
தேவா * நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (அ)

| | |
|---|---|
| தீ வாய் | நெருப்பையுமிழ்கின்ற வாயையுடைய |
| வல் | கொடிய |
| வினையார் | பாவங்கள் |
| சிறந்தவர் போல் | பந்துக்கள் போன்று |
| உடன் நின்று | என்னைப்பிரியாமல் கலந்து நின்று |
| மேவா வெம் நரகத்து இட உற்று | பொருந்தாத கொடிய நரகத்திலே (என்னைத்) தள்ள முயன்று |
| விரைந்து வந்தார் | வெகுவேகமுடையனவாயிருக்கின்றன; |
| மூவா | கிழத்தனம் முதலிய விகாரங்களற்ற |
| வானவர் தம் முதல்வா | தேவாதிதேவனே! |
| மதி கோள் விடுத்த தேவா | சந்திரனுடைய க்ஷயரோகத்தைப் போக்கினதேவனே! |

திரு விண்ணகர் மேயவனே!—;
நின் அடைந்தேன்—.

* * *— இப்பாசுரத்தில் இரண்டாமடியில் நெடுநாளாகவே ஒரு பாடப் பிழை நேர்ந்துள்ளது; "மேவா வெந்நரகத்து இடரூற்று" என்றே பலரும் ஓதுவர்; பலபுத்தகங்களிற்பாடமும் இதுவேயாகக் காண்கிறது. இப்பாடம் பொருளற்றது; "இடவுற்று" என்பது 'இடரூற்று' எனப் பிழைபட்டது. (அடியேனை) மேவா வெந்நரகத்துஇட [நரகத்திலே தள்ள] உற்று விரைந்து வந்தார் என்கை. கீழ்ப்பாட்டில் "ஆருவெந்நரகத்தடியேனை இடக்கூறி" என்றாற்போலே.

கீழ்ப்பாட்டில் ஐவர் [பஞ்சேந்திரியங்கள்] எழுவாய்; இப்பாட்டில் வல்வினையார் [பாபராசிகள்] எழுவாய். வல் என்ற அடைமொழி— அப்பாவங்கள் அவசியம் அநுபவித்தே தீரவேண்டுமவை என்பதைக்காட்டும். தீவாய் என்னும் அடைமொழி அவற்றின் கொடுமையைக்காட்டும். பலவகைத் துன்பங்களை யுண்டு பண்ணுகின்றன வென்றபடி. சிறந்தவர் என்றது— உடன்பிறந்தோர் மக்கள் மனைவியர் முதலான உறவினரைச் சொன்னபடி. அவர்கள் ஒருகாலும் விட்டு நீங்காதவாறுபோல இக்கொடிய பாவங்களும் எப்போதும் விட்டுப் பிரியாமலிருந்து கொண்டு என்னை நரகத்திலே தள்ளப் பார்க்கின்றன வென்றாராயிற்று.

மூவா வானவர்தம் முதல்வா!= மூவா— கிழத்தனமடையாத என்றபடி. இது வானவர்க்கும் விசேஷணமாகலாம், வானவர்தம் முதல்வனான எம்பெருமானுக்கும் விசேஷணமாகலாம். நித்யஸூரிகளை நிர்வஹிப்பதுபோல் அடியேனையும் நிர்வஹிக்கலாகாதோ என்பது குறிப்பு.

மதிகோள்விடுத்த தேவா!= எம்பெருமான் சந்திரனுடைய துயரைத்தீர்த்ததாக ஆழ்வார்கள் பலவிடங்களிலும் அநுஸந்திக்கக் காண்கிறோம். இவ்வுரலாற்றின் விவரணம் இதிஹாஸபுராணங்களில் நமது சிற்றறிவுக்குப் புலப்படவில்லை. தக்ஷமுனிவனது சாபத்தால் க்ஷயமடைந்து வந்து சரணம் புகுந்த சந்திரனைச் சிவபிரான் காத்ததாக வரலாறு காண்பதுண்டு; ப்ரயோஜ்ய கர்த்தாவாகிய அச்சிவபிரானது செயலை ப்ரயோஜக கர்த்தாவான திருமால் மேல் ஏற்றிக்கூறியிருப்பதாகக் கொள்வர். அன்றியும், ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் சந்திரபுஷ்கரிணியை வருணிக்கும் ச்லோகத்தில் "யஸ்யா:—க்ஷயாபதோவாவஷ்ணீ நாம வஜ ஸூயாதீயி திதாவவாப—யஸ்யா:, அப்யாஸமேதோபாமகமர்ஷணீ நாம் சந்த்ரஸ் ஸுதாதீதிதிதாமவாப." என்றருளிச் செய்தபடி சந்திரபுஷ்கரிணியில் பலகாலம் நீராடி ஸ்ரீரங்கநாதனது திருவருளால் தனது க்ஷயரோகம் தீரப்பெற்றான் சந்திரன் என விளங்குதலால் அதனைத் திருவுள்ளம்பற்றி 'மதிகோள் விடுத்த தேவா!' என்றருளிச் செய்கிறார்களென்றுங்கொள்வர். இதன் உண்மையை வல்லார்வாய்க் கேட்டுணர்க. .... .... .... (அ)

போதார்தாமரையாள் புலவிக்குலவானவர்தம்
கோதா * கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா * தூமொழியாய் சுடர்போல் என்மனத்திருந்த
வேதா * நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே. (கூ)

| | |
|---|---|
| போது ஆர் தாமரையாள் | நல்லபோதிலே அலர்ந்த தாமரைப்பூவை இருப்பிடமாகவுடையளான பிராட்டிக்கும் |
| புலவி | பூமிப்பிராட்டிக்கும் |
| குலம் வானவர் தம் | சிறந்த நித்யஸூரிகளுக்கும் |
| கோதா | விரும்பத்தகுந்தவனே!, |
| கோது இல் செங்கோல் | தடையின்றிச் செங்கோல் செலுத்துமவராய் |
| குடை | கொற்றக்குடையையுடையரான |
| மன்னர் இடை | (துரியோதநாதி) ராஜாக்களிடத்தில் |
| நடந்த தூதா | தூதுநடந்தவனே!, |
| தூ மொழியாய் | இன் சொற்களையுடையவனே! |
| சுடர் போல் | விளக்கொளிபோலே ஜ்வலித்துக் கொண்டு |
| என் மனத்து இருந்த | என்னுள்ளத்திலுறைகின்ற |
| வேதா | வேத வேத்யனே! |

திருவிண்ணகர் மேயவனே!—;
நின் அடைந்தேன்—.

* * *—பிராட்டிமாரும் நித்யஸூரிகளும் புருஷகாரமாகச் சரணம் புகுகிறார் இதில். போதார்தாமரையாள் தன்கோதா!, புலவிதன் கோதா!, குலவானவர்தம் கோதா! என்று யோஜிக்கலாம். 'கௌதுகம்' என்னும் வடசொல் விகாரமடியாய் பிறந்த விளியாம் **கோதா!** என்பது. 'ப்ரியனே!' என்றபடி. செவ்வித் தாமரைப்பூவை இருப்பிடமாக வுடையளான ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு அன்பனே!, பூமிப்பிராட்டிக்கு அன்பனே!, நித்யஸூரிகட்கு அன்பனே! என்கை. பூமிப்பெயரான **புலம்** என்னும் சொல்லடியாப்பிறந்த பெண்பாற்பெயர் **புலவி** என்பது. அன்றியே, 'புலவி' என்று பிரிவுக்கும் பெயருண்டு; போதார்தாமரையாளுடைய புலவியில் — [பிராட்டியைப் பிரணயவசத்தால் பிரிந்திருக்குங் காலத்தில்] அப்பிரிவினாலுண்டான ஊடலைத்தீர்த்துத் தேறுதல் செய்விக்கும் நித்யஸூரிகளுக்கு அன்பனே! என்னவுமாம்.

இப்படி நித்யஸூரிநாதனாயிருக்கச்செய்தேயும் ஆச்ரிதர்கட்காகத் தன்னை யழியமாறித் தூதுபோனமை சொல்லுகிறது **கோதில் செங்கோற்குடைமன்னரிடை நடந்த தூதா!** என்று. இங்கு 'மன்னர்' என்றது துரியோதனாதியரை யென்றுங் கொள்ளலாம், பாண்டவர்களை யென்றும் கொள்ளலாம். பாண்டவர்களின் குடை சாமரம் முதலானவற்றையெல்லாம் பறித்துக்கொண்டு முத்துக்குடை நிழற்கீழேயிருந்து பூமிப்பரப்புக்கெல்லாம் தாங்களே அரசர்களாய் நிர்வஹித்துக்கொண்டு போருகிற துரியோதனாதியரிடத்திலே கழுத்தில் ஓலையைக் கட்டிக்கொண்டு தூதெழுந்தருளினவனே!; அன்றியே, கண்ணபிரானுடைய திருவுள்ளத்தாலே கோதில் செங்கோற்குடை மன்னரான பாண்டவர்கட்காகத் தூதெழுந்தருளினவனே! என்றுமாம்.

**தூமொழியாய்!**—ஆச்ரிதர்களான பாண்டவர்களிடத்தில் தனக்குண்டான பக்ஷபாதம் விளங்க வார்த்தை யருளிச்செய்தவனே! என்றவாறு. அதாவது என்னென்னில்; 'பாண்டவர்களும் நீங்களும் செய்யப்பார்த்தது என்?' என்று துரியோதனாதியரைக்கேட்க; அதற்குத் துரியோதனன் 'பாண்டவர்களுக்குத்

தருமமும் தருமபலனான ஸ்வர்க்கபோகமுமுண்டு; அவர்கள் ஐந்துபேர்; நாங்கள் நூறுபேர்; ஆகையாலே பூமிப்பரப்பெல்லாம் எங்களுக்கே இடம் போரு மித்தனை, நாங்கள் ஒரு ஊசிகுத்துமிடமும் கொடுப்பதில்லை' என்று சொல்ல, 'உன் எண்ணம் இதுவானபின்பு இனி யுத்தம் நடத்து மித்தனை' என்றருளிச் செய்த மொழியாம். இது ஆச்ரிதரான பாண்டவர்களிடத்துப் பரிவுதோற்ற அருளிச்செய்த வார்த்தையாகையாலே தூமொழியாம்.

சுடர்போல் என்மனத்திருந்த வேதா!='இப்படிப்பட்ட ஆச்ரிதபக்ஷபாதி யன்றோ இவன்' என்று என்மனம் உன்மேல் ஈடுபட்டிருக்கு மென்றவாறு.

வேதா! நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே!=உன்னை வேதங் களிலே கேட்டுப்போகையல்லாமல் கண்ணாலே காணலாம்படி திருவிண்ணகரிலே வந்து ஸந்நிதிபண்ணியிருக்கு மிருப்பிலே வந்து சரணம் புகுந்தேனென்று ராயிற்று. .... .... .... .... .... (கூ)

தேனார் பூம்புறவின் திருவிண்ணகர் மேயவனை *
வானாரும் மதிள்சூழ் வயல்மங்கையர்கோன், மருவார் *
ஊனார்வேற்கலியன் ஒலிசெய் தமிழ்மாலைவல்லார் *
கோனாய் வானவர்தங் கோடிமாநகர் கூடுவரே. (கo)

| | | | |
|---|---|---|---|
| தேன் ஆர் பூ புறவின் | தேன்நிறைந்த பூக்களை யுடைய சோலைகளை யுடைத்தான | ஊன் ஆர் | சரீரங்களிலே புகுவதான |
| | | வேல் | வேற்படையையுடையரான |
| | | கலியன் | ஆழ்வார் |
| திரு விண்ணகர் | திருவிண்ணகர்த் திருப்பதியிலே | ஒலி செய் | அருளிச்செய்த |
| மேயவனை | நித்யவாஸஞ்செய்தருளு மெம்பெருமான் விஷயமாக, | தமிழ் மாலை | இத்தமிழ்ப் பாசுரங்களை |
| | | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| வான் ஆரும் | ஆகாசத்தையளாவியிருக்கிற | கோன் ஆய் | ஸ்ரீவைகுண்ட நிர்வாஹக ராய்க் கொண்டு |
| மதிள் | மதிள்களாலும் | வானவர் தம் | நித்யஸூரிகளுடையதாய் |
| வயல் | கழனிகளாலும் | கோடி | கொடிகளால் அலங்கரிக்கப் பட்டதாய் |
| சூழ் | சூழப்பட்ட | | |
| மங்கையர் | திருமங்கையிலுள்ளார்க்கு | மா | சிறந்ததான |
| கோன் | ஸ்வாமியாய், | நகர் | ஸ்ரீவைகுண்டத்தை |
| மருவார் | பகைவருடைய | கூடுவர் | அடையப்பெறுவர். |

* * *—இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. இங்கு நின்றும் பரமபதத்துக்கு எழுந்தருளுமவர்களை அங்குள்ள நித்யஸூரிகள் 1. "ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமரென்று" என்கிறபடியே 'நீங்கள்

1. திருவாய்மொழி 10—9—5.

பரமபதத்தை ஆளுங்கோள்' என்பாராதலால் 'கோனாய்' எனப்பட்டது. இத்திருமொழி கற்றாரிட்ட வழக்காயிருக்குமாம் திருநாடு. .... .... (கo)

அடிவரவு:—பொறுத்தேன் மறந்தேன் மானேய்தம் பிறிந்தேன் பாண் கல்லா வேறு நீவாய் போதார் தேனார் துறப்பேன்.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—மூன்றாந்திருமொழி,

# துறப்பேனல்லேனின்பம்.

[இதுவும் திருவிண்ணகர் மங்களாசாஸநத்திருப்பதிகம்.]

அவதாரிகை:—கீழ்த்திருமொழிகளிரண்டிலும் ஆழ்வார் ஸம்ஸார தோஷங்களை விரித்துரைத்து, ஸம்ஸாரத்தில் தமக்குண்டான வெறுப்பை எம்பெருமான் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்தும் அதை நிவர்த்திப்பிக்க வேணுமென்று சரணம்புகுந்தும், 'இவர்க்கு இன்னமும் பூர்வவாஸநையாலே விஷயப்ராவண்யம் நிச்சேஷமாகக் கழிந்திராது; சிறிதாவது ஒட்டிக்கிடக்கும்; இன்னும் சிறிது இவரைப்பரீக்ஷிப்போம்' என்று திருவுள்ளங்கொண்ட திருவிண்ணகரப்பன் 'ஆழ்வாரே! உம்முடைய கருத்தைத் தெளிவாகச்சொல்லும்' என்று கேட்டருளினதாகக்கொண்டு, தாம் வெறுத்துக் காற்கடைக்கொண்ட விஷயம் இஃதென்றும், பெருவீடில் முடிந்துபோம்படியான அவஸ்தையைப் பிறப்பிக்குமதான தாமபேக்ஷித்த புருஷார்த்தம் இஃதென்றும், திருநாட்டிற்சென்று திருவடிகளின் கீழ்வாழ்ச்சியில் தமக்குப் பிறந்துள்ள பேரவாவையும் விரிவாக விண்ணப்பஞ் செய்வதாம் இத்திருமொழி. .... .... .... .... *

துறப்பேனல்லே னின்பந் துறவாது * நின்னுருவம்
மறப்பேனல்லேன் என்றும்மறவாது * யானுலகில்
பிறப்பேனாக வெண்ணேன் பிறவாமைபெற்றது * நின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே. (க)

திருவிண்ணகரானே !—;

| | |
|---|---|
| இன்பம் | (உன் அநுபவத்தினு லுண்டாகக்கூடிய) பேரின்பத்தை |
| துறப்பேன் அல்லேன் | தவிரமாட்டேன் ; |
| துறவாது | அவ்வின்பத்தைத்தவிராதவ ணுகி |
| என்றும் | ஒருநாளும் |
| நின் உருவம் மறப்பேன் அல்லேன் | உன்வடிவழகை மறவாதவனு யிருக்கின்றேன் ; |
| மறவாது | அவ்வடிவழகை மறவாதவனுகி |
| யான் | நான் |
| உலகில் | ஸம்ஸாரத்தில் |
| பிறப்பேன் ஆக எண்ணேன் | இனிப் பிறவியெடுக்க எண்ணமற்றவனுயிருக் கின்றேன் ; |
| பிறவாமை பெற்றது | இனிப்பிறவாதபடி பேறுபெற்ற விதுதானும் |
| நின் திறத்தேன் ஆதன்மை யால் | உனக்கே ஆட்பட்டதனுலேயாம். |

* * *—சிற்றின்பங்களை நான் துறப்பனேயன்றி, தேவரீருடைய அநுபவ மாகிற பேரின்பத்தை ஒருநாளும் இழக்கமாட்டேன் ; தேவரீருடைய வடிவழகு என்னல் மறக்கமுடியுமாகிலன்றே இன்பத்தை நான் துறந்தவனுவேன் ; வடி வழகை மறவாதவனுகையாலே இன்பத்தைத் துறவாதவனுயினேன் ; இப்படிப் பட்ட நான் இனிமேலும் இவ்விருள் தருமாஞாலத்தில் பிறந்து பிறந்து கஷ்டங் கள்பட நினைப்பேனே ? "மறந்தேனுன்னை முன்னம்" என்று கீழ்நாட்களில் தேவரீரை மறந்திருந்தேனுகிலும் இனிமேலுள்ள காலம் மறவாதேயிருக்கப் பாரித்திருப்பவனுதலால் அடியேன் பிறவித்துயர் நீங்கி நித்யாநந்த மநுபவிக்கவே உரியேனுயினேன் என்றுராயிற்று.

கீழ்த்திருமொழியில் "மறந்தேனுன்னை முன்னம்—அதனுலிடும்பைக்குழி யிற்பிறந்தே யெய்த்தொழிந்தேன்" என்று மறதிக்குப் பலனுகப் பிறவித்துன்பம் பெற்றமை சொன்னர் ; இதில் மறவாமைக்குப்பலனுகப் பிறவாமை பெற்றமை சொன்னுரென்க. .... .... .... .... .... (க)

துறந்தேனுர்வச்செற்றச்சுற்றம் துறந்தமையால் *
சிறந்தேனின்னடிக்கே அடிமை திருமாலே *
அறந்தானுய்த்திரிவாய் உன்னை யென்மனத்தகத்தே *
திறம்பாமல்கோண்டேன் திருவிண்ணகரானே. (உ)

திருவிண்ணகரானே !—;
திரு மாலே !—;

| | |
|---|---|
| அறம் தான் ஆய் திரிவாய் | தானே ஸாக்ஷாத்தர்மமாய்க் கொண்டு ஆள்பார்த்துத் திரியுமவனே !, |
| சுற்றம் | (ஸம்ஸாரிகளுடன்) உறவையும் |
| ஆர்வம் | அன்பையும் |
| செற்றம் | விரோதத்தையும் |
| துறந்தேன் | தவிர்ந்தேன் ; |
| துறந்தமை யால் | தவிர்ந்ததனுல், |
| நின் அடிக்கே | உன் திருவடிகளிலேயே |
| அடிமை சிறந்தேன் | கைங்கரியம் பண்ண வுரியனுனேன் ; |
| உன்னை | உன்னை |
| என் மனத்தகத்தே | எனது நெஞ்சினுள்ளே |
| திறம்பாமல் கொண்டேன் | தவருது தரித்துக் கொண்டேன். |

* * *—பிராகிருதர்களான அநுகூலரிடத்தில் அநுராகமும், பிரதிகூலரிடத்தில் பகையும், ஆபாஸபந்துக்களிடத்தில் உறவும் உள்ளவரையில் எம்பெருமான் திருவடிகளில் அன்பு நிலைநிற்கமாட்டாதாதலால் அம்மூன்றும் தமக்கு ஒழிந்தமையை அருளிச்செய்து 'தேவரீர் திருவடிகட்கே அடியேன் தகுந்தவனாயினேன்' என்கிறார். "வஹிதுகா ஜயா லஂகா—பரித்யக்தா மயா லங்கா" [விட்டொழித்தேன் இலங்கையை] என்ற விபீஷணாழ்வானைப்போலே அருளிச்செய்கிறார் காண்மின்.

ஆர்வம், செற்றம், சுற்றம் என்ற மூன்றும் ஒருவகையாலே உபாதேயம்; மற்றொருவகையாலே த்யாஜ்யம்; (எங்ஙனேயென்னில்;) விஷயாந்தரங்களிலே ஆசைவைத்து அவை ஸித்திப்பதற்கான முயற்சிகள் செய்யுமளவில் அவற்றுக்கு உதவிசெய்யும் நண்பர்களிடத்தில் உண்டாகிற ஆர்வமும், அவற்றுக்குக்கெடுதல் விளைக்கிற (அல்லது, கெடுதல் விளைவிப்பவராகத் தம்மால் கருதப்படுகின்ற) பிரதிகூலர்களிடத்தில் மாத்ஸர்யமும், உண்மையான உறவினரல்லாத தேஹபந்துக்களிடத்திலும் காமிநிகளிடத்திலும் வைக்கிற பந்துத்வ ப்ரதிபத்தியுமாகிற ஆர்வச்செற்றச் சுற்றங்கள் த்யாஜ்யம்; பகவத்பாகவதர்களிடத்தில் விளையும் ப்ரேமமும், பகவத்பாகவத விரோதிகளிடத்தில் விளையும் பகையும், "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையுமவரேயினியாவாரே" என்று விளையும் உறவுமுறையும் ஸ்வரூபாநுரூபமாகையாலே உபாதேயம். இங்கு "துறந்தேனார்வச் செற்றச்சுற்றம்" என்றது முற்சொன்ன த்யாஜ்யமானவற்றை யென்க.

**துறந்தமையால் நின்னடிக்கே அடிமை சிறந்தேன்**=தவிரவேண்டுமவையெல்லாம் தவிர்ந்தமையாலே 1. "திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்று இயற்கையாகவே உள்ளதாக அநுஸந்திக்கப்படுகிற அடிமைத்தொழிலுக்கு அர்ஹனாய்விட்டேனென்கை. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யம்;—"(துறந்தமையாலித்யாதி.) புறம்பே சிலரை உறவுமுறையென்றிருக்கையிறே இழவு வருகைக்கடி; அது தவிர்ந்தால் இப்போதாக உறவுஸம்பாதிக்கவேண்டுவதில்லையிறே; இவன் பக்கல் ஸம்பந்தம் ஸ்வாபாவிகமே. பாஹ்யவிஷயங்களை விட்டபோதே தொடங்கித் திருவிடையாட்டமிறே. ராவணபவநத்தைவிட்டு (ஸ்ரீவிபீஷணாழ்வான்) ஆகாஶஸ்தனானபோதே ஸ்ரீமானானானிறே. அப்ராப்த விஷயங்களைவிட்ட வநந்தரம் ப்ராப்தவிஷயத்தினுடைய சரமாவதியிலே நின்றேன். ப்ராப்திபலமான கைங்கர்யத்துக்கு யோக்யனானேன்."

**அறம் தானாய்த்திரிவாய்**="கறவைகள் பின்சென்று கானஞ்சேர்ந்துண்போமறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து, உன்றன்னைப்பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்றாப்போலே ஸாக்ஷாத்தர்மமே வடிவெடுத்தது போன்

1. திருப்பல்லாண்டு. 11.

றுள்ள தேவரீர் பலன்கொடுக்கைக்கு அவஸரம் பார்த்துத்திரியாநிற்க அடியேனிடத்தில் வேறு சில தர்மங்கள் வேணுமோ? என்றவாறு. .... .... (உ)

மானேய் நோக்குநல்லார் மதிபோல்முகத்துலவும் *
ஊனேய்கண்வாளிக்கு உடைந்தோட்டந் துன்னடைந்தேன் *
கோனே குறுங்குடியுள்குழகா திருநறையூர்த்
தேனே * வருபுனல்சூழ் திருவிண்ணகரானே. (௩)

| | |
|---|---|
| கோனே | ஸ்வாமிந்!, |
| குறுங்குடியுள் குழகா | திருக்குறுங்குடியிலே வந்து கலந்து கொள்ள நிற்பவனே!, |
| திரு நறையூர் தேனே | திருநறையூரில் தேன்போல் பரமபோக்யனே! |
| வரு புனல் சூழ் திரு விண்ணக ரானே | பெருகுகின்ற தீர்த்தங்களால் சூழப்பட்ட திருவிண்ணகரில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, |
| மான் எய் நோக்கு நல்லார் | மான்பார்வைபோன்ற பார்வையையுடைய மாதர்களது |
| மதி போல் முகத்து உலவும் | சந்திரன்போன்ற முகத்தில் உலாவுகின்ற |
| ஊன் எய் கண் வாளிக்கு | மாம்ஸமயமான கண்களாகிற பாணத்துக்கு |
| உடைந்து | அஞ்சி நடுங்கி |
| ஓட்டந்து | ஓடிவந்து |
| உன் அடைந்தேன் | உன்னைச் சரணமடைந்தேன். |

* * *—பாம்புக்கு அஞ்சி ஓடிவந்து விழுந்தேனென்பாரைப்போலவும், ராமாஸ்த்ரத்துக்கு நடுங்கிவந்து விழுந்தேனென்பாரைப்போலவும் மாதர்களின் கண்களாகிற அம்புக்கு அஞ்சி வந்து நின்னடைந்தேனென்கிறார். ஸ்த்ரீகள் ஆண்களை ஆகர்ஷித்துக்கொள்வது கடைக்கண்ணோக்கினாலாதலால் 'மானேய் நோக்குநல்லார்' என்றார். அவர்களைச் சிறப்பித்தும் அவர்களுடைய முகத்தை வருணித்தும் இவர் கூறுவது காமுகர்களின் ஸமாதியாலென்க.

ஓட்டந்து='ஓட்டம் தந்து' என்ற இரண்டு சொற்கள் 'ஓட்டந்து' என ஒரு சொல்லாயிற்று: சிதைவு; ஓடிவந்து என்றபடி.

குழகன்=மஹானாயிருக்கும் தனது மேன்மையைப்பாராமல் சிறியாரோடுங் கலந்து பழகுமவன் என்கை.

திருநறையூர்த்தேனே!=“பட்டர் 'திருநறையூர்ப் பெருக்குக்குச் சினையாறு படுகிறதுகிடாய்' என்றருளிச்செய்வர்” என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. இதன் அழகிய கருத்தை அறிவீர்களோ? கேண்மின்; திருவிண்ணகர்த் திருப்பதிவிஷயமான இத்திருமொழி முடிந்தவுடனே “கண்ணுஞ்சுழன்று” என்ற திருமொழி தொடங்கிச் “சினவிற்செங்கண்” என்ற திருமொழியளவும் நூறுபாசுரங்களாலே திருநறையூரை அநுபவிக்கப்போகிறாரே ஆழ்வார்; அதற்குள்ளே இப்போது 'திருநறையூர்த்தேனே' என்று அத்திருப்பதியைப்பற்றி ப்ரஸ்தாவம் செய்வானேன்? என்று நஞ்சீயர் போல்வார் பட்டரைக் கேள்வி

கேட்டனர் போலும்; அதற்கு பட்டர் அருளிச்செய்த மறுமாற்றமாமிது; இதன் கருத்து யாதெனில்; ஆற்றில் பெருவெள்ளம் வரப்போவதற்குமுன்னே ஆறு பொசிக்துகாட்டுவது வழக்கம்; அதுபோலே, நூறு பாசுரங்களாலே திருநறையூர்த் திருப்பதி யநுபவமாகிற மஹா ப்ரவாஹம் ஸமீபித்திருப்பதனால் அதற்கு முன்னடையாளமாகத் திருநறையூர்த்தேனே! என்று இவ்வாறு பொசிந்துகாட்டுகிறது காணாய் என்கை. இங்ஙனே மிக அழகிய அர்த்தம் பட்டர் திருவுள்ளத்தில் தானே தோன்றும். .... ..... .... (ரு)

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்ப வெள்ளத்
தாழ்ந்தேன் * அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன் *
போந்தேன்புண்ணியனே உன்னையெய்தி யென்தீவினைகள்
தீர்ந்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகரானே. (சு)

திரு விண்ணகரானே!—;

சாந்து ஏந்தும் மெல் முலையார் { குங்கும மணிந்த மெல்லிய முலைகளையுடையரான மாதர்களது

தட தோள் பருத்ததோள்களோடே

புணர் இன்பம் வெள்ளத்து } அணைவதனாலுண்டாகும் இன்பசாகரத்தில்

ஆழ்ந்தேன் { (கீழ்நாட்களில்) மூழ்கிக்கிடந்தேன்;

(அதனால்)

அரு நரகத்து அழுந்தும் பயன் படைத்தேன் } கொடிய ஸம்ஸாரநரகத்தில் அழுந்திக்கிடப்பதாகிற பலனைப் பெற்றேன்;

புண்ணியனே { புண்யமே வடிவெடுத்திருக்கும் பிரானே!

போந்தேன் நின் அடைந்தேன் } (உன்திருவடிவாரத்திலே) வந்து சேர்ந்தவனாய் உன்னையடைந்தேன்;

உன்னை எய்தி உன்னைக் கிட்டி

என் தீ வினைகள் தீர்ந்தேன் } எனது கொடும்பாவங்கள் தொலையப்பெற்றேன்.

* * *—கீழ்நாட்களெல்லாம் அநியாயமாய்க் கெட்டுப்போனேன்; பாழாய்ப் போனேன்; சிற்றின்ப நுகர்ச்சியிலேயே ஆழ்ந்து நரகத்திலே அழுந்தி நசிக்கப் பார்த்தேன்; தைவாதீனமாய் மீண்டேன், உன்திருவடிகளைச் சேர்ந்து உய்யும் வழிகண்டேன் பிரானே! என்கிறார்.

விஷயபோகங்களைக் காறியுமிழ்ந்து பகவத்விஷயத்திலே வந்து சேர்ந்த ஆழ்வார் ஹேயமான அவ்விஷயங்களைப்பற்றிச் சாந்தேந்து மென்முலையார் என்றும் தடந்தோள்புணரின்ப வெள்ளமென்றும் விரக்தர்க்கும் காமம்பிறக்கும் படியாக எதுக்கு வருணித்துப்பேசுகிறார்? என்று சிலர் பட்டரைக்கேட்டார்களாம்; அதற்கு அவர் அருளிச்செய்ததாவது—உலகத்தில் வாக்குப்படைத்தவர்கள் பலவகைப்படுவர்; சிலர் உள்ளதை உள்ளபடியே பேசுவர்கள்; சிலர் சிறந்த விஷயத்தைப்பற்றிப் பேசத்தொடங்கினாலும் தங்களுடைய வாக்கின் திறமை போராமையினால் குறைபடப் பேசுவர்கள்; சிலர் நாவீறுடைமையினால் அற்பவிஷயங்களையும் கனக்கப் பேசுவர்கள்; இப்படி பேச்சில் பலவகைகளுண்டு.

பேசுகிறவர்களின் வாக்கின் போக்கை அநுஸரித்து விஷயங்கள் சிறுத்துப் போவதும் பெருத்துப்போவது முண்டு. திருமங்கையாழ்வாருடைய நாவீறு லோகவிலக்ஷணமாகையால் அற்பவிஷயங்களைப்பற்றிப் பேசும்போதும் பெருக்காறு பெருகுமாபோலே யிருக்குமேயன்றி அவ்விஷயங்களின் சிறுமைக்குத் தக்கபடி சிறுத்திராது இவருடைய சொற்போக்கு. 'வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள் மாதரார்வனமுலை' என்றாப்போலே பெருத்திருக்கும்; ஆகவே, விஷயங்கள் அற்பமென்பதில் தடையில்லை; இவருடைய வாக்குப் பரமகம்பீரமாகையால் அற்பவிஷயத்தையும் கனக்கப்பேசுகின்றது—என்றும்.

இங்கே வியாக்கியான வாக்கியம் காண்மின்;—"விஷயங்களை விட்டு இவ்வருகே போந்தவிவர் வீதராகர்க்கும் ஸ்ப்ருஹை பிறக்கும்படி சொல்லுவானென்?" என்று பட்டர்க்கு விண்ணப்பஞ்செய்ய $ "முரிக்குக் கிழக்கு' என்னும் போதும் இங்ஙனல்லது இராதுகாண் திருமங்கையாழ்வார் நாவீறு' என்றருளிச்செய்தார்.

கிடாம்பியம்மாள், சிறியாண்டான்பெருமாள் பணித்தானாகப் பல காலும் சொல்லும்; 'நாம் சொல்லுகிற வாசகங்களேயன்றோ பட்டரும் வ்யவஹரிக்கிறது! என்றிருக்கவொண்ணாது, அங்குத்தைக்கு ஏற்றமுண்டு. முன்னே நின்ற தூணை நாம் தூணென்றவாறே சிராயாய்த்தோற்றும்; பட்டர் சொன்னவாறே தளிரும்முறியுமாய்த் தோற்றும்' என்று."

தடந்தோள் புணரின்ப வெள்ளத்தாழ்ந்தேன்—"ரஸோவை ஸ:" என்கிற உபநிஷத்தின்படியே பகவதநுபவமொன்றே இன்பவெள்ளமென்று கைகண்ட இவ்வாழ்வார், துன்பவெள்ளத்தை இன்பவெள்ளமென்கிறது அதிலே மயங்கி யிருக்கும் உலகத்தாருடைய கருத்தாலேயென்க. இன்பவெள்ளம்போல் பிரமிக்க விருப்பது கொண்டு. .... .... .... .... (௪)

மற்றோர்தெய்வமெண்ணேன் உன்னையென்மனத்துவைத்துப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான்! *
வற்றாநீள்கடல்சூழ் இலங்கை யிராவணனைச்
செற்றாய்! * கொற்றவனே! திருவிண்ணகரானே! (௫)

---

$ முரிக்குக்கிழக்கு—அஸாரம் என்றபடி. முரியாவது அணை; அதற்குக்கீழ்ப்பட்ட ஜலம் கழிவடை நீராய் அஸாரமாயிருக்குமென்று கொண்டு, அஸாரமென்னும் பொருளில் 'முரிக்குக் கிழக்கு' என்று பிரயோகமாயிற்றென்ப. 'மேற்கு கிழக்கு என்னும் போதும்' என்று சிலர் பாடங்கொள்வது முண்டு. அதாவது, இன்னவிடம் மேற்கு, இன்னவிடம் கிழக்கு என்று ஒருவர் சொல்லவேண்டில் அதில் ஒரு வர்ணனையுமின்றியே 'மேற்கு கிழக்கு' என்றே சொல்லவேண்டியதாகும்; ஆனால் அதனையே திருமங்கையாழ்வார் வாக்கினால் சொல்லுவதாயிருந்தால் விலக்ஷணமாகவே யிருக்குமென்கை.

| | | | |
|---|---|---|---|
| வற்று நீள் கடல் சூழ் | ஒருநாளும் வற்றாத பெரியகடலால் சூழப்பட்ட | எம்பெருமான் | ஸ்வாமிந்!, |
| இலங்கை | லங்காபுரியில் | உன்னை | உன்னை |
| இராவணனை | ராவணனை | என் மனத்து வைத்து | எனது நெஞ்சில் இருத்தி |
| செற்றாய் | கொன்றொழித்தவனே!, | பெற்றேன் | ஒரு பேறுபெற்றேன்; |
| கொற்றவனே | தேவாதிதேவனே! | பெற்றதுவும் | அப்படி நான்பெற்ற பேறுவது |
| திரு விண்ணகரானே!—; | | | |
| மற்று ஓர் தெய்வம் எண்ணேன் | வேறொரு தெய்வத்தை நெஞ்சிலும் நினைப்பேனல்லேன்; | பிறவாமை | இனிப் பிறப்பில்லாமையே. |

* * *—ஒருவராலு மழிக்கவொண்ணாத அரணையுடைத்தான இலங்கையை நீறுபடுத்தி இராவணனையும் வேரோடே களைந்தொழித்தாப்போலே அடியேனுடைய பிரதிபந்தகங்களை யெல்லாம் தொலைத்தருளின பெருமானே! நான் ஆச்ரயிக்கத்தகுந்த தெய்வம் வேறொன்று இருப்பதாக நெஞ்சிலும் நினையேன்; ஸர்வஸ்மாத் பரனானவுன்னையே நெஞ்சில்தாங்கி அலப்யலாபம் பெற்றேன்; என்ன பேறுபெற்றேனென்னில், தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பதற்கு ஒருகால் காரணமாகக்கூடிய ஜன்மமும் தொலையப்பெற்றேன்; திருவிண்ணகரிற் கண்ட காட்சியிலே பெற்ற பேறுகாண் இது. .... .... .... (ரு)

மையொண்கருங்கடலும் நிலனும்மணிவரையும் *
செய்யசுடரிரண்டும் இவையாயநின்னை * நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தேன் உண்மையாலினி * யாதும்மற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே! (சு)

| | | | |
|---|---|---|---|
| திரு விண்ணகரானே!—; | | நெஞ்சில் | நெஞ்சினால், |
| மை ஒண் கரு கடலும் | மைபோன்று அழகியதாய்க் கறுத்திருக்கின்ற ஸமுத்ரமும் | உய்யும் வகை | நான் உஜ்ஜீவிக்கும்படி |
| நிலனும் | பூமியும் | உண்மையால் உணர்ந்தேன் | உள்ளபடி தெரிந்து கொண்டேன்! |
| மணி வரையும் | சிறந்த பர்வதங்களும் | இனி | இப்படியான பின்பு |
| செய்ய இரண்டு சுடரும் | அழகிய சந்திர ஸூர்யர்களும் | மற்று | இதற்குமேலே |
| இவை ஆய நின்னை | ஆகிய இப்பொருள்களாய் விரிந்து நிற்கிறவுன்னை | பிறிது ஓர் தெய்வம் யாதும் அறியேன் | எவ்விதமான தேவதாந்தரத்தையும் நினைக்கமாட்டேன். |

* * *—கீழ்ப்பாட்டில் "மற்றோர் தெய்வமெண்ணேன்" என்றதை ஹேதுவோடே உபபாதிக்கிறாரிதில். திருவிண்ணகர்ப்பெருமானே!, ஸப்தஸாகரங்கள், அவற்றால் சூழப்பட்ட பூமி, அதற்கு ஆணியடித்தாப்போலே யிருக்கிற குலாசலங்கள், சந்திரன் ஸூரியன் முதலிய சுடர்ப்பொருள்கள் ஆகிய இவை

யெல்லாம் நீயே; உன் உருவமே இவையெல்லாம் என்று நான் நன்குணரப் பெற்றேனாதலால் ஸர்வசரீரியான உன்னைவிட்டு உனது சரீரமான தேவதாந்தரங்களைத் தெய்வமாக நெஞ்சில்தான் நினைப்பனோ? இதுவரையில் நான் அழிந்து போனதுபோலல்லாமல் இனி உஜ்ஜீவிக்க ப்ராப்தனாயினேனாதலால் உன்னைத் தெரிந்துகொண்டேன் என்றாராயிற்று. .... .... .... (சு)

**வேறேகூறுவதுண்டு அடியேன்விரித்துரைக்கு**
**மாறே * நீபணியாதடை நின்திருமனத்து ***
**கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு * மற்றோர்தேய்வம்**
**தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே!** (எ)

| | |
|---|---|
| திரு விண்ணகரானே!—; | |
| அடியேன்—; | |
| வேறே | விலக்ஷணமாக |
| கூறுவது உண்டு | விண்ணப்பஞ்செய்வதொரு வார்த்தையுண்டு; |
| விரித்து உரைக்கும் ஆறே நீ பணியாது | (நான்) விரிவாகக்கேட்க வேண்டும்படி நியமியாமல் |
| நின் திருமனத்து | உன் திருவுள்ளத்தில் |
| அடை | ஸாரமாகக் கொண்டருள வேணும்; |

| | |
|---|---|
| உன்னை அல்லால் | உன்னையொழிய |
| மற்று ஓர் தெய்வம் | வேறொரு தெய்வத்தை |
| கூறேன் | வாய்விட்டுச் சொல்லமாட்டேன்; |
| குணம் கொண்டு | (அவர்களிடத்தில்) குணவிசேஷத்தைக் கண்டாகிலும் |
| நெஞ்சு தன்னால் | நெஞ்சினால் |
| தேறேன் | (அவர்களை ஆச்ரயணீயரா ..) விச்வஸிக்கமாட்டேன். |

* * *—அடியேன் வேறே கூறுவதுண்டு=தோற்றினபடி கும்பலில் சொல்லுகிற வார்த்தைபோலல்லாமல் இவ்வார்த்தை ரஹஸ்யமாய் மிகமுக்கியமாக விண்ணப்பஞ்செய்கிறேனென்றபடி.

விரித்துரைக்குமாறே பணியாது=தேவரீர்க்கும் அடியேனுக்கும் நடக்கிற ஸம்வாதம் கீதாசாஸ்த்ரம்போலே விரிந்திருக்கவொண்ணாது; அதாவது—கீதையிலே முடிவாக அருளிச்செய்த சரமச்லோகத்தை முதலிலேயே அருளிச்செய்திருந்தால் அவ்வளவு நூல்விரிவு விளைந்திராது; தேவரீர் ஒன்று சொல்ல, அதற்கு அர்ஜுநன் கலங்கிப் பல கேள்விகள் கேட்க, அவற்றுக்கு தேவரீர் உத்தர மருளிச்செய்ய, அதற்குமேலும் பலபல சங்கைகள் தோன்றி அர்ஜுநன் கேள்விகள்கேட்க, இப்படியே கீதாசாஸ்த்ரம் விரிந்ததாயிற்று; அப்படியல்லாமல் இப்போது தேவரீர் ஸாரமாகத் திருவுள்ளம் பற்றவேணும்; அதற்குமேல் அடியேன் ஒன்றும் வாய்திறக்கும்படி யிருக்கவொண்ணாது; "ஷிதொஷி ஶத ஸஂஷெஹஃ கஙிஷெ வசநஂ தவ=ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ" [சஞ்சலமற்று நிலைபெற்றேன், ஸந்தேஹங்கள் தீர்ந்தேன், தேவரீர்

சொன்னபடியே செய்கிறேன்] என்று கையெழுத்திடும்படி அருளிச்செய்ய வேணுமென்கை. 'ஆழ்வீர்! உம்மைத் திருவடி சேர்த்துக்கொண்டேன்' என்றருளிச் செய்யவேணுமென்பதே தேர்ந்த பொருள்.

அடியேன் வேறுகதியற்றவனாகையால் இவ்வருள் செய்தே தீரவேணுமென்கிறார் பின்னடிகளில். .... .... .... .... (எ)

முளிந்தீந்த வெங்கடத்து மூரிப் பெருங்களிற்றால் *
விளிந்தீந்தமாமரம்போல் வீழ்ந்தாரைநினையாதே *
அளிந்தோர்ந்தசிந்தை நின்பாலடியேற்கு * வானுலகம்
தெளிந்தேயென் றெய்துவது திருவிண்ணகரானே! (அ)

திரு விண்ணகரானே!—;

| | |
|---|---|
| முளிந்து தீந்த | உலர்ந்து தீஞ்சுபோன |
| வெம் கடத்து | வெவ்விய பாலைநிலத்திலே |
| மூரி பெரு களிற்றால் | வலிய பெரியயானையினால் |
| விளிந்து | தள்ளப்பட்டு |
| தீந்த | கெட்டுப்போன |
| மா மரம் போல் வீழ்ந்தாரை | பெரியமரங்கள்போல் தொலைந்துபோனவர்களை |
| நினையாதே | நினையாமல் |
| நின்பால் | உன்னிடத்தில் |
| அளிந்து ஓர்ந்த சிந்தை அடியேற்கு | கனிந்து தெளிந்த மனமுடையேனான எனக்கு |
| தெளிந்து | இந்த ஸம்ஸாரக் கலக்கங்கள் நீங்கி |
| வான் உலகம் எய்துவது என்று | பரமபதம் அடையும் நாள் எதுவோ?. |

* * *—தீக்ஷ்ணமான மருகாந்தாரத்திலே வலிதான ஒரு யானையாலே தள்ளப்பட்டு உருமாய்ந்து போகிற பெரிய மரங்கள் போலே இவ்வுலகில் எத்தனையோ பலசாலிகள் கருமங்களாலே முடிக்கப்பட்டு முடிந்துபோகிறார்களாதலால் இப்படிப்பட்ட ஸம்ஸாரத்தை ஒரு பொருளாக மதியாமல் பரம தயாளுவான தேவரீர் பக்கலிலே நெஞ்சைச் செலுத்தியிருக்கு மடியேனுக்குப் பரமபதம் கிடைக்கும் நாள் எதுவோ அந்நாளை யருளிச்செய்யவேணும் திருவிண்ணகரப்பனே!—என்கிறார்.

முளிந்து+தீந்த, முளிந்தீந்த; விளிந்து+தீந்த, விளிந்தீந்த. (சங்கு+கதை, சங்கதை என்றாவதுபோல.) வெம் கடம்—கடூரமான பாலைநிலம். இந்த ஸம்ஸாரமே முளிந்தீந்த வெங்கடமாகவும், கருமங்களே மூரிப்பெருங்களிறாகவும், மாண்டொழிந்த அரசர்கள் விளிந்தீந்த மாமரமாகவும் கொள்க .... (அ)

சொல்லாய்திருமார்பா! உனக்காகித் தொண்பட்ட
நல்லேனை * வினைகள்நலியாமை நம்புநம்பீ! *
மல்லா! குடமாடீ! மதுசூதனே! * உலகில்
செல்லாநல்லிசையாய்! திருவிண்ணகரானே! (கூ)

| | | | |
|---|---|---|---|
| திரு விண்ணகரானே !—; | | திரு மார்பா | பிராட்டியை மார்வில் உடையவனே !, |
| மல்லா | மிடுக்குடையவனே ! | சொல்லாய் | அடியேனுக்கு மறுமொழி கூறியருளவேணும் ; |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனே ! | உனக்கு ஆகி | உன்விஷயத்தில் |
| மதுசூதனே | மதுவென்னும் அசுரனைக் கொன்றவனே ! | தொண்டு பட்ட | அடிமைபூண்ட |
| உலகில் செல்லா | லோகத்தில் நடையாடாத [அபூர்வமான] | நல்லேனை | விலக்ஷணனனவென்னை |
| நல் இசையாய் | நல்ல கீர்த்தியை யுடையவனே !. | வினைகள் நலியாமை | பாவங்கள் தொந்தரவு செய்யாதபடி |
| நம்பீ | பரிபூர்ணனே !, | நம்பு | ஆதரித்தருளாய். |

* * *—அடியேனுடைய குற்றங்களையும் நற்றமாக உபபாதிக்கவல்ல பிராட்டி இணைபிரியாதிருக்கும்போது அடியேனுக்கு என்னகுறை? திருமாலே! மிடுக்குடையவனே! மிடுக்குக்குப் போக்குவீடாகக் குடக்கூத்தாடினவனே! பரிபூர்ணனே! மதுவைக்கொன்றவனே! லோகவிலக்ஷணமான புகழையுடைய திருவிண்ணகரப்பனே! சோதிவாய் திறந்து ஒருவார்த்தை யருளிச்செய்ய வேணும்; தேவரீருக்கே அடிமைப்பட்டிருக்கையாகிற நன்மையையுடைய அடியேனைக் கருமங்கள் நெருக்காதபடி ஆதரித்தருளவேணுமென்கிறார்.

திருவாய்மொழியில் (10—2—1.) "கெடுமிடராயவெல்லாம்" என்ற பாசுரத்தின் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் பட்டருடைய ஐதிஹ்யமொன்று அருளிச்செய்யப்பட்டுள்ளது, அது இங்கே அநுஸந்திக்கவுரியது; அதாவது—ஒருநாள் அழகிய மணவாளன் வேட்டைத்திருநாளுக்காக ஓர் ஆற்றங்கரையிலே எழுந்தருளியிருந்தார்; அங்கே பல ஸ்ரீவைஷ்ணவர்களுந் தாமுமாய் பட்டர் எழுந்தருளியிருந்து பெருமாள் வடிவழகிலே ஈடுபட்டு அழகிய ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்து கொண்டிருக்கையில், சில அரஸிகர்கள் வந்து 'ஸந்த்யாகாலமாயிற்று' என்று விண்ணப்பம் செய்தார்கள்; ஸந்த்யாவந்தநம் அநுஷ்டிக்க வேணுமாகையாலே அதற்கு இடையூறாயிருக்கும் உபந்யாஸத்தை நிறுத்தியருள வேணுமென்பது அவர்களுடைய கருத்துப்போலும்; அப்போது பட்டர் 'நாம் பெருமாளழகிலே துவக்குண்டு இன்றொருநாள் அநுஷ்டாநத்தில் சிறிது விளம்பித்தோமென்றால் யமனுடைய ஓலையிலே இது ஒரு குற்றமாக ஏறமாட்டாது காணும்; **உனக்காகித் தொண்டுபட்ட நல்லேனை வினைகள் நலியாமை நம்பு நம்பீ**' என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பாசுரம் அறியீர்களோ? அவனுக்காகத் தொண்டுபட்டுப் போதுபோக்குமவர்களை வினைகள் நலியுமோ? இத்யாதிகள் அருளிச்செய்தாராம்.

மூன்றாமடியில், "மல்லார் குடமாடீ" "மல்லாற் குடமாடீ" "மல்லா! குடமாடீ" என மூன்று பாடங்கள் உண்டு; மல்லா! என விளியான பாடமே

மிகவழங்குவது. குடமாடி != தலையில் குடங்களை வரிசையாக அடுக்கிவைத்துக் கொண்டு அவை அசையாமல் நர்த்தனஞ்செய்வது குடக்கூத்தாம். .... (கூ)

தாரார் மலர்க்கமலத் தடஞ்சூழ்ந்த தண்புறவின் *
சீரார் நெடுமறுகில் திருவிண்ணகரானை *
காரார் புயற்றடக்கைக் கலியனொலிமாலை *
ஆராரிவைவல்லார் அவர்க்கல்லல் நில்லாவே. (க0)

| | |
|---|---|
| தார் ஆர் மலர் | இதழ்மிக்க பூக்களையுடைத்தான |
| கமலம் தடம் | தாமரைத்தடாகங்களினால் |
| சூழ்ந்த | சூழப்பட்ட |
| தண் புறவின் | குளிர்ந்த தோட்டங்களையுடையதாய் |
| சீர் ஆர் நெடு மறுகில் | செல்வம் மிக்க நீண்ட வீதிகளையுடையதான |
| திரு விண்ணகரானை | திருவிண்ணகரிலே எழுந்தருளியிருக்கிற அப்பன் விஷயமாக, |
| கார் ஆர் புயல் தட கை கலியன் | காளமேகம் போன்று ஔதார்யத்தையுடைய நீண்டகைகளையுடையரான திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | சொல்மாலையாகிய |
| இவை | இப்பாசுரங்களை |
| ஆர் ஆர் வல்லார் | எவரெவர் ஓதுகின்றனரோ, |
| அவர்க்கு | அவரவர்கட்கு |
| அல்லல் | பாவங்கள் |
| நில்லா | தங்கமாட்டாமல் ஓடிப்போய் விடும். |

* * *—இதழ்மிக்க பூவையுடைத்தான தாமரைத்தடாகங்களாலே சூழப்பட்ட குளிர்ந்த சுற்றுப்பிரதேசங்களையுடையதும் செல்வம் மிகுந்த பெரிய திருவீதிகளையுடையதுமான திருவிண்ணகரிலே எழுந்தருளியிருக்கிற தன்னொப்பாரில்லப்பன் விஷயமாகப் பரமோதாரரான திருமங்கைமன்ன னருளிச்செய்த இத்திருமொழியை ஓதுமவர்கள் யாராயிருந்தாலும் அவர்களிடத்தில் எவ்விதமான துக்கமும் நிற்கமாட்டாதென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. .... .... .... .... .... .... (க0)

அடிவரவு:—துறப்பேன் துறந்தேன் மானேய் சாந்து மற்றோர் மை வேறே முளிந்தீந்த சொல்லாய் தாரார் கண்ணும்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—நாலாந்திருமொழி,

# கண்ணுஞ்சுழன்று.

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில் "கோனே குறுங்குடியுள்குழகா திருநறையூர்த்தேனே!" என வந்தவிடத்தில் "திருநறையூர்ப் பெருக்குக்குச் சினையாறு படுகிறது கிடாய்" என்றன்றோ பட்டர் அருளிச்செய்தது; அப்படியே திருநறையூர் விஷயமான நூறு பாசுரங்களாகிற பெருவெள்ளம் பெருகத் தொடங்குகின்றது இப்போது. இத்திருமொழி தொடங்கி மேல் ஏழாம்பத்தில் மூன்றாந்திருமொழி முடிய [திருச்சேறைப்பதிகம் வருமளவும்] திருநறையூரில் ஈடுபட்டு அருளிச்செய்யும் திருமொழிகளாம்.

கீழ் மூன்று திருமொழிகளில் திருவிண்ணகரப்பன் திருவடிகளிலே தம்முடைய ஆர்த்தியைப் பரக்க விண்ணப்பஞ்செய்தார்; இப்போதே இவ்விருள் தருமாஞாலத்தைவிட்டுத் திருநாடுசேரப் பாரித்தார்; எம்பெருமான் 'ஆழ்வீர்! திருநாட்டுக்குப் போலியான திருப்பதிகள் இங்கேயிருக்க அங்குப்போகத் துடிப்பதேன்? நாளடைவிலே போகலாம்; திருநறையூரின் போக்யதையைப் பாரும்; இதிற்காட்டிலும் பரமபதத்தில் விசேஷமுண்டென்று நினைக்கிறீரோ?' என்ன, அப்படியாகில் இவ்விடத்தே அநுபவிக்கிறேனென்று இழிகிறார். *

கண்ணுஞ்சுழன்றுபீளையோடு ஈளைவந்தேங்கினால் *
பண்ணின்மொழியார் பையநடமி னென்னாதமுன் *
விண்ணும் மலையும் வேதமும்வேள்வியுமாயினான் *
நண்ணுநறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (க)

| | | | |
|---|---|---|---|
| பீளையோடு | பிளிச்சையோடுகூட | விண்ணும் | ஆகாசமும் |
| கண்ணும் சுழன்று | கண்கள் சுழலமிட்டு | மலையும் | பர்வதங்களும் |
| ஈளை வந்து | கோழைமேலிட்டு | வேதமும் | வேதங்களும் |
| ஏங்கினால் | தளர்ச்சியடைந்தால், (அப்பொழுது) | வேள்வியும் | யாகங்களும் |
| | | ஆயினான் | தானேயாயிருக்கு மெம்பெருமான் |
| பண் இன் மொழியார் | இசைப்பாட்டுபோல் இனிமையான வாய்மொழியையுடையமாதர் (நம்மைநோக்கி) | நண்ணும் | விரும்பியுறையுமிடமான |
| | | நறையூர் | திருநறையூரை |
| | | நெஞ்சமே | ஓ மனமே! |
| பைய நடமின் என்னாதமுன் | 'மெல்ல நடந்துசெல்லுங்கள்' என்று (திரஸ்கரித்துச்) சொல்வதற்கு முன்,— | நாம் தொழுதும் | நாம் வணங்குவோம்; |
| | | எழு | எழுந்திரு. |

* * *—யௌவனபருவத்தில் இஷ்டப்படி விஷயபோகங்கள் செய்யவேண்டியதென்றும், அப்படி விஷயபோகஞ் செய்வதற்கு சக்தியில்லாமல் உடல் தளர்ந்தகாலத்திலே பகவத்பக்தி மிக்கு திவ்யதேசங்களிலே போதுபோக்க வேண்டியதென்றும் பலர் கருதியிருப்பதுண்டு; யௌவனபருவத்தில் விஷய போகங்கள் செய்பவர் ஒரு நியதியில்லாமல் கண்டவிடங்களிலும் தட்டித்திரிவர்கள்; சரீரத்திற்கு எவ்வளவு கிழத்தனம் வரக்கூடுமோ அவ்வளவும் வந்து, நடந்து செல்லமாட்டாமல் ஒரு தடியைப்பற்றிக்கொண்டு முதுகு கூனிட்டு நடக்கும் நிலைமை நேர்ந்தவிடத்தும் நப்பாசை கழியாமையாலே பூர்வவாஸனையே கொண்டு வேசிகளின் வீட்டுவாசலையே பற்றிக்கிடக்கும்படியாகும்; அவர்கள் இவர்களைக் கழுத்தைப்பிடித்துத் தள்ளினாலும் அவர்களது முகத்தைப்பார்ப்பதும் முறுவலை யெதிர்பார்ப்பதுமா யிருப்பர்களேயன்றி அவ்வளவிலுங்கூட விரக்திபிறவாது; திவ்யதேசங்களில் ஈடுபாடும் உண்டாகாது; ஆகையால் விஷயாந்தரங்களில் கைவைப்பது ஒருநாளும் க்ஷேமப்படுவதற்கு உறுப்பாக மாட்டாது; இப்போதே திருநறையூரைத் தொழுவது நன்று என்கிறார். * கிளரொளியிளமை கெடுவதன் முன்னமே இது செய்யத்தக்கதென்கை.

கிழத்தனத்தில் கண்கள் சுழலமிடுவதும் கண்களினின்று பீளிச்சைபெருகுவதும் கோழை வருவதும் இயல்வாதலால் முதலடி கிழத்தனத்தின் முதிர்ச்சியைச்சொன்னபடி. அப்படிப்பட்ட நிலைமையிலும் முன்பு கலந்து பழகின மாதர்களை விடமாட்டாத நப்பாசை தொடர்ந்தே வருமென்பது இரண்டாமடியில் தொனிக்கும். துட்டுகாசும் தேஹவலிமையும் உள்ளவரையில் அவர்கள் ஆதரிப்பர்களேயன்றி, அவை போனால் துப்பமாட்டார்களே; அது தெரிந்தும் நப்பாசையின் கொடுமையினால் அங்கே தாவுவர்கள்; அப்போது 'உங்களுக்கு இங்கென்ன காரியம்? நடவுங்கோள்' என்பர்கள்; இப்படிப்பட்ட திரஸ்காரத்தையே போக்யமாகக்கொண்டு போதுபோக்குவர்கள்; அவ்வளவிலும் திவ்ய தேசத்தைப் பணிய நெஞ்சு ஒருப்படாது; ஆகையாலே விஷயாந்தரங்களைக் காறியுமிழ்ந்து திருநறையூரைத் தொழுவோமென்கை. கிழத்தனத்தைக்கண்டு வெறுத்து 'ஒழிந்துபோ, ஒழிந்துபோ' என்று துரத்தித் தள்ளச்செய்தேயும் 'அஹஹ! இது என்ன இனிமையான பேச்சு!; யாழினிசைபோலே வாய்மொழியினழகு இனிதாயிருக்கின்றதே!' என்று அவர்களுடைய பேச்சில் ஈடுபட்டிருப்பர்களென்பது தோன்றப் **பண்ணின் மொழியார்** எனப்பட்டது.

'**என்னுதமுன் நாம் தொழுதும்**' என்று தன்மையாகச் சொல்லப்பட்டிருந்தாலும் இதற்கு முன்னிலையில் முழுநோக்கென்க; 'பாவிகாள்! கிளரொளி யிளமை கெடுவதன்முன்னம் திருநறையூரைத் தொழுங்கோள்' என்று பிறரை நோக்கிச் சொல்லவேண்டியதையே '**நாம் தொழுதும்**' என்ற சொற்போக்கால் சொல்லுகிறபடி. முகுந்தமாலையில் "**நாயெ நஃ வ--ஷோ தூ ... நாஈ யெ ணெ திஷ தி — ஸெவாயெ ெஶ்ர மயாஃஹெ நாஃஹொஃ-ஸோவாராகாவயம்**" என்ற ச்லோகம் இவ்விஷயத்தில் ஒப்பு நோக்கத்தக்கது. 'ஐயோ! நீ பாழாய்ப்

போகிறாயே!' என்று பிறனைப்பார்த்துரைத்தால் சிறிப்புடைப்பன் என்று அஞ்சுமவர்கள் 'ஐயோ! நாம் பாழாய்ப்போகிறோமே!' என்று தன்மையாகச் சொல்லிக்கொள்ளுதல் உலகவழக்கிலும் காணத்தக்கது. ... .... (க)

கொங்குண்குழலார் கூடியிருந்துசிரித்து * நீர்
இங்கென்னிருமி யெம்பால்வந்ததென் றிகழாதமுன் *
திங்களெரிகால் சேஞ்சுடராயவன் தேசுடை *
நங்கள் நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| கொங்கு உண் குழலார் | மணம்பொருந்திய கூந்தலை யுடையரான மாதர் | திங்கள் | சந்திரனும் |
| கூடி இருந்து | கூட்டமாகத் திரண்டிருந்து | எரி | அக்நியும் |
| சிரித்து | பரிஹாஸம்பண்ணி | கால் | காற்றும் |
| நீர் | 'நீங்கள் | செம் சுடர் | ஸூரியனும் |
| இருமி | இருமிக்கொண்டு | ஆயவன் | ஆகிய இப்பொருள்களா யிருக்கும் எம்பெருமா னுடையதும் |
| இங்கு | இவ்விடத்தில் | தேசு உடை | தேஜஸ்ஸையுடையதும் |
| எம்பால் வந்தது | எங்களிடத்தில் வந்தது | நங்கள் | நமக்குப் புகலிடமானதுமான |
| என் | எதுக்காக?' | நறையூர் | திருநறையூரை |
| என்று இகழாத முன் | என்று திரஸ்கரிப்பதற்கு முன்னே,— | | |

நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—;

* * *—லொக்குலொக்கென்று இருமியிளைக்குங்காலத்திலும் பூர்வவாஸநை யாலே வேசிகளின் வீடுகளை நோக்கியே செல்ல நேருமே; அப்போது பரிஹாஸம் பண்ணுவதற்காக அவர்களெல்லாரும் ஒன்றுகூடி 'ஐயா! முற்ற மூத்த கிழவ னாரே! இருமிக்கொண்டே எங்கு வருகிறீர்? எதற்காக நம்மிடம் வருகிறீர்?' என்று அநாதரித்துச்சொல்லும் வார்த்தைகள் செவிப்படுவதற்கு முன் திருநறை யூர் தொழுவது நன்று.

கொங்குண்குழலார்=(வண்டுகள் படிந்து) தேனைப்பருகப்பெற்ற கூந்தலை யுடையார் என்னவுமாம். அவர்கள் பரிஹஸித்துத் தள்ளச்செய்தேயும் 'இப்படி யும் ஒரு கூந்தலழகுண்டோவுலகில்!' என்று வருணிப்பர் காமுகர் என்பது இதில் தோன்றும்.

'தேஜஸ்' என்னும் வடசொல் தேசு எனத்திரிந்தது. .... .... (உ)

கொங்கார்குழலார் கூடியிருந்துசிரித்து * எம்மை
எங்கேரலமையா! என்னினிக்காண்பதென்னுதமுன் *
செங்கோல் வலவன்தான் பணிந்தேத்தித் திகழுமூர் *
நங்கோன் நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (ங)

| | |
|---|---|
| கொங்கு ஆர் குழலார் | (தலைப் பூக்களில்நின்றும் பெருகின) தேன்நிறைந்த கூந்தலையுடைய மாதர் |
| கூடி இருந்து | திரளாக இருந்து |
| சிரித்து | பரிஹாஸம்பண்ணி |
| ஐயா | ‘கிழவனாரே! |
| இனி | இப்படி நீர் கிழத்தனமடைந்த பின்பு |
| எம்மை | எங்களையும் |
| எம் கோலம் | எங்களுடைய அலங்காரத்தையும் |
| என் காண்பது | எதுக்காகப் பார்ப்பது?’ |
| என்னாத முன் | என்று திரஸ்கரிப்பதற்கு முன்னே, |
| செங்கோல் வலவன் தான் | அரசாட்சிபுரிந்த சோழராஜன் |
| பணிந்து | ஆச்ரயித்து |
| ஏத்தி | துதித்து |
| திகழும் ஊர் | விளங்கப் பெற்ற திவ்யதேசமாய் |
| நம் கோன் | எம்பெருமானுடையதான |
| நறையூர் | திருநறையூரை |

நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—.

* * *—ஒன்றுக்குமுதவாதபடி உடல் மெலிந்து தளர்ந்தொழிந்தாலும் நப்பாசையாலே அங்குச்சென்று அவர்களது இயற்கையழகிலே கண்வைப்பதும் ஆபரணாதிகளாலுண்டான செயற்கையழகிலே கண்வைப்பதுமாயிருப்பர்களே; அப்போது அவர்கள் * பீளைசோரக் கண்ணிடுங்கிப் பித்தெழ மூத்திருமித் தாள்கள்நோவத் தம்மில் முட்டித் தள்ளிநடக்குமிப்பருவத்திலே நீர் எங்களுடம்பையும் எங்களழகையும் நோக்குவது எதுக்கு?’ என்று ஏசுவர்கள்; அப்படிப்பட்ட நிலைமை நேருவதற்கு முன்னமே திருநறையூரைத்தொழுவது நன்று.

சேங்கோல் வலவன் தான்பணிந்தேத்தித் திகழூர்=திருவல்லிக்கேணியில் தொண்டையர்கோன் போலவும், பரமேச்சுர விண்ணகரத்தில் பல்லவன் மல்லையர்கோன் போலவும், அட்டபுயகரத்தில் வயிரமேகன் போலவும், நந்திபுர விண்ணகரத்தில் நந்திவருமன் போலவும் இத்திருப்பதியில் செங்கணான் கோச்சோழன் அபிமாநியாயிருப்பனென்ப. மேல் “அம்பரமும் பெருநிலனும்” என்ற திருமொழியில் ஒவ்வொரு பாசுரத்திலும் இது அருளிச்செய்யப்படுவது காண்க. நாட்டை ஆண்டுகொண்டு அஹங்காரியாய்ப் போதுபோக்க வேண்டியவனும் இத்தலத்திற் பணிந்து உய்வுபெற்றமை விளங்கச் **சேங்கோல் வலவன் தான்** என்றார். .... .... .... .... .... (௩)

கோம்புமரவமும் வல்லியும் வேன்றநுண்ணேரிடை *
வம்புண்குழலார் வாசலடைத்திகழாதமுன் *
சேம்போன்கமுகினந்தான் கனியுஞ் சேழுஞ்சோலைசூழ் *
நம்பன் நறையூர் நாம்தோழுதுமேழுநேஞ்சமே. (ச)

| | |
|---|---|
| கொம்பும் | வஞ்சிக் கொடியையும் |
| அரவமும் | ஸர்ப்பத்தையும் |
| வல்லியும் | இளங்கொடியையும் |
| வென்ற | தோற்கடித்த |
| நுண் | நுட்பமாய் |
| ஏர் | அழகியதான |
| இடை | இடையையுடையவரும் |

| | |
|---|---|
| வம்பு உண் குழலார் | பரிமளம் மிக்க கூந்தலை யுடையருமான பெண்கள் |
| வாசல் அடைத்து | வாசற்கதவைப் போட்டு விட்டு |
| இகழாத முன் | அவமானப்படுத்துவதற்கு முன்னே—, |
| கமுகு இனம் | பாக்குமரங்களின் திரள்கள் |
| செம் பொன் | செவ்வியபொன்போலே |
| கனியும் | பழுத்திருக்கப்பெற்ற |
| செழு சோலை | வளம்மிக்க சோலைகளாலே |
| சூழ் | சூழப்பட்டதும் |
| நம்பன் | விச்வஸிக்கத்தகுந்த எம்பெருமானுடையதுமான |
| நறையூர் | திருநறையூரை |

நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—.

* * *—அசக்தி மேலிட்டகாலத்தும் சாபல்யம் தவிராமையாலே 'இதொரு துவண்ட இடை 'இருக்கு மழகு என்கொல்!' என்று அவர்களது அவயவ ஸௌந்தர்யத்தை வாய்வெருவிக்கொண்டு தடியூன்றி அங்கேறச் செல்வர்கள்; 'அசக்தனும் தரித்ரனுமாகிய இப்பாவி எதுக்கு இங்கு வந்தான்?' என்று இகழ்ந்து 'ஒழிந்துபோ கிழவா!' என்பர்கள்; அவ்வளவிலும் உள்ளே நுழையப் பார்ப்பர்கள்; வாசற்கதவை நெருக்கியடைத்துத் துரத்துவர்கள். இப்படிப் பட்ட பரிபவங்களுக்குப் பாத்திரமாகாமல் திருநறையூர் தொழுவது நன்று.

விலங்குங்கயலும் வேலுமோண்காவியும்வென்றகண் *
சலங்கொண்டசொல்லார் தாங்கள்சிரித் திகழாதமுன் *
மலங்கும்வராலும் வாளையும்பாய்வயல்சூழ்தரு *
நலங்கொள் நறையூர் நாம்தொழுதமெழுநெஞ்சமே. (௫)

| | |
|---|---|
| விலங்கும் | மானையும் |
| கயலும் | மீனையும் |
| வேலும் | வேற்படையையும் |
| ஒண் காவியும் | அழகிய செங்கழுநீர்ப்பூவையும் |
| வென்ற | தோற்கடித்த |
| கண் | கண்களையுடையரும் |
| சலம் கொண்ட சொல்லார் தாங்கள் | கபடமுள்ள சொற்களை யுடையருமான பெண்கள் |
| சிரித்து | பரிஹாஸம்பண்ணி |
| இகழாத முன் | திரஸ்கரிப்பதற்கு முன்னே,- |
| மலங்கும் வராலும் வாளையும் | பலவகைப்பட்ட மீன்கள் |
| பாய் | துள்ளிவிளையாடுகின்ற |
| வயல் | கழனிகளாலே |
| சூழ்தரு | சூழப்பட்டதும் |
| நலம் கொள் | நன்மைமிக்கதுமான |
| நறையூர் | திருநறையூரை |

நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—.

* * *—"மாதரார் கயற்கணென்னும் வலைபுட்பட்டழுந்துவேனை" என்கிற படியே மாதர்களது கண்வலையிலகப்பட்டு 'இப்படியுமொரு கண்ணழகுண்டோ?' என்று ஈடுபட்டு முதுமையிலும் விடமாட்டாதே அங்குச்சென்று அவர்களுடைய கண்களிலேயே கண்வைத்திருப்பர்கள்; 'ஐயோ! இந்தக்கிழவனுக்கு நம் கண்ணிலே என்ன காரியமுண்டு' என்று சொல்லி அவர்கள் சிரித்துத் துரத்து

வர்கள்; இப்படிப்பட்ட பரிபவங்களுக்கு ஆளாகாமல் திருநறையூரைத் தொழுவது நன்று.

வெருண்டாற்போல் பார்க்கிறபார்வைக்கு மான்நோக்கும், பளபளவென்று மிளிர்தற்கும் புடைபரந்து நீண்டிருக்குந் தன்மைக்கும் மீனும், கூர்மையாகப் பாயுந்தன்மைக்கு வேலும் கண்ணுக்கு ஒப்பாகுமாதலால் "விலங்குங்கயலும் வேலுமொண்காவியும் வென்றகண்" எனப்பட்டது.

சலங்கொண்ட சொல்லார்—'ஶலம்' என்ற வடசொல் கபடமென்னும் பொருளது; மேலே தேனொழுகப் பேசுவதும் உள்ளே கபடங்கொண்டிருப்பதும் மாதர்களது பெரும்பான்மையான இயல்பு என்பது "மது திஷ்டதி வாசி யோஷிதாம் ஹ்ருதி ஹாலாஹலமேவ கேவலம்—மது திஷ்டதி வாசி யோஷிதாம் ஹ்ருதி ஹாலாஹலமேவ கேவலம்' என்ற கவிகளின் ச்லோகத்தாலும் விளங்கும்.

மலங்கு என்பதும் வரால் என்பதும் வாளை என்பதும் மீன்களின் அவாந்தர ஜாதிபேதம். .... .... .... .... .... (ரு)

மின்னேரிடையார் வேட்கையை மாற்றியிருந்து *
என்னீரிருமி யெம்பால் வந்ததென் றிகழாதமுன் *
தொன்னீ ரிலங்கைமலங்க விலங்கெரியூட்டினான் *
நன்னீர் நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (சு)

| | | | |
|---|---|---|---|
| மின் நேர் இடையார் | மின்னல்போன்றஇடையை யுடையான மாதர் | தொல் நீர் இலங்கை | கடல்சூழ்ந்த லங்காபுரி |
| வேட்கையை | (முன்பு வைத்திருந்த) ப்ரீதியை | மலங்க | வியாகுலப்படும்படி |
| மாற்றி இருந்து | தவிர்ந்தவர்களாய்க் கொண்டு | விலங்கு | (அநுமானென்கிற) வானர வீரனைக் கொண்டு |
| நீர் | '(கிழவரான) நீங்கள் | எரி ஊட்டினான் | தீமூட்டிவிட்ட பெருமானுடையதாய் |
| இருமி | இருமிக்கொண்டு | நல் நீர் | நல்ல தீர்த்தங்களை யுடையதான |
| எம்பால் வந்தது என் என்று | எங்களிடம் வந்தது எதுக்காக?' என்று | நறையூர் | திருநறையூரை |
| இகழாத முன் | திரஸ்கரிப்பதற்கு முன்னே,— | | நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—. |

* * *—மின்போல்நுட்பமான இடையையுடையரான மாதர்கள் தாங்கள் யௌவனத்தையும் பொருள்மிகுதியையுங்கண்டு வைத்திருந்த அன்பை 'காரண மொழிந்தால் காரியமுமொழியும்' என்கிற நியாயப்படியே தவிர்த்துக்கொண்டு 'கிழவா! நீ எங்கள் பக்கல் எதுக்கு வருகிறாய்? இருமிக்கொண்டே வருகிறாயே, இந்த இருமல் எங்களுக்கு நீ கொடுக்கும் பரிசிலோ?' என்றிப்படிப்பட்ட பரிஹாஸ வார்த்தைகளைச்சொல்லி ஏசும்படியாக இடம் வைத்துக்கொள்ளாமல்

* இலங்கை பாழாளாகப் படைபொருத பெருமானுறையும் திருநறையூரைத் தொழுவது நன்று.

* மூன்றாமடியின் பிற்பகுதியை 'விலங்கெரி' என்று மெடுக்கலாம் 'இலங்கெரி' என்று மெடுக்கலாம். முந்தினதில், விலங்காலே எரியூட்டினன்—ஹநுமானாகிற சாகாமிருகத்தைக்கொண்டு தீக்கொளுவித்தவன் என்றதாம். பிந்தினதில், இலங்கு—ஜ்வலிக்கின்ற என்றபடி. இதற்கு முன்பு அக்நியானவன் இலங்கையினுட் புகுவதற்கு அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்தான்; சோறு வேவப்பண்ணுகை முதலிய முக்கிய காரியங்களுக்கு வேண்டுமளவு புகுந்திருந்தான்; இராமபிரானால் நன்றாக ஜ்வலித்துக்கொண்டு எங்கும் புகுந்து உண்டு களித்தானென்க. .... .... .... .... .... .... (௬)

வில்லேர்நுதலார் வேட்கையைமாற்றிச்சிரித்து * இவன்
பொல்லான் திரைந்தானேன்னும் புறனுரைகேட்பதன்முன் *
சொல்லார் மறைநான்கோதி உலகில்நிலாயவர் *
நல்லார் நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (௭)

| | | | |
|---|---|---|---|
| வில் ஏர் நுதலார் | வில்போன்று அழகிய நெற்றியையுடையரான மாதர் | கேட்பதன் முன் | கேட்கநேருவதற்கு முன்னே,— |
| வேட்கையை மாற்றி | (முன்புவைத்திருந்த) ஆசையைத் தவிர்ந்து | சொல் ஆர் | பதங்கள் நிரம்பிய |
| சிரித்து | பரிஹாஸம்பண்ணி | நான்கு மறை | நான்குவேதங்களையும் |
| இவன் பொல்லான் | 'இந்தக் கிழவன் பொல்லாதவன், | ஓதி | அதிகரித்து |
| திரைந்தான் | சதைசுருங்கினன்' | உலகில் | இவ்வுலகில் |
| என்னும் | என்று (இகழ்ந்து) சொல்லும்படியான | நிலாயவர் | (அவ்வேதங்களை) ஸ்தாபிக்குமவர்களாய் |
| புறன் உரை | இழிவான வார்த்தைகளை | நல்லார் | நல்லொழுக்கமுடையரான வைதிகர்வாழ்கிற |
| | | நறையூர் | திருநறையூரை |
| | | | நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—. |

* * *—வில்லேர்நுதலார்=வில்வளைவாயிருப்பதுபோல் வளைவான நெற்றியையுடைய மாதர்; குண்டுமுகமுடையார் என்றபடி. வில்லில் நின்றும் அம்புகள் புறப்படுவதுபோல் முகத்தில் நின்றும் அம்புபோன்ற கடைக்கண்ணோக்கங்கள் புறப்படுதல் பற்றி 'வில்லேர் நுதல்' எனப்பட்டது என்றானொருதமிழன். நுதல்—முகத்துக்கும் வழங்குவதுண்டு. பொல்லான்—குரூபி என்றபடி. திரைந்தான்—திரையாவது தோல் சுருங்கிப்போதல்; முதிர்ந்த கிழத்தனத்தின் அறிகுறி. புறனுரை—வம்புவார்த்தைகளென்றவாறு.

திருநறையூரில் வாழ்பவரெல்லாம் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள் என்பது மூன்றாமடி. .... .... .... (௭)

வாளொண்கண் நல்லார்தாங்கள் மதனனென்றார்தம்மை *
கேளுங்களீளையோடு ஏங்குகிழவனென்னாதமுன் *
வேள்வும்விழவும் வீதியிலென்றுமறாதவூர் *
நாளும்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (௭)

| | |
|---|---|
| வாள் | வாட்படைபோன்ற |
| ஒண் | அழகிய |
| கண் | கண்களையுடையரான |
| நல்லார் | ஸ்த்ரீகள் |
| தாங்கள் | தாங்களே |
| மதனன் என்றார் தம்மை | 'இவன் ஸாக்ஷாத் மன்மதன்' என்று முன்பு கொண்டாடிச் சொன்னவர்களைக் குறித்து |
| ஈளையோடு ஏங்கு கிழவன் | "கோழையோடு கூடித் தளர்ந்திருக்கின்ற இக்கிழவனை |
| கேளுங்கள் | வந்தகாரியமென்னவென்று கேளுங்கள்" |
| என்னாதமுன் | என்று இகழ்ந்து சொல்வதற்கு முன்னே,- |
| வீதியில் | திருவீதிகளில் |
| வேள்வும் | யாகங்களும். |
| விழவும் | உத்ஸவங்களும் |
| என்றும் | ஒருநாளும் |
| அறாத ஊர் | விட்டுநீங்காத ஊராகிய |
| நறையூர் | திருநறையூரை |
| நாளும் | நாள்தோறும் |

நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—.

* * *—ஒரு கண்ணோக்கிலே ஓர் ஆளை முடித்துவிடவல்ல கண்ணழகு படைத்தவர்களான மாதர்கள், யௌவநாவஸ்தையிற் புருஷர்களை மன்மதன் வாயில் மண்ணைப்போட்டு வந்து பிறந்தவர்களாக வருணித்துப்பேசுவர்கள்; அவர்களே கிழத்தனம் வந்தவர்களை அநாதரித்தொழிவர்கள்; ஆகையாலே நாசமான பாசங்களைவிட்டுத் திருநறையூரைத்தொழுதல் நன்று.

இரண்டாமடியின் முதலில் "கேண்மின்கள்" என்றே எங்கும் பாடம் வழங்கிவருகின்றது; பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தை நோக்குமிடத்து அப்பாடம் ஆதாரமற்றதேயாம்; 'கேளுங்கள்' என்ற பாடமே வியாக்கியானத்திற் கொள்ளப்பட்டுள்ளது. அதற்கு இரண்டுவகையான பொருளருளிச்செய்யப்பட்டுள்ளது; 'கேளுங்கள்' என்று முழுச்சொல்லாய் வினைமுற்றாகக்கொண்டு பொருள்பணித்தல் ஒருவகை. 'கேள் உங்கள்' என்று பிரித்து, [ஈளையோடு ஏங்குகிழவன் உங்கள் கேள் என்னாதமுன்] கோழையோடுகூடஇருமித்தளர்கின்ற இக்கிழவன் உங்கள் உறவு என்று அந்த வீட்டுப்பெண்களை நோக்கி இந்த வீட்டுப்பெண்கள் சொல்லுவது, இந்த வீட்டுப்பெண்களை நோக்கி அந்த வீட்டுப்பெண்கள் சொல்லுவதாய் இப்படி ஒருவர்க்கொருவர் பரிஹஸிக்கும்படியான நிலைமை நேருவதற்கு முன்னே எனப்பொருள்பணிப்பது மற்றொருவகை.

திருநறையூரில், ஸந்நிதியில் உத்ஸவகோஷங்களும் திருமாளிகைகளில் யஜ்ஞகோஷங்களும் மலிந்திருக்குமென்கிறது மூன்றாமடி. .... (அ)

கனிசேர்ந்திலங்கு நல்வாயவர் காதன்மை விட்டிட *
குனிசேர்ந் துடலங் கோலில்தளர்ந் திளையாதமுன் *
பனிசேர் விசும்பில் பான்மதிகோள் விடுத்தானிடம் *
நனிசேர் நறையூர் நாம்தொழுது மெழுநெஞ்சமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கனி சேர்ந்து | கோவைப்பழத்தோடொத்து | விசும்பில் | ஆகாசத்தில் |
| இலங்கு | விளங்காநின்ற | பால் | பால்போன்று |
| நல் வாயவர் | அழகிய அதரத்தை யுடைய ரான பெண்கள் | பனி சேர் | குளிர்ச்சி பொருந்தியவனான |
| காதன்மை விட்டிட | (வைத்திருந்த) ப்ரீதியை விட்டொழிக்கும்படியாக | மதி | சந்திரனுடைய |
| | | கோள் | துன்பத்தை |
| | | விடுத்தான் | போக்கின பெருமானுடைய |
| உடலம் | சரீரமானது | இடம் | இருப்பிடமாய் |
| குனி சேர்ந்து | கூன்வளைந்து | நனி சேர் | பெருமை பொருந்தியதான |
| கோலில் | தடியோடு கூடி | நறையூர் | திருநறையூரை |
| தளர்ந்து இளையாத முன்—; | | நாம் தொழுதும், நெஞ்சமே! எழு—. | |

* * *—மாதர்களின் அபிமானத்திற்குப் பாத்திரமாகி மார்பு நெறித்துக் கிடந்தவர்கள் அம்மாதர்களின் அபிமாநம் விட்டு நீங்கும்படியாக உடல் கூன் வளைந்து ஒரு தடியையுமூன்றி நடக்கவேண்டும்படியான முதுமைவிளைந்து ஒரு நற்காரியமும் செய்ய யோக்யதை யில்லையாவதற்குமுன்னே திருநறையூரைத் தொழுவது நன்று.

நனிசேர்நறையூர்=(எம்பெருமானுக்கு) மிகவும் பொருந்தியிருக்கின்ற திருநறையூர் என்றுமாம் .... .... .... .... (கூ)

பிறைசேர் நுதலார் பேணுதல்நம்மை யிலாதமுன் *
நறைசேர் பொழில்சூழ் நறையூர் தொழுநெஞ்சமேயென்ற *
கறையார் நெடுவேல் மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
மறவாதுரைப்பவர் வானவர்க்கின்னரசாவரே. (கo)

| | | | |
|---|---|---|---|
| பிறை சேர் நுதலார் | சந்திர கலைபோன்ற நெற்றியை யுடையரான பெண்கள் | கறை ஆர் நெடு வேல் | ரத்தக்கறை நிரம்பிய நீண்ட வேற்படையை யுடையவரும் |
| நம்மை | நம் விஷயத்தில் | மங்கையர் கோன் | திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவருமான |
| பேணுதல் இலாத முன் | ஆதரவைத்தவிர்த்துக் கொள்ளும்படியான கிழத்தனம் வருவதற்கு முன்னே,— | கலிகன்றி | ஆழ்வாருடைய |
| | | சொல் | இந்த ஸ்ரீஸூக்திகளை |
| நெஞ்சமே | ‘ஓ மனமே! | மறவாது உரைப்பவர் | மறவாமல் ஓதுமவர்கள் |
| நறை சேர் பொழில் சூழ் நறையூர் தொழு என்ற | தேன் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருநறையூரை வணங்கு’ என்று உபதேசித்தவரும் | வானவர்க்கு | நித்ய ஸூரிகளுக்கும் |
| | | இன் அரசு ஆவர் | மேற்பட்டவர்களாவர். |

* * *—மாதர்களிடத்தில் ஆசைவைப்பதும் அவர்கள் வெறுப்பதும் அவமானப்படுத்திப் பேசுவதுமான துர்விஷயங்களுக்கு இடங்கொடாதே, பரம போக்யமான திருநறையூரைத் தொழுவதே நன்று என்று அருளிச்செய்த திரு மங்கையாழ்வாரது இப்பாசுரங்களை இளமைப்பருவத்திலேயே கற்பவர்கள் நித்ய ஸூரிகளின் கூட்டுக்கு நியாமகராகப் பெறுவர்கள் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

கறையார்நெடுவேல்—பகவத் பாகவத விரோதிகளை நிரஸநம் பண்ணின ரத்தக்கறை கழுவுவதற்கும் அவகாசமின்றியே வியாபரிக்குமாம் திருமங்கை யாழ்வாருடைய வேல். .... .... .... (கo)

அடிவரவு:—கண்ணும் கொக்குண் கொங்கார் கொம்பு விலங்கு மின் வில் வாள் கனி பிறை கலங்க.

நாலாந்திருமொழி உரைமுற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆரும்பத்து—ஐந்தாந்திருமொழி, கலங்கமுந்நீர் கடைந்து.

[இதுவும் திருநறையூர் மங்களாசாஸநத் திருப்பதிகம்.]

கலங்கமுந்நீர் கடைந்து அமுதங்கொண்டு * இமையோர்
துளங்கல்தீர நல்கு சோதிச் சுடராய *
வலங்கையாழி யிடங்கைச்சங்கம் உடையானூர் *
நலங்கொள் வாய்மை அந்தணர்வாழும் நறையூரே. (க)

| | |
|---|---|
| முந்நீர் | ஸமுத்ரத்தை |
| கலங்க | கலங்கும்படியாக |
| கடைந்து | கடைந்து |
| அமுதம் கொண்டு | (அதில் நின்று) அமுதமெடுத்து |
| இமையோர் துளங்கல் தீர நல்கு | தேவர்களின் கலக்கம் தீரும்படியாக (அவர்களுக்குக்) கொடுத் தருளினவனும் |
| சோதி சுடர் ஆய | பரஞ்சோதியா புள்ளவனும் |
| வலங்கை ஆழி இடங்கை சங்கம் உடையான் | வலத்திருக்கையில் திரு வாழியையும் இடத்திருக் கையில் திருச்சங்கையும் உடையவனுமான எம்பெருமானுடைய |
| ஊர் | திவ்ய தேசம் (எதுவென்றால்) |
| நலம் கொள் வாய்மை | நன்மைகொண்ட ஸத்யவாதித்வத்தை யுடையரான |
| அந்தணர் | பிராமணர்கள் |
| வாழும் | வாழுமிடமான |
| நறையூர் | திருநறையூராகும். |

* * *—துர்வாஸமுனியின் சாபத்தினால் அமரருடைய செல்வமெல்லாம் ஒழிந்தகாலத்து அமரர்கோனுடைய சரணாகதிக்குத் திருவுள்ளமிரங்கிக் கடலைக் கடைந்து அமுதமெடுத்தளித்து அமரருடைய கஷ்டங்களைப் போக்கியருளினவனும், சோதித்திரளே வடிவெடுத்ததென்னும்படி மஹா தேஜஸ்வியாயிருப்பவனும், ஆச்ரிதவிரோதிகள் அஞ்சுவதற்குறுப்பாகவும் ஆச்ரிதர்கள் பல்லாண்டு பாடுவதற்குறுப்பாகவும் திருவாழி திருச்சங்குகளைத் திருக்கைகளிலேந்தியுள்ளவனுமான எம்பெருமான் வாழுமிடம் திருநறையூர்; ஸத்யவாதிகளான பிராமணர்களும் அப்பதியில் வாழ்கின்றனர் என்றாராயிற்று.

'கடல் நம்முடைய படுக்கையாயிற்றே, அதற்கொரு கலக்கம் விளைக்கலாமோ?' என்றும் நினையாமல், தன்னையடுத்தவர்கட்குக் காரியஞ்செய்வதிற் கண் வைத்துத் தனது பள்ளியான கடலைக் கலக்கியும் கடைந்து அமுதமளித்தானென்ற மஹாகுணம் விளங்க 'முந்நீர் கலங்கக் கடைந்து' எனப்பட்டது. **நல்குசோதிச்சுடராய**=தேவர்கட்கு அமுதமளித்ததனால் எம்பெருமானுக்குத் திருமேனியில் புகர் விஞ்சிற்றுப்போலும்; அன்பர்கள் துயர்தீரப்பெற்றால் அதுவேயிறே ஸ்வாமிக்குப் பொலிவு.

**நலங்கொள்வாய்மையந்தணர்** = 'ஸத்யமே சொல்லவேணும்' என்பது சாஸ்த்ரவிதியாயினும், பிறர்க்குத் துன்பம் விளைக்குமதான ஸத்யத்தைச் சொல்லக் கூடாதென்பதும் நூற்கொள்கையாதலால் அப்படி தீமையாகத் தலைக்கட்டாமல் நன்மையாகவே தலைக்கட்டுமதான ஸத்யத்தையே சொல்லுமவர்களாம் திருநறையூரந்தணர்கள். "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌿𑌯𑌂 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 𑌨 𑌬𑍍𑌰𑍂𑌯𑌾𑌤𑍍 𑌸𑌤𑍍𑌯𑌮𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑍍=ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்றது காண்க.

இனி, "நலங்கொள்வாய்மை" என்று உண்மையுரையான வேதத்தைச் சொன்னபடியாய், வேதம்வல்ல அந்தணர்வாழுமிடம் திருநறையூர் என்றுரைத்தலுமொன்று. .... .... .... .... .... (க)

**முனையார் சீயமாகி அவுணன் முரண்மார்வம் ***
**புனைவா ளுகிரால் போழ்படவீர்ந்த புனிதனூர் ***
**சினையார் தேமாஞ் செந்தளிர்கோதிக் குயில்கூவும் ***
**நனையார் சோலைசூழ்ந் தழகாய நறையூரே.** (உ)

| | | | |
|---|---|---|---|
| முனை | போர்புரிவதில் | புனை | அழகுபொருந்திய |
| ஆர் | பொருத்தமுடைய | வாள் | ஒளிபொருந்திய |
| சீயம் ஆகி | நாரஸிம்ஹமூர்த்தியாய்த் திருவவதரித்து | உகிரால் | நகங்களினால் |
| | | போழ்பட | இரண்டு பிளவாகும்படி |
| அவுணன் | (இரணியனென்னும்) அசுரனுடைய | ஈர்ந்த | கிழித்துப்போட்ட |
| முரண் மார்வம் | முரட்டு மார்பை | புனிதன் | பரமபவித்திரனான பெருமானுடைய |

| | | | |
|---|---|---|---|
| ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்) | கூவும் | கூவப்பெற்றனவும் |
| குயில் | குயில்களானவை | நனை ஆர் சோலை சூழ்ந்து | பூமொட்டுகள் நிறைந்திருக்கப்பெற்றனவுமான சோலைகளால் சூழப்பட்டு |
| சினை ஆர் தே மா | தழைப்புவாய்ந்த தேன் மாமரங்களினுடைய | அழகு ஆய | அழகுடைத்தான |
| செம் தளிர் | சிவந்த தளிர்களை | நறையூர் | திருநறையூராம். |
| கோதி | கொந்தி | | |

* * *—பரமபக்தனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு நேர்ந்த துன்பங்களைப் பொறுத்திருக்கமாட்டாமல் நரசிங்கமூர்த்தியாகித் தூணில்தோன்றி இரணியனென்னுமசுரனுடைய முரட்டுமார்பைத் திருநகங்களாற் பிளந்தெறிந்த பவித்திரன் வாழுமிடம் திருநறையூர்; அஃது எப்படிப்பட்டதென்னில்; தழைத்திருக்கின்ற தேன்மாமரங்களின் செந்தளிர்களைக் குயில்கள் கொந்திக் கூவுதல் செய்யப்பெற்ற—பூமொட்டுக்கள் நிறைந்த—சோலைகளாற் சூழப்பட்டதாம். நல்ல குரல்படைத்த ரஸிகர்கள் ஸ்ரீபாகவதம் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலியவற்றில் அவகாஹித்து அநுபவித்து அவ்வர்த்தங்களை உபந்யஸிக்கின்றனர் திருநறையூரில்—என்பது உள்ளுறை. .... .... .... (உ)

ஆனைப் புரவித் தேரொடுகாலா ளணிகொண்ட *
சேனைத்தொகையைச்சாடி யிலங்கை செற்றானூர் *
மீனைத்தழுவி வீழ்ந்தெழும் மள்ளர்க் கலமந்து *
நானப்புதலில் ஆமை யொளிக்கும் நறையூரே. (௩)

| | | | |
|---|---|---|---|
| ஆனை | யானைகளும் | தழுவி | (பிடிப்பதற்காக) இரண்டு கைகளாலும் அணைத்து |
| புரவி | குதிரைகளும் | வீழ்ந்து | (பின்பு அவற்றால் தள்ளுண்டவர்களாய்) கீழேவிழுந்து |
| தேரொடு | தேர்களும் | எழும் | (பின்னும் அவற்றைப் பிடிக்க ஆசையினால்) எழுந்திருக்கின்ற |
| காலாள் | காலாள்களுமாக | மள்ளர்க்கு | உழவர்களுக்கு |
| அணி கொண்ட | அணிவகுக்கப்பட்ட | அலமந்து | அஞ்சி |
| சேனை தொகையை சாடி | சேனைக் கூட்டத்தைச் சிதைத்து | ஆமை | ஆமையானது |
| இலங்கை செற்றான் | இலங்காபுரியை அழித்த பெருமானுடைய | நானம் புதலில் | மஞ்சள் புதரிலே |
| ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்) | ஒளிக்கும் | ஒளிந்துகொள்ளுமிடமான |
| மீனை | மீன்களை | நறையூர் | திருநறையூராம். |

* * *—இராவணன் போர்புரியப் புறப்பட்டுவரும்போது முந்துற முன்னம் மலைகள் நடந்தாற்போல யானைகளைப் புறப்படவிட்டு அவற்றின் பின்னே குதிரைகளைவிட்டு அவற்றின்பின்னே தேர்களையோட்டி இவையித்தனைக்கும்

காவலாகக் காலாள்களைப் பின்னே புறப்படவிட்டு வந்தானும்; அந்த அடைவை அங்ஙனமே அருளிச்செய்கிறார் 'ஆனைப்புரவித் தேரொடுகாலாளணி கொண்ட சேனைத்தொகை' என்று. ஆக இப்படிப்பட்ட சேனைத்திரள்களை யெல்லாம் பொடிபொடியாக்கி இலங்காபுரியைப் பாழ்படுத்தின பெருமான் வாழுமிடம் திருநறையூர். அஃது எப்படிப்பட்ட தென்னில்; [மீனைத்தழுவி இத்யாதி.] அவ்விடத்தில் நிலப்பண்பாலே மலைகள்போலே வளர்ந்திருக்குமாம் மீன்கள்; அவற்றைப் பிடிக்கிற உழவர்கள் இரண்டுகையாலுமாகத் தழுவுவர்கள்; அவைமிக்க வலிவுள்ளவையாதலால், பிடிப்பவர்களை உதறித்தள்ளிவிட்டுப் போய்விடும்; அங்ஙனம் தள்ளப்பட்டு விழுந்த உழவர்கள் மறுபடியும் அவற்றைப்பிடிக்க எழுந்திருப்பர்கள்; அதைக்கண்ட ஆமையானது அஞ்சி வரம்பிலேநின்ற மஞ்சள் பற்றையிலே புகுந்து மறையும். இப்படிப்பட்ட வயல்வளத்தை யுடையதாம் திருநறையூர். .... .... .... .... .... (ரு)

உறியார் வெண்ணெயுண்டு உரலோடுங் கட்டுண்டு *
வெறியார்கூந்தல் பின்னைபொருட்டு ஆன் வென்றானூர் *
பொறியார் மஞ்ஞை பூம்பொழில்தோறும் நடமாட *
நறுநாண் மலர்மேல் வண்டிசைபாடும் நறையூரே. (சு)

| | |
|---|---|
| உறி ஆர் | உறிகளிலே நிறைத்து வைத்த |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| உண்டு | வாரி உட்கொண்டு |
| உரலோடும் கட்டுண்டு | (அக்குற்றத்திற்காக) உரலோடு சேர்த்துக் கட்டப்பட்டவனும் |
| வெறி ஆர் கூந்தல் பின்னை பொருட்டு | பரிமளம் மிக்க கூந்தலையுடைய நப்பின்னைப் பிராட்டிக்காக |
| ஆன் | (ஏழு) எருதுகளை |
| வென்றான் | வலியடக்கினவனுமான பெருமானுடைய |
| ஊர் | திவ்யதேசம் (ஏதுவென்றால்) |
| பொறி ஆர் | புள்ளிகள் நிரம்பிய |
| மஞ்ஞை | மயில்கள் |
| பூ பொழில் தோறும் நடம் ஆட | பூஞ்சோலைகளெங்கும் கூத்தாடப்பெற்றதும் |
| வண்டு | வண்டுகள் |
| நறு நாள் மலர் மேல் | மணம்மிக்க அப்போதலர்ந்த பூக்களிலே (இருந்துகொண்டு) |
| இசை பாடும் | இசைப்பாட்டுகளைப் பாடப் பெற்றதுமான |
| நறையூர் | திருநறையூர். |

* * *—திருவாய்ப்பாடியில் உறிகளிலே சேமித்துவைக்கப்பட்ட வெண்ணெயைக் களவுசெய்து உட்கொண்டு பிடிபட்டு அக்குற்றத்திற்காக உரலோடு கட்டுண்டு அசக்தன்போலப் பாவனை செய்யாநின்றாலும், நப்பின்னைப் பிராட்டியை மணந்து கொள்ளுதற்காக அவளதுதந்தை கந்யாசுல்கமாகக் குறித்திருந்தபடி எழுரிஷபங்களை வலியடக்கித் தனது பெருமிடுக்கை விளங்கச் செய்துகொண்ட பெருமான் அப்படிப்பட்ட பரத்வ ஸௌலப்யங்களை இன்றைக்கும் பிரகாசப் படுத்திக்கொண்டு எழுந்தருளியிருக்குமிடம் திருநறையூர். அவ்விடத்திலே விசித்

திரமான கலாபங்களையுடைய மயில்கள் சோலைகளிலெங்கும் நடனமாடுகின்றன; செவ்வித்தாமரைப் பூக்களிலே மதுபானம் பண்ணவிழிந்த வண்டுகள் மயில்களின் கூத்துக்கு இணங்க இசைபாடுகின்றன. .... .... (ச)

விடையேழ் வென்று மென்தோளாய்ச்சிக் கன்பனாய் *
நடையால் நின்ற மருதம் சாய்த்த நாதனூர் *
பேடையோடன்னம் பெய்வளையார் தம்பின்சென்று *
நடையோ டியலி நாணியொளிக்கும் நறையூரே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| ஏழ் விடை வென்று | ஏழெருதுகளை வலியடக்கி | அன்னம் | ஹம்ஸங்களானவை |
| மென்தோள் ஆய்ச்சிக்கு | மெல்லிய தோளழகை யுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு | பெடையோடு | (தமது) பேடைகளோடு கூடி |
| அன்பன் ஆய் | நாயகனானவனும் | பெய் வளையார் தம் பின் சென்று | செறிந்த வளைகளையணிந்த பெண்களின் பின்னே போய் |
| நின்ற மருதம் | நிலைத்து நின்ற (இரட்டை) மருதமரங்களை | நடையோடு இயலி | (அவர்களுடைய) நடையை அநுஸரித்து நடக்கப் பார்த்து |
| நடையால் | தவழ்கிற நடையினாலே | | (அப்படி நடக்க முடியாமையினாலே) |
| சாய்த்த | விழத்தள்ளினவனுமான | நாணி | வெட்கமடைந்து |
| நாதன் | எம்பெருமானுடைய | ஒளிக்கும் | ஒளிக்குமிடமான |
| ஊர் | திவ்யதேசம் (ஏதுவென்றால்) | நறையூர் | திருநறையூராம். |

* * *—நப்பின்னைப் பிராட்டியோடு கலவிசெய்வதற்கு இடையூறாகநின்ற ஏழு எருதுகளை வலியடக்கி அவளுக்கு அன்பனாகப் பெற்றவனும், உரலோடு கட்டுண்டு தவழ்ந்து செல்லுமளவிலே அஸுராவேசங்கொண்ட இரட்டை மருதமரங்களைச் சாய்த்தவனுமான பெருமான் எழுந்தருளியிருக்குமிடம் திருநறையூர். அவ்விடத்தில் அன்னப்பறவைகள் பேடைகளோடுகூடி அங்குள்ள மாதர்களின் நடையழகைக்கண்டு தாமும் அப்படியே நடக்கவிரும்பி அவர்களைப் பின்செல்லும்; அந்த நடையழகு தங்களுக்கு வாராமையாலே வெள்கி ஒதுங்கிப் போகின்றனவாம். .... .... .... .... .... .... (ரு)

பகுவாய் வன்பேய் கொங்கைசுவைத்தாருயிருண்டு *
புகுவாய்நின்ற போதகம்வீழப் பொருதானூர் *
நெகுவாய் நெய்தற்பூ மதுமாந்திக் கமலத்தின் *
நகுவாய்மலர்மேல் அன்னமுறங்கும் நறையூரே. (சு)

| | | | |
|---|---|---|---|
| பகு வாய் | பெரிய வாயை யுடையவளும் | பேய் | பேய்ச்சியாகிய பூதனையி னுடைய |
| வன் | மனக்கொடுமையை யுடையவளுமான | கொங்கை | ஸ்தனத்தை |
| | | சுவைத்து | உறிஞ்சி |

| | | | |
|---|---|---|---|
| ஆர் உயிர் உண்டு | (அவளது) அருமையான உயிரை முடித்தவனும், | ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்) |
| புகு வாய் | (கம்ஸ னரண்மனையி னுள்ளே) நுழைய வேண்டிய வாசலில் | அன்னம் | ஹம்ஸங்களானவை |
| நின்ற | (மதமூட்டி) நிறுத்தப் பட்டிருந்த | நெகு வாய் நெய்தல் பூ | அலர்ந்த வாயையுடைய [விகஸித்த] கரு நெய்தற்பூக்களிலே |
| போதகம் | (குவலயாபீடமென்னும்) யானை | மது | தேனை |
| வீழ | சாகும்படியாக | மாந்தி | பருகி |
| பொருதான் | போர்புரிந்தவனுமான பெருமானுடைய | கமலத்தின் நகு வாய் மலர் மேல் | விரிந்த வாயையுடைய தாமரைப்பூக்களிலே |
| | | உறங்கும் | கண்வளரப்பெற்ற |
| | | நறையூர் | திருநறையூராம். |

* * *—கம்ஸனுடைய பிரேரணையினால் மாயவகையாக முலைகொடுத்துக் கொல்லவந்த பூதனையென்னும் பேய்ச்சியின் விஷந்தடவின முலையை உறிஞ்சி யுண்கிறபாவனையிலே அவளுயிரைக் கவர்ந்துண்டவனும், கம்ஸனரண்மனைவாச லில் தன்னைக் கொல்லுமாறு மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீட மென் னும் யானையைப் பொருது முடித்தவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கு மிடம் திருநறையூர்.

கட்டவிழ்கின்ற நெய்தற்பூவிலே மதுவைப்பருகி, நன்றாக வலர்ந்த தாமரைப் பூவைப் படுக்கையாகக் கொண்டு அதிலேபோய்ப் படுக்கப்பெற்ற அன்னங்களை யுடையதாம் அத்திருப்பதி.

'பகுவாய்' என்றவிடத்து, '஬ஹு' என்னும் வடசொல் பகு என்று திரிந்துகிடக்கிறது. பெரியவாய் என்றபடி. .... .... (சு)

முந்துநூலும் முப்புரிநூலும் முன்னீந்த *
அந்தணாளன் பிள்ளையை அந்நான் றளித்தானூர் *
போந்தில் வாழும் பிள்ளைக்காகிப் புள்ளோடி *
நந்துவாரும் பைம்புனல் வாவி நறையூரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| முப்புரி நூலும் | யஜ்ஞோபவீதத்தையும் | அந்நான்று | (குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கிற) அக்காலத்தில் |
| முந்து நூலும் | அநாதியான வேதாக்ஷர ராசியையும் | அளித்தான் | (மீட்டுக்) கொடுத்தருளின பெருமானுடைய |
| முன் ஈந்த | முன்னே (தனக்குத்) தந்த | ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்,) |
| அந்தணாளன் | (ஸாந்தீபினி யென்னும்) பிராமணனுடைய | புள் | பறவைகள் |
| பிள்ளையை | (கடலில் மூழ்கியிறந்த) புத்திரனை | பொந்தில் | மரத்தின் பொந்துகளில் |
| | | வாழும் | வாழ்கிற |

| | | | |
|---|---|---|---|
| பிள்ளைக்காகி | குட்டிகளின் ஆஹாரத்துக்காக | வாரும் | திரட்டிக்கொண்டு போகப்பெற்ற |
| ஓடி | ஓடிவந்து | பைம்புனல் வாவி | தெளிந்த நீரையுடைய தடாகங்களையுடைத்தான |
| நந்து | நத்தைகளை | நறையூர் | திருநறையூராம். |

* * *—ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனைக்கொன்று உக்ரஸேநனுக்கு முடிசூட்டிய பின்பு, அவந்திநகரத்திலிருந்த ஸாந்தீபிநியென்னும் ப்ராஹ்மணோத்தமர் பக்கல் சென்று ஸகலசாஸ்த்ரங்களையும் அத்யயநம் பண்ணிப் பிறகு குருதக்ஷிணை ஸமர்ப்பிக்கப்பார்க்கிறவளவிலே, அவ்வாசிரியர் கண்ணனுடைய சக்திவிசேஷத்தை யறிந்தவராகையால் 'பன்னிரண்டு வருஷத்திற்கு முன்பு மேல் கடலில் ப்ரபாஸ தீர்த்த கட்டத்திலே நீராடும்போது முழுகியிறந்துபோன என்புத்திரனைக் கொண்டு வந்து தரவேண்டும்' என்று அபேக்ஷிக்க, கண்ணபிரான் 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கடற்கரை சேர்ந்து, சங்கினுருவங்கொண்டு ஸமுத்ர ஜலத்தில் வஸிக்கின்ற பஞ்சஜநனென்கிற அசுரனே அவ்வந்தணச்சிறுவனைக் கொண்டுபோயின னென்பதை அங்கு வருணன் சொல்லக்கேட்டுக் கடலில் பிரவேசித்து அவ்வஸுரனைக் கொன்று அவனுடலாகிய பாஞ்சஜந்யத்தையெடுத்து வாயில்வைத்து முழக்கிக்கொண்டே யமபட்டணத்திற் கெழுந்தருளி அங்கு யாதனையிற்கிடந்த அக்குமாரனைப் பூர்வதேஹத்திற் சிறிதும் பேதமில்லாதபடி கொணர்ந்து கொடுத்தருளினனென்பது இப்பாட்டிற்குறித்த கதை. "மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை, ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்றார் பெரியாழ்வாரும்.

இடைப்பிள்ளையான கண்ணபிரான் ஸாந்தீபிநியிடத்தில் வேதமோதினனென்பதும் உபநயநஸம்ஸ்காரம் பெற்றனனென்பதும் எங்ஙனே சேருமென்று சிலர் சங்கிப்பர்; * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவி லொருத்திமகனாயொளித்து வளர்ந்தவனான கண்ணன் க்ஷத்ரிய ஜாதியிற் பிறந்தவன். பிராமணர் க்ஷத்ரியர் வைசியர் என்னும் மூன்று ஜாதியாரும் தேஹோத்பத்தியாகிய இயற்கைப் பிறப்புடனே செயற்கைப்பிறப்பாக உபநயநமென்கிற ஸம்ஸ்காரத்தாலாகும் ஜ்ஞாநஜந்மத்தையுங்கொண்டு இருபிறப்பாளராய் 'த்விஜர்' எனப்படுவரென்க.

'முந்நூலீந்த' என்றது—வேதமோதுவித்த என்றபடி. 'முப்புரிநூலீந்த' என்றது—உபநயநம் செய்வித்த என்றபடி. உபநயநம் செய்வித்தபிறகே வேதமோதுவித்தல் முறைமையாதலால் 'முப்புரிநூலும் முந்நூலும் முன்னீந்த' என இயைத்துக்கொள்ளுதல் பொருந்தும். 'வாஂகு ராஉவஶ்யஂகு ரொவஷ வாநு' என்பர் வடநூலார். கடலிற்புகுந்து முடிந்த ஸாந்தீபிநிபுத்திரனைப் பிழைப்பித்து மீட்டுக்கொணர்ந்து கொடுத்த பெருமானுறையுமிடம் திருநறையூர். மாரியின் பொதும்பிலேவாழுங் குட்டிக்காக இரைதேடும் பறவைகள் நத்தைகளை வாரிக்கொண்டு வரப்பெற்ற நீர்நிலங்களையுடையதாம் அத்திருப்பதி. வாவி—'வாபீ' என்னும் வடசொல் விகாரம். .... .... .... (௭)

வெள்ளைப்புரவித் தேர்விசயற்காய் விறல்வியூகம்
விள்ள * சிந்துக்கோன்விழ வூர்ந்த விமலனூர் *
கொள்ளைக்கொழு மீனுண் குருகோடிப் பேடையோடும் *
நள்ளக்கமலத் தேறலுகுக்கும் நறையூரே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வெள்ளை புரவி | வெள்ளைக் குதிரைகள் பூட்டின | ஊர் | திவ்யதேசம் (எதுவென்றால்,) |
| தேர் | தேரையுடையனான | கொள்ளை கொழு மீன் உண் | மிகுதியாகக் கொழுத்த மீன்களைப் பிடித்துண்கிற |
| விசயற்கு ஆய் | அர்ஜுநனுக்காக, | | |
| விறல் வியூகம் விள்ள | (எதிரிகளினுடைய) மிடுக்கையுடைத்தான ஸேநாஸமூஹம் தொலையும்படியாகவும் | குருகு | கொக்குகள் |
| | | ஓடி | ஓடிச்சென்று |
| | | பெடை யோடும் | தம் பேடைகளோடுகூட |
| சிந்து கோன் | ஸிந்துதேசத்தலைவனான ஜயத்ரதன் | நள்ளக் கமலம் | செறிந்த இதழ்களையுடைய தாமரைப்பூவில் |
| விழ | முடியும்படியாகவும் | | |
| ஊர்ந்த | (தேரை) நடத்தின | தேறல் | தேனை |
| விமலன் | பரிசுத்தனான பெருமானுடைய | உகுக்கும் | பருகப்பெற்ற |
| | | நறையூர் | திருநறையூராம். |

* * *—அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து வெற்றிபெறுவித்தவனும் ஸைந்தவனை முடியச்செய்தவனுமான பெருமான் வாழுமிடம் திருநறையூர்.

மஹாபாரதயுத்தத்திற் பதின்மூன்றாநாளிலே அர்ஜுந புத்ரனான அபிமந்யுவைத் துரியோதனனது உடன்பிறந்தவள் கணவனான ஸைந்தவன் [ஜயத்ரதன்] கொன்றுவிட, அங்ஙனம் தன் மகனைக்கொன்ற அந்த ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடின் தீக்குதித்து உயிர்விடுவதாக அர்ஜுநன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினான்காநாட்பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் ஸேனையின் நடுவே நிலவறையில் மறைத்துவைத்திருக்க, அர்ஜுநனுடைய சபதம் பொய்த்துவிடுமேயென்று சிந்தித்த கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தன் சக்ராயுதத்தால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருளடைந்ததனால் அர்ஜுநன் அக்நிப்ரவேசஞ் செய்யத்தொடங்க, அதனைக் களிப்போடு காணுதற்குத் துரியோதனாதியருடனே ஜயத்ரதன் வந்து எதிர்நிற்க, அச்சமயத்திற் கண்ணன் திருவாழியை வாங்கிவிடவே, பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலைதுணித்தனனென்ற வரலாறு இரண்டாமடிக்கு அறியத்தக்கது.

அர்ஜுநனுடைய தேர்க்குதிரைகள் வெண்ணிறங்கொண்டவை யென்பது 1. "வெள்ளைப்புரவிக்குரக்கு வெல்கொடித்தேர்மிசை முன்புநின்று, கள்ளப்

1. பெரியாழ்வார் திருமொழி 4—1—7.

படைத்துணையாகிப் பாரதங் கை செய்யக் கண்டாருளர்" என்ற பெரியாழ்வாரருளிச்செயலாலும் விளங்கும். 'விஜயன்' என்பது அர்ஜுநனுடைய நாமங்களுள் ஒன்று. வியூகம்—'வ்யூஹ:' என்னும் வடசொல் விகாரம். .... (அ)

பாரையூரும் பாரந்தீரப் பார்த்தன்றன்
தேரையூரும் * தேவதேவன் சேருமூர் *
தாரையூரும் தண்தளிர்வேலி புடைசூழ *
நாரையூரும் நல்வயல்சூழ்ந்த நறையூரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பாரை | பூமியில் | தாரை ஊரும் | (தேனின்) வெள்ளம் பெருகாநின்ற |
| ஊரும் | நடமாடுகின்ற | | |
| பாரம் | சுமையானது | தண் தளிர் | குளிர்ந்த தளிர்கள் நிறைந்த |
| தீர | தொலையும்படியாக | வேலி | வேலிகள் |
| பார்த்தன் தன் | அர்ஜுநனுடைய | புடை சூழ | நாற்புறமும் சூழப்பெற்று |
| தேரை ஊரும் | தேரை நடத்தினவனான | நாரை ஊரும் | நாரைகள் ஸஞ்சரிக்கப் பெற்ற |
| தேவதேவன் | தேவாதிதேவன் | | |
| சேரும் ஊர் | நித்யவாஸம் செய்தருளும் திவ்யதேசம் (எதுவென்றால்) | நல் வயல் சூழ்ந்த | நல்ல கழனிகளால் சூழப்பட்ட |
| | | நறையூர் | திருநறையூராம். |

* * *—பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜனங்கள் எத்தனை கோடிக்கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பதுபோல் வருத்தமற்றிருக்கும். ஒரு துஷ்டனுண்டாகிலும் இரும்புமூட்டையைத் தாங்குவதுபோல் மிகவருத்தமாம். த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் துரியோதனன் முதலிய அஸுரப்ரக்ருதிகளின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத்தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையையடைந்து, அச்சபைநடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப்படுத்தவேணுமென வேண்டிக்கொள்ள, அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து 'இது நம்மாலாகாது, ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந் நாராயணனுக்கு அறிவித்து அவர்மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்கவேணும்' எனக்கருதி அந்தப்பூமியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத்துதிக்க, பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தைகொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி 'ஓ தேவர்காள்! உங்கள் கருத்தை அறிந்துகொண்டேன்; முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினால் கச்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்; இப்பிறவியில் அவர்களுக்கு நான் பிள்ளையாகப் பிறக்கிறேனென்று முன் வரமளித்திருக்

கிறேன் ; அங்ஙனமே நான் அவர்களுடைய கர்ப்பத்தில் தோன்றி ஸாதுபரித்ராணமும் துஷ்டநிக்ரஹமும் தர்மஸம்ஸ்தாபநமும் செய்யக்கடவேன் ; நீங்கள் போகலாம்' என்று சோதிவாய்திறந்து அருளிச்செய்து அவர்களையனுப்பிவிட்டு அப்படியே வந்து திருவவதரித்தருளிப் பார்த்தஸாரதியாயிருந்து பூமிபாரங்களையெல்லாம் போக்கின பெருமான் வாழுமிடம் திருநறையூர்.

[தாரையூரும் இத்யாதி.] 'தார்' என்று பூவுக்கும் பேராதலால், தாரை—புஷ்பத்தை, ஊரும்—தள்ளுகிற (அதாவது) தோற்கடிக்கிற, தளிர்களையுடைத்தான வேலியாலே சூழப்பட்டும் நாரைகள் உலாவப்பெற்று மிருக்கிற வயல்களாலே சூழப்பட்டது. 'யாரா' என்னும் வடசொல் ஐயீறுகத் தாரையெனத் திரிந்ததெனக்கொண்டால், தேனொழுகுகின்ற வேலி என்றதாம். வேலியின் சிறப்பே யிதுவானல் உள்ளுள்ள சிறப்பு வாசாமகோசரமென்கை. .... (௯).

தாமத்துளப நீண்முடிமாயன் தான்நின்ற *
நாமத்திரள் மாமாளிகைசூழ்ந்த நறையூர்மேல் *
காமக்கதிர் வேல்வல்லான் கலியனொலிமாலை *
சமத்துணையாம் செப்புமவர்க்குத் திருமாலே. (௧௦)

| | |
|---|---|
| துளபம் | திருத்துழாயினாலாகிய |
| தாமம் | மாலையை |
| நீள் முடி | நீண்ட திருமுடியிலே யுடையனான |
| மாயன் தான் | ஸர்வேச்வரன் |
| நின்ற | நித்யவாஸம் பண்ணப் பெற்றதும், |
| நாமம் | புகழ்பெற்றவைகளாய் |
| திரள் | நெருங்கியிருக்கின்ற |
| மா மாளிகை | பெரியதிருமாளிகைகளினால் |
| சூழ்ந்த | சூழப்பட்டதுமான |
| நறையூர் மேல் | திருநறையூர் விஷயமாக,— |
| காமம் கதிர் வேல் வல்லான் | மிக்க வொளிபொருந்திய வேற்படையைப் பிடிக்கவல்லவரான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | இச் சொல்மாலையை |
| செப்புமவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| திரு மால் | திருமகள் கொழுநனான ஸர்வேச்வரன் |
| சேமம் துணை ஆம் | எப்போதும் ரக்ஷகனான ஸஹாயபூதனாக ஆவன். |

* * *—'நானே ஸகல சராசரங்களையும் நிர்வஹிக்கவல்லேன்' என்று திருத்துழாய் மாலையணிந்த திருவபிஷேகத்தை யுடையனான பரமபுருஷன் வாழுமிடமாய், 'இது இன்னாருடைய திருமாளிகை, இது இன்னாருடைய திருமாளிகை' என்று ப்ரஸித்திபெற்ற நெருங்கின திருமாளிகைகளாலே நிறைந்ததான திருநறையூர்த் திருப்பதி விஷயமாகத் திருமங்கை மன்னன் திருவாய் மலர்ந்தருளிய இச்சொல்மாலைகளைக் கற்குமவர்களுக்கு எம்பெருமான் என்றும் உடனிருந்து வேண்டிய நன்மைகளையெல்லாம் செய்தருள்வனென்று பயனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று.

தாமத்துளபம்— துளவஸீதாம.

நாமம்—ப்ரஸித்திப் பொருளதான வடசொல் அவ்யயம். காமக்கதிர்— 'காமம்' என்பது மிகுதிப்பொருளதான வடமொழி அவ்யயம். விரும்பத் தகுந்த ஒளியையுடைய வேல் என்னவுமாம். சேமம்—க்ஷேமம். .... (க௦)

அடிவரவு:—கலங்க முன்ன ஆனை உறி விடை பகுவாய் முந்து வெள்ளை பாரை தாமம் அம்பரம்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—ஆறுந்திருமொழி,

# அம்பரமும் பெருநிலனும்.

[இதுவும் திருநறையூர்த் திருப்பதி மங்களாசாஸனத் திருப்பதிகம்.]

அம்பரமும் பெருநிலனும் திசைகளெட்டும்
அலைகடலுங் குலவரையுமுண்ட கண்டன் *
கொம்பமரும் வடமரத்தி னிலைமேல் பள்ளி
கூடினான் திருவடியே கூடகிற்பீர் *
வம்பவிழும் செண்பகத்தின் வாசமுண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர்மேல்வைகு *
செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (க)

| | |
|---|---|
| அம்பரமும் | ஆகாசத்தையும் |
| பெருநிலனும் | பரந்த பூமியையும் |
| திசைகள் எட்டும் | எட்டுத் திக்குக்களையும் |
| அலை கடலும் | அலையெறிகின்ற கடல்களையும் |
| குலம் வரையும் | குலபர்வதங்களையும் |
| உண்ட | உட்கொண்ட |
| கண்டன் | திருக்கழுத்தையுடையவனும் |
| கொம்பு அமரும் | கிளைகள் பொருந்திய |
| வட மரத்தின் | ஆலமரத்தினுடைய |
| இலை மேல் | தளிரின் மீது |
| பள்ளி கூடினான் | சயனித்துக்கொண்டவனுமான ஸர்வேச்வரனுடைய |
| திரு அடியே | திருவடிகளையே |

| | |
|---|---|
| கூடகிற்பீர் | அடையவேணுமென்றிருப்பவர்களே!, |
| மணி வண்டு | அழகியவண்டுகள் |
| வம்பு அவிழும் செண்பகத்தின் வாசம் உண்டு | அப்போதலர்கின்ற செண்பகப்பூவின் பரிமளத்தைப் புஜித்து (பின்பு) |
| வகுளத்தின் மலர் மேல் வைகு | மகிழம்பூவின்மீது தங்கியிருக்கப்பெற்றதும், |
| செம்பியன் கோ செங்கணான் சேர்ந்த கோயில் | 'செம்பியன்கோச் செங்கணான்' என்னும் சோழராஜன் பணிசெய்யப்பெற்ற கோயிலுமான |
| திரு நறையூர் மணி மாடம் | திருநறையூரிலுள்ள திவ்யஸந்நிதியை |
| சேர்மின்கள் | போய்ச்சேருங்கள். |

* * *—ஊழிப்பெருவெள்ளம் பரந்து உலகமுழுவதையும் அழிக்கப்புகுகிறவளவிலே ஒன்று தப்பாமல் அனைத்தையும் திருவயிற்றினுள்ளே வைத்தருளிப் பாதுகாத்து ஒரு சிற்றாலந்தளிரிலே துயில்கொண்ட பரமனுடைய திருவடிகளைச் சேரவிரும்புவீர்களாயின் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள் என்று உபதேசிக்கிறார்.

அவ்விடத்துச் சோலைவளம் சொல்லுகிறது மூன்றாமடியால். வம்பு—புதுமையும் பரிமளமும். [செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த கோயில்] திருவல்லிக்கேணியில் தொண்டையர்கோன் போலவும், பரமேச்சுர விண்ணகரத்தில் பல்லவன் மல்லையர்கோன் போலவும், அட்டபுயகரத்தில் வயிரமேகன் போலவும், நந்திபுரவிண்ணகரத்தில் நந்திவருமன்போலவும் இத்திருப்பதியில் செம்பியன்கோச் செங்கணானென்னுமோரரசன் தொண்டுபூண்டு உய்ந்து போனானென்றுணர்க. இத்திருப்பதிகத்தின் வியாக்கியான அவதாரிகையில் பெரியவாச்சான் பிள்ளை—"தர்மாதியுமாய் ஸ்நேஹமுமின்றிக்கேயிருக்கிற ராஜாதான் ஸ்ரீமார்க்கண்டேய பகவானைப்போலே தேவதாந்தர பஜநம்பண்ணி அங்குத் தன்னுடைய அபிமதம் தலைக்கட்டிக்கொள்ளப் பெறாமையாலே இங்கே § ஹ்ருதா ஹிதா நனைத் திருவடிகளிலே விழுந்து ஆச்ரயித்து ஐஹிகாமுஷ்மிகங்களிரண்டையும் பெற்றுப்போனான்" என்றும், "† நம்பி ஒரு வாள்கொடுத்தருள அத்தைக்கொண்டு பூமியையடையத் தன் காலின்கீழே இட்டுக்கொண்டானென்றொரு ப்ரஸித்தியுண்டாய்த்து" என்று மருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் அறியத்தக்கன.

திருநறையூர் மணிமாடம்=இவ்வாழ்வார்தாம் பெரியதிருமடலில் அருளிச்செய்யும்போது "இரும்பொழில்சூழ் மன்னுமறையோர் திருநறையூர் மாமலைபோல் பொன்னியலுமாடம்" என்றும் "தென்னறையூர் மன்னுமணிமாடக்கோயில் மணாளனை" என்றும் அருளிச்செய்திருத்தலால் திருநறையூரிலுள்ள நம்பிஸந்நிதிக்கு 'மணிமாடக்கோயில்' எனத்திருநாமம் வழங்கிவந்ததென்பது தெரிகின்றது. (திருநாங்கூர் மணிமாடக்கோயில் வேறு.)

அம்பரம், வடம், வகுளம்—வடசொற்கள். .... .... .... (க)

§ அஹங்கார மொழிந்தவனைத் தான்படி. † நம்பி—திருநறையூரெம்பெருமான்.

கொழுங்கயலாய் நெடுவெள்ளம் கொண்டகாலம்
குலவரையின் மீதோடி அண்டத்தப்பால் *
எழுந்தினிது விளையாடு மீசனெந்தை
இணையடிக்கீ ழினிதிருப்பீர் இனவண்டாலும் *
உழுஞ்செறுவின் மணிகொணர்ந்து கரைமேல்சிந்தி
உலகெல்லாம் சந்தனமு மகிலுங்கொள்ள *
செழும்பொன்னி வளங்கொடுக்கும் சோழன்சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (உ)

| | |
|---|---|
| நெடு வெள்ளம் கொண்ட காலம் | பிரளயப்பெருவெள்ளம் (உலகங்களை) ஆக்கிரமித்த வொரு சமயத்திலே |
| கொழு கயல் ஆய் | பருத்த மத்ஸ்யரூபியாய்க் கொண்டு |
| குலவரையின் மீது ஓடி | குலபர்வதங்களின்மேலே போய் ஸஞ்சரித்து |
| அப்பால் | அதற்குமேலே |
| அண்டத்து | அண்டபித்தியளவும் |
| எழுந்து | கிளம்பி [துள்ளி] |
| இனிது | சுகமாக |
| விளையாடும் | விளையாடின |
| ஈசன் எந்தை | எம்பெருமானுடைய |
| இணை அடி கீழ் | உபயபாதங்களின் கீழ் |
| இனிது இருப்பீர் | சுகமாகவாழ விருப்ப முள்ளவர்களே !, |
| இனம் வண்டு ஆலும் | கூட்டமாகத் திரண்ட வண்டுகள் நடமாடப் பெற்ற |
| செழு பொன்னி | அழகிய திருக்காவேரி யானது |
| உழும் செறுவின் கரை மேல் | உழப்படுகிற கழனிகளின் வரப்புகளின்மீது |
| மணி கொணர்ந்து சிந்தி | ரத்னங்களைக் கொண்டுவந்து சிதறத் தள்ளியும் |
| உலகு எல்லாம் | ஸகலஜனங்களும் |
| சந்தனமும் | சந்தனக்கட்டைகளையும் |
| அகிலும் | அகிற்கட்டைகளையும் |
| கொள்ள | எடுத்துக்கொள்ளும்படியாக |
| வளம் கொடுக்கும் | வளங்களைக் கொடுக்கு மிடமாய் |
| சோழன் சேர்ந்த | சோழராஜன் பணிசெய்யப் பெற்றதான |

திரு நறையூர் மணி மாடம், சேர்மின்கள்—.

* * *—மத்ஸ்யாவதார வரலாறு முன்னடிகளில் அநுஸந்திக்கப்படுகிறது. ஒரு பிரமகல்பமுடிவில் பிரமசம்பந்தமான நைமித்திக ப்ரளயம் உண்டாயிற்று; அப்பொழுது பூமிமுதலிய உலகங்கள் கடலாற் சூழப்பட்டு மூழ்கும்ஸமயத்தில் நித்திரை தெளிக்தெழுந்து அந்த ஜலத்தில் படுக்கயத்தனித்த பிரமனது முகத்தினின்றும் வெளிக்கிளம்பின நான்கு வேதங்களையும் ஹயக்ரீவனென்னுமோர் தானவன் அபஹரித்துக் கொண்டுபோய் விட்டான்; அப்போது வேதங்கள் தொலைந்தது கண்டு திருமால் ஓர் சிறிய மீன்வடிவு கொண்டார்; அக்காலத்தில் தவத்தின் பெருமையினால் ஜீவித்து, கிருதமாலா நதியின்கரையில் திருமாலை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்த ஸத்யவ்ரதனென்னுமோர் ராஜர்ஷி ஜல பானம் பண்ணிக்கொண்டு பிழைத்திருந்தார்; அவர் ஜலதர்ப்பணஞ்செய்கையில்

அவரது இரண்டு கைகளுக்குள் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது; அதனை அவர் ஜலத்தில் விட்டார்; அப்போது அந்த மீன் 'ஓ தயாளுவான ராஜரிஷியே! என்னை இப்படி ஜலத்தில் விட்டீரே, என் இனத்தார் என்னை விழுங்கி விடுவார்களே; என்னை நீர் காப்பாற்றியருளவேணும்' என்ன; அவர் அதனைத் தன் கமண்டலதீர்த்தத்தில் எடுத்துவிட்டார்; அதனுட்புகுந்த அந்த மீன் ஓரிரவுக்குள் கமண்டலத்துக்குள் நிரம்பி மறுநாள் காலையில் 'ஓ தயாளுவே! நான் எப்படி உம்முடைய கலசத்துக்குள் கஷ்டப்பட்டு வஸிப்பது? என்மீது சிறிது அருள்புரியலாகாதா?' என்றது; உடனே அவர் அதனைக் கமண்டலத்தினின்றும் எடுத்துத் தன்னிடத்துள்ள சந்தன ஜலத்தில் புகவிட்டார்; உடனே மூன்றடி பிரமாணம் வளர்ந்த அந்த மீன் 'என்னை இப்படி கஷ்டப்படுமாறு விட்டுவைப்பது உமக்குத்தருமமா?' என்றது; அன்புகூர்ந்த அவர் உடனே அதையெடுத்து ஓர் குளத்தினுள் விட்டார்; அங்கும் மிகவளர்ந்த அந்த மீன் 'நான் சுகமாக வஸிக்க இடம்பெறாமல் வருந்துவது உமது திருவுள்ளத்திற்கு உகப்போ?' என்றது; உடனே அவர் அதை யெடுத்து ஒரு ஏரியில் விட்டார்; அக்கணமே அந்த ஏரி நிரம்பவளர்ந்த அந்த மீன் 'ஸ்வாமிந்! என்னையிப்படி அலையவிடுவது நியாயமா?' என்றது; அதைக்கேட்டுக் கருணைகூர்ந்த அவர் அதனையெடுத்துக் கடலில் விட்டார்; அப்பால் அந்த ஸத்யவிரதர் அம்மீனிடத்துப் பெருமயல்கொண்டு அதனை நோக்கி 'ஓ மத்ஸ்யராஜனே! உன்னுடைய வரலாற்றைத் தெரிந்துகொள்ள மிக்க ஆவலுள்ளவனாயிருக்கிறேன்; நூறு யோஜனை நீளமும் அதற்குத் தக்க பருமனும் வாய்ந்துள்ள நீ யார்? உனது தத்துவத்தை வெளியிடவேணும்' என்று கைகூப்பிப் பிரார்த்திக்க, அந்த மத்ஸ்ய ராஜன் 'ஓ மஹாநுபாவரே! இன்றுமுதல் ஏழுநாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கிவிடப்போகின்றன; அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது; அந்தப்படகில் ஸப்தரிஷிகளும் நீரும் எல்லா ஓஷதிகளும் ஸமஸ்த பிராணிகளும் ஏறி மனத்திற்கு வருத்தமொன்றுமின்றி உலாவக்கடவீர்கள்; இப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கு மளவில் ஓர் பெருங்காற்று அடிக்கப்போகிறது; அதனால் அந்த ஓடமானது பெருநீரில் அலையப்போகின்றது; அப்பொழுது எனது சிரஸ்ஸில் முளைத்துள்ள பெரியதொரு கொம்பில் பெரியதொரு ஸர்ப்பத்தினால் அந்த ஓடத்தைக்கட்டிவிடும்; பிறகு நான் அந்தப் படகுடன் உம்மையும் எல்லாப்பிராணிகளையும் ரிஷிகளையுஞ் சுமந்துகொண்டு அந்தப் பேரிருள் நீங்கும்வரையில் நான் கடலில் ஸஞ்சரிக்கப்போகிறேன்; அப்போது எனது பெருமையை நீர் உணர்வீர்' என்றுரைத்துவிட்டு மறைந்திடவே, ஆச்சரியமடைந்த அந்த ஸத்யவிரதர் பகவானாலே குறிக்கப்பட்ட அக்காலத்தை எதிர்பார்த்திருக்கையில் ஸப்த மேகங்களினுடைய ஆரவாரத்தால் கடல் கிளரத்தொடங்கிற்று; பகவான் குறித்ததினத்தில் ஒரு பெரிய ஓடம் அந்தக்கடலில் வரக்கண்டு மகிழ்ந்து எல்லாக் கொடி செடி பீஜங்களையும் அந்தப் படகிலேற்றித் தாமும் ஏறினர்; ஏறி, ஸப்தரிஷிகளுந் தாமுமாய்ப் பகவானைச்

சிந்தனைசெய்து கொண்டிருக்கையில், பெரிய கொம்புள்ள மத்ஸ்யரூபங்கொண்ட பகவான் காணப்பட்டார்; லக்ஷம் யோஜனை நீளமும் பதினாயிரம் யோஜனை பருமனும் ஒற்றைக்கொம்பும் ஸுவர்ணவர்ணமும் ஸகலலோகமநோஹர ரூபமும் வாய்ந்தவராகக் காணப்பட்டார்; உடனே அந்த ஸத்யவிரதர் ஒரு பெரிய நாகத்தைக்கொண்டு அந்த மத்ஸ்யபகவானது கொம்பிலே அப்படகைக்கட்டிவிட, அப்பெருமான் அதனை வஹித்துக்கொண்டு அண்டகடாஹத்தளவும் செல்லத் துள்ளிவிளையாடி, முன்பு அசுரர் கவர்ந்துசென்ற வேதங்களையும் மீட்டுக் கொணர்ந்தருளி, ஆக இவ்வண்ணம் பிரளயாபத்தில் நின்றும் பிரஜைகளைக் காத்தருளியதும் வேதங்களை உபகரித்தருளினதும் மத்ஸ்யாவதார வரலாறும். இதனை மிகச்சுருக்கமாக இப்பாட்டில் ஒன்றரையடியால் அநுஸந்தித்தாராயிற்று.

மேல் எட்டாம்பத்திலும் (8—8—1.) "வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்த காலம் வலியுருவின், மீனாய்வந்து வியந்துய்யக்கொண்ட தண்டாமரைக்கண்ணன்" என்பர்.

"குலவரையின் மீதோடியண்டத்தப்பால் எழுந்தினிது விளையாடும்" என்றது பிரளயப்பெருவெள்ளம் நீங்குமளவும் ஓடத்தை வஹித்துக்கொண்டு விளையாடினமையைச் சொன்னவாறு. இப்படிப்பட்ட எம்பெருமானது திருவடிகளை விடாது பணிந்திருக்கவேணுமென்னும் விருப்புடையீர்! திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—என்கிறார்.

"உழுஞ்செறுவின் மணிகொணர்ந்து கரைமேல் சிந்தி உலகெல்லாம் சந்தனமு மகிலுங்கொள்ளச் செழும்பொன்னி வளங்கொடுக்கும்" என்ற அடைமொழி திருநறையூரில் அந்வயிக்கவுமாம், சோழனிடத்து அந்வயிக்கவுமாம். பொன்னி பெருகும்படியான நாட்டுக்குத் தலைவன் என்றவாறு. காவிரியாறு பெருகும்போது வயல்களிலே ரத்னங்களைக் கொணர்ந்து தள்ளுவதும் சந்தனக் கட்டை அகிற்கட்டை முதலானவற்றை உலகங்கொள்ளுமாறு அடித்துக்கொண்டு வருவதும் இயல்பு. .... .... .... .... (உ)

பவ்வநீருடை யாடையாகச் சுற்றிப்
    பாரகலம் திருவடியாப்பவனம் மெய்யா *
செவ்விமாதிர மெட்டும்தோளா அண்டம்
    திருமுடியா நின்றான்பால் செல்லகிற்பீர் *
கவ்வைமாகளிறுந்தி வெண்ணியேற்ற
    கழல்மன்னர் மணிமுடிமேல் காகமேற *
தெய்வவாள் வலங்கொண்ட சோழன் சேர்ந்த
    திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (௩)

பவ்வம் நீர் — கடல் நீரை
உடை ஆடை ஆக சுற்றி — அரையிலுடுத்துக் கொள்ளும் பீதாம்பரமாகச்சுற்றி,
பார் அகலம் திரு அடி ஆ — பூமிப்பரப்பையெல்லாம் திருவடியாகக் கொண்டு,

| | | | |
|---|---|---|---|
| பவனம் மெய் ஆ | வாயுவைத் திருமேனியாகக் கொண்டு | உந்தி | தள்ளிக்கொண்டு |
| செவ்வி மாதிரம் எட்டும் தோள் ஆ | அழகிய திசைகளெட்டையும் புஜங்களாகக் கொண்டு | வெண்ணி | வெண்ணியென்னுமிடத்தில் |
| அண்டம் திருமுடி ஆ | அண்டபித்தியைத் திருவபிஷேகமாகவுங் கொண்டு | ஏற்ற | எதிர்த்து வந்த |
| நின்றான் பால் | நின்ற ஸர்வேச்வரனிடத்திலே | கழல் மன்னர் | வீரக்கழலணிந்த அரசர்களினுடைய |
| செல்ல கிற்பீர் | சென்றுசேர விரும்பியிருக்குமவர்களே!, | மணி முடி மேல் | சிறந்த தலைகளின் மீது |
| கவ்வை | ஆரவாரத்தையுடையனவாய் | காகம் ஏற | காக்கைகள் ஏறி ஜீவிக்கும்படி |
| மா | பெரியவையான | தெய்வம் வாள் வலம் கொண்ட | திவ்யமான வாட்படையின் வலிவைக்காட்டின |
| களிறு | யானைகளை | சோழன் | சோழராஜன் |
| | | சேர்ந்த | பணிசெய்யப்பெற்ற |
| | | திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—. | |

* * *—எம்பெருமான் ஜகத்ஸ்வரூபியாயிருக்கும் நிலைமையை உருவகத்தாலே அநுபவிக்கிறார் முன்னடிகளில். விபுவான எம்பெருமானுக்குக் கடல் நீரானது அரையிலுடுக்கும் ஆடையாகின்றது; பூமிப்பரப்பெல்லாம் திருவடியாகின்றது; வாயுராசியெல்லாம் திருமேனியாகின்றது; திசைகளெட்டும் திருத்தோள்களாகின்றன; அண்டகடாஹமானது திருவபிஷேகமாகின்றது; ஆக இவ்வகைகளாலே ஜகத்ரூபியாயிருக்கின்ற ஸர்வேச்வரனுடைய திருவடிகளைக் கிட்டவேணுமென்றிருப்பீராகில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள். அத்திருப்பதி செங்கணான் கோச்சோழன் சேரப்பெற்றதாம்; அவ்வரசன் எப்படிப்பட்டவனென்னில்; மஹாவீரன்; [கவ்வைமாகளிறுந்தி இத்யாதி.] 'விண்ணியேற்ற' என்றபாடம் பெரும்பான்மையாக வழங்கிவரினும் 'வெண்ணி' என்றபாடம் மாறுபட்டதென்ப. 'இது கோயில்வெண்ணி (கோயிலுண்ணி) எனவழங்கும் சோணாட்டூர்' என்பர். படையெடுத்து வந்த மாற்றரசர் போர் செய்த இடம் இது; மேற்பாட்டிலும் இங்ஙனமே. யானைகளைப் படை திரட்டிக்கொண்டு வெண்ணியில் வந்தெதிர்த்த கழல்மன்னர்களைப் பிணமாக்கின சோழன் சேர்ந்த திருநறையூர் என்கை. 'முடிமேல் காகமேற' என்றது பிணமாக்கினபடியைச் சொன்னவாறு. பிணங்களைக் காகமேறியுண்ணுமே.

தெய்வவாள் வலங்கொண்ட=இவ்வரசன் திருநறையூர் நம்பிபக்கல் ஒரு வாள்பெற்று வெற்றிபெற்றனனென்பர். .... .... .... (௩)

பைங்கணா ளரியுருவாய் வெருவநோக்கிப்
பருவரத்தோ ளிரணியனைப் பற்றிவாங்கி *
அங்கைவா ளுகிர்நுதியா லவனதாகம்
அங்குருதி பொங்குவித்தா னடிக்கீழ்நிற்பீர் *

வெங்கண்மா களிறுந்தி வெண்ணியேற்ற
விறல்மன்னர் திறலழிய வெம்மாவுய்த்த *
செங்கணான் கோச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (ச)

பைங் கண் — பசுமையான திருக்கண்களையுடைய
ஆள் அரி உரு ஆய் — நாரஸிம்ஹருபியாகி
வெருவ நோக்கி — (எதிரிகள்) அஞ்சும்படி விழித்து,
வரம் பரு தோள் இரணியனை — பெற்ற வரங்களினால் பருத்தபுஜங்களையுடையனான இரணியாசுரனை
பற்றி வாங்கி — பிடித்திழுத்து
அம் கை — அழகிய திருக்கைகளிலுள்ள
வாள் உகிர் நுதியால் — ஒளிபொருந்திய நகங்களின் நுனியினால்
அவனது ஆகம் — அவ்விரணியனுடைய சரீரத்தில் நின்றும்
அம் குருதி பொங்குவித்தான் — அழகிய ரத்தத்தை வெள்ளமிடச்செய்த பெருமானுடைய
அடி கீழ் நிற்பீர் — திருவடிகளின்கீழ் நிற்க விருப்பமுடையவர்களே!,
வெம் கண் மா களிறு உந்தி — வெவ்விய கண்களையுடைய பெரியயானைகளைத் தள்ளிக்கொண்டு
வெண்ணி எற்ற — வெண்ணியென்னுமிடத்தில் எதிர்ந்துவந்த
விறல் மன்னர் — சூரர்களான அரசர்கள்
திறல் அழிய — வலிமாளும்படியாக
வெம் மா உய்த்த — கடுங்குதிரைகளை நடத்தி வெற்றிபெற்றவனான
செங்கணான் கோ சோழன்—;
சேர்ந்த கோயில்—;
திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—.

* * *—நாரஸிம்ஹாவதாரத்தை யநுபவிக்கிறார் முன்னடிகளில். சிங்கத்திற்குக் கண்ணில் பசுமை ஜாதிஸ்வபாவமாதலால் 'பைங்கண்' எனப்பட்டது. பார்த்த பார்வையிலேயே இரணியன் குடல்குழம்பிப் போம்படி பார்த்து, அதற்குமேல் நகங்களையுங்கொண்டு அவனுடலைப்பிளந்தொழித்த பெருமானது திருவடிகளைப் பெறவேண்டியிருப்பீராகில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள். 'பருவரைத்தோள்' என்ற பாடத்திற்கு பருத்த மலைபோன்ற தோள்களையுடையனென்றுரைக்க.

இப்பதியைச்சேர்ந்த சோழனது சிறப்பைச்சொல்லுகிறது மூன்றாமடி. கீழ்ப்பாட்டிலுரை காண்க. .... .... .... .... (ச)

அன்றுலக மூன்றினையு மளந்துவேறோர்
அரியுருவா யிரணியன தாகங்கீண்டு *
வென்றவனை விண்ணுலகில் செலவுய்த்தாற்கு
விருந்தாவீர் மேலெழுந்து விலங்கல்பாய்ந்து *
பொன்சிதறி மணிகொணர்ந்து கரைமேல்சிந்திப்
புலம்பரந்த நிலம்பரக்கும் பொன்னிநாடன் *
தென்றமிழன் வடபுலக்கோன் சோழன்சேர்ந்த
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (ரு)

| | |
|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் |
| உலகம் மூன்றினையும் | மூவுலகங்களையும் |
| அளந்து | (திரிவிக்கிரமனாய்) அளந்து கொண்டவனும் |
| வேறு ஓர் அரி உரு ஆய் | விலக்ஷணமானவொரு நரஸிம்ஹரூபியாகி |
| இரணியனது | ஹிரண்யாஸுரனுடைய |
| ஆகம் | உடலை |
| கீண்டு | இருபிளவாகப் பிளந்து |
| வென்று | வெற்றிபெற்று |
| அவனை விண் உலகில் செல உய்த்தாற்கு | அவ்விரணியனை வீரஸ்வர்க்கத்திற்குப் போகவிட்டவனுமான ஸர்வேச்வரனுக்கு |
| விருந்து ஆவீர் | விருந்தினராக ஆகவேண்டியிருக்குமவர்களே!, |
| மேல் எழுந்து | கிளர்ந்துகொண்டு |
| விலங்கல் பாய்ந்து | (இடையே தடையாகநின்ற) மலைகளை உடைத்துக் கொண்டு வந்து |
| பொன் சிதறி | பொன்களை எங்கும் இறைத்துக்கொண்டு |
| | (அதற்கு மேலே) |
| மணி கொணர்ந்து | (மற்றும் பல) ரத்னங்களைத் திரட்டிக்கொண்டு வந்து |
| கரை மேல் | கரைகளின்மீது |
| சிந்தி | விழவிட்டு |
| புலம் | வெளிநிலங்களிலெங்கும் |
| பரந்து | வியாபித்து (இப்படி) |
| நிலம் பரக்கும் | பூமியெங்கும் பரவுகின்ற |
| பொன்னி | திருக்காவேரியையுடைத்தான |
| நாடன் | நாட்டுக்குத் தலைவனாய் |
| தென் தமிழன் | தென்திசையிலுள்ள தமிழ்நாட்டுக்காசனாய் |
| வட புலம் கோன் | வடநாட்டுக்கும் அரசனான |
| சோழன், சேர்ந்த, திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்— | |

* * *—மூவுலகங்களையும் மாவலியினபிமானத்தில் நின்றும் விலக்கித் தன் திருவடிக்கீழ் இட்டுக்கொண்டவனும், எங்குங்கண்டறியாத விலக்ஷணமான நரஸிம்ஹமூர்த்தியாகி இரணியன் மார்வைக்கிழித்து அவனை வீரஸ்வர்க்கமனுப்பினவனுமான பெருமானுடைய ஆதரவுக்கு இலக்காகவேண்டியிருப்பீர்! திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள். தென்னாட்டுக்கும் வடநாட்டுக்கும் தலைவனான சோழன் சேர்ந்து உய்ந்த தலமாம் இத்திருநறையூர். இவ்வரசன் ஆண்ட நாட்டில் பெருகும் பொன்னியாற்றின் வளமுரைப்பது மூன்றாமடி. காவிரியானது ஸஹ்ய பர்வதத்தில் நின்றும் பெருகிவரும்போது வருமிடையே தடையாகநிற்கும் மலைகளையுடைத்துக்கொண்டு பெருகுகின்றமையைச் சொல்லுகிறது 'விலங்கல் பாய்ந்து' என்று. .... .... .... .... .... (ரு)

தன்னாலே தன்னுருவம் பாய்ந்ததானாய்த்
 தயங்கொளிசேர் மூவுலகுந் தானாய்வானாய் *
தன்னாலே தன்னுருவின் மூர்த்திமூன்றாய்த்
 தானாய னாயினான் சரணென்றுய்வீர் *
மின்னாடு வேலேந்து விளந்தைவேளை
 விண்ணேறத் தனிவேலுய்த்துலகமாண்ட *
தென்னாடன் குடகோங்கன் சோழன்சேர்ந்த
 திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (சு)

| | |
|---|---|
| தன்னாலே | ஸ்வேச்சையாலே |
| தன் உருவம் | தனது திவ்யமங்கள விக்ரஹத்தை |
| பயந்த | உண்டுபண்ணிக்கொண்ட |
| தான் ஆய் | திவ்யாத்மஸ்வரூபத்தை யுடையனாய் |
| தயங்கு ஒளி சேர் மூ உலகும் தான் ஆய் | மிக்கவொளியையுடைய மூவுலகங்களையும் 'தான்' என்கிற சொல்லுக்குள்ளே அடக்கிக் கொண்டவனாய் |
| வான் ஆய் | பரமபதத்துக்குத் தலைவனாய் |
| தன்னாலே | தன்னுடைய ஸங்கல்பத்தாலே |
| தன் உருவில் | தன்ஸ்வரூபத்தில் நின்றும் |
| மூன்று மூர்த்தி ஆய் | மூன்றுமூர்த்திகளை வெளியிட்டவனாய் |
| தான் | தானே |
| ஆயன் ஆயினான் | கோபாலக்ருஷ்ணனுமாகத் திருவவதரித்தவனான எம்பெருமானே |
| சரண் என்று உய்வீர் | சரணம் என்றெண்ணி உஜ்ஜீவிக்கநினைப்பவர்களே!, |
| மின் ஆடு | ஒளிபொருந்திய |
| வேல் ஏந்து | வேற்படையைத்தரித்த |
| விளந்தை வேளை | 'விளந்தைவேள்' என்னு மோராசனை |
| விண் ஏற | வீரஸ்வர்க்கமடையும்படி |
| தனி வேல் உய்த்து | ஒப்பற்ற வேற்படையைப் பிரயோகித்து |
| உலகம் ஆண்ட | உலகங்களை ஆண்டு வந்த |
| தென் நாடன் | தென்தேசத்தரசனாய் |
| குட கொங்கன் | மேற்றிசையிலுள்ள கொங்குநாட்டுக்குத் தலைவனான |

சோழன், சேர்ந்த, திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—.

* * *—தன்னுருவம் தன்னாலே பயந்த தானாய்=எம்பெருமான் தவிர மற்றையோருடைய ஸ்வரூபமெல்லாம் எம்பெருமானுடைய இச்சைக்கு உட்பட்டதாயிருப்பதுபோல, எம்பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் வேறொருவருடைய இச்சைக்கு உட்பட்டதாயிருக்குமோ வென்னில், இரா; தன்னுடைய ஸ்வரூபஸ்திதி முதலியவை தானிட்ட வழக்காம்படி யிருக்குமவனென்னவுமாம்; அகர்மவச்யன் என்றவாறு. "தயங்கொளிசேர் மூவுலகும் தானாய்" என்றதனால் லீலாவிபூதி முழுவதையும் தானிட்ட வழக்காகவுடையன் என்பதும், 'வானாய்' என்றதனால், நித்யவிபூதியைத் தானிட்ட வழக்காகவுடையன் என்பதும் சொல்லிற்றாம். தன்னாலே தன்னுருவில் மூர்த்தி மூன்றாய்=தன்னுடைய ஸங்கல்பத்தாலேயே ஸ்வஸ்வரூபத்தை மூன்று வகுப்பாக வகுத்துக்கொண்டவன்; தானான நிலைமையிலே நின்று ஸம்ரக்ஷித்தும் ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை நடத்தியும் ஆகவிப்படி மூன்று வடிவுகளையுடையவனென்றபடி. தான் ஆயனாயினான்=இப்படிப்பட்ட தான் இடையர்களிலொருவன் 'இவன் எனக்கு மகன்' என்று அபிமானிக்கும்படி கிருஷ்ணனாய் வந்து அவதரித்தவன். இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் நமக்குப்புகல் என்றிருப்பீரேல் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்.

சோழன் சேர்ந்து உய்ந்த திருப்பதியாமிது; அவன் எப்படிப்பட்டவனென்னில்; வேற்படை வல்லவனான 'விளந்தைவேள்' என்னுமோ ராசனை வென்று உலகமாண்டவன்.

‘விளைந்த வேளை’ என்று பாடம் வழங்கிவரினும் ‘விளந்தை வேளை’ எனத் திருத்திக்கொள்ள வேணுமென்பர். ‘விளந்தை’ என்று ஓர் ஊருக்குப் பெயரென்க. .... .... .... .... .... .... (ச)

முலைத்தடத்த நஞ்சுண்டு துஞ்சப்பேய்ச்சி
முதுதுவரைக் குலபதியாய்க் காலிப்பின்னே *
இலைத்தடத்த குழலூதி ஆயர்மாதர்
இனவளை கொண்டானடிக்கீழ் எய்தகிற்பீர் *
மலைத்தடத்த மணிகொணர்ந்து வையமுய்ய
வளங்கொடுக்கும் வருபுனலம் பொன்னிநாடன் *
சிலைத்தடக்கைக் குலச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (எ)

| | |
|---|---|
| பேய்ச்சி | பூதனையானவள் |
| துஞ்ச | மாளும்படியாக |
| தட முலை | (அவளது) பருத்த முலையிலுள்ள |
| நஞ்சு உண்டு | விஷத்தை உட்கொண்டவனும், |
| முது துவரை | ப்ராசீனமான த்வாரகைக்கு |
| குலபதி ஆய் | தலைவனாய்த் திருவவதரித்து |
| காலி பின்னே | பசுக்களின் பின்னே |
| தட | பெரிய |
| இலை குழல் | இலையாலே செய்யப்பட்ட குழலை |
| ஊதி | ஊதிக்கொண்டு போனவனும், |
| ஆயர் மாதர் | இடைப்பெண்களினுடைய |
| வளை இனம் | வளைத்திரள்களை |
| கொண்டான் | (விளையாட்டாக) அபஹரித்தவனுமான எம்பெருமானுடைய |
| அடி கீழ் | திருவடிகளின் கீழே |
| எய்த கிற்பீர் | கிட்டி ஆச்ரயிக்க விருப்பமுடையவர்களே!, |
| மலை தடத்த | மலைப்ராந்தங்களிலுண்டான |
| மணி | ரத்னங்களை |
| கொணர்ந்து | திரட்டிக்கொண்டு வந்து |
| வையம் உய்ய | உலகமெல்லாம் உஜ்ஜீவிக்கும்படி |
| வளம் கொடுக்கும் | மிகுதியாகக் கொடுக்கின்றதாய் |
| வரு | பெருகிவருமதான |
| புனல் | தீர்த்தத்தையுடைத்தாய் |
| அம் | அழகியதான |
| பொன்னி | திருக்காவேரியையுடைய |
| நாடன் | நாட்டுக்குத்தலைவனாய் |
| சிலை | வில்லை |
| தட கை | பெரிய கையிலுடையவனாய் |
| குலம் சோழன் | சிறந்தவனான சோழராஜன் |

சேர்ந்த, கோயில், திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—.

* * *—கம்ஸனது ஏவுதலினால் நள்ளிரவில் நஞ்சுதீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லவந்த பேய்ச்சியை முலையுண்கிற பாவனையிலே உயிருண்டு முடித்தவனும், த்வாரகாபுரிக்குத் தலைவனும், இலைக்குழலூதிக்கொண்டு பசுக்களின் பின்னே போய் அவற்றை மேய்ப்பவனும், * கோழியழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான் போந்த இடைப்பெண்களின் ஆடையாபரணம் முதலியவற்றைக் கொள்ளைகொண்டு குருந்தமரத்தின்மேலேறி மறைந்து வீற்

திருப்பவனுமான எம்பெருமானது திருவடிகளைச் சேரவேண்டில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்.

மலைத்தாழ்வரைகளிலுண்டான ரத்னங்களைக்கொண்டுவந்து பூமியிலுள்ளா ரெல்லாரும் உபஜீவிக்குமாறு ஆங்காங்குக் கொழிக்கின்ற காவிரியாறு பெருகப் பெற்ற நாட்டுக்குத் தலைவனுப் பெரிய ஆண்பிள்ளையான சோழராஜன் பணி விடை செய்யப்பெற்ற கோயிலாம் அது. .... .... .... (எ)

முருக்கிலங்கு கனித்துவர்வாய்ப் பின்னைகேள்வன்
மன்னெல்லாம் முன்னவியச்சென்று * வென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்றவேந்தன்
சிரந்துணித்தான் திருவடிநும் சென்னிவைப்பீர் *
இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற்கு
எழில்மாட மெழுதுபதுசெய் துலகமாண்ட *
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (அ)

| | |
|---|---|
| முருக்கு | முருக்கம்பூப்போலவும் |
| இலங்கு கனி | விளங்குகின்ற (கோவைப்) பழம்போலவும் |
| துவர் | சிவந்திருக்கிற |
| வாய் | அதரத்தையுடையளான |
| பின்னை | நப்பின்னைப்பிராட்டிக்கு |
| கேள்வன் | நாயகனும், |
| முன் | முன்பொருகாலத்தில் |
| மன் எல்லாம் | க்ஷத்ரியர்களெல்லாரும் |
| அவிய | ஒழியும்படியாக |
| வென்றி செரு களத்து | வெற்றி தாவல்ல போர்க்களத்திலே |
| சென்று | போய் |
| செற்றம் வேந்தன் | மாற்றாசனான கார்த்த வீரியார்ஜுனனுடைய |
| திறல் அழிய | மிடுக்கு அழியும்படியாக |
| சிரம் அணித்தான் | (அவனது) தலையைத் அணித்தவனுமான ஸர்வேச்வரனுடைய |
| திரு அடி | திருவடிகளை |
| நும் சென்னி வைப்பீர் | உங்கள் தலைகளிலே அணிந்துகொள்ள விருப்ப முடையவர்களே!, |
| இருக்கு | வேதத்தில் |
| இலங்கு திருமொழி | சிறந்தவையான புருஷ ஸூக்தம் முதலிய பாகங்களை |
| வாய் | வாயிலே உடையனுய் |
| எண் தோள் | எட்டுபுஜங்களையுடையனுன |
| ஈசற்கு | சிவபிரானுக்கு |
| எழில் | அழகிய |
| எழுபது மாடம் | எழுபது ஆலயங்களை |
| செய்து | நிருமாணம் செய்வித்து |
| உலகம் ஆண்ட | உலகத்தைப் பரிபாலனம் பண்ணின |
| திரு குலத்து | உயர்ந்த குலத்திற் பிறந்தவனுய் |
| வளம் | செல்வம் மிக்கவனுன |

சோழன், சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—.

* * *—முருக்கம்பூப்போலவும் கொவ்வைக்கனிபோலவும் சிவந்து விளங்கா நின்ற அதரத்தையுடையளான நப்பின்னைப்பிராட்டிக்குக் கொழுநனும், க்ஷத்ரி

யர்களெல்லாரும் தலைமடியும்படி அமர்க்களத்திற்சென்று ஸஹஸ்ரபாஹுவான கார்த்தவீர்யார்ஜுநனுடைய தலையைத்துணித்தவனுமான எம்பெருமானுடைய திருவடிகளைச் சென்னிமேல் அணியவேண்டில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்.

சிவபிரானுக்கு எழுபது ஆலயங்கள் கட்டிவைத்து முதலில் சிவபக்தனாயிருந்து பிறகு பகவத்பக்தனாகப்பெற்ற சோழன் சேர்ந்த கோயில் இது. (இச்சோழன் முன் பிறவியிற் சிலந்தியாய்ப்பிறந்து திருவானைக்காவிலுள்ள சிவலிங்கத்துக்குத் தன்னூலாலிழைத்து வந்த மேல்விதானத் திருப்பணியை அழித்து வந்த யானை நுழையாவண்ணம் சிவபிரானுக்கு மாடக்கோயில் பலகட்டி வழிபட்டவனென்பது தேவார முதலியவற்றாலு மறியப்படுமென்ப.) சோழமண்டலத்தின் கூறுகளாக அமைந்த ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு சிவாலயம் இச்செங்கணானாற் கட்டப்பட்டதென்பர். சேக்கிழார்; "செங்கணான், அந்தமில்சீர்ச் சோணாட்டி லகனாடு தொறுமணியார், சந்திரசேகரனமருந் தானங்கள் பல சமைத்தான்" என்பது பெரியபுராணம். இங்ஙனம் சிவதொண்டினைச் சிறப்பப் புரிந்த இச்சோழன் முடிவில் திருநறையூர்த்திருமாலுக்கு அடியனாய்ச் சிறப்புற்றானென்க. "வேதத்தில் ஸ்ரீபுருஷஸூக்தாதிகளை உச்சரியா நின்றுள்ள வாயையுடையராய் எட்டுத்தோள்களையு முடையராயிருக்கிற தேவர்க்கு, தர்ஸநீயமான மாடங்களெழுபதும் சமைத்துப் பின்னையும் தன்னுடைய அபிமதம் கிடையாமையாலே அவ்வபிமத ஸித்த்யர்த்தமாக அவன் வந்து ஆச்ரயிக்கிற தேசம்" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வாக்கியம். .... .... (அ)

தாராளன் தண்ணரங்கவாளன் பூமேல்
தனியாளன் முனியாள ரேத்தநின்ற
பேராளன் * ஆயிரம்பேருடையவாளன்
பின்னைக்கு மணவாளன் பெருமைகேட்பீர் *
பாராள ரவரிவரென் றழுந்தையேற்ற
படைமன்ன ருடல்துணியப் பரிமாவுய்த்த *
தேராளன் கோச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| தார் ஆளன் | மாலையணிந்துள்ளவனும் | ஆயிரம் பேர் உடைய ஆளன் | ஸஹஸ்ரநாமங்களை வாசகமாகக் கொண்ட ஸ்வாமியும் |
| தண் அரங்கம் ஆளன் | குளிர்ந்த திருவரங்கமாநகரை ஆள்பவனும் | பின்னைக்கு மணவாளன் | நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனுமான எம்பெருமானுடைய |
| பூ மேல் தனி ஆளன் | தாமரைப்பூவிற்பிறந்து ஒப்பற்றவளான பிராட்டியை ஆள்பவனும் | பெருமை | பெருமைகளை |
| முனியாளர் ஏத்த நின்ற பேர்ஆளன் | மஹர்ஷிகள் துதிக்கும்படியாயுள்ள பெருமைவாய்ந்தவனும் | கேட்பீர் | கேட்கவேண்டியிருக்குமவர்களே !, |

| | | | |
|---|---|---|---|
| அவர் இவர் என்று பார் ஆளர் | இன்னாரின்னாரென்று ப்ரஸித்தராய்க்கொண்டு பூமியை ஆள்பவராய் | உடல் துணிய | சரீரங்கள் துணிபடும்படி |
| அழுந்தை | திருவழுந்தூரிலேவந்து | பரிமா உய்த்த | குதிரைப்படைகளைச் செலுத்தினவனும் |
| எற்ற | எதிரிட்டவர்களான | தேர் ஆளன் | தேர்வீரனுமான |
| படை மன்னர் | ஆயுதபாணிகளான அரசர்களின் | கோச்சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்—. | |

* * *—'உபயவிபூதியையும் நானே ரக்ஷிக்கக்கடவேன்' என்று தனிமாலையிட்டுக்கொண்டிருப்பவனும் ஜகத்ரக்ஷணத்திற்காகத் திருவரங்கம் பெரிய கோயிலை இருப்பிடமாகக்கொண்டுள்ளவனும் தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடைய அத்விதீயையான பிராட்டிக்கு வல்லபனும் ப்ரஹ்மபாவனையையே தலைக்கொண்டிருக்கிற ஸநகாதி மஹர்ஷிகள் துதிக்கும் பெருமையுடையவனும், அநுபவிப்பார்க்கு இழிந்தவிடமெங்கும் துறையாம்படி ஆயிரந் திருநாமங்களையுடையவனும் நப்பின்னைப்பிராட்டிக்கு நாதனுமான பெருமானுடைய பெருமைகளை அநுபவிக்கவேண்டில் திருநறையூர் மணிமாடம் சேர்மின்கள்.

அத்திருப்பதிக்கு அபிமாநியான சோழனுடைய வீரம் சொல்லுவது மூன்றுமடி. கீழ் மூன்று நான்காம் பாசுரங்களில், வெண்ணியென்னுமிடத்தில் வந்தெதிர்ந்த அரசர்களை வென்ற வீரம் சொல்லிற்று; தேரழுந்தூரில் வந்தெதிர்ந்த மன்னரைவென்ற வீரம் சொல்லுகிறது இப்பாட்டில். .... (௯)

செம்மொழிவாய் நால்வேதவாணர் வாழும்
திருநறையூர் மணிமாடச் செங்கண்மாலை *
பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன்
புலமங்கைக் குலவேந்தன் புலமையார்ந்த *
அம்மொழிவாய்க் கலிகன்றி இன்பப்பாடல்
பாடுவார் வியனுலகில் நமனூர்பாடி *
வெம்மொழிகேட் டஞ்சாதே மெய்ம்மைசொல்லில்
விண்ணவர்க்கு விருந்தாகும் பெருந்தக்கோரே. (௰)

| | | | |
|---|---|---|---|
| செம் மொழி வாய் | உண்மையுரைப்பவர்களும் | பொய் மொழி ஒன்று இல்லாத | பொய்யுரைகள் சிறிதும் கலசாத |
| நால் வேதம் வாணர் | நான்குவேதங்களையும் அதிகரித்தவர்களுமான ஸ்ரீவைஷ்ணவர்கள் | மெய்ம்மை ஆளன் | ஸத்யவசனத்தையுடையவனும் |
| வாழும் | வாழுமிடமான | புலம் மங்கை குலம் | அழகிய திருமங்கை நாட்டுக்கு |
| திரு நறையூர் | திருநறையூரென்னும் திருப்பதியில் | வேந்தன் | தலைவரும் |
| மணிமாடம் | மணிமாடத்திலெழுந்தருளியிருக்கிற | | |
| செம் கண் மாலை | புண்டரீகாக்ஷனான ஸர்வேச்வரன்விஷயமாக, | | |

| | | | |
|---|---|---|---|
| புலமை ஆர்ந்த அம் மொழி வாய் | பாண்டித்யம் நிரம்பிய அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளைத் திருவரயிலே உடையவருமான | மெய்ம்மை சொல்லில் | (பெரும்பலனை) உள்ளபடி சொல்லப்புகுந்தால், |
| கலிகன்றி | திருமங்கையாழ்வாருடைய | நமனர் பாடி | யமலோகத்திலுண்டாகக் கூடிய |
| இன்பம் பாடல் | ஆநந்தமயமான (இந்தப்) பாசுரங்களை | வெம் மொழி கேட்டு அஞ்சாதே | கடுஞ்சொற்களைக் கேட்டு அஞ்சாமல் |
| வியன் உலகில் | இப்பெரியவுலகத்திலே | விண்ணவர்க்கு விருந்து ஆகும் பெருந் தக்கோர் | நித்யஸூரிகள் ஆதரித்துக் கொண்டாடும்படியான பெருமைபொருந்தியவராவர். |
| பாடுவோர் | பாடுமவர்கள் | | |

* * *—ஸத்யவாதிகளாய் வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்த வல்லவர்களான பிராமணர் வாழுமிடமான திருநறையூரில் மணிமாடக்கோயிலில் எழுந்தருளியிருக்கிற புண்டரீகாக்ஷனை எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் ஆநந்தமாக அருளிச்செய்த இத்திருமொழியை * உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்திலே அதிகரிக்குமவர்கள் பெறும் பேற்றை உள்ளபடி சொல்லுவோமாகில், அவர்கள் யமபடருடைய கடுஞ்சொற்களைக்கேட்டு வருந்த அவகாசம் பெறுமல் திருநாட்டிற்புகுந்து * சூழ்விசும்பணிமுகில் திருவாய்மொழியிற்படியே நித்யஸூரிகள் எதிரேவந்து தங்கள் தங்களிருப்பிடங்களிலே கொண்டுபுக்கு உயரவைத்துத் தாங்கள் தாழவிருந்து திருவடி விளக்கிக்கொண்டாடும்படியான பெருமையைப் பெறுவார்களென்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

**வேதவாணர்**—வேதவாழ்நர்; வேதங்களைக்கொண்டு வாழ்பவர் என்றபடி. **திருநறையூர் மணிமாடம்**—மணிமயமான மாடங்களையுடைய திருநறையூர் என்றுமுரைப்ப. .... .... .... .... .... (க0)

**அடிவரவு:**—அம்பரம் கொழு பவ்வம் பைங்கண் அன்று தன்னுலே மூல முருக்கு தாராளன் செம்மொழி ஆளும்.

## ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

அழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறாம்பத்து—ஏழாந்திருமொழி,

# ஆளும் பணியுமடியேனை.

[இதுவும் திருநறையூர்த் திருப்பதித் திருப்பதிகம்.]

ஆளும்பணியுமடியேனைக்கொண்டான் விண்டநிசாசரரை *
தோளுந்தலையும் துணிவெய்தச் சுடுவெஞ்சிலைவாய்ச் சரந்துரந்தான் *
வேளுஞ்சேயு மனையாரும் வேற்கணாரும் பயில்வீதி *
நாளும்விழவி னொலியோவா நறையூர்நின்ற நம்பியே. (க)

| | |
|---|---|
| அடியேனை | அடியேனை |
| ஆளும் பணியும் கொண்டான் | சேஷபூதனாகவும் நித்யகிங்கரனாகவும் திருவுள்ளம் பற்றினவனும், |
| விண்ட நிசாசரரை | பிரதிகூலரான ராக்ஷஸர்களின் |
| தோளும் தலையும் துணிவு எய்த | தோள்களும் தலைகளும் துண்டுதுண்டாம்படியாக |
| சுடு வெம் சிலை வாய் | மிகக்கடூரமான வில்லில் நின்றும் |
| சரம் | அம்புகளை |
| துரந்தான் | பிரயோகித்தவனுமான பெருமான் (யாவனென்னில்) |
| வேளும் சேயும் அனையாரும் | மன்மதனோடும் ஸுப்ரஹ்மண்யனோடும் ஒத்த அழகியபுருஷர்களும் |
| வேல் கணாரும் | வேல்போன்ற கண்களை யுடைய மாதர்களும் |
| பயில் வீதி | வாஸஞ்செய்யப்பெற்ற திரு வீதிகளையுடைத்தாய், |
| நாளும் | எப்போதும் |
| விழவின் ஒலி ஓவா | உத்ஸவகோலாஹலங்கள் ஓயாதிருக்கப் பெற்றதான |
| நறையூர் | திருநறையூரில் |
| நின்ற | நித்யவாஸம்பண்ணுகிற |
| நம்பி | ஸ்வாமி. |

* * *—[அடியேனை ஆளும்பணியுங் கொண்டான்] ஆட்கொள்ளுகையாவதென்? பணிகொள்ளுகையாவதென்? என்னில்; 'இவன் நமக்கு உரியவன்' என்னும்படி சேஷத்வத்திலே நிறுத்துகை ஆட்கொள்ளுகையாம்; சேஷத்வத்தின் பயனான கைங்கரியத்தைக்கொள்ளுகை பணிகொள்ளுகையாம்; அடியேனுக்கு சேஷத்வ பாரதந்திரியங்களிரண்டையும் தந்தருளினவனென்றதாயிற்று. 'நான் எனக்கே உரியவன்; பிறர்காலில் தலையைமடுக்கமாட்டேன்' என்று மார்பு நெறித்திருந்த நிலைமையைப்போக்கியும் இளையபெருமாளைப்போலே எல்லாவகையான கைங்கரியங்களையும் செய்வேணும்படி திருத்தியும் வாழ்வித்தவனென்கை. இப்படிப்பட்ட சேஷத்வ பாரதந்திரியங்களுக்கு இசையாதவர்களிடத்திலே நடத்தும் சிக்ஷையைச் சொல்லுகிறது விண்டநிசாசரரை என்று தொடங்கி. விண்ட—பொருந்திவாராமல் எதிரம்புகோத்த என்றபடி. அப்படிப்பட்ட

நிசாசரரை [அரக்கரை] தோளுந்தலையுந் துணிவெய்தச்சுடுவெஞ் சிலைவாய்ச் சரந்துரந்தான். "𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌾 𑌦𑍇𑌹𑌸𑌮𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌾𑌯 𑌨𑌿𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍। 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍇𑌵 𑌕𑍃𑌤𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌨𑍍! 𑌹𑌸𑍍𑌤𑌪𑌾𑌦𑌾𑌦𑌿𑌸𑌂𑌯𑍁𑌤𑌾=விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்—பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதிஸம்யுதா" என்கிறபடியே நம்மை வழிபடுவதற்கென்றே கொடுத்த கரசரணாதி அவயவங்கள் இவர்கட்கு அக்காரியத்தில் உபயோகப்படுகின்றிலவாகில் இவர்கட்கு இவை எதுக்கு? என்று தோள் தலை முதலிய உறுப்புகளை யொழித்தானாயிற்று.

இப்படிப்பட்ட எம்பெருமான் இன்னமும் அடியவர்களை ஆளும்பணியுங் கொள்வதற்காகவும் ஆஸுரப்ரக்ருதிகளைத் தொலைப்பதற்காகவும் நித்யஸந்நிதி பண்ணியிருக்குமிடம் திருநறையூர். அஃது எப்படிப்பட்டதென்னில்; அழகிற் சிறந்த ஆண்களும் பெண்களும் நிறைந்த பெருநகரம்; நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவமாஸோத்ஸவங்கள் இறைப்பொழுதும் மாறாமல் எப்போதும் உத்ஸவ கோலாஹலங்களே மிக்கது.

"ஆளும்பணியு மடியேனைக்கொண்டான்" என்பதைப் பாட்டுக்கு வினைமுற்றாகக்கொண்டு உரைக்கவுமாம். .... .... .... (க)

முனியாய்வந்து மூவெழுகால் முடிசேர்மன்ன ருடல்துணிய *
தனிவாய்மழுவின் படையாண்ட தாரார்தோளான் வார்புறவில் *
பனிசேர்முல்லை பல்லரும்பப் பானலொருபால் கண்காட்ட *
நனிசேர்கமலம் முகங்காட்டும் நறையூர்நின்ற நம்பியே. (உ)

| | | | |
|---|---|---|---|
| முனி ஆய் வந்து | பரசுராம முனியாய்த் திருவவதரித்து | பனி சேர் முல்லை | குளிர்ந்த முல்லைப் பூக்களானவை |
| மூவெழுகால் | இருபத்தொரு தலைமுறை யளவும் | பல் அரும்ப | (அவ்வூரிலுள்ள மாதர்களின்) பற்கள் போன்று அரும்பு செய்யப்பெற்றதும் |
| முடி சேர் மன்னர் உடல் துணிய | முடியுடையரான க்ஷத்ரியர்களின் சரீரங்கள் தொலையும்படியாக | பானல் | கருங்குவளைப்பூக்களானவை |
| | | (ஒருபால்) | மற்றோரிடத்தில் |
| தனி வாய் மழுவின் படை ஆண்ட | ஒப்பற்ற [கூர்மையான] வாயையுடைத்தான கோடாலியை ஆயுதமாகக் கொண்டவனும் | கண் காட்ட | (அந்த மாதர்களின்) கண்கள் போன்று அலரப் பெற்றதும் |
| | | (ஒருபால்) | மற்றோரிடத்தில் |
| தார் ஆர் தோளான் | மாலையணிந்த திருத்தோள்களை யுடையனுமான பெருமான்,— | நனி சேர் கமலம் | மிகுதியாகவுள்ள தாமரைப் பூக்களானவை |
| வார் புறவில் | அகன்ற சோலைப்புறத்திலே | முகம் காட்டும் | (அந்த மாதர்களின்) முகம் போன்று விகஸிக்கப் பெற்றதுமான |
| ஒரு பால் | ஓரிடத்தில் | | நறையூர், நின்ற நம்பி—. |

* * *—உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத்திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்ரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ்செய்தற்பொருட்டு

நாராயணமூர்த்தி ஜமதக்நிமுனிவரது மனைவியான ரேணுகையிடம் இராமனாய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக்கொண்டு அதனாற் பரசுராமனென வழங்கப்பெற்று வருகையில், ஒருநாள் கார்த்தவீரியார்ஜுநனும் அவனது குமாரர்களும் வேட்டையாடி ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்தகாலத்து, அங்கே அம்முனிவனது ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களையெல்லாம் யதேஷ்டமாக அளித்துக்கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப்பசுவைக் கொள்ளைகொள்ள விரும்பி அதனைக்கவர்ந்து அம்முனிவனையுங் கொன்றிட்டது காரணமாக (ப்பரசுராமன்) அக்கார்த்தவீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்ரிய வம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டானென்ற வரலாறு முன்னடிகட்கு அறியத்தக்கது. இப்படி துஷ்டர்களையழித்து சிஷ்டர்களை வாழ்விக்கக்கடவேனென்று தனிமாலை யிட்டிருக்கும்படியைச் சொல்லுகிறது **தாரார் தோளான்** என்று.

இப்படிப்பட்ட எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான திருநறையூர் எப்படிப்பட்டதென்னில்; முல்லையரும்புபோன்ற பல்லழகும் கருங்குவளைப் பூப்போன்ற கண்ணழகும் செந்தாமரைப்பூப்போன்ற முகத்தினழகும் வாய்ந்த மாதர் நிரம்பிய ஊர் என்பதை ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிறார் பின்னடிகளில். அழகிய மாதர்கள் வாழ்கின்றன ரென்றுரைப்பது நகர்வளங்கூறும் வகைகளுள் ஒன்றுதல் அறிக.

ஈற்றடியின் முற்பகுதி "நனிசேர் வயலுள் முத்தலைக்கும்" என்றும் ஓதப் பட்டுவந்ததென்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தினால் விளங்குகின்றது. அப்பாடமே முதன்மையாக வியாக்கியானிக்கப் பட்டுள்ளது. (உ)

தெள்ளார்கடல்வாய் விடவாய சினவாளரவில் துயிலமர்ந்து *
துள்ளாவருமான்விழ வாளிதுரந்தான் இரந்தான் மாவலிமண் *
புள்ளார்புறவில் பூங்காவி புலன்கோள் மாதர்கண்காட்ட *
நள்ளார்கமலம் முகங்காட்டும் நறையூர் நின்றநம்பியே. (௩)

| | | | |
|---|---|---|---|
| தெள் ஆர் கடல் வாய் | தெளிவுடைய திருப்பாற்கடலில் | மான் | (மாரீசனாகிற) மாயா மிருகம் |
| விடம் வாய | விஷத்தை உமிழாநின்ற வாயையுடையனாய் | விழ | மாளும்படி |
| சினம் | (பிரதிகூலர்மேல்) சீற்றமுடையனாய் | வாளி துரந்தான் | அம்பு எய்தவனும் |
| வாள் | ஒளிபொருந்தியவனான | மாவலி | மஹாபலியினிடத்து |
| அரவில் | திருவனந்தாழ்வான் மீது | மண் இரந்தான் | பூமியை யாசித்தவனுமான பெருமான்.— |
| துயில் அமர்ந்து | சயனித்தருள்பவனும் | புள் ஆர் புறவில் | பட்சிகள் நிறைந்த புறச்சோலைகளிலே |
| துள்ளா வரு | (பஞ்சவடியில்) துள்ளிவிளையாடிக்கொண்டு வந்த | பூ காவி | அழகிய செங்கழுநீர்ப் பூக்கள் |

| | | | |
|---|---|---|---|
| புலன் கொள் மாதர் | அழகிய ஸ்த்ரீகளினுடைய | நள் ஆர் கமலம் | (இதழ்ச்) செறிவை யுடைய தாமரைப்பூக்கள் |
| கண் | கண்களை | முகம் காட்டும் | (அவர்களது) முகங்களைக் காட்டப் பெற்றதுமான |
| காட்ட | காட்டப்பெற்றதும் | | நறையூர், நின்ற நம்பி—. |

* * *—அவதாரங்களுக்கு வேர்ப்பற்றுன திருப்பாற்கடலில் வாழ்ச்சியைச் சொல்லுகிறது முதலடி. திருவனந்தாழ்வான் மங்களாசாஸந பரனுதலால் மது கைடபர்போன்ற அசுரர்கள் மேன்மேலும் வந்து எம்பெருமானுக்குத் தீங்கிழைக்கப் புகுகிறுர்களோவென்று அதிசங்கித்து விஷத்தை உமிழ்வதும் சீறிக் கொண்டே யிருப்பதுமான நிலைமையைச் சொல்லுகிறுர் விடவாய சினவாளர வில் என்று.

திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மேலே எம்பெருமான் திருக்கண் வளர ஆசையுண்டோ? தேவர்கள் ஓடிவந்து கூக்குரலிட்டுக் கதறுவர்களே; 'பிரானே! படுக்கையை விட்டெழுந்திரு; எங்கள் பகைவரைத் தொலைத்திடு' என்று பல்லைக்காட்டிப் பிரார்த்திப்பர்களே; அன்னவர்களுடைய கூக்குரலைக் கேட்டுக்கொண்டு படுக்கையில் கண்ணுறங்கமாட்டானே; உடனே திருவவதரித்துச்செய்தருளுங் காரியங்களுள் ஒன்றைச்சொல்லுகிறுர் துள்ளாவருமான் விழ வாளிதுரந்தான் என்று. துள்ளா-துள்ளி என்றபடி; 'செய்யா' என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். 'இது மெய்யாகவே மான்' என்று நம்பும்படி துள்ளித்துள்ளி விளையாடிக்கொண்டே வந்த மாரீசனுகிய மாயமான் முடியும்படி அம்பெய்தவன். .... .... .... .... .... (ந)

ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்ருல் *
விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுதான் மென்மலர்மேல் *
களியாவண்டு கள்ளுண்ணக் காமர்தென்ற லலர்தூற்ற *
நளிர்வாய்முல்லை முறுவலிக்கும் நறையூர் நின்றநம்பியே. (சு)

| | | | |
|---|---|---|---|
| ஒளியா | மறைந்து நின்று | மெல் மலர் மேல் | மெல்லிய பூக்களின்மீது |
| வெண்ணெய் | வெண்ணெயை | வண்டு | வண்டுகள் |
| உண்டான் என்று | விழுங்கின குற்றத்திற்காக | களியா | களித்து |
| ஆய்ச்சி | யசோதையானவள் | கள் உண்ண | தேனைப்பருக, |
| விளியா | கோபித்து | காமர் தென்றல் | அழகிய தென்றல்காற்று |
| ஒண் கயிற்ருல் | அழகிய தாம்பினுல் | அலர் தூற்ற | புஷ்பங்களை வீசியிறைக்க, |
| உரலோடு | உரலோடு சேர்த்து | நளிர் வாய் முல்லை | குளிர்ந்த முகத்தையுடைய முல்லைப்பூக்கள் |
| ஆர்க்க | கட்ட | முறுவலிக்கும் | புன்சிரிப்புச் செய்யுமா போலே விகஸிக்கப் பெற்ற |
| ஆப்புண்டு | கட்டுண்டு | | நறையூர், நின்ற நம்பி—. |
| விம்மி அழுதான் | விக்கிவிக்கி அழுத பெருமான்,— | | |

* * *—யசோதைப்பிராட்டி தடாக்களிலே சேமித்துவைத்த வெண்ணெய் முதலியவற்றைக் களவுவழியாலே கைப்பற்றி அமுதுசெய்த குற்றத்திற்காகத் தாம்பினால் கட்டுண்டு விக்கியழுத பாமஸௌலபன் திருநறையூர்நம்பி காண்மின்.

இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் ஒரு ஐதிஹ்ய மருளிச்செய்யப்படுகிறது; அதாவது—

"வங்கிப்புரத்து நம்பி பலகாலும் 'திருவாராதன மருளிச்செய்யவேணும்' என்று போருமாய் அவஸரஹாநியாலே அருளிச்செய்யாதே போந்தாராய் திருமலையிலே யெழுந்தருளி யிருக்கச்செய்தே, ஆழ்வானுக்கும் நம்பி ஸ்ரீ ஹநுமத்தாஸர்க்கும் அதுதன்னை யருளிச்செய்தாராய்ச் சமைகிறவளவிலே நம்பி தோற்ற, திருவுள்ளம் துணுக்கென்றஞ்சி அப்போதருளிச்செய்த வார்த்தை:—'என்றுமுள்ள இஸ்ஸம்ஶயம் தீரப்பெற்றேனாகிறது; நியாமகன் நியாம்யங்களிலே சிலர்க்கு அஞ்சிக்கட்டுண்டு அடியுண்டு அழுது நின்றானென்றால் இது கூடுமோ என்றிருந்தோம்; இன்று இரண்டு இழவுக்கும் நம்முடைய ஹ்ருதயம் அஞ்சி நொந்தபடியால் அதுவும் கூடும் என்று.'" என்பதாம்.

இந்த ஐதிஹ்யத்தின் தாத்பரியம் வருமாறு:—வங்கிப்புரத்து நம்பியென்பவர் உடையவர் ஸ்ரீபாதத்திலே பலகாலும் அநுவர்த்தித்து 'அடியேனுக்குத் திருவாராதனப்ரயோகம் உபதேசிக்கவேணும்' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்; ஆனாலும் உபதேசிக்க உடையவர்க்கு அவகாசப்படாமலே போயிற்று; இப்படியிருக்கையில் ஒருநாள் கூரத்தாழ்வானுக்கும் ஹநுமத்தாஸ ரென்னுமொருவர்க்கும் திருவாராதநக்ரமம் உபதேசிக்கநேர்ந்து உபதேசித்து முடிகிற ஸமயத்திலே வங்கிப்புரத்து நம்பி அங்கேவந்து சேர்ந்தார்; அவரைக் கண்டவுடனே உடையவருடைய திருவுள்ளம் அஞ்சி நடுங்கிற்று; இவர் பலகால் கேட்டுக் கொண்டிருந்தும் இவர்க்கு உபதேசியாதொழிந்தோம்; இன்று இவ்விருவர்க்கு உபதேசிக்கும் போதாவது இவரையும் கூட்டிக்கொண்டு உபதேசித்திருக்கலாம்; அதுவும்செய்யப் பெற்றிலோம்: இவ்விருவகைக் குற்றங்களுக்கு ஆளானேமே! என்று அஞ்சிநடுங்கின உடையவர் வங்கிப்புரத்து நம்பியை நோக்கி அழகாக ஒருவார்த்தையருளிச் செய்தார்; அதாவது—எனக்கு நெடுநாளாக இருந்த ஒரு ஸந்தேஹம் இன்று தீரப்பெற்றது; 'ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி ஒண்கயிற்றால் விளியாவார்க்க வாப்புண்டு விம்மியழுதான்' என்றும் 'எழில்கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்குகிலையும்........ அழுகையுமஞ்சிநோக்கு மந்நோக்கும்' என்றும் ஆழ்வார்களருளிச் செய்கிறார்களே, உண்மையில் இப்படியிருக்குமோ, ஸர்வநியாமகனான எம்பெருமான் நியாம்யரானவரிடத்தில் அஞ்சிவருந்தக் கூடுமோவென்று ஸந்தேஹமுண்டாயிருந்தது; இப்போது உம்மிடத்தில் நான் அஞ்சி வருந்தினேனாகையால் அது ஸம்பாவிதமேயென்று துணியப்பெற்றேனென்றாராம்.

ஒளியா—ஒளித்து என்றபடி: 'செய்யா' என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். 'விளியா' என்பதும் அதுவே. விளிதல்-கோபித்தல். ஆப்புண்டு

விம்மியழுதான் = 'ஆய்ச்சி தாம்பினால் நம்மைக்கட்டி வருத்துகின்றாளே' என்று துன்பம் பொறுத்திருக்கமாட்டாமல் விம்மியழுதானல்லன்; 'தயிர் பால் வெண்ணெய்களையும் பெண்களையும் களவுசெய்து திரியவேண்டிய காலம் பாழாய்ப் போகிறதே!, கட்டுண்டிருக்குமளவும் அந்தத் தொழில்களைத் தவிர்ந்திருக்க வேண்டியதாயிற்றே!' என்று வருந்தி விம்மியழுதானென்க.

[மென்மலர்மேல் களியாவண்டு இத்யாதி.] திருநறையூரின் சோலைவளம் சொல்லுகிறது: வண்டுகள் களித்து மதுபானம் பண்ணும்படி மலர்கள் தேன்மிக்கிருக்கின்றன; தென்றற்காற்று எங்கும் வீசி மலர்களை யுதிர்த்துத் தூற்றுகின்றது; முல்லைப்பூக்கள் மலரத் தொடங்குகின்றன—இதுவாயிற்று அவ்விடத்துச் சோலைகளின் நிலைமை.

பின்னடிகளில் சொற்சேர்க்கை அமைந்த அழகு ஆராயத்தக்கது. "மென் மலர்மேல் களியாவண்டு கள்ளுண்ணக் காமர்தென்ற லலர்தூற்ற நளிர்வாய்முல்லை முறுவலிக்கும்" என்ற வாக்கியத்தொடரில் ஒரு அர்த்தவிசேஷம் ஸ்புரிக்கும். அதாவது—வண்டு என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவனைச் சொன்னபடியாய் அவன் ஏதோவிதிவசத்தால் மதுபானம் பண்ணிவிட்டானென்றும், அதைக் கண்டவொருவன் நாட்டிலே § பழிதூற்றப் புறப்பட்டானென்றும், இவ்விரண்டையுங் கண்ட ஒரு ஸாத்விகன் 'ஏதோவிதிவசத்தால் ஒருவன் ஒருகால் மதுபானம் பண்ணிவிட்டால் அதைப்பற்றி இப்படியும் ஒருவன் பழிதூற்றவேணுமோ? இவ்விருள்தருமாஞாலத்தில் இது ஸஹஜந்தானே யென்று வாளாவிருக்கலாகாதோவென்று வாய்விட்டுச் சிரிக்கமாட்டாமல், 'இவையென்னவுலகியற்கை!' என்று புன்சிரிப்புச் செய்கிறானென்றும் தோன்றும். எப்படிப்பட்ட அதிகாரிக்கும் ஒரு நிஷித்தகாரியம் செய்யநேர்ந்துவிடுவது ஸஹஜமென்றும் அதைப்பற்றி ஒருவன் பழிதூற்ற நேருவதும் ஸஹஜமென்றும், 'இது ஒரு ப்ரமாதமா? இதைப்பழிதூற்ற வேணுமா' என்று சிலமஹான்கள் நினைப்பது முண்டென்றும் லௌகிகஸந்நிவேச முணர்த்தியவாறு. .... ....। (ச)

வில்லார்விழவில் வடமதுரை விரும்பிவிரும்பா மல்லடர்த்து *
கல்லார்திரடோள் கஞ்சனைக்காய்ந்தான் பாய்ந்தான் காளியன்மேல் *
சொல்லார் சுருதிமுறையோதிச் சோமுச்செய்யும் தொழிலினோர் *
நல்லார்மறையோர் பலர்வாழும் நறையூர் நின்றநம்பியே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| வில் ஆர் விழவில் | (கம்ஸன் நடத்தின) தநுர்யாகத்திலே | | (அதன்பிறகு) |
| வட மதுரை விரும்பி | வடமதுரைக் கெழுந்தருள ஆசைப்பட்டு (எழுந்தருளின வளவிலே) | கல் ஆர் திரள் தோள் கஞ்சனை காய்ந்தான் | மலைபோன்று திரண்ட தோள்களை யுடையனான கம்ஸனைச் சீறிக் கொன்றவனும் |
| விரும்பா | எதிரிகளான | | |
| மல் | மல்லர்களை | காளியன் மேல் | காளிய நாகத்தின் மீது |
| அடர்த்து | முடித்து | | |

§ 'அலர்தூற்ற' என்றது சிலேடை: அலர்—புஷ்பமும் பழியும்.

| | | | |
|---|---|---|---|
| பாய்ந்தான் | குதித்து அதனை வலியடக்கி னவனுமான பெருமான், | சோமு செய்யும் தொழிலி னோர் | ஸோமயாகம் முதலிய யாகங்கள் நடத்துவதைக் கருமமாகவுடையாராய் |
| சொல் ஆர் சுருதி | (குற்றமற்ற) சொற்கள் நிரம்பிய வேதங்களை | நல்லார் | விலக்ஷணரான |
| முறை ஓதி | முறைப்படியே அதிகரித்து | மறையோர் பலர் வாழும் | வைதிகர்கள் பலர் வாழுமிடமான |

நறையூர், நின்ற நம்பி—.

* * *—தன்னைக்கொல்லப் பிறந்த தேவகிபுத்திரன் திருவாய்ப்பாடியில் ஒளித்து வளர்கிறானென்பதை யறிந்தகம்ஸன் பல அசுரர்களை ஏவி அக்கண்ண பிரானை முடிக்கப்பார்த்தும் தன் கருத்து நிறைவேறக்காணாமையாலே எப்படி யாகிலும் அவனை நேரில் வரவழைத்து முடித்திடவேணுமென்று தீர்மானித்து, தான் ஒரு வில்விழா நடத்துவதாக வியாஜம்வைத்து அதற்காகக் கிருஷ்ண பலராமர்களை மதுரைக்கு வரவழைத்துத் தனது அரண்மனையினுட்புகும்போதே எதிரிட்டுக் கொல்லுமாறு சில மல்லர்களை நிறுத்திவைக்க, அந்தமல்லர்களை நொடிப்பொழுதில் முடித்திட்டு, பிறகு சிங்காசனத்தின் மீதிருந்த அக்கஞ்சனை யும் மயிரைப்பிடித்திழுத்துக் கீழேதள்ளி முடித்தவரலாறு உணர்க. காளியநாகத் தின் மேற்பாய்ந்தது வேறொரு ஸமயத்திலாகிலும் 'அதனையும் இங்குச் சேர்த் தருளிச் செய்தது—'பகவத்கதைகளை யநுஸந்திப்பதில் ஆழ்வார்கட்கு ஓர் அடைவு இல்லை, பக்திப்ரகர்ஷம் பேசுவிக்கிறபடியெல்லாம் பேசுவர்கள்' என் பதை விளக்கும்.

இப்படி துஷ்டநிக்ரஹம் பண்ணுகிற எம்பெருமான் வேதாத்யயந நிஷ்டர் களாயும் யஜ்ஞசீலர்களாயுமுள்ள அந்தணரை வாழ்விக்கும் பொருட்டுத் திரு நறையூரில் நிற்கிறானென்கிறது பின்னடிகளில்.

ச்ருதி—வடசொல். சோமு—ஸோமம் என்ற வடசொல்விகாரம். ஸோமயாகத் தைச் சொன்னபடி. .... .... .... .... (ரு)

வள்ளிகொழுநன் முதலாய மக்களோடு முக்கணன்
வெள்கியோட * விறல்வாணன் வியந்தோள்வனத்தைத் துணித்துகந்தான் *
பள்ளிகமலத் திடைப்பட்ட பகுவாயலவன் முகம்நோக்கி *
நள்ளியூடும் வயல்சூழ்ந்த நறையூர் நின்றநம்பியே. (சு)

| | | | |
|---|---|---|---|
| வள்ளி கொழுநன் முதலாய | வள்ளியம்மைக்கு நாதனான ஸுப்ரஹ்மண்யன் முதலான | விறல் வாணன் | பலிஷ்டனான பாணாஸுர னுடைய |
| மக்களோடு | புத்திரர்களோடு கூட | வியன் தோள் வனத்தை | பரம்பின தோள்களாகிற காட்டை |
| முக்கணன் | முக்கண்ணனான ருத்ரன் | துணித்து | அறுத்து |
| வெள்கி ஓட | வெட்கமடைந்து (எதிர் நிற்கமாட்டாமல் முதுகு காட்டி) ஓடிப்போக, | உகந்தான் | திருவுள்ளமுவந்த பெருமான்,— |

| | | | |
|---|---|---|---|
| கமலத்திடை | தாமரைப் பூவிலே | நள்ளி | பெண் நண்டானது |
| பள்ளி பட்ட | போய்ப் படுத்துக்கொண்டு திரும்பிவந்த | நோக்கி | பார்த்து |
| பகு வாய் அலவன் | பெரிய வாயையுடைய ஆண் நண்டின் | ஊடும் | பிரணய கலஹம் பண்ணப்பெற்ற |
| முகம் | முகத்தை | வயல் | வயல்களினால் |
| | | சூழ்ந்த | சூழப்பட்ட |
| | | | நறையூர், நின்ற நம்பி—. |

* * *—அநிருத்தாழ்வானைச் சிறைப்படுத்திவைத்த பாணாஸுரனைத் தோள் துணித்தும், அவனுக்குக் காவலாளராக இருந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலான பரிவாரங்களோடு கூடிய ருத்ரனை முதுகுகாட்டி யோடச்செய்தும் தன்னுடைய பரமபுருஷத்வத்தைப் பிரகாசிப்பித்துக்கொண்ட பெருமான் திருநறையூரிலுள்ளான்.

"பள்ளிகமலத்திடைப்பட்ட பகுவாயலவன்முகம் நோக்கி நள்ளியூடும் வயல்சூழ்ந்த" என்ற பின்னடிகட்குப் பட்டர் அருளிச்செய்யும் அர்த்தவிசேஷம் குறிக்கொள்ளத்தக்கது. தாமரைப்பூவில் படுத்துக்கொண்டிருந்த ஆண்நண்டின் முகத்தைப் பெண்நண்டு பார்த்து ஊடல் செய்யப்பெற்ற வயல்சூழ்ந்த நறையூர் என்று மூலத்திலுள்ளது. இதன் ஆழ்பொருளைப் பட்டர் அழகாக வுரைத்தருள்வராம்: எங்ஙனேயென்னில்;—ஒரு ஆம்பல்மலரிலே நண்டுதம்பதிகள் இனிது வாழ்கையில் கர்ப்பிணியான பேடைக்கு இனியவஸ்துக்களைக் கொணர்ந்து தரவேணுமென்று அலவனு [ஆண்நண்டு]க்கு ஆசையுண்டாயிற்று; பிறகு தாமரைப்பூவிலிருந்து நல்ல மகரந்தத்தைத் திரட்டிக் கொணர்ந்து கொடுப்போமென்று விரும்பி மெல்லமெல்ல நகர்ந்து தாமரைப்பூவிலே சென்று சேர்ந்தது; அவ்வளவிலே ஸூர்யன் அஸ்தமிக்கவே அத்தாமரைமலர் மூடிக்கொள்ள அதனுள்ளே அகப்பட்டது அது; தாமரையை மலர்த்திக்கொண்டு எப்படியாவது வெளிக்கிளம்பிவிட வேணுமென்று எவ்வளவோ முயற்சிகள் செய்துபார்த்தவளவிலும் ஸூர்யோதயமானாலல்லது தாமரை மலராதாயிற்று; உடம்பைக் கொண்டு புரண்டு இரவெல்லாம் அதிலேதங்கியிருந்து பொழுதுவிடிந்தவாறே மலர்ந்த அத்தாமரையில்நின்றும் வெளிப்பட்டு, தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத் தோற்றத் தன்மனைக்கு விரைந்துவந்து சேர்ந்தது; பகற்போதில் ஆம்பல்மலர் மூடிக்கொள்ளுமே; ஆண்நண்டு அங்குவந்து சேரும்ஸமயமும் பெண்நண்டுகிடக்கும் ஆம்பல்மலர் மூடிக்கொள்ளும் ஸமயமும் ஒன்றாயிருந்தது; இதனைப்பார்த்தால், ஆண் இரவில் வேறிடத்துத் தங்கிவந்தபடியாலும் உடம்பில் சுவடு இருந்தபடியாலும் பிரணயரோஷங்கொண்டு கதவையடைத்துக் கொண்டது என்னலாம்படி யிருந்ததாம்.—ஒருபுறத்தில் மலர்ந்ததாமரை மலர்களும் மற்றொருபுறத்தில் முகுளிதமான ஆம்பல்மலர்களும் விளங்கப்பெற்ற வயலாற் சூழப்பட்டது திருநறையூர் என்று வயல் நிலைமை சொன்னவாறு.

இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான பங்க்திகள் வருமாறு:—

“[பள்ளிகமலமித்யாதி.] பட்டாருளிச்செய்யக் குறிப்பாகக் கேட்டிருப்பதொரு பாட்டு § என்றருளிச் செய்வர்;—பகுவாயலவன் கமலத்திடைப் பள்ளிபட்டது; நள்ளியானது கர்ப்பதாரணத்தாலே வெகிழ்த்திருக்க, அதுக்கு இனியது இடவேணும் என்று மதுவுக்காகப் போந்த அலவனானது தாமரைப் பூவிலே வந்திழியக்கொள்ள, போது அஸ்தமிக்கையாலே உடம்பைக்கொண்டு அங்கே யிங்கே புரண்டு ராத்ரி அதிலேதங்கி அதில் தாதும் சுண்ணமும் உடம்பிலே நிறமிட்டுத்தோற்ற, போதுவிடிந்தவாறே வந்தது. இது போனபோதே தொடங்கிக் ‡ கதவைத்திறந்து வரவுபார்த்துக்கொடுநின்ற நள்ளியானது இத்தைக்கண்டு, ‘ராத்ரி தங்கினபடியாலும் உடம்பில் சுவடிருந்தபடியாலும் இது வெறுமனல்ல’ என்று முகம்மாறிக் கதவையடைத்து உள்ளேபோய்ப் புக்கது.—இத்தை பட்டர் அருளிச்செய்தவநந்தரம் பிள்ளை திருநறையூரரையர் ‘ஆராய்ந்து குற்றம் நிரம்பினால் பின்னையன்றோ தண்டிப்பது’ என்ன; ‘என் செய்வோம்? கேள்வியில்லாதபடி ¶ பெண்ணரசுநாடாய்த்தே!’ என்றருளிச் செய்தார்.” .... .... .... .... .... (கூ)

மிடையாவந்த வேல்மன்னர்வீய விசயன்தேர்கடவி *
குடையா வரையொன்றெடுத் தாயர்கோவாய் நின்றான்கூராழிப்
படையான் * வேதநான்கைந்துவேள்வி அங்கமாறிசையேழ் *
நடையாவல்ல வந்தணர்வாழ் நறையூர்நின்ற நம்பியே. (எ)

| | |
|---|---|
| மிடையாவந்த | நெருங்கி [கூட்டங்கூட்டமாக] (போர்க்களத்தில்) வந்து நின்ற |
| வேல் மன்னர் | வேற்படைக்கையரான அரசர்கள் |
| வீய | தொலையும்படி |
| விசயன் தேர் கடவி | அர்ஜுநனுடைய தேரை நடத்தினவனும் |
| ஒன்று வரை | கோவர்த்தனமென்கிற ஒரு மலையை |
| குடையா எடுத்து | குடையாகத் தூக்கிப் பிடித்து |
| ஆயர் கோ ஆய் நின்றான் | இடையர்களுக்கு ரக்ஷகனாய் நின்றவனும் |
| கூர் ஆழி படையான் | கூர்மை பொருந்திய திருவாழியை ஆயுதமாக வுடையனுமான எம்பெருமான்,— |
| வேதம் நான்கு | நான்கு வேதங்களையும் |
| ஐந்து வேள்வி | பஞ்ச மஹாயஜ்ஞங்களையும் |
| ஆறு அங்கம் | ஆறு வேதாங்கங்களையும் |
| ஏழ் இசை | ஸப்த ஸ்வரங்களையும் |
| நடை ஆ வல்ல | எப்போதும் போது போக்காகக்கொண்ட |
| அந்தணர் | பிராமணர்கள் |
| வாழ் | வாழுமிடமான |
| | நறையூர், நின்ற நம்பி—. |

§ நம்பிள்ளையருளிச்செய்வரென்றபடி.

‡ இராவெல்லாம் ஆம்பல்மலர் விகஸித்திருந்ததனால், கதவைத்திறந்து வரவுபார்த்துக் கொண்டு நின்றதாக ரஸோக்தி.

¶ திருநறையூர்க்கு ‘நாச்சியார்கோயில்’ என்று ப்ரஸித்தி இன்றைக்குமுண்டு. அவ்வூரில் எம்பெருமானுக்கு அப்ராதாந்யமும் பிராட்டிக்கு ப்ராதாந்யமும் ஏற்பட்டுள்ளது. திருவீதிப் புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே யெழுந்தருள்வதும் எம்பெருமான் பின்னே யெழுந்தருள்வதுமா யிருக்கும். ஆணரசுநாடாகில் கேட்பாருண்டு; பெண்ணரசுநாடாதலால் கேட்பாரில்லை என்று இதுவும் ஒரு ரஸோக்தி.

* * *—தமக்கு வேறு துணையில்லாமல் தாம் ஒரு தேரின்மேலிருந்து தமது தேர் குதிரை சாரதிகளுக்கு அழிவுவராமற் காத்துக்கொண்டு பலவாயிரம் தேர் வீரர்களோடு போர்செய்து ஜயிக்கும் வல்லமையுள்ளவரான அதிரதர்களும், கீழ்ச்சொன்னபடியே தாமிருந்து பதினோராயிரந் தேர்வீரரோடு பொருபவரான மஹாரதர்களுமாகிய பல மன்னர்கள் நெருங்கியிருந்த பாரதப்போரில் பாண்டவர்கட்கு வெற்றியுண்டாம்படியும் மண்ணின்பாரங்கள் மடியும்படியும் பார்த்தன் தேரிற் பாகனாயிருந்து நடத்தினவனும், கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்தேந்தி ஆநிரைகளைக் காத்தருளினவனும், திருவாழியாழ்வானைத் திவ்யாயுதமாகவுடையவனுமான எம்பெருமான் வைதிகப்ராஹ்மணர்கள் மலிந்த திருநறையூரிலுள்ளான்.

"குடையாவரையொன்றெடுத்து ஆயர்கோவாய் நின்றான்" என்றவுடனே "கூராழிப்படையான்" என்றருளிச்செய்ததில் ஒரு அர்த்தவிசேஷம் தோன்றும்; ஏழுநாள் விடாமழை பெய்வித்து நலிந்த இந்திரனைத் திருவாழிகொண்டு தலையறுத்தொழிக்கலாம்; ஆயினும் அது செய்திலன் எம்பெருமான்; 'அவனுடைய உணவைக் கொண்ட நாம் உயிரையும் கவரலாகாது; பசிக்கோபத்தாலே நலிகிறான்; நலியட்டும்; கைசலித்தவாறே தானே ஓய்கிறான்' என்று பொறுத்திருந்து தன் ரக்ஷ்யவர்க்கங்களைத் தான் நோக்கிக்கொண்டான் என்பதாக. (எ)

பந்தார்விரலாள் பாஞ்சாலி கூந்தல்முடிக்கப் பாரதத்து *
கந்தார்களிற்றுக் கழல்மன்னர் கலங்கச்சங்கம் வாய்வைத்தான் *
செந்தாமரைமே லயனோடு சிவனுமனைய பெருமையோர் *
நந்தாவண்கை மறையோர்வாழ் நறையூர்நின்ற நம்பியே. (அ)

| | |
|---|---|
| பந்து ஆர் விரலாள் | பந்து பிடித்து விளையாடும் விரலையுடையளான |
| பாஞ்சாலி | த்ரௌபதியானவள் |
| கூந்தல் முடிக்க | குழல் முடித்துக் கொள்வதற்காக, |
| பாரதத்து | பாரதப்போரில் |
| கந்து ஆர் களிறு | (மதஜலத்தின்) மணம் பொருந்திய யானைகளின் மேலேறியிருப்பவர்களும் |
| கழல் | வீரக்கழலை யணிந்தவருமான |
| மன்னர் | அரசர்கள் [துரியோதனாதியர்] |
| கலங்க | மதிகலங்குமாறு |
| சங்கம் | தனது ஸ்ரீபாஞ்சஜன்யத்தை |
| வாய் வைத்தான் | திருப்பவளத்தில் வைத்து ஊதின பெருமான்,— |
| செம் தாமரை மேல் அயனோடு சிவனும் அனைய | கமலாஸநனான பிரமனோடும் ருத்ரனோடும் ஒத்த |
| பெருமையோர் | பெருமைவாய்ந்தவர்களும் |
| நந்தா வண் கை | ஒருகாலும் குறைபடாத ஔதார்யத்தை யுடையவர்களுமான |
| மறையோர் | பிராமணர்கள் |
| வாழ் | வாழப்பெற்ற |
| | நறையூர், நின்ற நம்பி—. |

* * *—த்ரௌபதி விரித்தகூந்தலை முடிப்பதற்காகப் பாரதப்போர் நடத்தின பெருமான் திருநறையூரிலுள்ளானென்கிறார். "பந்தார்விரலாள்" என்னும்

அடைமொழி பொதுவாக மாதர்கட்குரியது. பந்துகொண்டுவிளையாடி விநோதமாகப் போதுபோக்கப் பிறந்தவளையன்றிப் பரிபவப்படுதற்குப் பிறந்தவளல்லள் பாஞ்சாலி; அப்படிப்பட்டவள் துச்சாஸநனாலே பெரியசபைநடுவே பரிபவப்பட நேர்ந்தபோது கூந்தலைவிரித்து 'இந்த சத்ருக்களைத் தொலையச் செய்தன்றி இக்கூந்தலை முடிப்பதில்லை' என்று பிரதிஜ்ஞைபண்ண, அந்த ப்ரதிஜ்ஞையைத் தலைக்கட்டுதற்காகக் கண்ணபிரான் பாரதப்போரில் வியாபரித்தானாயிற்று.

ஸ்ரீவசநபூஷணத்தில்—"பாண்டவர்களையும் நிரஸிக்க ப்ராப்தமாயிருக்க, வைத்தது—த்ரௌபதியுடைய மங்களஸூத்ரத்துக்காக. அர்ஜுநனுக்கு தூத்ய ஸாரத்யங்கள் பண்ணிற்றும் ப்ரபத்த்யுபதேசம் பண்ணிற்றும் இவளுக்காக." என்றருளிச்செய்துள்ள ஸூத்ரங்கள் இங்கே அறியத்தக்கன. (த்ரௌபதியைத் துரியோதநாதிகள் மஹாஸபையில் துகிலுரிந்து அவமானப்படுத்தியதைப் பாண்டவர்கள் கண்டிருக்கச் செய்தேயும் சூதிலே தோற்றமையை நினைத்துப் பொறுத்திருந்தாலும் "சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயாச்யுத !-கோவிந்த ! புண்டரீகாக்ஷ ! ரக்ஷமாம் சரணாகதாம்" என்று அவள் கண்ணபிரானைச் சரணமடைந்தபின்பு பரிபவிக்கிறவளவில் 'எம்பெருமானடியார்களைப் பிறர் பரிபவப்படுத்தக்கண்டால் சக்தியுள்ளவனாகில் விலக்கவேணும்; சக்தியற்றவனாகில் வருத்தத்துடனே கண்மறையப் போகவேணும்' என்கிற விசேஷசாஸ்த்ரமர்யாதையை நோக்கியாவது, (அல்லது) தங்களிடத்தில் ஸ்ரீக்ருஷ்ணனுக்குள்ள ஸ்நேஹபக்ஷபாதங்களை நினைத்து 'அவனைச் சரணமடைந்தவள் பரிபவப் படுவதை நாம் பார்த்திருந்தால் நாளைக்கு அவன்முகத்தில் எப்படி விழிப்பது' என்று அஞ்சியாவது விரைந்தெழுந்து விலக்கவேண்டியிருக்க அது செய்யாமல் ஆடாது அசங்காது உட்கார்ந்திருந்தனர்: ஆகவே, பரிபவப்படுத்தின துர்யோதநாதிகளைப்போலே பரிபவங்கண்டிருந்த இப்பாண்டவர்களையும் தலையறுத்துப் போடவேண்டியிருக்க, அவர்களைமாத்திரம் உயிரோடே வாழும்படி வைத்தது த்ரௌபதிக்கு அபிமதமான திருமங்கலியம் போகாமைக்காக. அவளுடைய விரித்ததலையைக் காணமாட்டாத கண்ணன் வெறுங்கழுத்தை எப்படி காண்பன்? [இத்தால் அடியார்களைப் பரிபவிக்கின்றவர்களைப்போலவே அப்பரிபவத்தைப் பார்த்துக்கொண்டிருப்பவர்களும் தண்டிக்கத்தக்கவர் என்பதும், அப்படி தண்டனைக்கு உரியவர் தாமே அடியார்களோடு விடவொண்ணாத ஒரு ஸம்பந்தமுடையவர்களாகில் அவர்களும் அவ்வடியவர்களுக்காக எம்பெருமானாலே ரக்ஷிக்கப்படுவர் என்பதும் விளங்கும்.] இப்படி தலையறுத்துப் போடவேண்டும்படியான குற்றவாளிகளுள் ஒருவனான அர்ஜுநனுக்குக் கண்ணபிரான் இழிதொழில் செய்ததும் பரமரஹஸ்யத்தை உபதேசித்ததுமெல்லாம் இந்த த்ரௌபதிக்காகவேயாம். தூதுபோனது யுத்தத்தை விளைப்பதற்காக. ஸாரதியாய் நின்றது 'ஆயுதமெடுக்கக்கூடாது' என்ற எதிரிகளின் வேண்டுகோளுக்கு உடன்பட்டபடியால் தேர்க்காலாலே அவ்வெதிரிகளை அழிப்பதற்காக. ப்ரபத்தியை உபதேசித்தது—'யுத்தம்பண்ணமாட்டேன்' என்றிருந்தவனை 'உன் சொற்படி செய்கிறேன்' என இசைவித்து யுத்தத்திலே முயல்விப்பதற்காக. ஆக இவை

யெல்லாம் செய்தது சரணாகதையான இவளுடைய ஸங்கல்பத்தின்படியே துர்யோதநாதிகளை யொழித்து இவள் கூந்தலை முடியச்செய்வதற்காகவே யென்ற தாயிற்று.)

**கந்தார்களிற்றுக் கழல்மன்னர் கலங்க**—'஗ஂஸஃ' என்னும் வடசொல் 'கந்து' என்று கிடக்கிறது. மதஜலத்தின் நாற்றம் பொருந்திய மத்தகஜங்களின்மேல் ஏறிவீற்றிருப்பவரும் வீரக்கழல்களை யணிந்துள்ளவர்களுமான அரசர்கள் குடல் குழம்பும்படி பாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே வைத்து ஊதினனென்க. "ஸ வொஷொ யாதஂராஷ்ராணாம் ஹூஃயாநி வ்யுதாரயக்‌—ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" என்ற பகவத்கீதை காண்க. கந்து என்று கட்டுத்தறிக்கும் பெயராதலால், கட்டுத்தறியையும் முறித்துக் கொண்டு திரிகிற மத்தகஜமென்னவுமாம்.

திருநறையூரிலுள்ள அந்தணர்கள் பிரமருத்ரர்களைப்போலே ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள் செய்யவும் வல்லர் என்பது மூன்றாமடியின் கருத்து. "துஷாஸ்ரு தாநாம் ஜமஉ஖ஊவஷ்திவுஹணாஸஸம்ஹாரவிசொவநாடியஃ। ஹவந்தி ஸ்ரீராஃ" என்ற ஆளவந்தார் ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்தியும், அதற்கு நம்முடைய விவரணங் களும் காண்க. .... .... .... .... .... (அ)

ஆறும்பிறையுமரவமும் அடம்பும் சடைமேலணிந்து * உடலம்
நீறும்பூசி யேறூருமிறையோன் சென்று குறையிரப்ப *
மாறேன்றில்லா வாசநீர் வரைமார்பகலத் தளித்துகந்தான் *
நாறும்பொழில்சூழ்ந் தழகாய நறையூர்நின்ற நம்பியே. (கூ)

| | |
|---|---|
| ஆறும் | (கங்கையாகிற) நதியையும் |
| பிறையும் | சந்திரகலையையும் |
| அரவமும் | ஸர்ப்பங்களையும் |
| அடம்பும் | அடப்பம் பூவையும் |
| சடை மேல் அணிந்து | ஜடையின்மீது தரித்துக்கொண்டு |
| உடலம் | உடம்பிலே |
| நீறும் பூசி | சாம்பல் பூசிக்கொண்டு |
| ஏறு ஊரும் | ரிஷபத்தின் மேலேறி நடத்துகின்ற |
| இறையோன் | சிவபிரான் |
| சென்று | வந்துகிட்டி |
| குறை இரப்ப | தனது பிரமஹத்யா சாபம் விடுபடுமாறு பிரார்த்திக்க, |
| வரை மார்பு அகலத்து | மலைபோன்ற திரு மார்பிடத்தில் நின்றும் |
| மாறு ஒன்று இல்லா வாசம் நீர் | ஒப்பற்ற பரிமளம் மிக்க (வியர்வை) நீரை |
| அளித்து | எடுத்துக் கொடுத்து |
| உகந்தான் | திருவுள்ளமுவந்தபெருமான் |
| நாறும் பொழில் சூழ்ந்து அழகு ஆய | நறுமணம்மிக்கசோலைகளால் சூழப்பட்ட அழகிய |

நறையூர், நின்ற நம்பி—.

* * *—ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கிறதென்று

கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும் அவன் இதற்கு என்ன செய்வதென்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந்தொலையப் பிச்சையெடுக்க வேண்டும்: என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பலதலங்களிலுஞ்சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித்திரிந்தும் அக்கபாலம் நிறையாமல் நீங்காதாக, பின்பொருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கெழுந்தருளியுள்ள நாராயண மூர்த்தியை வணங்கிப்பிரார்த்தித்தபோது, அப்பெருமான் தனது திருமார்வைக்கீறி நீரையெடுத்து 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டகன்றது என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது. 1. "என் எந்தாய்! சாபந்தீரென்ன இலங்கமுதநீர் திருமார்பில் தந்தான்" என்றும் 2. "ஈனமர்சாபம் நீக்காயென்ன வொண்புனலையீந்தான்" என்றும் இவ்வாழ்வார் அருளிச்செய்தலாலும், 3. "கூறுதிங்கள் வைத்தவன் கைவைத்த வன்கபால் மிசை, ஊறு செங்குருதியால் நிறைத்த" என்று திருமழிசைப்பிரான் அருளிச்செய்தலாலும் திருமார்பில் நீரையெடுத்துப் பிச்சையிட்டுச் சாபந்தீர்த்தனனென்பதும் திருமார்பைக் கீறி ரத்தத்தையெடுத்துப் பிச்சையிட்டனனென்பதும் உண்டென்க. .... .... .... ... .... (கூ)

நன்மையுடைய மறையோர்வாழ் நறையூர்நின்ற நம்பியை *
கன்னிமதிள்சூழ் வயல்மங்கைக் கலியனொலிசெய் தமிழ்மாலை *
பன்னியுலகில் பாடுவோர் பாடுசாரா பழவினைகள் *
மன்னியுலகமாண்டுபோய் வானோர்வணங்க வாழ்வாரே. (கo)

| | |
|---|---|
| நன்மை உடைய மறையோர் வாழ் | விலக்ஷணரான வைதிக ப்ராஹ்மணர்கள் வாழப்பெற்ற |
| நறையூர் | திருநறையூரிலே |
| நின்ற | நித்யவாஸஞ்செய்தருளுகின்ற |
| நம்பியை | எம்பெருமான் விஷயமாக, |
| கன்னி மதிள் | அழிவில்லாத மதிள்களாலும் |
| வயல் | கழனிகளாலும் |
| சூழ் | சூழப்பட்ட |
| மங்கை | திருமங்கைக்குத் தலைவரான |
| கலியன் | ஆழ்வார் |
| ஒலி செய் | அருளிச்செய்த |
| தமிழ் மாலை | தமிழ்த்தொடையான இத்திருமொழியை |

| | |
|---|---|
| உலகில் | இவ்விபூதியிலே |
| பன்னி | ஆராய்ந்து |
| பாடுவோர்பாடு | பாடுமவர்களிடத்தில் |
| பழவினைகள் | முன்னைத் தீவினைகள் |
| சாரா | அணுகமாட்டா; |
| | (அன்றியும், அவர்கள்) |
| மன்னி | நெடுநாள் வாழ்ந்திருந்து |
| உலகம் | இவ்வுலகை |
| ஆண்டு | அரசாட்சிபுரிந்து |
| போய் | (பின்பு, பரமபதத்திலே) சென்று |
| வானோர் | அங்குள்ள நித்யமுக்தர்கள் |
| வணங்க | ஆதரிக்கும்படி |
| வாழ்வார் | வாழப்பெறுவர். |

1. பெரிய திருமொழி 1—5—8. 2. ஷை 5—9—4.
3. திருச்சந்த விருத்தம் 42.

* * *—வேறொரு பிரயோஜனத்தையும் விரும்பாமல் எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடுவதையேதொழிலாகக் கொண்டிருக்கையாகிற நன்மைபொருந்திய மறையவர்கள் வாழ்கிற திருநறையூரில் நித்யவாஸம் செய்தருளுமெம்பிரான் விஷயமாகக் கலியனருளிச்செய்த இத்திருமொழியை ஆராய்ந்து கற்பார் எவரோ, அவர்களருகிலும் பாவங்கள் அணுகமாட்டா; அவர்கள் இவ்விபூதியிலே நெடுநாள் வாழ்ந்து இஹலோக போகங்களையெல்லாம் புஜித்து, பின்னைப் பரம பதத்தேபோய் நித்யஸூரிகள் ஆதரிக்க நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள் என்று இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

அடிவரவு:—ஆளும் முனி தெள்ளார் ஒளியா வில்வள்ளி மிடையா பந்த ஆறும் நன்மை மான்.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—எட்டாந்திருமொழி,

# மான்கொண்டதோல்.

[இதுவும் திருநறையூர் மங்களாசாஸனத் திருப்பதிகம்.]

மான்கொண்டதோல்மார்வின் மாணியாய் * மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்த பெருமானை *
தேன்கொண்ட சாரல் திருவேங்கடத்தானை *
நான்சென்று நாடி நறையூரில் கண்டேனே. (க)

| | |
|---|---|
| மான் கொண்ட தோல் | கிருஷ்ணாஜினத்தை |
| மார்வில் | மார்பிலே தரித்த |
| மாணி ஆய் | பிரமசாரியாகி |
| மாவலி | மஹாபலி பக்கலில் |
| மண் | பூமியை |
| தான் கொண்டு | தான் யாசித்துப்பெற்று |
| தாளால் அளந்த | திருவடிகளாலே ஆக்ரமித்துக்கொண்ட |
| பெருமானை | பெருமை பொருந்தியவனும் |
| தேன் கொண்ட சாரல் | தேனையுடைத்தான தாழ்வரைகளையுடைய |
| திரு வேங்கடத்தானை | திருமலையிலெழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமானை |
| நான் | அடியேன் |
| நாடி சென்று | தேடிக்கொண்டு போய் |
| நறையூரில் | திருநறையூரில் |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன், |

* * *—க்ருஷ்ணாஜிநமணிதல் முதலிய ப்ராஹ்மசாரி லக்ஷணங்களையுடையனாய்க்கொண்டு மஹாபலியின் யஜ்ஞபூமியிற்புகுந்து மூவடிமண் இரந்துபெற்று மூவுலகங்களையும் அளந்துகொண்ட பெருமான் அப்போது இழந்தவர்களும் அடிபணிந்து உய்யும் வண்ணம் திருவேங்கடமலையில் வந்துநின்று, அவ்வளவு தூரம்வந்து பணியமாட்டாதவர்களுக்கும் எளியனாய்க்கொண்டு திருநறையூரிலே வந்து ஸேவைஸாதிக்கக் காணப்பெற்றேனென்றாராயிற்று.

எம்பெருமானுடைய எந்த அவதாரத்திலும் திருமார்பிலே நாச்சியார் திகழ்வளாதலால் அவளைப், பிரகாசப்படுத்திக்கொண்டு யாசிக்கச் சென்றால் 'ஸாக்ஷாத் லக்ஷ்மீபதி வந்துவிட்டான்' என்று தெரிந்துகொண்டு மாவலி தானங் கொடுக்கமாட்டானென்று க்ருஷ்ணாஜிநத்தாலே திருமார்பு நாச்சியாரை மறைத்து எழுந்தருளினனென்ப. ப்ராஹ்மசர்யாச்ரமத்திற்கு இது ஒரு அணிகலனாயிருப்பது முணர்க. "அன்று ஞாலமளந்தபிரான் பரன் சென்றுசேர் திருவேங்கட மாமலை" என்று நம்மாழ்வா ரருளிச்செய்ததை அடியொற்றித் "தாளாலளந்த பெருமானைத் திருவேங்கடத்தானை" என்றார். உலகளக்கிற வியாஜத்தாலே எல்லாரையும் அடிப்படுத்திக்கொண்ட காலத்தில் இழந்தவர்களும் பேறுபெற்று உய்யுமாறு திருமலையில் நித்யஸந்நிதி பண்ணியிருக்குமவனென்கை.

நான் சென்று நாடி = எம்பெருமான் என்னைப் பெறுதற்குப் பல அவதாரங்களெடுத்துத் தேடித்திரிந்தான் ; அக்காலங்களிலே நான் விமுகனாயிருந்திட்டேன்; இன்று நான் அவனைத் தேடித்திரிய வேண்டிற்று ; அறுகாதப் பயணம்போய்த் திருமலையுச்சியிலே காணவேண்டாமல், விடாய்த்த விடத்திலே தண்ணீர் குடிக்கப் பெறுமாபோலே திருநறையூரிலே காணப்பெற்றேன். .... (௧)

முந்நீரை முன்னாள் கடைந்தானை * மூழ்த்தநாள்
அந்நீரை மீனாய் அமைத்த பெருமானை *
தென்னாலி மேய திருமாலையெம்மானை *
நன்னீர் வயல்சூழ் நறையூரில் கண்டேனே. (௨)

| | | | |
|---|---|---|---|
| முன் நாள் | முன்பொருகாலத்தில் | பெருமானை | பெருமை பொருந்தியவனும் |
| முந்நீரை | ஸமுத்ரத்தை | தென் ஆலி | அழகிய திருவாலிமா நகரில் |
| கடைந்தானை | கடைந்தவனும் | மேய | நித்யவாஸம் பண்ணுகின்ற |
| மூழ்த்த நாள் | (உலகத்தைப்) பிரளயங் கொண்ட காலத்தில் | திருமாலை | திருமகள் நாதனுமான |
| மீன் ஆய் | மத்ஸ்யரூபியாகி | எம்மானை | எம்பெருமானை |
| அந்நீரை | அந்தப் பிரளயக் கடல் நீரை | நல் நீர் வயல் சூழ் | நல்ல நீர்பாயும் கழனிகளாற் சூழப்பட்ட |
| அமைத்த | அடக்கின | | நறையூரில், கண்டேன்—. |

* * *—முன்பு கடலைக்கடைந்து அமுதமெடுத்தளித்து அமரர்களை வாழ்வித்தவனும், பிரளயார்ணவம் பெருகிப் பரந்தபோது மத்ஸ்யாவதாரஞ் செய்தருளிக் காத்தவனுமான எம்பெருமான் திருவாலியிலே காட்சி தந்தருளினன்

பண்டு; அவன்றானே இன்று திருநறையூரில் ஸேவைஸாதித்தருளுகிறு னென்கிறார்.

முந்நீர்=ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுவகை நீரையுடையது எனப் பண்புத்தொகை யன்மொழியாகிய காரணப் பெயரென்பது பழைய கொள்கை. இதனை மறுத்துக் கூறுகின்றார் அடியார்க்கு நல்லார்; ஆற்றுநீரென்பது மழை நீரேயாகையாலும், இவ்விரண்டுமில்லாதபோது ஊற்றுநீருமில்லையாகையாலும் இவற்றை முந்நீரென்பது பொருந்தாதென்று சொல்லி வேறுபொருள் கூறுகிறார்;—அதாவது—முச்செய்கையையுடைய நீர் முந்நீரென்பதாம். முச்செய்கையாவது-மண்ணைப் படைத்தலும் மண்ணையழித்தலும் மண்ணைக்காத்தலுமாம். நீரினின்று நிலம்பிறந்ததென வேதமோதுதலால் படைத்தலும், நீரின்றி உலகம் பிழையாதாதலால் காத்தலும், இறுதியில் நீரினால் மூடப்பட்டு உலகம் அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களும் கடவுக்கு உரியனவாம். நச்சினார்க்கினியர் கருத்தும் இதுவே நம் பூருவாசாரியர்கள் மூன்று வகை நீரையுடைய தென்னும் பொருளையே ஆதரிப்பர். முன்னீர் என றன்னகர மாகப் பாடமோதி, பழையநீர் என்றுரைப்பாருமுண்டு; ஆதியிற்கடவுள் நீரையே படைத்தாரென்று நூல்கள் கூறும். .... .... .... (உ)

தூவாய புள்ளூர்ந்து வந்து துறைவேழம் *
மூவாமை நல்கி முதலை துணித்தானை *
தேவாதி தேவனைச் செங்கமலக் கண்ணனை *
நாவா யுளானை நறையூரில் கண்டேனே. (௩)

| | |
|---|---|
| தூ வாய | பரிசுத்தமான வாயை யுடைய |
| புள் | பெரிய திருவடியை |
| ஊர்ந்து | வாஹனமாகக்கொண்டு |
| துறை | மடுவின் கரையிலே |
| வந்து | வந்து சேர்ந்து |
| வேழம் மூவாமை | ஸ்ரீ கஜேந்திராழ்வான் துன்பமடையாதபடி |
| நல்கி | அருள்புரிந்து |
| முதலை துணித்தானை | முதலையை இரு துண்டமாக்கி யொழித்தவனும் |
| தேவாதி தேவனை | நித்ய ஸூரிகளுக்குத் தலைவனும் |
| செம் கமலம் கண்ணனை | செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை யுடையனும் |
| நாவாய் உளானை | திருநாவாயென்னும் திருப்பதியிலிருப்பவனுமான எம்பெருமானை |
| | நறையூரில், கண்டேன்—. |

* * *—திருவடிகளில் ஸமர்ப்பிக்கத் தாமரைப்பூத்தேடிப் பொய்கையிலிழிந்து முதலைவாயிலகப்பட்டு 'ஆதிமூலமே!' என்று கதறின கஜேந்திராழ்வானுடைய இடரைத்தீர்ப்பதற்காகப் பெரியதிருவடியின் மீதேறி அப்பொய்கைக் கரைக்கெழுந்தருளித் திருவாழியினால் முதலையைத் துணித்தொழித்து அதனால் தானே தேவாதிதேவனென்று விளங்கப் பெற்றவனும் செந்தாமரைக் கண்ணனுமான பெருமான் பரமபதத்தைவிட்டுத் திருநாவாயிலே வந்து குடிகொண்டிருந்தான்; அவ்விடந்தானும் பரமபதம்போலே தூரஸ்தமாயிருக்கையாலே அணித்

தாகத் திருநறையூரிலேவந்து ஸேவைஸாதித்தருளா நின்றான்; காணப்பெற்றே னென்கிறார்.

[தூவாய புள்] 'தூ வாய' என்றும், 'தூ ஆய' என்றும் பிரிக்கலாம். தூ ஆய—வேதஸ்வரூபியாகையாலே ஸ்வத: பரிசுத்தனான என்றபடி. .... (௩.)

ஓடா வரியாய் இரணியனை யூனிடந்த *
சேடார் பொழில்சூழ் திருநீர்மலையானை *
வாடா மலர்த்துழாய் மாலை முடியானை *
நாடோறும் நாடி நறையூரில் கண்டேனே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஓடா அரி ஆய் | நாட்டில் நடையாடாத [விலக்ஷணமான] நரஸிம்ஹரூபியாகி | வாடா மலர் | செவ்வி குன்றாத மலர்களை யுடைய |
| இரணியன் | ஹிரண்யாஸுரனுடைய | துழாய் மாலை | திருத்துழாய் மாலையை |
| ஊனை | உடலை | முடியானை | திருமுடியி லணிந்துள்ளவனு மான எம்பெருமானை |
| இடந்த | கிழித்தொழித்தவனும் | நாள் தோறும் நாடி | நித்தியமும் தேடித் திரிந்து |
| சேடு ஆர் பொழில் சூழ் | இளமைபொருந்திய சோலைகளாலே சூழப்பட்ட | | நறையூரில், கண்டேன்—. |
| திருநீர்மலையானை | திருநீர்மலையிலே ஸந்நிதி பண்ணி யிருப்பவனும் | | |

* * *—பரமபக்தனான ப்ரஹ்லாதனுக்கு நேர்ந்த நலிவுகளைப் பொறுத்திருக்கமாட்டாதே நரஸிம்ஹரூபியாய்த் தூணில்தோன்றி இரணியனுடலைப் பிளந்து அந்தவிடாய்தீரத் திருநீர்மலையிலே ஸந்நிதிபண்ணியிருப்பவனாய், ஜகத்ரக்ஷணத்துக்கு முடிகவித்து மாலையிட்டுக் கொண்டிருப்பவனான எம்பெருமானை நாடோறும் தேடித்திரிந்து இன்று திருநறையூரில் காணப்பெற்றேன்.

ஓடா அரி=போரில் பின்வாங்காத ஸிம்ஹம் என்றும், நாட்டில் நடையாடாதே அபூர்வமாகத் தோன்றின ஸிம்ஹம் என்று முரைப்ப. .... (௪)

கல்லார் மதிள்சூழ் கடியிலங்கைக் காரரக்கன் *
வல்லாகம் கீள வரிவெஞ்சரந்துரந்த
வில்லானை * செல்வ விபீடணற்கு வேறாக
நல்லானை * நாடி நறையூரில் கண்டேனே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கல் ஆர் மதிள் சூழ் | கற்களால் கட்டப்பட்ட மதிள்களால் சூழப்பட்ட | வல் ஆகம் கீள | மிடுக்குடைய சரீரம் தொலையும்படி |
| கடி | அரணுடைத்தான | வரி | அழகிய |
| இலங்கை | லங்காபுரியிலுள்ள | வெம் | வெவ்விய |
| கார் | நீசனான | சரம் | அம்புகளை |
| அரக்கன் | ராக்ஷஸராஜனுடைய | துரந்த | பிரயோகித்த |

| | | | |
|---|---|---|---|
| வில்லானை | சார்ங்கத்தை யுடையவனும் | வேறு ஆக | விலக்ஷணமாக |
| செல்வம் | ஸ்ரீமானுன | நல்லானை | { அன்பனுமான எம்பெருமானை |
| விபீடணற்கு | விபீஷணுழ்வானுக்கு | | நாடி, நறையூரில் கண்டேன்—. |

* * *—அஸத்துக்களைத் தண்டித்து ஸத்துக்களைக் கைக்கொள்ளுமியல் வினன் என்பது பிரஸித்தமாகும்படி லங்காதிபதியான ராவணனைக் கொன்றொழித்து ஸ்ரீவிபீஷணுழ்வானைப் பரிக்ரஹித்தருளின பெருமானைத் திருநறையூரில் காணப்பெற்றேனென்கிறுர்.

செல்வவிபீடணற்கு=இலங்கைச் செல்வம்முழுவதையும் உதறிவிட்டு வந்து சேர்ந்த விபீஷணனைச் செல்வவிபீடணனென்றது அழியாச் செல்வமாகிய பகவத்பக்தியுடைமைபற்றி யென்க. வால்மீகிமுனிவனும், 'இலங்கைச் செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலேவந்து நின்ற இவ்விபீஷணுழ்வானைப்பற்றிப் பேசும்போது "அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந்-அந்தரிக்ஷகதஃ ஸ்ரீமாந்" என்றுர்; அப்போது விபீஷணனிடத்து இருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். இளையபெருமாள் விஷயத்திலும் கஜேந்திராழ்வான் விஷயத்திலும் இங்ஙனமே சொல்லப்பட்டதுண்டு; அயோத்திச் செல்வமனைத்தையும் துறந்து இராமபிரான் பின்னே காட்டுக்குப்புறப்பட்ட இளையபெருமாள் "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நஃ—லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நஃ" எனப்பட்டார்; அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது கைங்கரியருசியாகிற லக்ஷ்மியேயாம். முதலையின் வாயிலகப்பட்டுத் துடியாநின்ற கஜேந்திராழ்வான் "ஸ து நாகவரஃ ஸ்ரீமாந்-ஸ து நாகவரஃ ஸ்ரீமாந்" என்னப்பட்டான்; அப்போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது-'பறித்த பூ செவ்விகுலைவதற்கு முன்னே எம்பெருமான் திருவடியில் ஸமர்ப்பிக்கப் பெறவேணுமே' என்றிருந்த அபிநிவேசமாகிற செல்வமேயிறே.

[விபீடணற்கு வேறாக நல்லானை.] விபீஷணன் வந்துசேர்ந்தபோது அங்குள்ள வாநரமுதலிகள் 'சத்ருபக்ஷத்தில் நின்றும் வருகின்ற இவனைச்சேர்த்துக் கொள்ளலாகாது; சேர்த்துக்கொண்டால் மஹத்தான கெடுதிவிளையும்' என்று சொல்லித் தகைய, 'அவனைக் கைக்கொண்டே தீர்வேன்; ஒருகாலும் கைவிடமாட்டேன்' என்று பெருமாள் அருளிச்செய்ய, 'அப்படியாகில் அடியோங்கள் கிஷ்கிந்தைக்கு மீளுகிறோம்' என்று வாநரமுதலிகள் சொல்ல, 'நீங்கள் இஷ்டப்படி செய்யலாம்; விபீஷணனைக் கைக்கொள்வதை மாத்திரம் ஒருபடியாலும் தவிரமாட்டேன்' என்று சிக்கன அருளிச்செய்து விபீஷணுழ்வானிடத்தில் விசேஷகடாக்ஷம் பண்ணினமை அறியத்தக்கது .... .... (ரு)

உம்ப ருலகோடு உயிரெல்லாமுந்தியில் *
வம்பு மலர்மேல் படைத்தானை மாயோனை *
அம்பன்ன கண்ணுள் அசோதைதன் சிங்கத்தை *
நம்பனை நாடி நறையூரில் கண்டேனே. (சு)

| | |
|---|---|
| உம்பர் உலகோடு | தேவலோகத்தோடு கூட |
| உயிர் எல்லாம் | (மற்றுமுள்ள மநுஷ்யாதி) ப்ராணிகளையும் |
| உந்தியில் | (தனது) திருநாபியிலுள்ள |
| வம்பு மலர் மேல் | பரிமளம்மிக்க தாமரைப் பூவிலே |
| படைத்தானை | ஸ்ருஷ்டித்தவனும் |
| மாயோனை | ஆச்சரியமான குண சேஷ்டிதங்களை யுடையவனும |
| அம்பு அன்ன கண்ணாள் | அம்புபோன்ற கண்களை யுடையவளான |
| அசோதை தன் | யசோதைப்பிராட்டியின் |
| சிங்கத்தை | சிங்கக்குட்டி போன்ற பிள்ளையும் |
| நம்பனை | ஆச்ரிதர்களுக்கு நம்பத் தகுந்தவனுமான எம்பெருமானை |

நாடி, நறையூரில் கண்டேன்—.

* * *—ப்ராஹ்மாதிகளின் குடியிருப்போடே கூட மற்றுமுள்ள மநுஷ்யாதிகளையுமெல்லாம் தன் திருநாபியிலே செவ்விப் பூவின்மேலே தனது ஸங்கல்பத்தாலே யுண்டாக்கியருள்பவனும், இப்படி ஸங்கல்பத்தாலே ஸர்வத்தையும் படைக்கவல்லவனு யிருக்கச்செய்தேயும் தான் மெய்யேவந்து பிறந்தவனை பெருமானைத் திருநறையூரில் காணப்பெற்றேன். .... .... (கூ)

கட்டேறு நீள்சோலைக் காண்டவத்தைத் தீமூட்டி
விட்டானை * மெய்யமமர்ந்த பெருமானை *
மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் * வண்துவரை
நட்டானை நாடி நறையூரில் கண்டேனே. (எ)

| | |
|---|---|
| கட்டு ஏறு | காவல்மிக்கிருப்பதும் |
| நீள் சோலை | நீண்ட சோலைகளை யுடையதுமான |
| காண்டவத்தை | காண்டவமென்னும் வனத்தை |
| தீ மூட்டி விட்டானை | அக்நிக்கு இரையாக்கினவனும் |
| மெய்யம் அமர்ந்த பெருமானை | திருமெய்யத்தில் நித்யவாஸம் பண்ணுகிற ஸ்வாமியும் |
| மட்டு ஏறு கற்பகத்தை | தேன் மிகுந்த கல்பவிருக்ஷத்தை |
| மாதர்க்கு ஆய் | (ஸத்யபாமைப்) பிராட்டிக்காக |
| வண் துவரை | அழகிய த்வாரகாபுரியில் |
| நட்டானை | (கொணர்ந்து) ஸ்தாபித்தவனுமான எம்பெருமானை |

நாடி, நறையூரில் கண்டேன்—.

* * *—காண்டவவனமென்பது தேவேந்திரனுக்கு உரியதாய்ப் பூலோகத்திலிருந்ததொரு காடு. ஒருநாள் அக்நிபகவான் ஒரு அந்தண வேடம்பூண்டு அர்ஜுநனும் கண்ணபிரானும் கூடியிருக்குமிடத்திலே வந்துசேர, அவ்வந்தணனைக் க்ருஷ்ணார்ஜுநர்கள் நன்கு உபசரிக்க, அவன் உணவுவேண்ட, 'வேண்டிய உணவையளிப்போம்' என்று அவ்விருவரும் உறுதிமொழிகூற, உடனே அவ்வந்தணன் தான் இன்னனென்று உண்மைதெரிவித்துக் காண்டவவனத்தைத் தனக்கு இரையாக அளிக்குமாறு வேண்ட, அவர்களும் 'பல கொடிய அசுரர்களும் அரக்கர்களும் துஷ்டமிருகங்களும் நிரம்பியிருக்கு மிந்தக்காடு அழிந்

தொழிவது நன்றே' என்று நிச்சயித்து அக்நிபகவானை நோக்கி 'அங்ஙனமே உண்பாயாக' என்று அநுமதி தந்ததின்பேரில் அக்நி அக்காடு முழுவதையும் ஆக்கிரமித்துப் பூர்ணத்ருப்தியாக உண்டனன் என்ற கதை மஹாபாரதத்தில் ஆதிபருவத்தில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. * மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனான கண்ணபிரான் தனது அன்பனான இந்திரன் வருந்தும்படி அவனது காட்டையழிக்க அநுமதித்தது அவதார ப்ரயோஜனம் நிறைவேறுதற்காகவென்க; அக்காட்டிலுள்ள அளவற்ற துஷ்டஜந்து ஸமூஹங்களைத் தொலைத்தொழிக்கும் முகத்தால் பூமியின் பாரத்தைக் குறைத்தருளினனென்றுணர்க. இவ்வனத்தின் தன்மையைப்பற்றி வில்லிபுத்தூரார் பாரதத்தில் காண்டவதகனச்சருக்கத்தில்—"மிடைந்த நால்வகை மகிருகங்களு நெடுவெற் பினங்களுந்துன்றி, அடைந்த தானவரரக்கர் பேருரகருக்காலயங்களுமாகிக், குடைந்துசோரி கொள்வாளுகிரரி முதற்கொடு விலங்கினமிக்குக், கடைந்த கூரெயிற்றுல தக்கனும் வாழ் கானனமதுகண்டீர்" என்றுள்ள செய்யுள் இங்குக் குறிக்கொள்ளத்தக்கது.

[மட்டேறு கற்பகத்தை இத்யாதி.] தேவர்களைக் குடியிருக்கவொட்டாமல் அலைக்கழித்த நரகாசுரனைத் தேவேந்திரனது வேண்டுகோளின்படி ஸ்ரீகிருஷ்ணன் ஸத்யபாமையோடு சென்று கொன்று, அவ்வசுரன் வலியக்கவர்ந்து சென்றிருந்த அத்தேவேந்திரனது தாயான அதிதிதேவியின் காதணியைக்கொண்டு வந்து கொடுப்பதற்காக அந்த ஸத்யபாமையுடனே ஸ்வர்க்கலோகத்துக்குப் போயினன்; அங்கு இவர்களை வரவேற்பதற்காகத் தேவேந்திரன் தனது மனைவியான இந்திராணியுடனே வந்தான்; அப்போது ஸத்யபாமையானவள் அவ்விந்திராணி தன் முடியில் இனிய மணமுள்ள பாரிஜாத புஷ்பம் சூடியிருந்ததைக்கண்டு அத்தகைய மலர் தனக்கு வேண்டுமென்று விரும்பினாள்; தங்களுக்குக் குடியிருப்பை யுண்டாக்கின அந்த ஸ்ரீக்ருஷ்ண ஸத்யபாமைகளின் விஷயத்தில் குறிப்பறிந்து நடப்பதே தகுதியாயிருக்கவும் அவ்வாறு செய்யாமற்போனாலும் கேட்டபின்பாவது அம்மலரைக்கொடுக்கலாமே; அதுவுஞ் செய்யாமல், அப்போது ஸத்யபாமைக்கு உதவுதற்கு ஏற்ற பாக்கியமற்றவளாதலாலும் அம்மலருக்கு உரிய விருக்ஷத்தையே இழக்கவேண்டிய காலம் நேர்ந்தமையாலும் ஸத்யபாமை கேட்டதற்கு இந்திராணி 'இம்மலர் தேவர்கட்குத் தகுமேயல்லாமல் மானிடப்பெண்ணாகிய உனக்குத் தகாது' என்றனள். அதுகேட்ட அப்பிராட்டி தனது விருப்பத்தை ஸ்ரீகிருஷ்ணன்பால் தெரிவிக்க, அப்பிரான் அப்போதே கருடனைக்கொண்டு அந்தப் பாரிஜாத விருக்ஷத்தை வேரோடு பிடுங்கி த்வாரகையில் சேர்ப்பித்து ஸத்யபாமையின் வீட்டில் நடுவித்தனன் என்ற வரலாறு அறிக.

இப்படி ஸர்வசக்தனான எம்பெருமானை முன்பு திருமெய்யத்தில் ஸேவித்தேன்; இன்று திருநறையூரில் ஸேவிக்கப்பெற்றேனென்றாராயிற்று. (எ)

மண்ணின் மீபாரம் கெடுப்பான் மறமன்னர் *
பண்ணின் மேல்வந்த படையெல்லாம் பாரதத்து *
விண்ணின் மீதேற விசயன்தே ரூர்ந்தானை *
நண்ணி நான்நாடி நறையூரில் கண்டேனே. (அ)

| | |
|---|---|
| மண்ணின் மீ பாரம் | பூமியின்மீது உண்டான சுமைகளை |
| கெடுப்பான் | தொலைப்பதற்காகவும் |
| மறம் மன்னர் | மாற்றரசர்களது |
| பண்ணின் மேல் வந்த படை எல்லாம் | ஒழுங்காக எதிர்த்து வந்த எல்லாச் சேனைகளும் |
| விண்ணின் மீது ஏற | வீரஸ்வர்க்கம்போய்ச் சேரும்படியாகவும் |
| பாரதத்து | பாரதப்போரில் |
| விசயன் தேர் ஊர்ந்தானை | அர்ஜுனனுடைய தேரை நடத்ினவனை |
| நான் நண்ணி நாடி | நான் ஆசைப்பட்டுத்தேடி |

நறையூரில், கண்டேன்—.

* * *—எல்லாவற்றையும் பொறுத்திருக்கக்கூடியவளாய் 'ஸர்வம் ஸஹா' என்று பெயருடையளான பூமிப்பிராட்டி 'அந்தோ! என்னால் பாரம் பொறுக்கப் போகிறதில்லையே!' என்ன, அப்படி பொறுக்கவொண்ணாத பாரமாயிருந்த துர்ஜனங்களைத் தொலைப்பதற்காக ஸ்ரீகிருஷ்ணனாய்த் திருவவதரித்து அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து பாரதப்போரை நடத்தி கர்ணன் துரியோதனன் முதலிய பல்லாயிர மரசர்கள் கையுமணியும் வகுத்து மேலிட்டு வந்து படைகளெல்லாம் திரும்பி ஊர்போய்ச்சேராமல் வீரஸ்வர்க்கமடையும்படி செய்தருளின பெருமானைத் திருநறையூரில் ஸேவிக்கப்பெற்றேன். .... .... (அ)

பொங்கேறு நீள்சோதிப் பொன்னாழி தன்னோடும் *
சங்கேறு கோலத் தடக்கைப் பெருமானை *
கொங்கேறு சோலைக் குடந்தைக் கிடந்தானை *
நங்கோனை நாடி நறையூரில் கண்டேனே. (கூ)

| | |
|---|---|
| பொங்கு ஏறு | மேன்மேலும் அதிசயித்து வருகிற |
| நீள் சோதி | அளவற்ற தேஜஸ்ஸை யுடைய |
| பொன் ஆழி தன்னோடும் | அழகிய திருவாழி யாழ்வானும் |
| சங்கு | ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும் |
| ஏறு | குடிகொண்டிருக்கப் பெற்ற |
| கோலம் | அழகிய |
| தட | பெரிய |
| கை | திருக்கைகளை யுடையவனும் |
| பெருமானை | பெருமை பொருந்தியவனும் |
| கொங்கு ஏறு சோலை | தேன் மிகுந்திருக்கிற பொழில்களை யுடைய |
| குடந்தை | திருக்குடந்தையில் |
| கிடந்தானை | பள்ளிகொண்டிருப்பவனுமான |
| நம் கோனை | நம் பெருமானை |

நாடி, நறையூரில் கண்டேன்—.

* * *—ஆற்றுப் பெருக்குப்போலே மேன்மேலும் மிக்கு வளராநின்ற எல்லையில்லாத தேஜஸ்ஸையுடைய திருவாழியாழ்வானோடுகூட ஸ்ரீபாஞ்சஜந்

யாழ்வானுக்கும் குடியிருப்பான அழகிய திருக்கைகளையுடையனுய்த் திருக்குடந்தையிற் கண்வளர்ந்தருள்பவனுன எம்பெருமானைத் திருநறையூரிலே காணப்பெற்றேன். .... .... .... (கூ)

மன்னு மதுரை வசுதேவர் வாழ்முதலை *
நன்னறையூர் நின்ற நம்பியை * வம்பவிழ்தார்க்
கன்னவிலும் தோளான் கலியனொலி வல்லார் *
பொன்னுலகில் வானவர்க்குப் புத்தேளி ராகுவரே. (கo)

| | |
|---|---|
| மன்னு | (பகவத்ஸம்பந்தம் ஒரு நாளும் மாருமல்) நித்யமாயிருக்கிற |
| மதுரை | வடமதுரையில் |
| வசுதேவர் வாழ் முதலை | வசுதேவருடைய வாழ்வுக்கு மூலகந்தமாக வந்து பிறந்தவனுன |
| நல் நறையூர் நின்ற நம்பியை—; | |
| வம்பு அவிழ் தார் | பரிமளம் விளங்குகின்ற மாலையையுடையராய் |
| கல் நவிலும் தோளான் | மலையென்று சொல்லத் தகுந்த புஜங்களை யுடையயான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த இத்திருமொழியை |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| பொன் உலகில் | பரமபதத்திற் சென்று |
| வானவர்க்கு | அங்குள்ள நித்யஸூரிகளுக்கு |
| புத்தேளிர் ஆகுவர் | பூஜ்யராகப் பெறுவர். |

* * *—வடமதுரையில் வசுதேவருடைய வாழ்ச்சிக்கு மூலகாரணமாகத் திருவவதரித்தவனும் அவ்வவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் விளங்கும்படி திருநறையூரில் ஸேவைஸாதிப்பவனுமான எம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய இத்திருமொழியை அதிகரிக்கவல்லவர்கள் பரமபதத்திற்சென்று அங்குள்ள நித்யஸூரிகளுக்குத் தெய்வங்களாகப் பெறுவர் என்று இத்திருமொழி கற்றூர்க்குப் பலனருளிச் செய்தாராயிற்று.

மன்னு மதுரை—பகவத் ஸம்பந்தம் ஒருநாளும் மாருமல் நித்யமாயிருக்கப் பெற்ற மதுரை என்றபடி; முதலில் ஸ்ரீவாமநமூர்த்தி நெடுநாளளவும் தவம் புரிந்த ஸித்தாச்ரமமாயிருந்தும், பிறகு ஸ்ரீசத்ருக்நாழ்வான் ப்ரதிபக்ஷ நிரஸநம் பண்ணி அரசாட்சிபுரிந்த இடமாயிருந்தும், பின்பு ஸ்ரீக்ருஷ்ணபகவான் திருவவதரித்த விடமாயும் ஆக விப்படி பகவத்ஸம்பந்தம் இடையறுது அநுவர்த்திக்கப் பெற்ற ஊர்.

புத்தேளீர்—தேவதைகள் என்றபடி. திருவாசிரியத்தில் "நான்முகப் புத்தேள்" என்ற நம்மாழ்வார் ப்ரயோகமுங் காண்க. நித்யஸூரிகளால் கொண்டாடப்படுவர்களென்றபடி. .... .... .... .... (கo)

அடிவரவு:-- மான் முந்நீரை தூவாய ஓடா கல் உம்பர் கட்டேறு மண்ணின் பொங்கு மன்னு மெபடை.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:
அழ்வார் திருவடிகளே சரணம்.

## ஆறும்பத்து—ஒன்பதாந்திருமொழி,

# பெடையடர்த்தமடவன்னம்.

[இதுவும் திருநறையூர்த் திருப்பதிகம்.]

பெடையடர்த்த மடவன்னம் பிரியாது * மலர்க்கமலம்
மடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்த திருநறையூர் *
முடையடர்த்தசிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன் *
இடர்கெடுத்த திருவாளன் இணையடியே யடைநெஞ்சே!. (க)

| | | | |
|---|---|---|---|
| பெடை அடர்த்த | பேடையோடுகூடின | முடை அடர்த்த | முடைநாற்றம் மிகுந்த |
| மட அன்னம் | அழகிய ஹம்ஸபக்ஷியானது | சிரம் | பிரமகபாலத்தை |
| பிரியாது | அப்பேடையைச் சற்றும் விட்டுப் பிரியாமல் உடனிருந்து | ஏந்தி | கையிற்கொண்டு |
| | | மூ உலகும் | மூன்று லோகங்களிலும் |
| கமலம் மலர் | தாமரைப்பூவில் | பலி திரிவோன் | பிச்சையெடுத்துத் திரிந்த சிவபிரானது |
| மடல் எடுத்து | இதழ்களைச் சுழற்றிவிட்டு | இடர் | சாபத்தை |
| மது நுகரும் | தேனைப் பருகப்பெற்ற | கெடுத்த | நீக்கினவனான |
| வயல் | கழனிகளாலே | திரு ஆளன் | திருமாலினுடைய |
| உடுத்த | சூழப்பட்ட | இணை அடியே | உபயபாதங்களையே |
| திரு நறையூர் | திருநறையூரி லெழுந்தருளி யிருப்பவனாய்,— | நெஞ்சே அடை | மனமே! அடைந்திடு. |

• • •—இத்திருமொழியில் பாட்டுத்தோறும் நெஞ்சை விளித்துத் திருநறையூர் நம்பியின் திருவடிகளைவணங்குமாறு உபதேசிக்கிறார்.

பிரமனது சிரமொன்றைக் கிள்ளி அதனால் பிரமஹத்தி சாபமடைந்து கையுங் கபாலமுமாய்த் திரிந்து பிச்சையெடுத்த பரமசிவனுடைய அந்த ஆர்த்தியை அகற்றியருளின திருமால் திருநறையூரில் எழுந்தருளியுள்ளான்; அவ்வூர் எப்படிப்பட்ட தென்னில்; அன்னப்பறவைகள் பேடைகளைவிட்டுப் பிரியாமல் தாமரைப்பூக்களிலே கூடியிருந்து மதுபானம் பண்ணப்பெற்ற வயல்களாற் சூழப்பட்டது; அவ்வெம்பெருமானுடைய திருவடியிணையை நெஞ்சே! அடைந்திடு.

பெடை அடர்த்த மடவன்னம்=பேடைகள் பிரணயகலஹம் செய்யப்பெற்ற மடவன்னம் என்று முரைக்கலாம். அடர்த்தல்—நெருங்கியிருத்தலும், சண்டை செய்தலும்.

முடையடர்த்த=துர்நாற்றமுடைய என்றபடி. சிரம்—'ஶிரஸ்' என்னும் வடசொல்லின்விகாரம். பலி—பிக்ஷை; பிச்சை. .... .... (க)

கழியாருங் கனசங்கம் கலந்தெங்கும் நிறைந்தேறி *
வழியார முத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர் *
பழியாரும் விறலரக்கன் பருமுடிக ளவைசிதற *
அழலாரும் சரந்துரந்தான் அடியிணையே அடைநெஞ்சே!. (உ)

| | | | |
|---|---|---|---|
| கழி ஆரும் | உப்புக்கழிகளிலே நிரம்பியிருக்கின்ற | திரு நறையூர் | திருநறையூரில்,— |
| கனம் சங்கம் | கனத்த சங்குகளானவை | பழி ஆரும் | மிகுந்த அபவாதத்தையுடையனும் |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் | விறல் | பலிஷ்டனுன |
| கலந்து | வந்துசேர்ந்து | அரக்கன் | இராவணனுடைய |
| நிறைந்து | வரிசை வரிசையாக இருந்து | பரு முடிகள் அவை சிதற | பருத்த (பத்துத்) தலைகளும் சிதறும்படியாக |
| ஏறி | பாய்ந்து | | |
| வழி ஆர | வீதிகள் நிறையும்படியாக | அழல் ஆரும் | நெருப்புப்போன்ற |
| முத்து | முத்துக்களை | சரம் | அம்புகளை |
| ஈன்று | சுரந்து | துரந்தான் | பிரயோகித்த பெருமானுடைய |
| வளம் கொடுக்கும் | (இப்படி) செல்வமளிக்கப்பெற்ற | | |

அடி இணையே, நெஞ்சே! அடை—.

* * *—தீயசெயல்களினால் பழிமிகுந்த இராவணனுடைய பத்துத்தலைகளும் பாறிப்போம்படி அம்புசெலுத்தின பெருமான் இன்னமும் அப்படிப்பட்ட ஆஸுரப்ரக்ருதிகளை யழிப்பதற்காகத் திருக்கோயில்கொண்டிருக்குமிடம் திருநறையூர்; இவ்வூர்த் திருவீதிகளில் பொன்னியாறு பெருகும்போது கொழிக்கப்படும் சங்குகள் வழியெங்கும் முத்துக்களைப் பிரஸவித்துச் செல்வம்நிறைந்திருக்கின்றது; இப்படிப்பட்ட திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கு மெம்பெருமானுடைய அடியிணைகளை யடைவதே நெஞ்சுக்குக் காரியமாக வேணும்.

கனசங்கம்=வடமொழித்தொடர்; வ.நிஶம்வஃ. ... (உ)

சுளைகொண்ட பலங்கனிகள் தேன்பாய * கதலிகளின்
திளைகொண்ட பழங்கெழுமு திகழ்சோலைத் திருநறையூர் *
வளைகொண்ட வண்ணத்தன் பின்தோன்றல் * மூவுலகோடு
அளைவெண்ணெ யுண்டான்தன் அடியிணையே அடைநெஞ்சே!. (ங)

| | | | |
|---|---|---|---|
| சுளைகொண்ட | பல சுளைகளையுடைத்தான | திளை கொண்ட | பருத்திருந்துள்ள |
| பலங் கனிகள் | பலாப்பழங்களில் நின்றும் | | |
| தேன் பாய | தேன் பெருகப்பெற்றும், | பழம் | பழங்கள் |
| கதலிகளின் | வாழைமரங்களின் | கெழுமு | நெருங்கப்பெற்று மிருக்கிற |

| | |
|---|---|
| திகழ் சோலை | விளங்குகின்ற சோலைகளை யுடைய |
| திரு நறையூர் | திருநறையூரில்,— |
| வளை கொண்ட வண்ணத்தன் | சங்குபோல் வெளுத்த நிறமுடையனான பலராமனுடைய |
| பின் தோன்றல் | தம்பியாயும் |
| மூ உலகோடு | மூன்று லோகங்களையும் |
| அளை வெண்ணெய் | தயிர் வெண்ணெயையும் |
| உண்டான் தன் | அமுதுசெய்தவனாயு மிருக்கிற எம்பெருமானுடைய |

அடி இணையே நெஞ்சே! அடை—.

* * *—பலபலசுளைகள் நிரம்பியிருக்கின்ற பலாப்பழங்களில் நின்றும் தேனொழுகவும், வாழைப்பழக்குலைகள் திரள்திரளாகத் தொங்கவும் பெற்ற சோலைகளையுடைய திருநறையூரில் எழுந்தருளியிருக்கு மெம்பிரானுடைய அடியிணையையே அடைந்திடு நெஞ்சே!.

வளைகொண்டவண்ணத்தன் பின்தோன்றல்=பலராமனுடைய திருமேனி நிறம் வெளுப்பாதலால் 'வளைகொண்ட வண்ணத்தன்' என்று பலராமனைச் சொன்னபடி. 1. "முன்னலோர் வெள்ளிப்பெருமலைக் குட்டன் மொடுமொடு விரைந்தோடப், பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன்" என்ற அருளிச் செயலுங்காண்க. .... .... .... .... (௫)

துன்றொளித் துகிற்படலம் துன்னியெங்கும் மாளிகைமேல் *
நின்றார வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர் *
மன்றாரக் குடமாடி வரையெடுத்து மழைதடுத்த *
குன்றாரும் திரள்தோளன் குரைகழலே அடைநெஞ்சே! (௪)

| | |
|---|---|
| துன்று | நெருங்கியும் |
| ஒளி | ஒழுங்குபெற்று மிருக்கிற |
| துகில் படலம் | த்வஜபடங்களின் திரள்கள் |
| மாளிகை மேல் | மாளிகைகளின் மேலே |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| துன்னி | நிபிடமாய் |
| ஆர நின்று | பரம்பியிருந்து |
| வான் மூடும் | ஆகாசத்தை மறையா நின்றதாய் |
| நீள் செல்வம் | நிறைந்த செல்வத்தை யுடையதான |
| திரு நறையூர்—; | |
| மன்று ஆர | வெளிநிலமெங்கும் |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனும் |
| வரை எடுத்து | கோவர்த்தன மலையைக் குடையாக ஏந்தி |
| மழை தடுத்த | மழையைத் தடைசெய்தவனும் |
| குன்று ஆரும் திரள் தோளன் | மலைபோன்று திரண்ட திருத்தோள்களையுடையனுமான பெருமானுடைய |
| குரை கழலே | ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளையே |

நெஞ்சே! அடை—.

* * *—நெருங்கி ஒழுங்காயிருந்துள்ள துகில்களாலே சமைந்த கொடிகளானவை மாளிகைகளின் மேலெங்கும் பரம்பி ஆகாசம் தோற்றாதபடி மறைக்கப்

1. பெரியாழ்வார் திருமொழி 1—7—5.

பெற்றுச் செல்வம்மிகுந்த திருநறையூரில், முன்பு கிருஷ்ணவதாரத்தில் குடக்கூத்தாடின சிரமமும் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையை யேந்திநின்ற சிரமமுந்தீர எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய நூபுராலங்க்ருதமான திருவடிகளைத் தொழு நெஞ்சே !.

திருமாளிகைகளில் த்வஜபடங்கள் கட்டியிருப்பதாக வருணித்தல் செல்வ மிகுதியை விளக்குமென்க.

குரைகழல்=இரட்டுறமொழிதலாகக் கொண்டு குரைகழலையுடைய கழல் என்க. கழல்—காலிலணியும் ஆபரணத்துக்கும் காலுக்கும் பெயர். குரைகழல்—வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை. .... (ச)

அகிற்குறடுஞ் சந்தனமும் அம்பொன்னு மணிமுத்தும் *
மிகக்கொணர்ந்து திரையுந்தும் வியன்பொன்னித் திருநறையூர் *
பகல்கரந்த சுடராழிப் படையானிவ்வுலகேழும் *
புகக்கரந்த திருவயிற்றன் பொன்னடியே அடைநெஞ்சே ! (ரு)

| | |
|---|---|
| அகில் குறடும் | அகில் கட்டைகளையும் |
| சந்தனமும் | சந்தனக்கட்டைகளையும் |
| அம் பொன்னும் | அழகிய பொன்களையும் |
| அணி முத்தும் | அழகிய முத்துக்களையும் |
| திரை | அலைகளானவை |
| மிக கொணர்ந்து | மிகுதியாகத் திரட்டிக் கொண்வேந்து |
| உந்தும் | தள்ளுகின்ற |
| வியன் பொன்னி | ஆச்சரியமான பொன்னி யாற்றையுடைய |
| திரு நறையூர்—; | |
| பகல் கரந்த | (பாரதப்போரில்) ஸூரியனை மறைத்த |
| சுடர் ஆழி | உஜ்வலமான சக்கரத்தை |
| படையான் | ஆயுதமாகவுடையனும் |
| இ உலகு ஏழும் | இவ்வுலகங்களெல்லாவற்றையும் |
| புக கரந்த | உள்புகச்செய்து மறைத்துவைத்த |
| திரு வயிற்றன் | திருவயிற்றை யுடையனுமான பெருமானுடைய |
| பொன் அடியே | அழகியதிருவடிகளையே |
| நெஞ்சே ! அடை—. | |

* * *—அகிற்கட்டைகள் சந்தனக்கட்டைகள் பொன்கள் முத்துக்கள் முதலான சிறந்தபொருள்களை மிகுதியாகக் கொழித்துக்கொண்டு பெருகுகின்ற பொன்னியாறு பாயப்பெற்ற திருநறையூரில், பண்டு பாரதப்போரில் (அர்ஜுநபுத்ரனை) அபிமந்யுவைக் கொன்ற ஜயத்ரதனை அர்ஜுநனால் முடிப்பதற்கு உபாயமாக ஆழியால் இரவியை மறைத்தவனும், மற்றொருகால் பிரளயப் பெருங்கடல் கொள்ளாதபடி உலகங்களைத் திருவயிற்றிலேவைத்து நோக்கினவனுமான பெருமான் எழுந்தருளியுள்ளான் ; அவனுடைய பொன்னடியே அடை நெஞ்சே!.

"பகற்கரந்த சுடராழிப்படையான்" என்ற விடத்து வியாக்கியான வாக்கியம் வருமாறு:—"நிரவதிக தேஜஸ்ஸாலே தேஜஃபதார்த்தத்தை மறைத்தானுப்த்து. ஆதித்யனுடைய தேஜஸ்ஸு கண்ணாலே முகக்கலாம்; திருவாழி

யாழ்வானுடைய தேஜஸ்ஸை கண்டுகொண்டு முகக்கவொண்ணாதபடி யிருக்கையாலே இருண்டுகொட்டிற்றாய்த்து." என்று. .... .... (ரு)

பொன்முத்துமரியுகிரும் புழைக்கைம்மா கரிக்கோடும் *
மின்னத் தண்திரையுந்தும் வியன்பொன்னித் திருநறையூர் *
மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலைத் திருமார்பில் *
மன்னத்தான் வைத்துகந்தான் மலரடியே அடைநெஞ்சே! (கூ)

| | |
|---|---|
| மின்ன | (மேற்கே) மின்னல் கண்டவாறே, |
| பொன் | பொன்களையும் |
| முத்தும் | முத்துக்களையும் |
| அரி உகிரும் | சிங்கங்களின் நகங்களையும் |
| புழை கை மா கரி கோடும் | த்வாரத்தையுடைய துதிக்கையையுடைத்தான பெரிய யானைகளின் கொம்புகளையும் |
| தண் திரை உந்தும் | குளிர்ந்த அலைகளின் முகமாகக் கொழிக்கின்ற |
| வியன் பொன்னி, திரு நறையூர்—; | |
| மின் ஒத்த நுண் | மின்னல் போன்று அதிஸூக்ஷ்மமான |
| மருங்குல் | இடையையுடையளாய் |
| மெல் இயலை | ஸௌகுமார்யத்தை ஸ்வபாவமாகவுடையளான பிராட்டியை |
| திரு மார்பில் | திருமார்பிலே |
| மன்ன | பொருந்தும்படியாக |
| தான் வைத்து உகந்தான் | தரித்துக்கொண்டு திருவுள்ளமுவந்திருக்கிற பெருமானுடைய |
| மலர் அடியே | திருவடித்தாமரைகளையே |
| | நெஞ்சே! அடை—. |

* * *—சிங்கங்கள் யானைகளோடேபொருது அவற்றின் கும்பஸ்தலங்களைக் கிழித்து உதிர்த்தமுத்துக்களையும் மலைகளிலுண்டான பொன்களையும் சிங்கநகங்களையும் யானைக்கொம்புகளையும் நீர்வாக்காலே கொணர்ந்துதள்ளிப் பெருகுகின்ற பொன்னியாறு பாயப்பெற்ற திருநறையூரில், * அகலகில்லேனிறையுமென் றலர்மேல் மங்கையுறைமார்பன் வாழ்கின்றான்; அன்னவனுடைய பொன்னடியே அடைநெஞ்சே!. .... .... .... .... (சு)

சீர்தழைத்த கதிர்ச்செந்நெல் செங்கமலத் திடையிடையின் *
பார்தழைத்துக் கரும்போங்கிப் பயன்விளைக்கும் திருநறையூர் *
கார்தழைத்த திருவுருவன் கண்ணபிரான் விண்ணவர்கோன்
தார்தழைத்ததுழாய் முடியன் தளிரடியே அடைநெஞ்சே! (எ)

| | |
|---|---|
| சீர் தழைத்த கதிர் | அழகுமிக்க கதிர்களையுடைய |
| செந்நெல் | செந்நெற்பயிர்களினுடையவும் |
| (அவற்றையடுத்து முளைத்த) | |
| செங் கமலம் | செந்தாமரைகளினுடையவும் |
| இடை இடையில் | நடு நடுவே |
| கரும்பு | கரும்புகளானவை |
| ஓங்கி பார் தழைத்து | உயரவெழுந்து தரையிலே படிவளர்ந்து |
| பயன் விளைக்கும் | பலன்களைக் கொடுக்கப்பெற்ற |

| திரு நறையூர்—; | | | |
|---|---|---|---|
| கார் தழைத்த திரு உருவன் | காளமேகம்போன்ற திரு மேனியை யுடையவனும் | கண்ணபிரான் | கண்ணபிரானுடைய |
| விண்ணவர் கோன் | தேவாதி தேவனும் | தளிர் அடியே | தளிர்போன்ற திருவடிகளையே |
| தார் தழைத்த துழாய் முடியன் | பூக்கள் நிறைந்த திருத் துழாய்மாலையைத் திரு முடியிலுடையவனுமான | | நெஞ்சே! அடை—. |

* * *—கரும்புவிளையும் நிலத்திலே கருப்பங்கட்டைகளை வெட்டிவிட்டுச் செந்நெலை நடுவர்கள்; செந்நெலுக்குக் களையாக இடையிலே தாமரை விளையும்; முன்பு வெட்டிப்போட்ட கருப்பங்கட்டைகளும் பழைய வாஸனையாலே எழும்; செந்நெற்பயிர் ஓங்கவேணுமென்று க்ருஷிபண்ணினல் அதற்குமுன்னே கரும்புகள் ஓங்கிப் பயன்விளைக்கும்படியான நிலவளம் பொருந்திய திருநறையூரில் எழுந்தருளியுள்ள காளமேகத் திருவுருவனைப் நித்யஸூரிநாதனைத் துழாய்முடியனை எம்பெருமானுடைய பாதபல்லவங்களைப் பணி நெஞ்சே!. .... (எ)

குலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளைமுத்தும் *
தலையார்ந்த விளங்கமுகின் தடஞ்சோலைத் திருநறையூர் *
மலையார்ந்த கோலஞ்சேர் மணிமாடம் மிகமன்னி *
நிலையார நின்றான்தன் நீள்கழலே யடைநேஞ்சே! (அ)

| | | | |
|---|---|---|---|
| குலை ஆர்ந்த பழுக் காயும் | குலைகுலையாக நிறைந்து பழுத்த காய்களும் | தட சோலை திரு நறையூர்—; | |
| பசுங் காயும் | பழுக்கப்போகிற காய்களும் | மலை ஆர்ந்த கோலம் சேர் | மலைபோன்று அழகு பொருந்திய |
| பாளை முத்தும் | பாளைகளிலுண்டான முத்துக்களும் | மணி மாடம் | மணிமாடக் கோயிலில் |
| தலை ஆர்ந்த | தலைகளிலே நிறைந்திருக்கப் பெற்ற | மிக மன்னி | மிகவும் பொருந்தி |
| இள கமுகின் | இளைய பாக்குமரங்களை யுடைய | நிலை ஆர நின்றான் தன் | ஸ்திரமாக நிற்கும் பெருமானுடைய |
| | | நீள் கழலே | நீண்ட திருவடிகளையே |
| | | | நெஞ்சே! அடை—. |

* * *—திருநறையூர்ச் சோலைகளில் இளைய பாக்குமரங்கள் நிரம்பியுள்ளன; அவற்றின் தலைகளிலே நன்றாகப்பழுத்தகாய்களும் பழுக்கப்போகிற காய்களும் பாளைமுத்துக்களும் குலைகுலையாகக் குவிந்துகிடக்கின்றன. இப்படிப்பட்ட சோலைவளம் வாய்ந்த திருநறையூரில் ஒரு மலைபோன்று விளங்காநின்ற மணிமாடக்கோயிலில் ஸ்தாவர ப்ரதிஷ்டையாக நின்றருளு மெம்பெருமானுடைய நீள்கழலே யடைநெஞ்சே!.

கமுகு—'க்ரமுகம்' என்னும் வடசொல் விகாரம்.

மலையார்ந்த கோலஞ்சேர் மணிமாடம்=“இரும்பொழில்சூழ் மன்னு மறையோர் திருநறையூர் மாமலைமேல் பொன்னியலுமாடம்” என்றார் பெரிய திருமடலிலும். .... .... .... .... (அ)

மறையாரும் பெருவேள்விக் கொழும்புகைபோய் வளர்ந்தெங்கும் *
நிறையார வான்மூடும் நீள்செல்வத் திருநறையூர் *
பிறையாரும் சடையானும் பிரமனுமுன் தொழுதேத்த *
இறையாகி நின்றான்தன் இணையடியே யடைநெஞ்சே! (கூ)

| | |
|---|---|
| மறை ஆரும் | வேதங்களில் ப்ரதிபாதிக்கப் பட்ட |
| பெரு வேள்வி | பெரிய யஜ்ஞங்களி லுண்டான |
| கொழும் புகை | நல்ல புகையானது |
| வளர்ந்து போய் | மேலே கிளம்பிப்போய் |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| நிறை ஆர | நிறைந்திருந்து |
| வான் மூடும் | ஆகாசத்தைமறைக்கப்பெற்ற |
| நீள் செல்வத் திருநறையூர்—; | |
| பிறை ஆரும் சடையானும் | சந்திரகலையை யுடைய சடைமுடியை யுடைய னான சிவனும் |
| பிரமனும் | நான்முகனும் |
| முன் | முன்னே நின்று |
| தொழுது ஏத்த | வணங்கித்துதிக்கும்படி |
| இறை ஆகி நின்றான் தன் | ஸ்வாமியாயெழுந்தருளி யிருக்கும்பெருமானுடைய |
| இணை அடியே நெஞ்சே அடை—. | |

* * *—யஜ்ஞயாகங்களை யநுஷ்டிக்கும் வைதிக ப்ராஹ்மணர்கள் வாழ்கிற விடம் திருநறையூர் என்பது முன்னடிகளின் கருத்து; "மல்லைச்செல்வ வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல் வான்புகைபோய்த் திடவிசும்பி லமரர்நாட்டை மறைக்குந்தன் திருப்புலியூர்" (8—9—8.) என்ற திருவாய்மொழியை அடியொற்றி யருளிச்செய்கிறபடி. ஹோமாக்நிகளிற் கிளர்ந்த தூமம் ஆகாசமெங்கும் பரவி மறைந்திருக்கப்பெற்ற திருநறையூரில் பிரமன் சிவன் முதலான தெய்வங்கள் பணிந்து போற்ற ஸ்வாமியாக எழுந்தருளியிருக்கு மெம்பிரானுடைய இணையடியே அடை நெஞ்சே!. .... .... (கூ)

திண்களக மதிள்புடைசூழ் திருநறையூர் நின்றானை *
வண்களக நிலவெறிக்கும் வயல்மங்கை நகராளன் *
பண்களகம் பயின்றசீர்ப் பாடலிவை பத்தும்வல்லார் *
விண்களகத் திமையவராய் வீற்றிருந்து வாழ்வாரே. (கo)

| | |
|---|---|
| திண் | திடமாய் |
| களகம் | (சுண்ணாம்புச்) சாந்து இடப்பெற்றதான |
| மதிள் | திருமதிளாலே |
| புடை சூழ் | நாற்புறமும் சூழப்பட்ட |
| திரு நறையூர் | திருநறையூரில் |
| நின்றானை | எழுந்தருளியிருக்கு மெம் பெருமான் விஷயமாக, |
| வண் களகம் | அழகிய அன்னப்பறவைகள் |
| நிலவு எறிக்கும் | நிலாப்போல் விளங்கப் பெற்ற |
| வயல் | கழனிகளை யுடைத்தான |
| மங்கை நகராளன் | திருமங்கை நாட்டுக்குத் தலைவரான ஆழ்வார் |
| பண்கள் அகம் பயின்ற | பண்களுக்குள்ளே ஸாரமான பண்ணிலே அருளிச்செய்த |
| சீர் | சீர்மை பொருந்திய |

| | | | |
|---|---|---|---|
| பாடல் இவை பத்தும் | இப்பாசுரங்கள் பத்தையும் | இமையவர் ஆய் | நித்யஸூரிகளோடு ஒரு கோஷ்டியாய் |
| வல்லார் | ஓதவல்லவர்கள் | வீற்றிருந்து | பெருமைபெறவிருந்து |
| விண்கள் அகத்து | மேலுலகங்களுள் முக்கியமான பரமபதத்தில் | வாழ்வார் | வாழப்பெறுவர். |

* * *—இத்திருமொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். இப்பாட்டில் அடிதோறும் களகமென்னுஞ்சொல் திரிபாக அமைக்கப்பட்டுள்ளது.

திண்களகமதிள் = இங்குக் களகமாவது சுண்ணாம்புச்சாந்து ; ஞானசம்பந்தர் பாடிய தேவாரம் முதல் திருமுறை, சீர்காழிப்பதிகத்தில்—"களகப்புரிசை கவினார்சாருங் கலிக்காழி" என்றவிடத்து இப்பொருளில் பிரயோகங்காண்க.

வண்களக நிலவெறிக்கும் = இங்குக்களகமாவது ஹம்ஸபக்ஷி ; 'கலஹம்ஸ:' என்னும் வடசொல்லின் மரூஉ; "வியன் களகத் தேரேறி வேதாவும் வேண்டு வழிச்செல்ல" (பழம்பாட்டு) என்றவிடத்து இப்பொருளிற் பிரயோகங்காண்க. இதற்கு வேறுவகையாகவும் உரைக்கலாம் ;—களகம்—நெற்கதிர் ; கம்—நீரை, களம்—இடமாகக்கொண்டது ; (மருதநிலம்.) அதன் முதன்மைப் பயிர் நெல் ஆகையால், களகம்—நெற்பயிர் என்னும் பொருள் பெறலாம். இப்பொருளும் வியாக்யானத்திற் கொள்ளப்பட்டதே. 'கலம:' என்ற வடசொல் திரிபு என்னவுமாம்.

ஈற்றடியில், 'விண்கள் அகத்து' எனப்பிரித்துரைப்பதல்லாமல், 'விண் களகத்து' என்று கொண்டு முரைக்கலாம்: களம் + அத்து, களகத்து; (நன்னூல்—உருபுபுணரியல், கங.) சபையின் கண் என்றபடி. 'களம்' என்ற சொல் சபையெனப்பொருள்படுதலை, "உளரெனினு மில்லாரோடொப்பர் களனஞ்சிக், கற்ற செலச்சொல்லாதார்" (எஙo) என்ற குறட்பிரயோகத்தாலு முணர்க.

இத்திருமொழி கற்றவர்கள் பரமபதத்திலே போய் நித்யஸூரிகளோடே ஒரு கோவையாய் எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள் என்றாராயிற்று. .... .... .... .... (கo)

அடிவரவு :—பெடை கழி சுனை துன்று அகில் பொன் சீர் குலை மறை திண் கிடந்த.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஆரும்பத்து—பத்தாந்திருமொழி,

# கிடந்த நம்பி.

[இதுவும் திருநறையூர்த் திருப்பதிகம்.]

உரையவதாரிகை:—இத்திருமொழியின் திருநாமப்பாட்டொழிய ஒன்பது பாசுரங்களும் 'நமோ நாராயணமே' என்ற மகுடத்தால் முடிவன. இவ்வாழ்வார் திருநறையூர் நம்பிபக்கலிலே திருவிலச்சினை [சங்கசக்ராங்கநம்] பெற்றாரென்று ப்ரஸித்தமாயிருக்கும்; (இவ்வாழ்வாரது சரித்திரத்தில் அதன் விவரணம் காண்க.) இம்முகத்தாலே, திருநறையூர்நம்பி இவ்வாழ்வார்க்கு ஆசார்யராகிறார். ஆசார்யருடைய திருநாமமே அநுஸந்தேயமாதலால் பெரிய திருமந்த்ரமாகிற அத்திருநாமத்தைத் தாமும் அநுஸந்தித்துப் பிறர்க்கும் கற்பிக்கிறாராய்ச்செல்லுகிறார் இத்திருமொழியில். இங்குப் பெரிய திருமந்திரத்தில் ஆதியக்ஷரங்களை விட்டிருந்தாலும் அவையும் சேர்ந்த திருவஷ்டாக்ஷரமே இங்கு விவக்ஷிதமாகும். கீழ் "பேசுமின் திருநாம மெட்டெழுத்தும்" (1—8—9) என்ற பாசுரத்தின் விரிவுரையில் இவ்விஷயத்தின் விவரணங்கள் கண்டுகொள்க.

கிடந்தநம்பி குடந்தைமேவிக் கேழலா யுலகை
யிடந்தநம்பி * எங்கள்நம்பி எறிஞரரணழிய *
கடந்தநம்பி கடியாரிலங்கை உலகை யீரடியால் *
நடந்தநம்பி நாமம் சொல்லில் நமோநாராயணமே. (க)

| | | | |
|---|---|---|---|
| குடந்தை | திருக்குடந்தையிலே | கடியார் இலங்கை | கடூமான தன்மையுடைய அரக்கர் வாழுமிலங்கையை |
| மேவி | பொருந்தி | கடந்த | நாசஞ்செய்த |
| கிடந்த | பள்ளிகொண்டிருக்கின்ற | நம்பி | ஸ்வாமியாயும் |
| நம்பி | ஸ்வாமியாயும் | உலகை | லோகங்களை |
| கேழல் ஆய் | வராஹரூபியாகி | ஈர் அடியால் | இரண்டடியாலே |
| உலகை | பூமியை | நடந்த | அளந்துகொண்ட |
| இடந்த | (அண்டபித்தியில் நின்றும்) ஒட்டு விடுவித் தெடுத்த | நம்பி | ஸ்வாமியாயுமிருக்கிற ஸர்வேச்வரனுடைய |
| நம்பி | ஸ்வாமியாயும் | நாமம் | திருநாமத்தை |
| எங்கள் நம்பி | எங்களுடைய குறைகளைத் தீர்க்க வல்லனும் | சொல்லில் | சொல்லப்பார்க்கில் |
| எறிஞர் | சத்ருக்களினுடைய | நமோ நாராயணமே | (அது) பெரிய திருமந்திரமாகும். |
| அரண் | கோட்டை | | |
| அழிய | அழியும்படியாக | | |

* * *—வாராஹரூபியாய்த் திருவவதரித்துப் பூமியை உத்தரித்த விடாய் தீரவும், இராமாவதாரம் செய்தருளி அரக்கரையழித்து இலங்கையைப் பாழ் படுத்தின சிரமந்தீரவும், மாவலியின் செருக்கை யடக்கவேண்டி உலகமெல்லாந் தாவின ஆயாஸந்தீரவும் திருக்குடந்தையிலே திருக்கண் வளர்ந்தருளாநின்ற பெருமான் திருநறையூரில் நிகழாநின்றான்; அவனுடைய திருநாமத்தை அநுஸந் தித்து வாழ்வோமென்றாராயிற்று.

ஒன்பது பாசுரங்களிலும் திருநறையூர்ப் பிரஸ்தாவமே இல்லையாயினும், மேல் திருநாமப்பாட்டில் "நறையூர் நெடுமாலை நாவிற்பரவி நெஞ்சிற்கொண்டு நம்பி நாமத்தை" என்று தலைக்கட்டுதலால் இப்பாசுரங்க ளெல்லாவற்றுக்கும் திருநறையூர்நம்பியே இலக்கு என்பது விளங்கும். .... .... (௯)

விடந்தானுடைய வரவம் வெருவச் செருவில்முனநாள் * முன்
தடந்தாமரை நீர்ப்பொய்கை புக்கு மிக்கதாளாளன் *
இடந்தான் வையங் கேழலாகி உலகை யீரடியால் *
நடந்தானுடைய நாமம் சொல்லில் நமோநாராயணமே. (௨)

| | |
|---|---|
| முனநாள் | முன்பொருகால், |
| விடம் உடைய அரவம் தான் | விஷத்தையுடைத்தான காளியநாகமானது |
| வெருவ | அஞ்சும்படியாக |
| முன் | இடைப்பிள்ளைகளின் முன்னே |
| தட தாமரை பொய்கை நீர் புக்கு | பெரியதாமரைகளையுடைய (யமுனையின் ஒரு மடுவின்) நீரில்புகுந்து |
| செருவில் | (அந்த நாகத்தோடு) போர்செய்ததில் |
| மிக்க | மேன்மைபெற்ற |
| தாளாளன் | திருவடிகளையுடையவனும் |
| கேழல் ஆகி | வாராஹமூர்த்தியாகி |
| வையம் | பூமியை |
| இடந்தான் | குத்தியெடுத்துக் கொணர்ந்தவனும் |
| ஈர் அடியால் | இரண்டடியாலே |
| உலகை | உலகங்களை |
| நடந்தானுடைய | அளந்துகொண்டவனுமான எம்பெருமானுடைய |

நாமம் சொல்லில் நமோநாராயணமே—.

* * *—யமுனையின் ஓர் மடுவிலிருந்துகொண்டு விஷாக்நியினால் அனைவரை யும் தபித்துவந்த காளியநாகத்தின் கொழுப்பையடக்கினவனும், வராஹாவதார மும் த்ரிவிக்ரமாவதாரமும் செய்தருளிப் பூமியை ஸ்வாதீநப் படுத்திக்கொண்ட வனுமான பெருமானுடைய திருநாமம் திருவஷ்டாக்ஷரம்.

விஷ மென்னும் வடசொல் விடமெனத்திரிந்தது. மிக்க தாளாளன்= காளியன் தலைமேல் திருவடிகளையிட்டு நர்த்தனமாடினவ னென்றவாறு.

"பொய்கையிலே போய்ப்புக்கு அவனைத்துரத்தின ஏற்றத்தையுடையவன்" என்றும் வியாக்கியானமிருப்பதால் இப்பொருளுக்குச்சேர "தாடாளன்" என்ற பாடமும் கொள்ளத்தக்கதே. .... .... .... (௨)

பூணாதனலும் தறுகண்வேழம் மறுக * வளைமருப்பைப்
பேணான்வாங்கி அமுதங்கொண்ட பெருமான் திருமார்வன் *
பாணாவண்டு முரலுங் கூந்தல் ஆய்ச்சிதயிர் வெண்ணெய் *
நாணாதுண்டான் நாமம் சொல்லில் நமோநாராயணமே. (௫)

| | |
|---|---|
| பூணாது | கட்டுத்தறிக்குப் பிடிபடாமல் |
| அனலும் | சீறிக்கொண்டிருப்பதும் |
| தறுகண் | வட்டமான கண்களையுடையதுமான |
| வேழம் | (குவலயாபீடமென்னும்) யானையானது |
| மறுக | குடல்குழம்பும்படி |
| பேணான் | அதை மதியாதவனாய் |
| வளை மருப்பை | (அதன்) வளைந்த கொம்புகளை |
| வாங்கி | பறித்தெறிந்தவனும் |
| அமுதம் கொண்ட பெருமான் | (கடலில்நின்றும்) அமுதத்தைக் கடைந்தெடுத்த பெருமை பொருந்தியவனும் |
| திரு மார்வன் | பிராட்டியை மார்பிலுடையவனும் |
| வண்டு | வண்டுகளானவை |
| பாண் ஆ | இசையிலேபொருந்தும்படி |
| முரலும் | ஒலிசெய்யப்பெற்ற |
| கூந்தல் | மயிர்முடியையுடையளான |
| ஆய்ச்சி | இடைச்சியாகிய யசோதையினது |
| தயிர் வெண்ணெய் | தயிர்வெண்ணெய் முதலியவற்றை |
| நாணாது | வெள்காமல |
| உண்டான் | (களவுசெய்து) உட்கொண்டவனுமான எம்பெருமானது |

நாமம் சொல்லில் நமோநாராயணமே—.

* * *—வில்விழவென்று வியாஜம் வைத்துக் கம்ஸனாலழைக்கப்பட்டு அவனது அரண்மனையை நோக்கிச்செல்லுமளவில், வாசலில் மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையை உயிர் தொலைத்தவனும், கடலைக்கடைந்து அம்ருதத்தையெடுத்து அமரர்கட்குத் தந்தருளினவனும், * அமுதில் வரும் பெண்ணமுதைத் தனக்காக்கிக்கொண்டவனும், யசோதைப்பிராட்டி ஏராரிடைநோவ எத்தனையோர் போதுமாய்க் கடைந்து சேமித்துவைத்த தயிர் வெண்ணெய் நெய் பால் முதலியவற்றைக் களவுவழியிலே வாரியுண்டவனுமான பெருமானுடைய திருநாமம் திருவஷ்டாக்ஷரம்.

**தறுகண்வேழம்**=“ஜாதிப்ரயுக்தமான வட்டணித்த கண்ணையுடைத்தாயிருக்கிற குவலயாபீடம்” என்பது வியாக்கியான வாக்கியம். ‘தறுகண்மை’ என்று அஞ்சாமைக்குப் பேராதலால் இங்குத் **தறுகண்** என்று முழுச்சொல்லாய் ‘ஒருவர்க்கும் அஞ்சாதிருந்த யானை’ என்று பொருளாகவுமாம்.

இரண்டாமடியில் “அமுதங்கொண்ட பெருமான்” என்ற விடத்திற்கு வியாக்கியான மருளாநின்ற பெரியவாச்சான்பிள்ளை “கடலைக்கடைந்து அம்ருதத்தை வாங்கி அது புஜித்தார்க்கு வரக்கடவ ப்ரீதி தனக்குண்டாம்படி

யிருந்தான்" என்று அருளிச்செய்திருப்பதுகொண்டு சிலர் "அமுதங் கோண்டுகந்த பெருமான்" என்று பாடமோதுவர்; அது மறுக்கத்தக்கதே; யாப்பிலக்கணத்திற்கு ஒவ்வாது. மேல் பதினோராம் பத்தில் (11—7—1.) "நீணாகஞ்சுற்றி நெடுவரைநட்டு ஆழ்கடலைப், பேணான் கடைந்து அமுதங்கோண்டுகந்த பெம்மானை" என்றுள்ள பாடம் இவ்விடத்திற்கு வேண்டா. ஆகில், பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான வாக்கியம் பொருந்துமாறென்? எனில்; பொருந்தாமை யொன்றுமில்லை. 'உகந்த' என்பதற்குப்பொருளாக அருளிச்செய்தாரல்லர்; 'அமுதம் தந்த' என்னவேண்டியிருக்க, அங்ஙனருளிச்செய்யாமல் "அமுதங்கோண்ட" என்று தன்பேருக ஆழ்வார் அருளிச்செய்திருப்பதற்குக் கருத்துரைத்தாரத்தனை. அவ்விடத்து அரும்பதவுரையாலும் இது விளங்கும்.

"பாணுவண்டு முரலுங்கூந்தலாய்ச்சி" என்றது—பூமாலைசூடிய கூந்தலாள் என்றபடி. நாணாது உண்டான்='வெண்ணெய் களவு செய்தோமென்பதற்காக யசோதை நம்மை எவ்வளவு பரிபவப்படுத்தினாலும் அது நமக்கு உவப்பே' என்று பரிபவங்களை போக்யமாகக்கொண்டு உண்டானென்கை. .... (௩)

கல்லார் மதிள்சூழ் கச்சிநகருள் நச்சிப், பாடகத்துள் *
எல்லாவுலகும் வணங்க இருந்த வம்மான் * இலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால்முனிந்த வெந்தை * விபீடணற்கு
நல்லானுடைய நாமம் சோல்லில் நமோநாராயணமே. (௪)

| | |
|---|---|
| கல் ஆர் மதிள் சூழ் கச்சி நகருள் | கருங்கல்லால் கட்டப்பட்ட திருமதிள்களால் சூழப்பட்ட காஞ்சிபுரத்தில் |
| நச்சி | வசிக்கவிரும்பி |
| எல்லா உலகும் வணங்க | லோகமெல்லாம் வணங்குமாறு |
| பாடகத்துள் | திருப்பாடகமென்னுந் திருப்பதியில் |
| இருந்த | வீற்றிருக்கின்ற |
| அம்மான் | ஸ்வாமியும், |
| இலங்கை கோன் | லங்காதிபதியான ராவணனுடைய |
| வல் ஆள் ஆகம் | மிகவும்பலிஷ்டமான சரீரத்தை |
| வில்லால் முனிந்த | வில்லாலே சிறியழித்த |
| எந்தை | ஸ்வாமியும் |
| விபீடணற்கு நல்லானுடைய | விபீஷணாழ்வான் விஷயத்தில் நன்மை புரிந்தவனுமான எம்பிரானது |
| நாமம் சொல்லில் நமோநாராயணமே— | |

* * *—கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சியில் திருப்பாடகமென்னுந் திருப்பதியில் எல்லாவுலகும் வணங்க வீற்றிருப்பவனும் இராவணனை நிக்ரஹித்து விபீஷணாழ்வானை அநுக்ரஹித்தவனுமான பெருமானுடைய திருநாமம் திருவஷ்டாக்ஷரம்.

பாடகம்=பெரியகாஞ்சிபுரத்திலுள்ள பாண்டவதூதர்ஸந்நிதி. 'பாடு அகம்' என்று பிரிக்க. பெருமைதோற்ற எழுந்தருளி யிருக்கும் தலம் என்க. கண்ணபிரான் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ்சென்றபொழுது துரியோதனன்

ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அனேகமல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்க வைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணுதபடி மூங்கிற்பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸநமொன்றை அமைத்து அவ்வாஸநத்தில் கண்ணனைவீற்றிருக்கச் சொல்ல, அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணன் அதன்மேல் ஏறின மாத்திரத்திலே மூங்கிற்பிளப்புக்கள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில், அப்பெருமான் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையும் கால்களையுங்கொண்டு எதிர்க்கவே அப்பிலவறையிலிருந்த மல்லர்கள் அழிந்தனர். அப்போது கொண்ட விச்வரூபத் திருக்கோலத்திற்கு ஸ்மாரகமாகப் பெரிய திருமேனியோடே ஸேவைஸாதிக்குமிடம் பாடகம்: பாடு—பெருமை. **அகம்**—ஸந்நிதி. ("அரவுநீள் கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதே யிட, அதற்குப் பெரியமாமேனி. அண்டமூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்" என்ற (பெரியதிருமொழிப்) பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்ட திருமேனி வளர்த்தியோடே ஸேவைஸாதிக்குமாறு காண்க. .... (ச)

குடையா வ்வரையால் நிரைமுன்காத்த பெருமான் * மருவாத
விடைதானேழும்வென்றான் கோவல்நின்றான் * தென்னிலங்கை
அடையாவரக்கர் வீயப்பொருது மேவி வெங்கூற்றம் *
நடையாவுண்ணக் கண்டான்நாமம் நமோநாராயணமே. (ரு)

| | |
|---|---|
| முன் | முன்பொருகாலத்தில் |
| குடை ஆம் வரையால் | குடையாகக்கொண்ட கோவர்த்தநகிரியினால் |
| நிரை | பசுக்கூட்டங்களை |
| காத்த பெருமான | (பெருமழையில் நின்றும்) காத்தருளின பெருமானும். |
| மருவாத விடை ஏழும் வென்றான் | எதிரிட்ட எழுஎருதுகளையும் வலியடக்கினவனும் |
| கோவல் நின்றான் | திருக்கோவலூரில் நின்றதிருக்கோலமாயிருப்பவனும் |
| தென் இலங்கை | தென்னிலங்கையிலிருந்தவர்களாய் |
| அடையா | தன்னைப்பணியாதவர்களான |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் |
| வீய | அழியும்படி |
| பொருது | போர்புரிந்து |
| வெம் கூற்றம் | கொடியமிருத்யுவானவன் |
| மேவி | (அஞ்சாமல்) பொருந்தியிருந்து |
| நடை ஆ | இதுவே காரியமாக |
| உண்ணக் கண்டான் | (இலங்கையைப்) புஜிக்கும்படி செய்தவனுமான பெருமானுடைய |

நாமம் சொல்லில் நமோநாராயணமே—.

* * *—இந்திரன், இடையர்கள் வழக்கப்படி தனக்கிட்ட பூஜையைக் கண்ணபிரான் விலக்கித் தானே அமுது செய்தானென்ற சீற்றத்தினால் ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது ஒரு குடையெடுப்பாரைப் போலே மலையையெடுத்துப் பிடித்துக் கோவலரையும் கோநிரையையும் காத்தருளினவனும், நப்பின்னைப் பிராட்டியின் போகத்திற்கு இடையூறாயிருந்த எழுரிஷபங்களையும் வலியடக்கி

அவளை மணந்துகொண்டவனும், இலங்கையிற் புகுவதற்கு அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்த யமன் அஞ்சாதே உட்புகுந்து ராக்ஷஸவர்க்கங்களைப் பக்ஷிக்குமாறு செய்வித்தவனும், இப்பெருமைகளெல்லாம் பொலியத் திருக்கோவலூரில் உலகளந்த திருக்கோலமாக ஸேவைஸாதிப்பவனுமான பெருமானுடைய திருநாமம் திருவெட்டெழுத்து. .... .... .... .... .... .... (௫)

கானவெண்குங்குரங்கும் முசுவும்படையா * அடலரக்கர்
மானமழிந்துநின்ற வென்றியம்மான் * எனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமம் *
நானுஞ்சொன்னேன்நமருமுரைமின் நமோநாராயணமே. (௬)

| | | | |
|---|---|---|---|
| கானம் எண்கும் | காட்டுக்கரடிகளையும் | திரு மால் | திருமாலினுடைய,— |
| குரங்கும் | குரங்குகளையும் | எனக்கு | எனக்கு |
| முசுவும் | ‘முசு’ என்னுஞ்சாதிக் குரங்குகளையும் | என்றும் | எப்போதும் |
| படை ஆ | சேனையாகக் கொண்டு | தேனும் பாலும் அமுதும் ஆய | பரமபோக்யமாயிருக்கின்ற |
| அடல் அரக்கர் | கொடிய ராக்ஷஸருடைய | திரு நாமம் நமோ நாராயணம் | திருநாமமாகிய பெரிய திருமந்திரத்தை |
| மானம் | செருக்கை | | |
| அழித்து நின்ற | அழியச்செய்த | நானும் சொன்னேன் | நானும் உச்சரித்தேன்; |
| வென்றி அம்மான் | ஜயசீலனான ஸ்வாமியுமான | நமரும் உரைமின் | நம்மைச்சேர்ந்தவர்களும் சொல்லுங்கோள். |

* * *—அவாந்தரபேதங்களோடு கூடின வாநரஸமூஹங்களை ஸேனையாகக் கொண்டுபுகுந்து ராவணாதி ராக்ஷஸருடைய செருக்கையடக்கி வெற்றிபெற்ற பெருமானுடைய திருநாமம் தேனும் பாலும் அமுதும்போலே பரமபோக்யமானது; அதனை நான் அநுஸந்தித்து ஆநந்திப்பதுபோல என்னோடுஸம்பந்தமுடைய நீங்களும் அநுஸந்தித்து ஆநந்தியுங்கள் என்று ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியை நோக்கியருளிச்செய்தாராயிற்று.

“[நானும் சொன்னேன்.] இதர விஷயங்களினுடைய பேரையே சொல்லிப்போந்த நானுமன்றோ சொன்னேன்; இனியதுகண்டால் எல்லார்க்குங் கொள்ளத் தட்டில்லையிறே. என்னோடுஸம்பந்தமுடையாரெல்லாரும் இத்தையே சொல்லிப் போருங்கோள்.........ஆழ்வார்கள் கோஷ்டியில் இதொழியவேறொரு திருநாமமுண்டாக நினைத்திருப்பாரில்லை.” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் காண்க.

நின்றவரையுங் கிடந்தகடலும் திசையுமிருநிலனும் *
ஒன்றுமொழியாவண்ணம் எண்ணிநின்றவம்மானார் *
குன்றுகுடையாவெடுத்த அடிகளுடையதிருநாமம் *
நன்றுகாண்மின்தொண்டீர் சொன்னேன் நமோநாராயணமே. (௭)

| | | | |
|---|---|---|---|
| நின்ற வரையும் | ஸ்திரமாக நிற்கின்ற மலைகளும் | அம்மானார் | ஸ்வாமியும் |
| கிடந்த கடலும் | வற்றாதேயிருக்கின்ற ஸமுத்ரமும் | குன்று | கோவர்த்தனமலையை |
| திசையும் | திக்குக்களும் | குடை ஆ எடுத்த அடிக ளுடைய | குடையாகவேந்தின ஸ்வாமியுமானவ னுடைய |
| இரு நிலனும் | பரந்த பூமியும் | | திருநாமம் நமோநாராயணம்—; |
| (ஆகிய இவையெல்லாம்) | | தொண்டீர் | ஓ பக்தர்களே !, |
| ஒன்றும் ஒழியா வண்ணம் | சிறிதும் பாழாகாதபடி | | நன்று சொன்னேன் காண்மின். |
| எண்ணி நின்ற | ஸங்கல்பத்தாலே ப்ரவாஹ நித்யமாக்கிக்கொண்டே வருகிற | | |

* * *—பூமிக்கு ஆணியடித்தாற்போலே பேராதே நிற்கிற குலபர்வதங்கள், கரையை அதிக்ரமியாமல் கிடந்தவிடத்திலே கிடக்கிற கடல்கள், திசைகள், பரப்புடைத்தான பூமி ஆக இப்படிப்பட்ட பதார்த்தங்கள் ஒன்றும் ஒருகாலும் குறையவொண்ணாதென்று தன்ஸங்கல்பத்தாலே இவற்றை மேன்மேலும் உண்டாக்கிக் கொண்டிருக்கும் பெருமைவாய்ந்தவனும், கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையேந்தினவனுமான ஸர்வேச்வரனுடைய திருநாமமாகிய திருவஷ்டாக்ஷரமே நமக்கு நன்று; தொண்டர்களே! அத்திருநாமத்தையே நான் அநுஸந்தியாநின்றேன். (நீங்களும் அதனையே சொல்லுங்கோளென்பது கீழ்ப் பாட்டிலிருந்து வருவித்துக் கொள்ளவுரியது.) .... .... (எ)

கடுங்கால்மாரி கல்லேபொழிய அல்லேயெமக்கென்று
படுங்கால் * நீயேசரணென்று ஆயரஞ்ச அஞ்சாமுன் *
நெடுங்காற்குன்றம்குடையொன்றேந்தி நிரையைச் சிரமத்தால் *
நடுங்காவண்ணம் காத்தான்நாமம் நமோநாராயணமே (அ)

| | | | |
|---|---|---|---|
| கடு | கடுமையான | அஞ்சாமுன் | அந்த அச்சத்தினுடைய காரியம் பலிப்பதற்கு முன்னே |
| கால் | காற்றோடுகூடின | நெடு கால் குன்றம் ஒன்று | சுற்று மலைகளையுடைத்தானவொரு கோவர்த்தன மலையை |
| மாரி | மேகமானது | குடை ஏந்தி | குடையாகவெடுத்துப் பிடித்து |
| கல்லே பொழிய | கற்களையே வர்ஷிக்கையில். | நிரையை | பசுக்கூட்டங்களை |
| எமக்கு அல்லே என்று | '(இது) எங்களுக்குக் கா ளராத்ரியாகவேயிருக்கின் றது' என்று | சிரமத்தால் | ஆயாஸத்தினால் |
| படுங்கால் | நெஞ்சிலேபட்டு | நடுங்கா வண்ணம் | நோவுபடாதபடி |
| ஆயர் | இடையர்கள் | காத்தான் | ரக்ஷித்த பெருமானுடைய |
| நீயே சரண் என்று அஞ்ச | (எமக்கு) நீயே புகலாக வேறொன்று சொல்லி அஞ்சியிருக்க. | | நாமம் நமோநாராயணம்—. |

* * *—இந்திரன் பசிக்கோபத்தினால் கடுங்காற்றோடு கூடின கல்மழையைப் பெய்விக்க, எங்கும் இருள்மூடிப் போனதனால் 'அந்தோ! நமக்கு இது பிரளயத்தில் செல்லுகிற காளராத்திரியாயன்றோ இருக்கிறது; இவ்வாபத்திற்கு நாம் எங்ஙனே தப்பிப்பிழைக்கப் போகிறோம்!' என்று இடையர்களுடைய நெஞ்சிலே பட்டு 'நாங்கள் எங்கள் காரியத்துக்குக் கடவோமல்லோம்; நீ எங்களுக்கு ரக்ஷகனாகவேணும்' என்று பிரார்த்திக்க, அவர்களுடைய பயத்திற்கு அவகாசமின்றியே உடனே மலையைக் குடையாகத் தரித்துக் காத்தருளின பெருமானது திருநாமம் திருவெட்டெழுத்து.

"தான் அறிந்த ஆபத்தும் விலக்காமையுமிறே வேண்டுவது ரக்ஷிக்கைக்கு; ஸ்வாபாவிக ஸம்பந்தத்தில் கண்ணழிவில்லையே" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி இங்கு உணரத்தக்கது.

அல்—இரவு. கிரமம்—'க்ரமஃ' என்னும் வடசொல்விகாரம். .... (அ)

பொங்குபுணரிக் கடல்சூழாடை நிலமாமகள் மலர்மா
மங்கை * பிரமன்சிவனிந்திரன் வானவர்நாயகராய *
எங்களடிகள் இமையோர்தலைவருடைய திருநாமம் *
நங்கள்வினைகள்தவிரவுரைமின் நமோநாராயணமே. (கூ)

| | |
|---|---|
| பொங்கு புணரி | மேன்மேலுங் கிளர்கின்ற அலைகளையுடைய |
| கடல் | ஸமுத்ரத்தை |
| சூழ் ஆடை | தனக்குச் சுற்றிக்கொள்ளும் வஸ்த்ரமாகவுடையளான |
| நிலம் மா மகள் | பூமிப்பிராட்டிக்கும் |
| மலர் மா மங்கை | பெரிய பிராட்டியார்க்கும் |
| பிரமன் | நான்முகனுக்கும் |
| சிவன் | ருத்ரனுக்கும் |
| இந்திரன் | இந்திரனுக்கும் |
| வானவர் | (மற்றுமுள்ள) தேவர்களுக்கும் |
| நாயகர் ஆய | நிர்வாஹகனும் |
| எங்கள் அடிகள் | எங்களுக்கு ஸ்வாமியும் |
| இமையோர் தலைவருடைய | நித்யஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானுடைய |
| திருநாமம் நமோநாராயணம்—; (அதனை) | |
| நங்கள் வினைகள் தவிர உரைமின் | நம்முடைய பாவங்கள் தொலையுமாறு சொல்லுங்கள். |

* * *—கிளர்ந்ததிரையை யுடைத்தாயிருக்கிற கடலை ஆடையாகவுடையளான பூமிப்பிராட்டி, பெரியபிராட்டியார், பிரமன், சிவன், இந்திரன், மற்றுமுள்ள தேவர்கள் இவர்கட்கெல்லாம் நாதன் என்பதே நாராயணநாமத்தின் அர்த்தமென்பது இப்பாட்டால் வெளியிடப்பட்டவாறு. "துஞ்சும்போதழைமின் துயர் வரில் நினைமின் துயரிலீர் சொல்லினும் நன்றாம், நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா வென்னும்நாமம்" என்று முதல் திருமொழியி லருளிச்செய்ததை ஸ்மரிப்பியா நின்றுகொண்டு 'நங்கள்வினைகள் தவிரவுரைமின் நமோ நாராயணமே' என்றார். .... .... .... .... (கூ)

வாவித்தடஞ்சூழ் மணிமுத்தாற்று நறையூர்நெடுமாலை *
நாவின்பரவி நெஞ்சில்கொண்டு நம்பி நாமத்தை *
காவித்தடங்கண் மடவார்கேள்வன் கலியனொலிமாலை *
மேவிச்சொல்ல வல்லார்பாவம் நில்லா வீயுமே. (க0)

| | |
|---|---|
| வாவி | நடைவாவிகளாலும் |
| தடம் | தடாகங்களாலும் |
| சூழ் | சூழப்பட்டதும் |
| மணிமுத்தாறு | மணிமுத்தாற்றை யுடையதுமான |
| நறையூர் | திருநறையூரி லெழுந்தருளி யிருக்கிற |
| நெடுமாலை | ஸர்வேச்வரனை |
| நாவில் | நாவினால் |
| பாவி | துதித்தும் |
| நெஞ்சில் கொண்டு | நெஞ்சில் சிந்தித்தும் |
| நம்பி நாமத்தை | அந்தத் திருநறையூர் நம்பியின் திருநாமம் விஷயமாக, |
| காவி தடங்கண் மடவார் கேள்வன் | கருநெய்தற் பூப்போன்று பரந்த கண்களையுடைய் மடவார்கட்கு விரும்பத் தகுந்தவராயிருந்த |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி | அருளிச்செய்த |
| மாலை | இச்சொல்மாலையை |
| மேவி | விரும்பி |
| சொல்ல வல்லார் பாவம் | சொல்ல வல்லவர்களுடைய பாபங்கள் |
| நில்லா | நிற்கமாட்டாமல் |
| வீயும் | அழிந்துபோம். |

* * *—திருநறையூர் நம்பியின் திருநாமமாகிய திருவெட்டெழுத்தைக் குறித்துத் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய இத்திருமொழியை ஓத வல்லவர்கள் ஸர்வபாபவிநிர்முக்தராய் நித்யாநுபவம் பண்ணைப் பெறுவர்களென்று பயனுரைத்த பாசுரம் இது.

திருநறையூர் ஸந்நிதியருகிலுள்ள திவ்யபுஷ்கரிணிக்கு மணிமுத்தாறென்று திருநாமமென்ப. திருக்கோட்டியூரருகிற் பெருகும் மணிமுத்தாறு வேறு.

"காவித்தடங்கண் மடவார் கேள்வன்" என்றது முன்புற்ற நிலைமையைக் கணிசித்தாம்; இவ்விடத்திலே வியாக்யானவாக்யம் காண்மின்; [காவியித் யாதி.] முன்பு எனக்கு ஏற்றமாக நினைத்திருப்பது இது; இப்போது எனக்குப் பிறந்த செவ்வியும் கண்டிகோளே; இப்போது மநோவாக்காயங்கள் மூன்றுக்கும் இதுவே விஷயமானபடி கண்டிகோளே." .... .... .... (௧௦)

அடிவரவு:—கிடந்த விடம் பூணாத கல் குடை கானம் நின்ற கடுங்கால் பொங்கு வாவி ஈறவா.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
பெரியதிருமொழி ஆறும்பத்து உரை
முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரிய திருமொழி.

## ஏழாம்பத்து—முதல் திருமொழி,

## கறவா மடநாகு.

[இதுவும் திருநறையூர்த் திருப்பதிகம்.]

கறவாமடநாகு தன்கன் றுள்ளினாற்போல் *
மறவாதடியேன் உன்னையே யழைக்கின்றேன் *
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி! *
பிறவாமை யெனைப்பணி எந்தைபிரானே! (க)

| | |
|---|---|
| நறவு ஆர் பொழில் சூழ் | தேன்மிக்க சோலைகளால் சூழப்பட்ட |
| நறையூர் | திருநறையூரில் |
| நின்ற | நித்யவாஸம் பண்ணுகிற |
| நம்பி | ஸ்வாமிந்!, |
| கறவா | பால்சுரவாத |
| மட நாகு | இளம்பசுவை |
| தன் கன்று | அதுதன்னுடைய கன்றானது |
| உள்ளினால் போல் | நினைத்துக் கத்துமாபோலே |

| | |
|---|---|
| அடியேன் | அடியேன் |
| மறவாது | ஓயாமல் |
| உன்னையே அழைக்கின்றேன் | உன்னையே சொல்லிக் கூப்பிடாநின்றேன்; |
| எந்தை பிரானே | எனக்குத்தந்தையான பெருமானே! |
| எனை | என்னை |
| பிறவாமை | (இனி ஸம்ஸாரத்தில்) பிறவாதபடி |
| பணி | செய்தருளாய். |

* * *—திருநறையூர்ப் பெருமானே! உன்னை இடைவிடாது அநுபவிப்பதற்கு இடையூறான ஸம்ஸார ஸம்பந்தத்தைக் கழித்தருளாய் என்கிறார். கன்றுக்குட்டியானது தனது தாய்ப்பசு பால் சுரவாவிடில் அதனையே நினைத்துக் கதறுமாபோலே பேறு பெறாத அடியேன் ஓயாது உன்னையே சொல்லிக் கதறுகின்றேன்; இன்னமும் எத்தனைகாலம் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து அநர்த்தப் படுவேன்? பட்டதெல்லாம் போதாதோ? இனி எனக்குப்பிறவி நேராதபடி கடாக்ஷித்தருளாய் என்றாராயிற்று.

பிள்ளையமுதனார் என்னுமாசிரியர் இப்பாட்டின் முதலடிக்குப் பொருள் சொல்லப் புகுந்து, "கறவா மடநாகு—கறவாத மடநாகானது, தன்கன்று உள்ளினாற் போல்—தன் கன்றை நினைக்குமாபோலே" என்று பொருள் சொல்லப் பார்த்து, இவ்வர்த்தம் இரண்டாமடியோடு சேராமையாலும் வேறுவகையாகப்

பொருள் சொல்ல ஸ்புரியாமையாலும் சிறிது வருத்தப்பட்டார்; (நாகானது தன் கன்றை நினைக்குமா போலே என்றால் நாகின் ஸ்தானத்திலே ஆழ்வாரான தம்மையும் கன்றின் ஸ்தானத்திலே எம்பெருமானையும் கொள்ளவேண்டி வருகையாலே இது அஸங்கதமென்று மிடிபட்டார்.) அவ்வளவிலே, பட்டரிடத்தில் பொருள்கேட்ட ஒருவர் அவ்வமுதனார் கோஷ்டியிலே இருக்கக்கண்டு அவரை நோக்கி "இவ்விடத்திற்கு பட்டர் நிர்வஹிப்பது எங்ஙனே?" என்று கேட்க; 'நாகு' என்பதை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு, கறவாமடநாகைத் தன் கன்றுள்ளினாற்போல் என்று பட்டர் நிர்வஹிக்கும்படி என்றாராம். 'நாகுதன்—நாகினுடைய, கன்று—கன்றானது, உள்ளினாற் போல்—தாயையே நினைத்துக் கத்துமா போலே' என்றுரைப்பதுமுண்டு. நாகு—இளம்பெண்மாடு. பால்சுராவாத பசுவின் ஸ்தானத்திலே அருள்புரியாத எம்பெருமான் கொள்ளப்பட்டான்; கத்துகின்றகன்றின் ஸ்தானத்திலே தம்மைவைத்துக்கொண்டார்.

உன்னை மறப்பதற்கு ஹேதுவான இந்நிலத்தில் பிறந்துவைத்தும் மறவாதே, இயற்கையான அடிமையை உணர்ந்து உன்னையே அழைக்கின்றேனென்பது இரண்டாமடி.

நறவு—தேனுக்கும் வாஸனைக்கும் பெயர். பிறவாமை எனைப்பணி= பிறப்பது என்பதும் (எம்பெருமானை) மறப்பது என்பதும் பரியாயம் போலுமாதலால், இனியொருகாலும் உன் திருவடிகளை நான் மறவாதிருக்கும்படி அருள்புரியவேணுமென்றவாறு. .... .... .... (க)

வற்றாமுதுநீரோடு மால்வரையேழும் *
துற்றாக முன்துற்றிய தொல்புகழோனே !*
அற்றேனடியேன் உன்னையே யழைக்கின்றேன் *
பெற்றே னருள்தந்திடு என்எந்தைபிரானே ! (உ)

வற்றா முது நீரோடு } ஒருகாலும் வடியாத கடல்களையும்
மால் — பெரிய
வரை எழும் — குலபர்வதங்களேழையும்
முன் — முன்பொருகால்
துற்று ஆக — ஒருகபளமாக
துற்றிய — வாரிவிழுங்கின
தொல் புகழோனே } சாச்வதமான கீர்த்தியையுடையவனே !,

அற்றேன் அடியேன் { உனக்கே உரியேனாய்த் தீர்ந்திருக்கிற அடியேன்
உன்னையே அழைக்கின்றேன் } உன்னையேசொல்லிக் கூப்பிடுகின்றேன் ;
பெற்றேன் { இப்படி உன்னையே அழைக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றேன் ;
என் எந்தை பிரானே !—;
அருள் தந்திடு கிருபை செய்தருளவேணும்.

* * *—கீழ்ப்பாட்டில் "மறவாதடியே னுன்னையே அழைக்கின்றேன்" என்றதும் மிகையன்றோ; பிரளய காலத்தில் உலகங்களை யெல்லாம் திருவயிற்றில் வைத்துக் காத்தருளினையே, அப்போது ஆரேனும் கூப்பிட்டோ காத்தரு

விற்று? பிரஜைகளின் நோயையறிந்து பரிஹரிக்கும் மாதாவைப் போலே நீயே முற்பட்டன்றோ காத்தது. அப்படி உன் பேறாகக் காத்தருள வேண்டியிருந்தும், நானும் உன்னை நோக்கிக் கூப்பாடு போடுவதைக் கண்டாகிலும் இரங்கியருள லாகாதோ? என்கிறார்.

முதலடியில் கடல்களையும் மலைகளையுஞ் சொன்னது மற்றுமுள்ள சராசரங்க ளெல்லாவற்றிற்கும் உபலக்ஷணமென்க; "மஞ்சாடுவரையேழுங் கடல்களேழும் வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம், எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின்மேலோ ரிளந்தளிரிற் கண்வளர்ந்த ஈசன்" என்றாரிறே.

துற்று—கபளம். இத்தனை பிரபஞ்சங்களையும் ஒரே கவளமாக உட்கொண்டா னென்கை. "அண்டமெலா முண்டையென்ப ரறியாதார் ஆங்கவை நீ, உண்டருளுங் காலத்தில் ஒரு துற்றுக்கு ஆற்றாவால்" என்றார் ஐயங்கார் திருவரங்கக் கலம்பகத்தில். உண்ட வுலகமெல்லாம் ஒரு கவளத்துக்கும் போதவில்லையாம். தோல்புகழோனே! = இப்படியே பலநாளும் ஆச்ரித ரக்ஷணம் பண் ணிப் பண்ணிப் படைத்தபுகழ் எல்லையற்ற தென்கை. அற்றேன்— வேறொருவர்க்கும் உரியேனாகாதபடி உனக்கே அற்றுத்தீர்ந்தவன் என்றபடி. .... (உ)

தாரேன்பிறர்க்கு உன்னரு ளென்னிடைவைத்தாய் *
ஆரேனதுவே பருகிக் களிக்கின்றேன் *
காரேய்கடலே மலையே திருக்கோட்டி
யூரே * உகந்தாயை உகந்தடியேனே. (ங)

(திருநறையூர்ப் பெருமானே!)
உன் அருள் — உனது திருவருளை
என்னிடை — அடியேன்பக்கலிலே
வைத்தாய் — வைத்திருந்தீனாய்; (இனி இவ்வருளை)
பிறர்க்கு — வேறொருவர்க்கும்
தாரேன் — விட்டுக் கொடுக்கக் கடவேனல்லேன்;
கார் எய் கடலே — மேகங்கள் படியப்பெற்ற திருப்பாற்கடலையும்
மலையே — திருமலையையும்
திருக்கோட்டியூரே — திருக்கோட்டியூரையும்
உகந்தாயை — திருவுள்ளமுவந்து இருப்பிடமாகக் கொண்டிருக்கிறவுன்னை
அடியேன் உகந்து — அடியேன் விரும்பி
ஆரேன் — பர்யாப்தி பெறாதவனாகி
அதுவே — அவ்வருளையே
பருகி — அநுபவித்து
களிக்கின்றேன் — ஸந்தோஷப்படுகின்றேன்.

* * *—அடியேனுடைய பிரார்த்தனையைத் தலைக்கட்டி யருளாமல் நீ உபேக்ஷிக்கு மளவிலும் உன்னையே தொடர்ந்து நான் கூப்பிடும்படியாக இவ்வளவு அருள் என்மேல் செய்து வைத்திருக்கின்றாய்; இப்படிப்பட்ட அருளுக்கு மற்று ஆரேனும் இலக்காக வல்லாருண்டோ? இவ்வருள் பெற்றவன் நானொருவனே யாவன்; இப்படிப்பட்ட அருளை நீ வேறொருவரிடத்தில் செய்வதாயிருந்தாலும் நான் ஸம்மதிக்க மாட்டேன்; உன்னுடைய கிருபையை அநுபவித்து ஒருகாலும்

பர்யாப்தி பெறுதவனுகி மேன்மேலும் அபிநிவேச முடையனுய் அதையே அநுபவித்துச் செருக்குற்று யமாதிகள் தலையிலே அடியிட்டுத் திரியும்படி யானேன் என்கிறுர்.

பின்னடிகட்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி காண்மின்:-"ஸௌபரி பலவடிவு கொண்டாப்போலே அநேகம் வடிவுகொண்டு அவ்வோவிடங்கள் தோறும் இனி இதுக்கு அவ்வருகில்லை யென்னும்படி வர்த்தியாநின்றுன்" என்று. அதாவது— ஸௌபரி என்கிற ஒரு மாமுனிவன் நீர்நிலையிலிருந்து கொண்டு தவம்புரியா நின்றவளவில் அங்கு மீன்க ளெல்லாங்கூடிக் களித்து விளையாடா நின்றமையைக் கண்ணுற்று 'நாமும் இப்படி குடும்ப வாழ்க்கையிற்கூடி நின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்கவேணும்' என்று ஆவல்கொண்டு மாந்தாதா என்னும் பிரபுவுக்குப் பலபெண்களிருப்பதாக வுணர்ந்து அவனிடஞ் சென்று தனக்குக் கன்னிகாதானஞ் செய்யுமாறு வேண்ட, அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங் கண்டு இசையகில்லாமல் 'பெண் கொடுக்க முடியாதென்று நம் வாயாற் சொன்னுல் முனிவர் முனிந்து சபித்துவிடக்கூடும்; பெண்களிருப்பிடத்திற்கு இவரை யனுப்புவோம்; இவரைக்கண்டு பெண்கள் காமுற்றுர்களாகில் விவாஹம் செய்து கொள்ளட்டும்; இல்லையாகில் அவர்களே மறுத்து விடட்டும்; நம் தலையில் பழிவேண்டா' என்றெண்ணி முனிவரைப் பெண்களிருக்குமிடத்தேற அனுப்ப, முனிவர் அங்குச் செல்லும்போதே தமது தவவலிமையால் திவ்ய ஸுந்தரமான ரூபத்தை என்று கொண்டுபோய் அவர்கள் முன்னே நின்றவளவில் அங்கிருந்த ஐம்பது கன்னிகைகளும் 'நானே இவரை மணந்து கொள்வேன், நானே இவரை மணந்து கொள்வேன்' என்று போட்டி போட்டுக்கொண்டு மேல்விழுந்தவாறே முனிவர் அத்தனை பெண்களையும் மணந்து கொள்ள விரும்பித் தமது தவ வலிமையால் ஐம்பது வடிவமெடுத்து அப் பெண்களனைவரையும் விவாஹஞ் செய்துகொண்டு மகிழ்ந்திருந்தா ரென்று இதிஹாஸமுண்டு; அது போலவே எம்பெருமானும் ஆச்ரிதர்களான அஸ்மதாதிகளை அநுபவிப்பதற்காகப் பலபல திவ்யமங்கள விக்ரஹங்களைப் பரிச்ரஹித்துப் பலபல திவ்யதேசங்களிலே ஸந்நிதி பண்ணியிருக்கிறுனென்க. முதலடியில், தாரேன் என்றது—தரவொட்டேன் என்றபடி. .... .... .... (ரு)

புள்வாய்பிளந்தபுனிதா! என்றழைக்க *
உள்ளேநின்று என்னுள்ளங்குளிரு மொருவா! *
கள்வா! கடல்மல்லைக்கிடந்த கரும்பே! *
வள்ளாலுன்னை எங்ஙனம்நான் மறக்கேனே? (சு)

புள் வாய் பிளந்த } பகாஸுரனுடைய வாயைக்கிழித்தெறிந்த
புனிதா. பரமபவித்திரனே!
என்று அழைக்க } என்று நான் கூப்பிட்டவளவிலே
உள்ளே நின்று } என்னுள்ளே பொருந்தி

| | |
|---|---|
| என் உள்ளம் குளிரும் ஒருவா | என்மனத்தில் தாபந் தணிக்கவல்ல அத்விதீயனே ! |
| கள்வா | ஒருவருமறியாமல் பெருநன்றிகள் செய்பவனே ! |
| கடல்மல்லை கிடந்த கரும்பே | திருக்கடன்மல்லையில் பள்ளிகொண்டிருக்கிற பரமபோக்யனே ! |
| வள்ளால் | உதாரனே ! |
| உன்னை | இப்படிப்பட்டவுன்னை |
| நான் எங்ஙனம் மறக்கேன் | நான் எப்படிமறப்பேன் ? [ஒருநாளும் மறவேன்.] |

* * *—'விரோதிகளை நிரஸிப்பதையே விரதமாகக் கொண்டவன் நீ' என்றுணர்த்தும் திருநாமங்களை நான் வாயாரச் சொல்லவிரும்பிப் 'புள்வாய் பிளந்தபுனிதா!' என்றழைத்தேன்; அவ்வளவிலே நீ என்னுள்ளத்தே வந்து புகுந்து ஸ்தாவரப்ரதிஷ்டையாக நிலைத்து ஸகலதாபங்களையும் ஆற்றிக் குளிர்ச்சியை யுண்டாக்கினுய் என்கிருர் முன்னடிகளில்.

கிருஷ்ணுவதாரத்தில் கம்ஸனுல் கண்ணனைக் கொல்லுமாறு ஏவப்பட்ட அசுரர்களில் பகாஸுரனெருவன்; கொக்கின் வடிவெடுத்து வந்தவன்; இவன் யமுனைக்கரையில் கண்ணபிரானை விழுங்கிவிட அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்கமாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்தநினைக்கையில் கண்ணன் அவன் வாயலகுகளைத் தனது இருகைகளினுலும் பற்றிக் கிழித்திட்ட வரலாறு அறிக.

புனிதனென்றது பரிசுத்தனென்றபடி. விரோதிகளைக் களைந்தொழிக்க வேண்டில் அதற்கு வேறு யாரேனையும் ஏவிவிடாமல் தானே கைதொட்டுக் களைந்தமையாகிற பரிசுத்தியை நினைக்கிறது.

[கள்வா!.] பிறர் அறியவொண்ணுதபடி காரியஞ்செய்பவனைக் கள்வனென்பது; எம்பெருமானும் * 'இராமட மூட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையேபிடித்து நோக்கிக்கொண்டு போரு'மவனுகையாலே கள்வனெனப்படுகிறுன். கச்சிமாநகரிலுள்ள பலதிவ்யதேசங்களுள் திருக்கள்வனூர் என்பது ஒரு திவ்யதேசம்; அவ்விடத் தெம்பெருமானது திருநாமம் கள்வன்; அவனை விளிக்கிறுராகவுமாம்; "உலகமேத்துங் காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!" என்பர் திருநெடுந்தாண்டகத்திலும். ஐயங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் பேசும் பாசுரங்காண்மின்:—(85.) "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரையென்னதென்று, கொண்டேனைக் கள்வனென்று கூருதே—மண்டலத்தோர், புள்வாய் பிளந்த புயலே! உனைக் கச்சிக், கள்வாவென்ருேதுவதென்கண்டு." என்று. (அதாவது) ஒருவர்க்கு உரியபொருளைத் தன்னதாகக் கொள்வது கள்ளமெனப்படும்; ஆகவே அநாதியாக உனக்கே உரியதாய்க்கிடந்த உயிரை நான் என்னுடையதென்று கொண்டிருக்கிறேனுதலால் என்னைக் கள்வனென்று சொல்லத்தகும்; உலகத்திலுள்ள பொருள்களியாவும் நின்னுடையனவேயாதலால் வெண்

---

* முமுக்ஷுப்படி—முதல்பிரகரணம்.

னைக் கொள்ளுதல் முதலிய தொழில்களைச்செய்யினும் உன்னைக் கள்வனென்று கூறுதல் தகாது ; இவ்வாறு இருக்க, உலகத்தார் இத்தன்மையை ஆய்ந்து அறியாமலே என்னையானை திருடிக்கொண்ட பெருந்திருடனாகிய என்னைத் கள்வனென்னாமல் ஸர்வஸ்வாமியான உன்னைக் கள்வனென்கின்றனரே, இஃது என்ன பேதைமை ! என்று சமத்காரந் தோன்றக் கூறியவாறு.

கடன்மல்லைக் கிடந்தகரும்பே — இப்படிப்பட்ட விளிகள் ஆழ்வார் திருவாக்கில் நின்றுதானே வெளிவரும் ; எம்பெருமானை நோக்கி இங்ஙனே விளிக்கவல்லார் மற்று ஆரேனுமுண்டோ? ஆழ்வாருடைய ஹ்ருதயம் பரிபக்குவமாயிருக்கையாலே இப்படிப்பட்ட இன்சொல் வெளிவரப் பெறுகின்றது. "கரும்பே! என்றது-கைதொட்டு நெருக்குதலால் வரும் செவ்வியழிகையின் றிக்கேயிருக்கை" என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல்.

வள்ளால் — 'வள்ளல்' என்பதன் ஈற்றயல் திரிந்தவிளி. ஆச்ரிதர்கட்குத் தன் வடிவை முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுக்குமவனே ! என்கை. மஹோபகாரகனாயிருக்கிறவுன்னை, உன்னாலே உபகாரங் கொண்டிருக்கிற நான் ஒருபடியாலும் மறக்கமுடியாதென்றூராயிற்று. .... .... .... (ச)

வில்லேர் நுதல் வேல்நெடுங்கண்ணியும் நீயும் *
கல்லார் கடுங்கானம் திரிந்தகளிறே ! *
நல்லாய் ! நரநாரணனே ! எங்கள்நம்பி ! *
சொல்லாயுன்னை யான்வணங்கித் தொழுமாறே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| வில் ஏர் நுதல் | வில்போன்ற நெற்றியையும் | நரநாரணனே | நரநாராயணாவதாரம் செய்தருளினவனே ! |
| வேல் நெடு கண்ணியும் | வேல்போன்று நீண்ட கண்களையுமுடையளான பிராட்டியும் | எங்கள் நம்பீ | எங்கள் குறைதீர்க்கவல்ல பரிபூர்ணனே !, |
| நீயும் | நீயுமாக | உன்னை | இப்படிப்பட்டவுன்னை |
| கல் ஆர் கடு கானம் | கற்கள் நிறைந்த கொடிய காட்டிலே | யான் | அடியேன் |
| திரிந்த | ஸஞ்சரித்த | வணங்கி தொழும் ஆறு | திருவடிகளிலேவிழுந்து ஸேவிக்கும்முறைமையை |
| களிறே | மதயானைபோன்றவனே !, | | |
| நல்லாய் | ஆச்ரிதவத்ஸலனே ! | சொல்லாய் | அருளிச் செய்யவேணும். |

* * * — ஸ்ரீராமாவதாரத்தில் பிராட்டியுந் தானுமாகக் கானக முலாவினபடியைப் பேசுகிறார் முன்னடிகளில். வில்போல் வளைந்த நெற்றியையும் வேல்போற் கூரிய கண்களையுமுடையளாய் உனக்குங் கூட ஆகர்ஷகமான ஸௌகுமார்யத்தை யுடையளான ஸீதாபிராட்டியும், அவள் தானும் தூணுக்குத் தூணுக்கென்னும்படியான ஸௌகுமார்யத்தையுடைய நீயும் துஷ்ட ஜந்துக்கள் நிறைந்த ஸஞ்சார யோக்யமல்லாத காட்டிலே, ஒரு மதயானை பிடியோடே கூடக் களித்துலாவுமாபோலே உலாவினவனே! என்கை. கீழ்ப்பாட்டில் வள்ளால்! என்ற

ஸம்போதநத்தை விவரிக்கிறது போலும் இது: நித்யஸூரி ஸேவ்யமான திரு மேனியை எல்லாப் பிராணிகளும் கண்டு அநுபவிக்குமாறு ஸர்வஸ்வதாநம் பண்ணினவனே ! என்றவாறு.

நல்லாய் !=‘நல்லான்’ என்பதன் ஈறு திரிந்த விளி; ஆச்ரித வத்ஸலனே! என்கை. [நர நாரணனே !.] முன்னொருகாலத்தில் குருசிஷ்யக்ரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் விளக்குதற் பொருட்டு ஸ்ரீபதரிகாச்ரமத்தில் நரனென்னும் சிஷ்யனும் நாராயணனென்னும் ஆசாரியனுமாகத் திருமால் தானே திருவவதரித்துத் திருமந்திரத்தை வெளியிட்டருளினமை உணர்க. “நர நாரணனாயுலகத்தறநூல் சிங்காமை விரித்தவனெம்பெருமான்” என்பர் மேல் பத்தாம் பத்திலும். “ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து ஈச்வர கைங்கர்யத்தையு மிழந்து இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன் தன்க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும்படி தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினன். சிஷ்யனாய் நின்றது சிஷ்யனிருக்கு மிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை யறிவிக்கைக்காக.” என்ற முமுக்ஷுப்படி திவ்யஸூக்தியுங் காண்க.

சொல்லாய்=கடற்கரையிலே விபீஷணாழ்வானுக்கும் திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனுக்கும் சோதிவாய் திறந்து அருளிச்செய்தது போலே அடியேனுக்கும் ஒன்றருளிச் செய்யவேணு மென்கிறார். .... .... .... (ரு)

பனியேய் பரங்குன்றின் பவளத்திரளே ! *
முனியே ! திருமூழிக்களத்து விளக்கே ! *
இனியாய் தொண்டரோம் பருகின்னமுதாய
கனியே ! * உன்னைக் கண்டுகொண் டுய்ந்தொழிந்தேனே ! (சு)

| | | | |
|---|---|---|---|
| பனி ஏய் | பனிமிக்கிருந்துள்ள | இனியாய் | பரமபோக்யனே ! |
| பரம் குன்றின் | சிறந்த ஹிமவத்பர்வதத்தி லுள்ள திருப்பிரிதியி லெழுந்தருளியிருக்கிற | தொண்டரோம் | தொண்டரான அடியோங்கள் |
| | | பருகு | பானம்பண்ணுதற்கு உரிய |
| பவளம் திரளே | பவளங்கள் திரண்டாற் போன்ற அழகியவனே ! | இன் அமுது ஆய | இனிய அமுதமானவனே ! |
| முனியே | (அடியாருடைய நன்மைகளைச்) சிந்திக்குமவனே ! | கனியே | கனிபோன்றவனே ! |
| திருமூழிக் களத்து | திருமூழிக்களமென்னுந் திருப்பதியில் | உன்னை கண்டு கொண்டு | உன்னை ஸேவித்து |
| விளக்கே | விளக்குப்போல் விளங்குமவனே ! | உய்ந் தொழிந்தேன் | உஜ்ஜீவிக்கப்பெற்றேன். |

* * *—பனி மிகுந்திருந்துள்ள இமயமலையில் திருப்பிரிதியென்னுந் திருப்பதியிலே எல்லார்க்கும் விரும்பவுரியனாய்க் கொண்டு ஸந்நிதிபண்ணி யிருக்குமவனே! என்பது முதலடியின் கருத்து. இப்பெரிய திருமொழியில் இரண்டாந் திருப்பதிகத்தில் மங்களாசாஸநஞ் செய்யப்பெற்ற திருப்பதி இது.

முனியே !—மநநம் பண்ணுமவனே! என்கை. இச் சேதநர் அறிந்த போதோடு அறியாதபோதோடு வாசியற எப்போதும் இவர்களுக்கு ஹிதத்தைச் சிந்திக்குமவனே ! என்றவாறு.

திருமுழிக்களத்து விளக்கே!—திருமூழிக்களத்திலே வந்து உன்னுடைய ஸ்வரூப ரூபகுணங்களுக்கு நீயே ப்ரகாசகனாய்க் கொண்டு நிற்கிறவனே! என்கை: திருமுழிக்களம்—மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றனுள் ஒன்று; நம்மாழ்வாராலும் போற்றப்பெற்ற தலம்.

இனியாய் !—'இனியான்' என்பதன் ஈறு திரிந்தவிளி. 'இனியாய தொண்டரோம்' என்பது வழங்கிவரும் பாடம்; அது வியாக்கியானத்திற்குச் சேராது. .... .... .... .... .... .... (சு)

கதியேலில்லை நின்னருளல்ல தெனக்கு *
நிதியே! திருநீர்மலை நித்திலத்தோத்தே! *
பதியே பரவித்தொழும் தொண்டர்தமக்குக்
கதியே! * உன்னைக்கண்டுகொண் டுய்ந்தொழிந்தேனே. (எ)

| | |
|---|---|
| நிதியே | நிதிபோன்றவனே ! |
| திருநீர்மலை | திருநீர்மலையி லெழுந்தருளி யிருக்கிற |
| நித்திலம் தொத்தே | முத்துமாலைபோன்றவனே ! |
| எனக்கு | அடியேனுக்கு |
| நின் அருள் அல்லது | உன்னுடையகிருபையைத் தவிர்த்து |
| கதி இல்லை | வேறொருபுகல் இல்லை ; |
| பதியே பரவி தொழும் தொண்டர் தமக்கு கதியே | திவ்யதேசங்களையே ஏத்தித்தொழுகின்ற பாகவதர்களுக்குக் கதியானவனே ! |

உன்னை கண்டுகொண்டு உய்ந்தொழிந்தேன்.—

* * *—உன்னுடைய திருவருளைத் தவிர்த்து வேறொன்றும் எனக்குப் புகலாவதில்லை ; எனக்கு வைத்தமாநிதியும் நீயே; திருநீர்மலை முதலான திருப்பதிகளில் ஸேவை ஸாதிப்பவனும் நீயே; * விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம் மண்ணகரம் மாமாடவேளுக்கை, மண்ணகத்த தென்குடந்தைதேனார் திருவரங்கம் தென்கோட்டி, கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை, சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே மதிட்கச்சியூரகமே பேரகமே யென்றிப்படி திவ்ய தேசங்களே யாத்திரையாகப் போது போக்கித் திரியும் என்னேடொத்த பக்தர்கட்குக் கதியாயிருக்கும் பெருமானே! உன்னைக் கண்டு கொண்டு உஜ்ஜீவிக்கப் பெற்றேனென்கிறார்.

கதி—மதி என்னும் வடசொல் விகாரம். நிதி—நியி என்னும் வட சொல் விகாரம். திருநறையூர் நம்பிபக்கல் ஈடுபட்டுப் பேசுகிறவர் திருக்கோட்டியூர் திருமூழிக்களம் திருநீர்மலை முதலிய திருப்பதிகளைப் பேசுவதனால்—அந்தந்தத் திருப்பதிகளி லிருப்பை எம்பெருமான் இவர்க்குக் காட்டித் தந்தருளி ஆச்வ ஸிப்பிக்கிறானென்பது தோன்றும்.

நித்திலம்—வடமொழியில், 'நிஸ்தலம்' என்கிற சொல் முத்து என்னும் பொருளதாகக் கவிகளால் பிரயோகிக்கப் படுகின்றது; [illegible]—அதிவித்ரும மஸ்த நிஸ்தலாளீருசம்" என்று வரதராஜ ஸ்தவத்திலே கூரத்தாழ்வானும் பிரயோகித்தருளினர். அந்த நிஸ்தல மென்னும் வட சொல்லே தமிழில் நித்திலமென்று திரிந்திருப்பதாகக்கொள்க. இது தனியே ஒரு தமிழ்ச்சொல் என்பர் சிலர். "திருநீர் மலையிலே வந்து, முத்து மாலையை உடம்பிலே அள்ளி எறட்டுக் கொள்ளுமாபோலே குளிர உடம்பிலே எறட்டு அணைத்துக் கொள்ளலாம்படி யிருக்கிறவனே!" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

மூன்றாமடியில். 'பதியே!' என்று தனியே ஒரு விளியாக்வும் கொண்டு உரைப்பர்; ஆச்ரிதர்க்கு வாஸஸ்தாநமாயுள்ளவனே! என்கை. .... (எ)

அத்தாவரியேயென்று உன்னை யழைக்க *
பித்தாவென்று பேசுகின்றார் பிறரென்னை *
முத்தே! மணிமாணிக்கமே! முளைக்கின்ற
வித்தே! *உன்னை யெங்ஙனம் நான் விடுகேனே? (அ)

| | | | |
|---|---|---|---|
| அத்தா | ஸ்வாமியே! | பித்தா என்று பேசுகின்றார் | 'அடா பித்தனே!' என்று சொல்லுகிறார்கள்; |
| அரியே | (விரோதிவர்க்கங்களை) ஹரிக்குமவனே! | முத்தே | முத்துப்போன்றவனே! |
| என்று | என்று இப்படிப்பட்ட திருநாமங்களைச் சொல்லி | மணி மாணிக்கமே | சிறந்த மாணிக்கம் போன்றவனே! |
| உன்னை அழைக்க | நான் உன்னை அழைக்குமளவில் | முளைக்கின்ற வித்தே | முளைக்கின்றவிதைபோலே பயனளிப்பவனே! |
| பிறர் | அயலார் | உன்னை | இப்படிப்பட்ட வுன்னை |
| என்னை | இப்படி அழைக்கிற என்னைநோக்கி | நான் | அடியேன் |
| | | எங்ஙனம் விடுகேன் | எவ்விதமாக விட்டொழிவேன்?. |

* * *—அடியேன் பிராகிருத ஜனங்களைப்போலே 'உண்டியே உடையே' என்று கூப்பிடுமவனல்லேன்; எப்போதும் பகவத் விஷயத்தி லீடுபட்டு 'அத்தா! அரியே!' என்றிப்படி பகவந் நாமங்களைச் சொல்லிக் கூப்பிடுவதே எனக்குப் போது போக்காயிருக்கின்றது. "[illegible]—திகம்பரஜநே க்ராமே ஹாஸ்யஃ கௌபீநவாந் நரஃ" [கோமணங்கட்

டாத வூரில் கோமணங்கட்டுமவன் பைத்தியக்காரன்] என்னும் பழமொழிப் படியே * உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்தவர்கட்கு நான் பைத் தியக்காரனுகத் தோற்றுகின்றேன் ; உன்னை நான் அத்தா ! என்றழைத்தவாறே என்னை அவர்கள் பித்தா ! என்றழைக்கின்றனர் ; இப்படிப்பட்ட பிராகிருத ஜனங் களின் பரிஹாஸத்திற்கு அஞ்சி உன்னை விட்டுவிடலாமென்று பார்த்தாலோ, உன்னுடைய போக்யதையி லீடுபட்டிருக்குமடியேன் ஒருபடியாலும் விட மாட்டுகின்றிலேனே என் செய்வேனென்கிறுர். "பேயரே யெனக்கியாவரும் யானுமோர் பேயனே........அரங்கா வென்றழைக்கின்றேன், பேயனு யொழிந்தே னெம்பிரானுக்கே" என்ற பெருமாள் திருமொழி இங்கே நினைக்கத்தகும்.

அத்தா—அத்தன் என்பதன் விளி; ஸ்வாமிந் ! என்றபடி. அரி—ஹரி. முளைக்கின்ற வித்தே !—ஜகத்காரண பூதனே ! என்றவாறு. .... (அ)

தூயாய்! சுடர்மாமதிபோல் உயிர்க்கெல்லாம் *
தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணு ! *
ஆயா ! அலைநீ ருலகேழும் முன்னுண்ட
வாயா ! * உன்னையெங்ஙனம் நான்மறக்கேனே? (கூ)

| | | | |
|---|---|---|---|
| தூயாய் | பரிசுத்தனனவனே ! | ஆயா | கோபாலனே ! |
| சுடர் | ஒளிவிடுகின்ற | அலை நீர் உலகு ஏழும் | அலைகடல் சூழ்ந்த ஸப்த லோகங்களையும் |
| மா மதி போல் | பூர்ணசந்திரன்போலே | முன் | முன்னொருகால் |
| உயிர்க்கு எல்லாம் | ஸகலப்ராணிகளுக்கும் | உண்ட வாயா | அமுதுசெய்த திருப்பவளத்தை யுடையவனே ! |
| தாய் ஆய் அளிக்கின்ற | தாய்போன்று அருள்புரிகின்ற | உன்னை | இப்படிப்பட்ட வுன்னை |
| தண் தாமரை கண்ணு | குளிர்ந்த செந்தாமரைப் பூப் போன்ற திருக்கண்களை யுடையவனே ! | நான் எங்ஙனம் மறக்கேன் | நான் எப்படிமறப்பேன் ?. |

* * *—தூயாய் ! என்று திருவுள்ளத்திலுள்ள பரிசுத்தியைச் சொன்ன படி. அநுகூலர் பிரதிகூலர் என்னும் வாசிபாராதே எல்லார் திறத்திலும் நன்மை யையே சிந்திக்கையாகிற திருவுள்ளத் தூய்மையை யுடையவனே ! என்றபடி. இப்படியாகில், கம்ஸ சிசுபால ராவணுதிகளைக் கொன்றது ஏனென்னில்; விளக் கிலே விட்டில் பூச்சிகள் விழுந்து முடியுமாபோலே அவர்கள் விழுந்து மாண்டு போனவளவால் எம்பெருமானது திருவுள்ளத்தூய்மைக்கு ஒரு குறையுண்டோ? அவர்களும் அடிபணிந்து வாழ்ந்து போகவேணு மென்று இவன்தான் செய்த க்ருஷிகளுக்கு எல்லையில்லையே.

[சுடர்மாமதிபோல் இத்யாதி.] பூர்ண சந்திரன் ஸகலதாபங்களையும் தணிக் குமாபோலே ஸகல ப்ராணிகள் விஷயத்திலும் தாய்போன்று குளிர அருள்செய் கின்ற திருக்கண்களை யுடையவனே !. "திங்களுமாதித்தியனு மெழுந்தாற்

இ. சுந்தரமூர்த்தி



போல் அங்கணிரண்டுங்கொண் டெங்கள்மேல் நோக்குதியேல் எங்கள்மேற் சாபமிழிந்தேலோ ரெம்பாவாய்'' என்றது காண்க.

ஆயா !—உன்னுடைய விபூதியானவர்களிலே சிலர் 'இவன் என்னுடைய பிள்ளை' என்று அபிமானிக்கலாம்படி இடைப்பிள்ளையாய் வந்து பிறந்தவனே !. [அலைநீர் இத்யாதி.]. ஆபத்து கரைபுரண்டால் எல்லாரையு மொக்கக் காத்தருளு மியல்வினனே ! இப்படி ஆபத்பந்துவான வுன்னை அடியேன் எங்ஙனே மறக்க வல்லேன் ? ஒருநாளும் மறவேன். .... .... .... (௯)

வண்டார் பொழில்சூழ் நறையூர்நம்பிக்கு * என்றும்
தொண்டாயக் கலியனொலிசெய் தமிழ்மாலை *
தொண்டீர் ! இவைபாடுமின் பாடிநின்றாட *
உண்டேவிசும்பு உந்தமக்கில்லை துயரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| தொண்டீர் | பக்தர்களே !, | தமிழ் மாலை இவை | இத்தமிழ்ப்பாசுரங்களை |
| வண்டு ஆர் பொழில் சூழ் நறையூர் நம்பிக்கு | வண்டுகள்நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட திருநறையூரி லெழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு | பாடுமின் | பாடுங்கோள் ; |
| | | பாடி நின்று ஆட | (அப்படி) பாடியாடப் பெறில் |
| என்றும் | எக்காலத்தும் | உந்தமக்கு | உங்களுக்கு |
| தொண்டு ஆய் | அடிமைபூண்டு | துயர் இல்லை | ஸம்ஸாரத்துன்பங்கள் இல்லையாய்விடும் ; |
| கலியன் | திருமங்கையாழ்வார் | | |
| ஒலி செய் | அருளிச்செய்த | விசும்பு உண்டு | பரமபதம் கிடைக்கும். |

* * *—மது வெள்ளத்திலே வண்டுகள் படிந்து கோலாஹலம் செய்யப் பெற்ற சோலைகளாலே சூழப்பட்ட திருநறையூரில் நிற்கிற ஸமஸ்த கல்யாணகுண பரிபூர்ணனை பெருமானுக்கு அடிமைப்பட்டுத் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளின இத்திருமொழியைத் தொண்டர்காள் ! வாயாரப் பாடுங்கள்; பாடி யாடுங்கள்; இங்ஙனேயாகில் உங்களுடைய ஸம்ஸாரதாபங்க ளெல்லாம் தொலைந்து பரமபத ப்ராப்தியுமுண்டாம் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினா ராயிற்று.

அடிவரவு:—கறவா வற்றா தாரேன் புள் வில் பனி கதி அத்தா துயாய் வண்டார் புள்ளாய்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—இரண்டாந் திருமொழி,

# புள்ளாயேனமுமாய்

### [இதுவுந் திருநறையூர்த் திருப்பதிகம்.]

புள்ளாயேனமுமாய்ப் புகுந்து * என்னையுள்ளங்கொண்ட
கள்வாவென்றலும் என்கண்கள் நீர்கள் சோர்தருமால் *
உள்ளேநின்றுருகி நெஞ்சமுன்னை யுள்ளியக்கால் *
நள்ளேனுன்னையல்லால் நறையூர்நின்ற நம்பியோ ! (க)

ஓ நறையூர் நின்ற நம்பீ !

| | |
|---|---|
| புள் ஆய் ஏனமும் ஆய் புகுந்து | 'ஹம்ஸரூபியாயும் வராஹரூபியாயும் என்னுள்ளேபிரவேசித்து |
| என்னை உள்ளம் கொண்ட கள்வா என்றலும் | என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட கள்வனே !' என்று சொன்னவுடனே |
| என் கண்கள் | எனது கண்களில் நின்றும் |
| நீர்கள் சோர்தரும் | கண்ணீர் பெருகுகின்றது ; |

| | |
|---|---|
| ஆல் | அந்தோ !; |
| நெஞ்சம் | என்மனமானது |
| உன்னை | எம்பெருமானான உன்னை |
| உள்ளியக்கால் | அநுஸந்திக்கப் புகுந்தால் |
| உள்ளே நின்று உருகி | உள்ளே பிடித்து நீராக உருகிப்போவதனால் |
| உன்னை அல்லால் | (இப்படிப்பட்ட அன்புக்கு இலக்கான) உன்னைத் தவிர்த்து (வேறொருவரையும்) |
| நள்ளேன் | நேசிக்கமாட்டேன். |

* * *—எம்பெருமான் 'பிறப்பிலி' என்று பேர் பெற்றிருக்கச்செய்தேயும் 1. "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் 2. "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா !" என்றும் சொல்லுகிறபடியே பலவகைப்பட்ட யோநிகளிலும் பிறந்தருளுகிறான் ; நாம் கருமத்தாலே பிறக்கிறோம், அவன் கருணையாலே பிறக்கிறான் என்னுமிவ்வளவே வாசி. அப்படி பிறந்தருளா நின்றாலும், சிறந்தவையென்று கொண்டாடப்படுகிற தேவமநுஷ்யாதி யோநிகளிலே பிறக்குமளவோடு நிற்கலாகாதா ? மிக்க இழிவான பசு பக்ஷி யோநிகளிலும் வந்து பிறக்க வேணுமா? இப்படியும் ஒரு நீர்மையுண்டோ ? என்று சிந்தித்து நெஞ்சு உருகவும் கண்கள் பனிமல்கவும் பெற்றேன் ; ஆச்ரிதர்க்குக் காரியஞ் செய்யவேணு மென்று திருவுள்ளத்தில் தோன்றிவிட்டால் ஜந்ம நிகர்ஷங்களையும் கணிசியாதே எந்தப் பிறவியில் வேணுமானாலும் மனமுவந்து பிறந்தருள்கின்ற உன்னையல்லது வேறொருவரை நேசிக்கமாட்டேன் ; இப்படிப்

1. புருஷ ஸூக்தம். 2. திருவிருத்தம். 1.

பட்ட திருக்குணங்களைத் திருநறையூரி லெழுந்தருளியிருக்கு மிருப்பிலே விளங்கக் காட்டிக்கொண்டு என்னை அடிமை கொள்ளப் பெறுவதே! என்று உள் குழைந்து பேசுகிறாராயிற்று.

'புள்ளாயேனமுமாய்ப் புகுந்து' என்றது—ஹம்ஸரூபியாயும் வராஹரூபியாயும் திருவவதரித்த நீர்மையை என்னெஞ்சிலே தோற்றுவித்து என்றவாறு. நான்முகனிடமிருந்து வேதங்களைக் கொள்ளைகொண்டு கடலில் மூழ்கி மறைந்து உலகமெங்கும் பேரிருளை மூட்டி நலிந்த மதுகைடபர்களைக், கடலினுள் புக்குக் கொன்று வேதங்களைமீட்டுக் கொணர்ந்து, பாலையும் நீரையும் பிரிக்கவல்ல ஹம்ஸரூபியாய் அவ்வேதங்களைப் பிரமனுக்கு உபதேசித்த வரலாறும், முன்னொருகால் பூமியைப் பாயாகச் சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன ஹிரண்யாக்ஷனைத் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் திருமால் மஹாவராஹமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளின வரலாறும் இங்கு அறியத்தக்கன.

என்னையுள்ளங் கொண்ட கள்வா!=இரண்டவதார சேஷ்டிதங்களையும் எனக்குத் தெரிவித்து அம்முகத்தாலே எனது நெஞ்சை எனக்குத் தெரியாமலே அபஹரித்துக் கொண்டவனே! என்று நான் வாய்விட்டுச் சொன்னவாறே ஆநந்த பாஷ்பம் அருவிசோரத் தொடங்கிற்றென்கிறார். ஆல்—ஆநந்த மிகுதியைக் காட்டுவதோரிடைச்சொல்.

நள்ளேன்—எதிர்மறைத் தன்மை வினைமுற்று. .... .... (க)

ஓடா வாளரியி னுருவாய்மருவி * என்றன்
மாடேவந்_ அடியேன் மனங்கொள்ளவல்ல மைந்தா ! *
பாடேன் தொண்டர்தம்மைக் கவிதைப் பனுவல்கொண்டு *
நாடே னுன்னையல்லால் நறையூர்நின்ற நம்பீயோ ! (உ)

| | |
|---|---|
| ஓடா | நாட்டில் எங்கும் நடையாடாத |
| ஆள் அரியின் உரு ஆய் | நரஸிம்ஹரூபியாய் |
| என்றன் மாடே வந்து மருவி | என்பக்கல்வந்து பொருந்தி |
| அடியேன் | அடியேனுடைய |
| மனம் | மனத்தை |
| கொள்ள வல்ல மைந்தா | கவர்ந்து கொள்ளக் கூடிய மிடுக்கையுடையவனே! |

ஓ நறையூர் நின்ற நம்பீ !—;

| | |
|---|---|
| பனுவல் கவிதை கொண்டு | இலக்கணம் வழுவாத கவிகளைக்கொண்டு |
| தொண்டர் தம்மை | நீசர்களை |
| பாடேன் | பாடுவது தவிர்ந்தேன்; |
| உன்னை அல்லால் | உன்னைத் தவிர (வேறொருவரைக் கவிபாட) |
| நாடேன் | முயலமாட்டேன். |

* * *—ஹம்ஸாவதாரத்திலும் வராஹாவதாரத்திலும் தமது நெஞ்சு ஈடுபட்டு உருகினபடியைக் கீழ்ப்பாட்டில் அருளிச் செய்தார்; நரஸிம்ஹாவதாரத்திலீடுபாட்டை இப்பாட்டி லருளிச்செய்கிறார். உலகத்தில் எங்கும் கண்டறியாத

புதியதொரு பிறவி பிறப்பதே!; மநுஷ்யனுகவாவது சிங்கமாகவாவது அவரித்தாலாகாதோ? நரங்கலந்த சிங்கமென்று புதிதாகவொரு பிறவியைக் கற்பித்துக்கொண்டு அதிலே பிறந்த நீர்மை என்கொல்! என்று தமது திருவுள்ளம் ஆழ்ந்தமையை முன்னடிகளி லருளிச்செய்கிறுர்.

"தாழ்ந்த ஜந்மத்திலே வேணுமாகில் பிறக்கிருய்; நாட்டார் பிறக்கும் பிறவிகளைப் பிறக்கலாகாதோ?" என்பர் பெரியவாச்சான் பிள்ளையும்.

அடியேன் மனங்கொள்ளவல்ல மைந்தா!=பண்டு நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றினவன்று ப்ரஹ்லாதாழ்வானுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்டாயென்பது உனக்கு ஒரு மிடுக்கு அல்ல; கல்நெஞ்சனை என்னுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டதுவே உனக்குப் பெருமிடுக்குக் காண்! என்பது உள்ளுறை.

இப்படிப்பட்ட அற்புத சக்திவாய்ந்த உன்னையல்லது மற்றொருவரையும் என் நாவினுற் பாட முயலவும் மாட்டேனென்கிறுர் பின்னடிகளில். 'தொண்டர்' என்றது கூழாட்பட்டு நிற்பவர்களை. "கவிதைப்பனுவல்" என்றதை "பனுவல் கவிதை" என மாற்றி அந்வயித்துக்கொள்க. சாஸ்த்ரோக்தமான லக்ஷணங்களில் குறையற்ற கவித்துவமென்றபடி. .... .... .... .... (உ)

எம்மானு மெம்மனையும் என்னைப்பெற் றொழிந்ததற்பின் *
அம்மானு மம்மனையும் அடியேனுக் காகிநின்ற *
நன்மான வொண்சுடரே! நறையூர்நின்றநம்பீ! * உன்
மைம்மான வண்ணமல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. (௩)

| | |
|---|---|
| எம்மானும் | என் தகப்பனும் |
| எம் அனையும் | என் தாயும் |
| என்னை பெற்று | என்னைப் பிரஸவித்துவிட்டு |
| ஒழிந்ததன் பின் | நீங்கினபின்பு |
| அடியேனுக்கு | அடியேனுக்கு |
| அம்மானும் | தகப்பனும் |
| அம்மனையும் | தாயும் |
| ஆகி நின்ற | தானேயாய்நின்ற |
| நல் | விலக்ஷணமாய் |
| மானம் | பெருமைபொருந்திய |
| ஒண் | அழகியதான |
| சுடரே | தேஜஸ் ஸ்வரூபியே!, |
| | நறையூர் நின்ற நம்பீ!—; |
| உன் | உன்னுடைய |
| மை மானம் | மைபோன்ற |
| வண்ணம் அல்லால் | திருமேனிநிறத்தையல்லது (வேறொன்றையும்) |
| மகிழ்ந்து | மனமுவந்து |
| ஏத்த மாட்டேன் | துதிக்கமாட்டேன். |

* * *—மாதாபிதாக்களிற் காட்டிலும் பரம உபகாரகனை வுன்னை எவ்வகையாலும் மறக்கவல்லேனல்லே னென்கிறுர். மாதாபிதாக்கள் காமப்ரேரிதராய்ப் ப்ரஜைகளை உத்பத்திபண்ணி விடுவர்கள்; பிறகு 'யௌவநவிரோதி' என்று உபேக்ஷித்தொழிவர்கள்; அவர்கள் கைவிட்டகாலத்தும் கைவிடாதே உடனிருந்து காத்தருள்பவன் எம்பெருமானேயாதலால் "ஶாதா விதா ஹாதா நிவாஸஶ்ச

ரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:" என்றும் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினி ஆவாரே" என்றும் ஸகலவிதபந்துவுமாக அப்பெருமானே கொள்ளவுரியன் என்கிற உறுதியை வெளியிடுகிறார். "பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும் நின்றடியேனுக்கு, உற்றானாய் வளர்த்து என்னுயிராகி நின்றானை,........எத்தால் யான்மறக்கேன் இது சொல்லென் ஏழைநெஞ்சே!" என்பர் மேல் எட்டாம்பத்திலும்.

நான்மானவொண்சுடரே!=விலக்ஷணமாய் அளவிறந்த ஒள்ளிய சுடரையுடையவனே!, என்றவாறே 'இப்படிப்பட்ட திருவுருவம் பரமபதநாதனுக்கேயன்றோவுள்ளது' என்று சிலர் நினைக்கக்கூடுமென்றெண்ணி உடனே 'நறையூர் நின்றநம்பீ!' என்கிறார். .... .... .... .... (க)

சிறியாயோர் பிள்ளையுமாய் உலகுண்டோ ராலிலைமேல்
உறைவாய்! * என்நெஞ்சினுள்ளே யுறைவாய், உறைந்ததுதான் *
அறியாதிருந் தறியேன் அடியேன், அணிவண்டுகிண்டும் *
நறைவாரும் பொழில்சூழ் நறையூர்நின்ற நம்பியோ! (௨)

| | |
|---|---|
| அணி வண்டு | அழகிய வண்டுகள் |
| கிண்டும் | குடையப்பெற்றதும் |
| நறை வாரும் | தேன் பெருகப்பெற்றதுமான |
| பொழில் | சோலையாலே |
| சூழ் | சூழப்பட்ட |
| நறையூர், நின்ற நம்பியோ!—; | |
| சிறியாயோர் பிள்ளையும் ஆய் | மிகச் சிறுகுழந்தையாய் |
| உலகு உண்டு | உலகங்களை உட்கொண்டு |
| ஓர் ஆல் இலை மேல் | ஒரு ஆலந்தளிரிலே |
| உறைவாய் | பொருந்தியிருந்தவனே! |
| என் நெஞ்சின் உள்ளே உறைவாய் | எனது நெஞ்சுக்குள்ளே வஸிப்பவனே! |
| உறைந்தது தான் | (நீ இப்படி என்னெஞ்சினுள்ளே) வாஸஞ்செய்தருள்வதை |
| அடியேன் | அடியேன் |
| அறியா திருந்தறி யேன் | தெரிந்துகொள்ளாம லிருக்கவில்லை. |

* * *—உலகங்களையெல்லாம் பிரளயங் கொள்ளப்புகுந்தவாறே அனைத்தையும் திருவயிற்றடக்கி மிகுஞானச் சிறுகுழவியாய் ஒரு சிற்றாலந்தளிரிலே துயில் கொண்டாய் என்பதைக் கேட்டார்வாய்க் கேட்டிருந்தேன்; அந்தத் திருவுருவத்தோடு இன்று என்னெஞ்சினுள்ளே வந்து உறைகின்றபடியை நன்கு தெரிந்து கொண்டேன்; மற்றையாரைப் போலே நான் நன்றியுணர்வு கெட்டவனல்லேன்; இப் பெருநன்றியைச் சிந்தியாமல் ஒருபொழுதும் நானிருப்பதில்லை என்கிறார்.

ஆலிலைமேலுறைவாய் என்னெஞ்சினுள்ளே உறைவாய்=ஆலிலைபோலே என்னெஞ்சையும் உரிய இடமாகக் கொண்டாய் என்றாவது, ஆலிலையை இகழ்ந்திட்டு என்னெஞ்சை இடமாகக் கொண்டாய் என்றாவது கருத்துக் கொள்ளலாம்.

அணிவண்டுகிண்டும் நறைவாரும்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பியோ= பரமபோக்யமான திருநறையூர்ப்பதி உனக்கு இருப்பிடமாக அமைந்திருக்கச்

செய்தேயும் அதனையும்விட்டு என்னெஞ்சிலே உறைகின்றபாதலால் உன்விஷயத்திலே அடியேன் சாலவும் க்ருதஜ்ஞனு யிராநின்றேனென்றவாறு.

சிறியாய்—'சிறுமை' என்னும் பண்புப்பெயரில் மைவிகுதி கெட்டு, 'று' என்பதிலுள்ள உகரம் இகரமாகத் திரிந்து சிறுமையென்னும் பொருளையே காட்டும். ஆய என்பது 'ஆய்' எனத் தொக்கிநின்றது. .... .... (ச)

நீண்டாயை வானவர்கள் நினைந்தேத்திக் காண்பரிதால் *
ஆண்டாயென்று ஆதரிக்கப்படுவாய்க்கு நானடிமை
பூண்டேன்* என்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப் போகலொட்டேன் *
நாண்டா னுனக்கொழிந்தேன் நறையூர்நின்ற நம்பீயோ ! (ரு)

நறையூர் நின்ற நம்பீயோ !—;

| | |
|---|---|
| நீண்டாயை | நெடுமாலாகிய உன்னை |
| வானவர்கள் | பிரமன் முதலியதேவர்கள் |
| நினைந்து | தியானித்து |
| ஏத்தி | தோத்திரம்பண்ணி |
| காண்பு அரிது | காண்பதானது அஸாத்யமான காரியம் ; |
| ஆண்டாய் என்று ஆதரிக்கப் படுவாய்க்கு | 'எம்பெருமானே !' என்று (தேவர்களால்) ஆதரித்துத் துதிக்கப்படுகின்ற உன்விஷயத்தில் |
| நான் அடிமை பூண்டேன் | நான் அடிமைத்தொழில் செய்யப் பெற்றேன் ; |
| என் நெஞ்சின் உள்ளே புகுந்தாயை | எனது மனத்தினுள்ளே புகுந்திருக்கிற உன்னை |
| போகல் ஒட்டேன் | இனி வேறோரிடம் போகவொட்டேன்; |
| உனக்கு | உன்விஷயத்திலே |
| நாண் தான் ஒழிந்தேன் | வெட்கமற்றவனானேன். |

* * *—'நீண்டாயை' என்றது—ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி இத்யாதிகளில் ஒவ்வொன்றுமே எல்லைகாணவொண்ணாதபடி அபரிச்சிந்நமாயிருக்கிற வுன்னை என்றபடி. பிரமன் முதலிய தேவர்கள் ஞானசக்திகளிற் சிறந்தவர்களாயிருந்தாலும் கொக்கு கடலைக்கண்டாற்போலே உன் ஸ்வரூப ரூபகுண விபூதி விஸ்தாரங்களைக் கண்டு வியர்த்து சிந்திக்கவும் பேசவும் மாட்டாதே திகைத்து நிற்பர்கள் ; எல்லைகண்டு பேசமுடியாமற் போனாலும் ஸ்வரூபஸத்தைக்காக ஏதேனும் பேசவேணுமே ; 'ஆண்டாய்' [ஸ்வாமிந் !] என்று பேசுவர்களாம் ; இப்படி வானவர்களால் ஆதரித்துப் பேசப்படுகிற வுன்விஷயத்திலே நான் நித்ய கைங்கரியஞ்செய்வதாக ஒருப்பட்டேன் ; நீயும் இஃதறிந்து என்னெஞ்சினுள்ளே வந்து புகுந்துகொண்டாய் ; இனி நீ பெயர்ந்து போகப் பார்த்தாலும் "திருவாணை நின்னாணை கண்டாய்" என்னுமாபோலே ஆணையிட்டாகிலும் தடுப்பனேயன்றி உன்னை விட்டுக்கொடுக்க ஸம்மதிக்கக் கடவேனல்லேன் ; என்று சொன்ன ஆழ்வாரை நோக்கித் திருநறையூர் நம்பி, "ஆழ்வீர் ! நீர் அடிக்கடி அடியேன் அடியேன் என்கிறீர் ; சேஷி செய்தபடி செய்யக் கண்டிருப்பதன்றோ சேஷபூதர்க்கு உரியது ; 'ஒட்டேன்' என்று நிர்ப்பந்திக்கை உம்முடைய ஸ்வரூபத்துக்குச் சேராதே" என்ன, 'நாண்தான் உனக்கொழிந்தேன்' என்கிறார். "மடலெடுக்க நினைப்பார் 'இது ஆம், இது ஆகாது' என்றுபார்த்தோ காரியஞ் செய்வது?" என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம். வெட்கமற்று

வெளிப்புறப்பட்ட நான் என்ன அடைவிலே நிற்கமுடியும் என்றவாறு. (மட லெடுத்தது திருநறையூர் நம்பி விஷயத்திலேயிறே; "நம்பிநறையூரர், என் னிலைமைகண்டு மிரங்காரேயாமாகில், மன்னுமடலூர்வன் வந்து" என்ற பெரிய திருமடல்தனியன் காண்க.) .... .... .... (ரு)

எந்தாதை தாதையப்பால் எழுவர் பழவடிமை
வந்தார் * என்நெஞ்சினுள்ளே வந்தாயைப் போகலொட்டேன் *
அந்தோ! என்னாருயிரே! அரசே! அருளெனக்கு *
நந்தாமல் தந்தவெந்தாய்! நறையூர்நின்ற நம்பீயோ! (சு)

| | |
|---|---|
| என் ஆர் உயிரே | எனது அருமையான உயிர் போன்றவனே! |
| அரசே | என்னை ஆள்பவனே! |
| எனக்கு | என் திறத்தில் |
| அருள் | கிருபையை |
| நந்தாமல் | குறைவின்றி |
| தந்த | செய்தருளின |
| எந்தாய் | எம்பெருமானே! |
| நறையூர் நின்ற நம்பீயோ!—; | |
| எம் தாதை | நானும் என் தகப்பனும் |
| தாதை | அவன் தகப்பனும் |
| அப்பால் | அவனுக்கு முன்புண்டான |
| எழுவர் | ஸப்த புருஷர்களும் |
| (ஆகப் பத்துத்தலைமுறையாக) | |
| பழவடிமை வந்தார் | இயற்கையான அடிமையைச் செய்து வந்தவர்கள்; |
| என் நெஞ்சின் உள்ளே | எனது மனத்தினுள்ளே |
| வந்தாயை | வந்து சேர்ந்த உன்னை |
| போகல் ஒட்டேன் | இனி வேறிடம் போக வொட்டேன். |

* * *—தாம் அனேக வம்சபரம்பரையாகப் பகவத்விஷயத்திலே தொண்டு பட்டிருக்கும்படியை முதலடியில் வெளியிடுகிறார். நம்முடையவர்கள் இதையொரு ஏற்றமாகச் சொல்லிக் கொள்வதுண்டு; "ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்", "எந்தை தந்தை தந்தை தந்தை தம்மூத்தப்பனேழ்படிகால் தொடங்கி வந்து வழிவழியாட் செய்கின்றோம்" இத்யாதிகள் காண்க. நான், என்னுடைய தகப்ப னார், அவருடைய தகப்பனார், அவர்க்கு அப்பால் எழுவர் என்றிப்படி பாரம்பரிய மாக அநந்யார்ஹ சேஷத்வத்தில் ஊன்றியிருப்போம் நாம்; இப்படி அடிமைச் சுவடு நன்கறியப் பெற்றிருக்கிற அடியேன் என்னெஞ்சினுள்ளே வந்து சேர்ந் திருக்கிற தேவரீரை இனி வேறிடம்போகவொட்டுவேனோ? என்கிறார்.

'போகவொட்டேன்' என்று ஆழ்வார் சொல்லச் செய்தேயும் எம்பெருமான் போகப்புக்கமைதோன்ற நின்றானும்; அந்த நிலைமையைக் கண்டு 'அந்தோ!' என்கிறாராம். ஐயோ! உனக்குப் பெறாப் பேறாகக் கிடைத்த இவ்வஸ்துவையும் இழக்கப்பார்க்கலாமோ? என்றவாறு. இன்றளவும் என்விஷயத்திலே அருளைக் குறையறச் செய்துவருகின்ற நீ இன்று அருட்குறை தோன்றுமாறு அகலநினைப் பது வேண்டாவென்கை.

என் ஆருயிரே!=உன்னையொழிய ஜீவியாதபடி என் ஸத்தையை நிர்வஹித் துக்கொண்டு போருகிறவனே! என்றபடி. .... .... (சு)

மன்னஞ்ச வாயிரந்தோள் மழுவின்துணித்த மைந்தா ! *
என்னெஞ்சத் துள்ளிருந்து இங்கினிப்போய்ப் பிறரொருவர் *
வன்னெஞ்சம் புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன் *
நன்னெஞ்ச வன்னமன்னும் நறையூர்நின்ற நம்பியோ ! (எ)

| | |
|---|---|
| நல் நெஞ்சம் | (அடியார் திறத்தில்) நல்ல ஹ்ருதயத்தை யுடையளான |
| அன்னம் | அன்ன மென்னடை யாளான பிராட்டி |
| மன்னும் | பொருந்தி வாழ்கிற |
| நறையூர், நின்ற நம்பீயோ!—; | |
| மன் அஞ்ச | க்ஷத்ரியர்களெல்லாரும் அஞ்சும்படியாக |
| ஆயிரம் தோள் | (கார்த்த வீரியார்ஜுநனுடைய) ஆயிரந் தோள்களையும் |
| மழுவின் | கோடாலிப்படையினல் |
| துணித்த | அறுத்தொழித்த |
| மைந்தா | மிடுக்கனே ! |
| என் நெஞ்சத்துள் | எனது நெஞ்சினுள்ளே |
| இருந்து | இருந்து வைத்து |
| இனி | இனிமேல் |
| இங்கு போய் | இங்கு நின்றும் வேறோரிடம்போய் |
| பிறர் ஒருவர் | வேறொருவருடைய |
| வல் நெஞ்சம் | கடினமான நெஞ்சிலே |
| புக்கு இருக்க | புகுந்திருக்க |
| ஒட்டேன் | ஸம்மதிக்கமாட்டேன் ; |
| வளைத்து வைத்தேன் | தடை செய்கின்றேன். |

* * *—"என்னெஞ்சினுள்ளே வந்தாயைப்போக லொட்டேன்" என்று நிர்ப்பந்தித்த ஆழ்வாரை மீறிக்கொண்டு புறப்பட்டுப் போகநினைத்த எம்பெருமான் அதற்குறுப்பான தன்மிடுக்கைக் காட்டினன் ; 'அந்தமிடுக்கில் ஒருகுறையுமில்லை, நானறிவேன் பிரானே !' என்று தாமறிந்த மிடுக்கொன்றை விரித்துரைக்கின்றார் முதலடியில். உலகத்திலே எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்ரியவம்சங்கள் பலவற்றை நாசஞ்செய்யும் பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையினிடம் இராமனுய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனால் பரசுராமனென வழங்கப்பெற்றமை யறிக.

ஆயிரம் புஜங்களை யுடையவன் கார்த்தவீரியார்ஜுநன் ; இவன் ஒரு காலத்தில் ஸேனையுடனே வனத்திற் சென்று வேட்டையாடிப் பரசுராமரது தந்தையான ஜமதக்நி முனிவரது ஆச்ரமத்தையடைந்து அவரநுமதியால் அங்கு விருந்துண்டு மகிழ்ந்து மீளுகையில், அவரிடமிருந்த காமதேநு அவர்க்குப் பல வளங்களையும் எளிதில் சுரந்தளித்தமைகண்டு அதனிடம் ஆசைகொண்டு அப் பசுவை அவரநுமதியில்லாமல் வலியக்கவர்ந்து போக, அதனையறிந்த அப்பார்க்கவராமர் பெருங்கோபங்கொண்டு சென்று கார்த்தவீரியனுடன் போர்செய்து அவனது ஆயிரந் தோள்களையும் தலையையும் தமது கோடாலிப் படையால் வெட்டி வீழ்த்தி வெற்றிபெற்றனரென்ற வரலாறு முதலடிக்கு அறியத்தக்கது.

ராஜலோகமெல்லாம் அஞ்சும்படி அவர்கட்கு வேர்ப்பற்றான ஸஹஸ்ரபாஹு வர்ஜுநனுடைய தோள்களாயிரத்தையும் மழுவினால் துணித்த மிடுக்கனே!, நீ செய்ய நினைக்குங் காரியத்திற்கு ஒரு இடையூறு நேருமென்று நினைப்பவனல்லே னடியேன்; உன்னுடைய மிடுக்குக்கு இசையாதவனு மல்லேன்; அந்த மிடுக்கை விதேயனான அடியேனிடத்திலே உபயோகிக்க வேண்டா வென்பதே வேண்டு கோள் என்பது உள்ளுறை.

பிறரொருவர் வன்னெஞ்சம் புக்கிருக்கவொட்டேன் = தம்முடைய நெஞ்சு தவிர மற்றையோருடைய நெஞ்சு எல்லாம் வல்நெஞ்சு என்றும் தம்முடைய நெஞ்சு ஒன்றே மெல்நெஞ்சு என்றும் நினைத்திருக்கிறாராழ்வார். உண்மையில், பகவத் விஷயத்தில் இத்தனை உருக்கம் மற்றையோர்க்கு இல்லையிறே. வளைத்து வைத்தேன் = ஏழைகளாயிருப்பவர் செல்வர் மாளிகை வாசலைப் பற்றிக்கொண்டு 'யாம் வேண்டுகின்றவற்றை நீ தந்தாலன்றி உன்னைவிட மாட்டோம்' என்ற உறுதியுடன் அவர்களை வளைத்துக்கொண் டிருப்பதுபோலவும், பரதாழ்வான் சித்திரகூடத்தேறப் போந்து இராமபிரானை வளைத்துக் கொண்டாற் போலவும்.

நன்னெஞ்ச வன்னமன்னும் நறையூர் = 'நன்னெஞ்சம்' என்ற விசேஷ ணத்தின் ஸ்வாரஸ்யத்தை நோக்கி 'அன்னம்' என்பதற்கு * அன்னநடைய அணங்காகிய பெரிய பிராட்டியார் என்று பொருளுரைக்கப்பட்டது. "நீர் குற் றங் கண்டு கைவிடப் பார்க்குமன்றும் 'நகஸ்ஸிந்நாவராயுதி—ந கச்சிந்நாப ராத்யதி' என்னுமவளன்றோ அருகேயிருக்கிறாள்" என்பது பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியான வருளிச்செயல். பெரிய திருமடலில் "இரும்பொழில் சூழ் மன்னுமறையோர் திருநறையூர் மாமலைபோல், பொன்னியலுமாடக் கவா டம் கடந்துபுக்கு, என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்" என்றபின் நாச்சி யாரைப்பற்றிப் பேசுங்கால், "மன்னுமரதகக் குன்றின் மருங்கே ஓர், இன்னிள வஞ்சிக் கொடியொன்று நின்றதுதான், அன்னமாய்.... .... அன்ன திருவுருவம் நின்றது" என்று பிராட்டியை அன்னமாக அருளிச்செய்தது காண்க. .... (எ)

எப்போதும் பொன்மலரிட்டு இமையோர் தொழுது * தங்கள்
கைப்போது கொண்டிறைஞ்சிக் கழல்மேல் வணங்கநின்றாய் *
இப்போதென்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப் போகலொட்டேன் *
நற்போது வண்டுகிண்டும் நறையூர்நின்ற நம்பியோ! (அ)

| | | | |
|---|---|---|---|
| நல் போது | நல்ல புஷ்பங்களிலே | தொழுது | வணங்கி |
| வண்டு கிண்டும் | வண்டுகள் குடையப் பெற்ற | தங்கள் | தங்களுடைய |
| நறையூர், நின்ற நம்பியோ!—; | | கை போது கொண்டு இறைஞ்சி | புஷ்பம் போன்ற கைகளினால் அஞ்ஜலிசெய்து |
| இமையோர் | நித்யஸூரிகள் | கழல் மேல் | திருவடிகளிலே |
| எப்போதும் | எக்காலத்திலும் | வணங்க நின்றாய் | ஆச்ரயிக்குமாறு நிற்பவனே! |
| பொன் மலர் இட்டு | நல்ல பூக்களை ஸமர்ப்பித்து | | |

| | | | |
|---|---|---|---|
| இப்போது | இன்று | புகுந்தாயை | வந்துபுகுந்தவுன்னை |
| என் நெஞ்சின் உள்ளே | எனது மனத்துள்ளே | போகல் ஒட்டேன் | வேறிடம் போகவொட்டேன். |

* * *—தேவரீரை வணங்கி வாழ்த்தி வழிபாடு செய்யுமவர்கள் பல்லாயிரவர் குறையற்றிருக்கச் செய்தேயும் அவர்கட்குக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கு மிருப்பிற்காட்டிலும் என்னெஞ்சிலே வந்து புகுந்திருக்குமதுவே சிறப்பு என்று திருவுள்ளம்பற்றி இமையோர்களையும் விட்டு என்னெஞ்சிலே புகுந்தருளிற்று; இனி நான் போகலொட்டேன்—என்கிறார்.

பொன்மலர்— பொன்போல் விரும்பத்தக்கமலர் என்றபடி. 'தொழுது இறைஞ்சி, வணங்க' என்ற ஒருபொருட் பன்மொழிகள் மனமொழி மெய்களாகிற த்ரிகரணங்களி னுடையவும் வ்ருத்தியைச் சொல்லுகின்றன வென்னலாம். கைப்போது கொள்ளுதல்— அஞ்ஜலி செய்தல். (அ)

ஊனே ராக்கைதன்னை யுழந்தோம்பி வைத்தமையால் *
யானுயென்றனக்காய் அடியேன் மனம்புகுந்த
தேனே ! * தீங்கரும்பின்தெளிவே ! என்சிந்தைதன்னால் *
நானே யெய்தப்பெற்றேன் நறையூர்நின்ற நம்பீயோ ! (கூ)

| | | | |
|---|---|---|---|
| யான் ஆய் | எனக்கு அந்தராத்மாவாய் | ஊன் ஏர் ஆக்கை தன்னை | மாம்ஸமயமான சரீரத்தை |
| என் தனக்கு ஆய் | எனக்கு விதேயனாய்க் கொண்டு | உழந்து | (பலவகைகளாலும்) சிரமப்பட்டு |
| அடியேன் மனம் புகுந்த | அடியேனுடைய மனத்தினுட் பிரவேசித்த | ஓம்பி வைத்தமை யால் | பேணிவைத்துக் கொண்டிருந்ததனால் |
| தேனே | தேன்போல் இனியவனே ! | என் சிந்தை தன்னால் | என்னுடைய மனத்தினால் |
| தீம் கரும்பின் தெளிவே | இனிமையான கரும்பின் சாறுபோன்றவனே ! | நானே எய்த பெற்றேன் | (இப்போது உன்னை) நானே வந்தடையப்பெற்றேன். |
| நறையூர் நின்ற நம்பீயோ !—; | | | |

* * *—"விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்—பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதி ஸம்யுதா" என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது; எம்பெருமானுக்கு வழிபாடுகள் செய்தற்காகவே இந்த கரணகளேபரங்கள் தந்தருளப்பட்டன வென்பது அதன் கருத்து; அப்படி பகவத் கைங்கரியத்திற்கே உபகரணமான உடலை நான் பெற்றிருந்தாலும் கீழ்கழிந்த காலமெல்லாம் பாழே கழிந்தனவாதலால் அவ்வுடலைக் கொண்டு ஒரு பயனும் பெறு தொழிந்தேன் முன்பெல்லாம்; இவ்வுடலை ச்ரமப்பட்டுப் போஷித்து வந்ததற்குத் தக்கபயன் இன்று பெற்றே னென்கிறார்.

"ஊனேராக்கை தன்னை உழந்தோம்பி வைத்தமையால் நானே எய்தப்பெற்றேன்" என்று அந்வயிப்பது. மாம்ஸம் மல்கும்படிசரீரத்தைப் பலபரிச்ரமங்கள் பட்டு வளர்த்து வந்தேனுதலால் அதன்பலனை இன்று ஸம்பாதித்துக்கொண்டேனென்கை. "ஶரீரமாத்யம் ஖லு ధர்மஸாதநம்—சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்" என்கிறபடியே தர்மாநுஷ்டாநத்திற்கு இன்றியமையாத சரீரத்தைப் போஷிக்க வேண்டியது அவசியமே; இதுவரை நான் போஷித்து வந்தது பயன்பெறு தொழிந்தது; இப்போது அங்ஙனன்றியே பயன்பெற்றதாயிற்று என்று மகிழ்ந்து பேசினாராயிற்று. .... .... .... (௯)

நன்னீர் வயல்புடைசூழ் நறையூர்நின்ற நம்பியை *
கன்னீர மால்வரைத்தோள் கலிகன்றி மங்கையர்கோன் *
சொன்னீர சொல்மாலை சொல்லுவார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால் மகிழ்ந்து நெடுங்காலம் வாழ்வாரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| நல் நீர் | நல்ல நீரையுடைய | கலிகன்றி | திருமங்கையாழ்வார் (அருளிச்செய்த) |
| வயல் | கழனிகளாலே | சொல் நீர | கொண்டாடிச் சொல்ல வேண்டுவதையே ஸ்வபாவமாகவுடைய |
| புடை சூழ் | நாற்புறமுஞ் சூழப்பட்ட | சொல் மாலை | இச்சொல்மாலைகளை |
| நறையூர் | திருநறையூரில் | சொல்லுவார்கள் | கற்பவர்கள் |
| நின்ற | நித்யவாஸம் செய்தருள்கின்ற | சூழ் விசும்பில் | பெரிய திருநாட்டில் |
| நம்பியை | எம்பெருமான் விஷயமாக, | நல் நீர்மையால் | (நித்யகைங்கர்யமாகிற) சிறந்த ஸ்வபாவத்தோடு கூடி |
| கல் நீர மால் வரை தோள் | ஒலிக்கின்ற அருவிநீரையுடைய பெரிய மலை போன்ற திருத்தோள்களை யுடையவரும் | நெடுங்காலம் | சாச்வதமாக |
| மங்கையர் கோன் | திருமங்கைநாட்டிலுள்ளார்க்குத் தலைவருமான | மகிழ்ந்து வாழ்வார் | பரமாநந்தங்கொண்டு வாழப்பெறுவர். |

* * *—நீர்வளம் பொருந்திய வயல்களால் சூழப்பட்ட திருநறையூரிலெழுந்தருளியிருக்கு மெம்பிரான் விஷயமாகத் திருமங்கை யாழ்வாரருளிச்செய்த இத்திருமொழியை ஓதுமவர்கள் நித்யவிபூதியிற் சென்று நித்யாநந்தமநுபவிக்கப் பெறுவர்களென்று பயனுரைத்தாராயிற்று.

கல்நீர=‘நீர’ என்றது நீர்மையை [ஸ்வபாவத்தை] யுடைய என்றபடி. ‘நீர்மை’ என்னும் பண்புப் பெயரில் ஈறுபோயிற்று; அ—குறிப்புப் பெயரெச்ச விகுதி. ‘சொல் நீர’ என்பதிலும் இங்ஙனமே கொள்க. சொல்—கொண்டாடிச் சொல்லப்படுவதை, நீர—இயற்கையாகவுடைய என்றபடி. "இத்தையநுஸந்தித்தார்க்கு ‘இதொரு சப்தமே!’ என்று கொண்டாடு மிதுவே ஸ்வ

' பாவமாம்படியிருக்கிற சொல்தொடையை" என்பது பெரியவாச்சான் பிள்ளையியாக்கியான ஸ்ரீஸூக்தி. .... .... .... (௧௦)

அடிவரவு:—புள் ஓடா எம்மானும் சிறியாய் நீண்டாய் எந்தாதை மன் எப்போதும் ஊனேர் நன்னீர் சினவில்.

## இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து — மூன்றாந் திருமொழி,

# சி ன வி ற் செ ங் க ண்.

---

[இதுவும் திருநறையூர்த் திருப்பதிகம்.]

உரையவதாரிகை:— கீழ்த் திருமொழியில் "ஊனேராக்கைதன்னை உழந்தோம்பி வைத்தமையால்—நானே யெய்தப்பெற்றேன்" என்றாரே; அப்படி எய்தப்பெற்ற பெருமையைப் பரக்க அருளிச்செய்கிறார் இத்திருமொழியில். *

சினவில்செங்க ணரக்க ருயிர்மாளச்
செற்றவில்லியென்று கற்றவர்தந்தம்
மனமுள்கொண்டு * என்றுமெப்போதும் நின்றேத்தும்
மாமுனியை மரமேழெய்த மைந்தனை *
நனவில்சென்றார்க்கும் நண்ணற்கரியானை
நானடியேன் நறையூர்நின்றநம்பியை *
கனவிற்கண்டேனின்று கண்டமையால் என்
கண்ணிணைகள் களிப்பக் களித்தேனே. (௧)

| | | | |
|---|---|---|---|
| சினம் இல் | கோபத்துக்கு இருப்பிடமாய் | மனம் உள் கொண்டு | நெஞ்சிலே தியானித்து |
| செம் கண் | சிவந்தகண்களையுடையரான | என்றும் எப்போதும் | எக்காலத்திலும் எல்லா நிலைமைகளிலும் |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | நின்று | நிலைநின்று |
| உயிர் மாள | உயிரிழந்து முடியும்படியாக | ஏத்தும் | தோத்திரம்பண்ணும்படியாகவுள்ளவனும் |
| செற்ற | சீறின | மா முனியை | (அடியார்திறத்தில் இன்னமும் என் செய்வோமென்று) நெடிய சிந்தனைகளைச் செய்பவனும் |
| வில்லி என்று | வில்லையுடையவனே! என்று | | |
| கற்றவர் | அறிவுடையவர்கள் | | |
| தம் தம் | தங்கள்தங்களுடைய | | |

| | | | |
|---|---|---|---|
| ஏழ் மாம் எய்த | ஸப்தஸால விருக்ஷங்களை அம்பு எய்து துளைபடுத்தின | கனவில் | மாநஸாநுபவத்தில் |
| மைந்தனை | மிடுக்குடையவனும் | இன்று கண்டேன் | இன்றுகாணப்பெற்றேன் ; |
| நனவில் சென்றார்க்கும் | கண்மலரப்பெற்றவர்களான சித்தஞானிகட்கும் | கண்டமையால் | காணப்பெற்றதனால் |
| நண்ணற்கு அரியானை | கிட்டக் கூடாதவனுமான | என் கண் இணைகள் | எனது இரண்டு கண்களும் |
| நறையூர் நின்ற நம்பியை—; | | களிப்ப | ஸந்தோஷிக்க |
| அடியேன் நான் | அடியேனாகிய நான் | களித்தேன் | நானும் ஸந்தோஷித்தேன். |

* * *—திருநறையூர் நம்பியைக் கண்டுகளிக்கப் பெற்றேனென்கிறார். சில விசேஷணங்களால் நம்பியை விசேஷிக்கிறார் சினவிற் செங்கணென்று தொடங்கி. ஆச்ரித விரோதிகளை அழியச் செய்து பக்தர்களைப் பாதுகாத்தருள்பவனென்று கற்றவர்களால் கொண்டாடப் படுகின்றானென்பது முதல் விசேஷணத்தின் கருத்து. கண்ட காட்சியிலே மஹா கோபிஷ்டர்களென்று தோன்றும் படியான கண்களை யுடையரான ராவணாதி ராக்ஷஸர்களை யொழித்த வில்லாளனென்று ஒவ்வொரு அன்பரும் தங்கள் தங்கள் நெஞ்சிலே கொண்டு துதிப்பர்களென்க. மாமுனியை என்றது—ஆச்ரிதர்கட்கு எத்தனையோ நன்மைகள் செய்திருந்தும் ஒரு நன்மையும் செய்திலன்போல 'என்ன செய்வோம்!' என்றே நெடுகச்சிந்தித்துக்கொண்டிருப்பவனையென்றபடி. "ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வனென்றே யிருத்திநீ" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரங்காண்க. முநி-மநநஞ்செய்பவன்;(அதாவது)சிந்தித்துக்கொண்டிருப்பவன் தன்னுடைய திறலில் நம்பிக்கை யற்றவர்களுக்கு அரியனசெய்தும் நம்பிக்கையுண்டாக்கு மியல்வினன் என்று காட்டுதற்காக 'மரமேழெய்த மைந்தனை' என்றார். ராமலக்ஷ்மணர்க்கும் ஸுக்ரீவனுக்கும் திருவடி மூலமாகத் தோழமை நேர்ந்த பின்பு, ஸுக்ரீவன் தன் வருத்தத்திற்குக் காரணங்கள் கூற, அது கேட்ட இராமபிரான் 'நான் உனது பகைவனை வாலியை எனது அம்பினால் அழித்து விடுகிறேன், அஞ்சாதே' என்று அபயப்ரதானஞ் செய்யவும் ஸுக்ரீவன் மனந்தெளியாமல் வாலியின் போராற்றலைப்பற்றிப் பலவாறு சொல்லி, முடிவில், வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒரு யோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி 'இவ்வாறு போராற்றலமைந்தவனை வெல்வது கூடுமோ?' என்று சொல்ல, அது கேட்ட இளைய பெருமாள் 'உனக்கு நம்புதல் இல்லையாயின் இப்போது என்னசெய்ய வேண்டுவது?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கை யுண்டாகின்றது ; ஏழு மராமரங்களையும் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கிடை தூரம் தூக்கி

யெறிந்தால் எனக்கு விச்வாஸம் பிறக்கும்' என்று சொல்ல, இராமபிரான் அதற்கு இசைந்து துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த்தூக்கிப் பத்து யோஜனை தூரத்திற்கு அப்பால் எறிய, அதனைக் கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான், இப்போது உலர்ந்து விட்ட இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின் மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச் சென்று அம்பறாத்தூணியை யடைந்ததென்ற வரலாறு இங்கு அறியத்தக்கது. (மரம்—ஆச்சாமரம்.)

நனவில் சென்றார்க்கும் நண்ணற்கு அரியானை=கனவுக்கு எதிர்த்தட்டானது நனவு எனப்படும்; தெளிவைச் சொன்னபடி. நல்ல தெளிவிலே யிருப்பவர்களான ஸநக ஸநந்தநாதிகளுக்கும் ஸ்வயத்நத்தாலே கிட்டுதற்கு அருமைப் பட்டிருப்பவனான எம்பெருமானை என்றபடி.

கனவில் கண்டேன்=இங்குக் கனவு என்றது ஸ்வப்நத்தையன்று; தெளிவற்ற மன நிலைமையைச் சொன்னபடி. தெளிந்தவர்களுங் காண முடியாத பெருமானைத் தெளியாத நான் கண்டுகொண்டேனென்கை. அவன் காட்டக் காண்கிறானாகையாலே இது பொருந்தும். முந்துற நெஞ்சு கண்டது; பின்னைக் கண்களும் கண்டன; அதனால் களிப்படைந்தேன் என்றாராயிற்று. .... (க)

தாய்நினைந்த கன்றேயொக்க என்னையும்
தன்னையே நினைக்கச்செய்து * தானெனக்
காய்நினைந் தருள்செய்யுமப்பனை
அன்றிவ்வையகமுண் டுமிழ்ந்திட்ட
வாயனை * மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிட்கோவலிடைகழி
யாயனை * அமரர்க்கரியேற்றை என்
அன்பனையன்றி ஆதரியேனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| தாய் நினைந்த கன்றே ஒக்க | தன் தாயாகிய பசுவை நினைக்கும் கன்றுபோல | அருள் செய்யும் அப்பனை | கிருபை பண்ணும் உபகாரகனும், |
| என்னையும் | அடியேனையும் | அன்று | முன்பொருகாலத்தில் |
| தன்னையே நினைக்க செய்து | (எம் பெருமானாகிய) தன்னையே சிந்திக்கும்படி பண்ணி | இ வையகம் | இவ்வுலகத்தை யெல்லாம் |
| | (அதற்கு மேலே) | உண்டு | விழுங்கி (பின்பு) |
| | | உமிழ்ந்திட்ட | வெளிப்புறப்பட விட்ட |
| தான் எனக்கு ஆய் நினைந்து | எனக்கு வேண்டிய நன்மைகளை யெல்லாம் தானே சிந்தித்து | வாயனை | திருப்பவளத்தை யுடையவனும், |

| | | | |
|---|---|---|---|
| மகரம் குழை காதனை | மகர குண்டலங்களைத் திருச்செவிகளில் அணிந்துள்ளவனும் | அரி ஏற்றை | சிங்கம் போலவும் காளை போலவும் செருக்குத் தோற்ற விருப்பவனும் |
| மைந்தனை | நித்யயுவாவும் | என் அன்பனை அன்றி | என்னிடத்தில் அன்புடையவனுமான திருநறையூர் நம்பியைத் தவிர்த்து |
| மதிள் கோவல் இடை கழி ஆயனை | திருமதில்களையுடைய திருக்கோவலூரிடை கழியில் கோபாலனாய் நிற்பவனும் | ஆதரியேன் | (வேறொருவனை) ஆதரிக்கமாட்டேன். |
| அமரர்க்கு | நித்யஸூரிகளினிடையே | | |

* * *—கன்றானது எப்போதும் தன் தாயையே நினைத்துக் கொண்டிருக்குமாபோலே உலகுக்கெல்லாந் தாயாகிய தன்னையே நான் நினைந்திருக்குமாறு செய்தவனென்கிறார் முதலடியில். 1. "பரந்த சிந்தையொன்றி நின்று நின்ன பாத பங்கயம், நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" என்கிறபடியே எம்பெருமானது அருளின்றியே அவனை நினைந்திருத்தல் அமையாதாதலால் 'என்னையும் தன்னையே நினைக்கச் செய்து' என்கிறார். நம்முடைய நினைவு மாறினாலும் தான் நினைவுமாறாதே 2. ௮ஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்—அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்" என்றபடியே நம்மை நினைத்திருந்து அருள் செய்பவ னென்கிறது 'தானெனக்காய்நினைந் தருள்செய்யு மப்பனை' என்றதனால். அப்படி எங்கேனுங் கண்டதுண்டோ வென்ன, உலகமெல்லாம் பிரளயாபத்துக்குத் தப்பிப் பிழைக்கும்படி தானே அபேக்ஷா நிரபேக்ஷமாகப் பாதுகாத்தருளின செயல் திருஷ்டாந்தமாகப் போராதோ வென்று அதனை யெடுத்துரைக்கின்றார் அன்றிவ்வையகமுண் டுமிழ்ந்திட்ட வாயனை என்று.

அப்படி அவன் உதவி செய்தருளாதே நம்மை உபேக்ஷிப்பவ னென்றே வைத்துக் கொண்டாலும், விடக்கூடாத அழகு படைத்தவன் காண்மின் என்கிறார் மகரக் குழைக்காதனை என்பதனால். * மின்னு மணிமகர குண்டலங்கள் வில்வீச நிற்கு மழகுக்குத் தோற்றுப் பேசுகிறபடி. "பிரளயத்திலே தள்ளினும் விடவொண்ணாத வடிவழகை யுடையவனை" என்பர் பெரியவாச்சான் பிள்ளையும். மைந்தன்—எப்போதும் யௌவனமேயா யிருப்பவன்.

மதிட்கோவ லிடைகழி யாயனை="பாவருந் தமிழாற் பேர்பெறு பனுவற் பாவலர் பாதி நாளிரவின், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்று புகழ்ந்து கூறும்படி முதலாழ்வார் [—பொய்கையார் பூதத்தார் பேயார்] மூவரும் ஒருவரை யொருவர் சந்தித்துத் திருவந்தாதிகள் பாடினதலம் திருக்கோவலூர் என்பது ப்ரஸித்தம். "நீயுந் திருமகளும் நின்றாயால், குன்றெடுத்துப்பாயும் பனிமறுத்த பண்பாளா!, வாசற்கடைகழியாவுள்புகாக் காமர் பூங்கோவல், இடைகழியே பற்றியினி" [முதல் திருவந்தாதி—86.] என்ற பொய்கையார் பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றிப் பெரிய

1. திருச்சந்த விருத்தம் 101. 2. வாராஹ சரமச்லோகம்.

வார்சான் பிள்ளை வியாக்கியானத்தில்—"உகந்தார் நடுவே புகுந்து நெருக்கு மவனை" என்றருளிச் செய்யப்பட்டுள்ள வாக்கியம் அநுஸந்திக்கத் தக்கது. வடமொழியில் 'தேஹளீ' என்னப்பட்டும் உலகவழக்கில் 'ரேழி' என்னப்பட்டும் வருகிற ஸ்தாநமே இடைகழியாம். திருக்கோவலூரெம்பெருமானுக்கு 'தேஹளீசன்' என்பதும் ஒரு திருநாமம்.

அமரர்க்கு அரியேற்றை=வடநூலார் ஸிம்ஹ: வ்ருஷப: என்னும் சொற்களை ச்ரேஷ்ட பர்யாயமாகப் பிரயோகிக்கும் முறைமை இங்கு உணரத்தக்கது.

வந்தநாள் வந்தென் நெஞ்சிடங்கொண்டான்
  மற்றோர்நெஞ்சறியான் * அடியேனுடைச்
சிந்தையாய்வந்து தென்புலர்க்கென்னைச்
  சேர்கொடானிது சிக்கெனப்பெற்றேன் *
கொந்துலாம் பொழில்சூழ் குடந்தைத்தலைக்
  கோவினைக் குடமாடியகூத்தனை *
எந்தையை யெந்தைதந்தைதம்மானை
  எம்பிரானை யெத்தால் மறக்கேனே? (ரு)

| | |
|---|---|
| வந்த நாள் வந்து | தானாகவே என்னை ஸ்வீகரிக்க எழுந்தருளின நாளிலே எழுந்தருளி |
| என் நெஞ்சு | எனது நெஞ்சை |
| இடம் கொண்டான் | இருப்பிடமாகக் கொண்டான்; |
| மற்று ஓர் நெஞ்சு அறியான் | வேறொருவருடைய நெஞ்சையும் தனக்கு இருப்பிடமாக நெஞ்சிலும் நினைக்கின்றிலன்; |
| அடியேனுடை | அடியேனுடைய |
| சிந்தை ஆய் வந்து | மனோரதங்களைத் தானுடையனாய் வந்து |
| என்னை | அடியேனை |
| தென்புலர்க்கு சேர் கொடான் | யமபடர்கையில் காட்டிக் கொடாதே விஷயீகரித்தருளினான்; |
| இது | இதனை |
| சிக்கன | திடமாக |
| பெற்றேன் | லபித்தேன்; (ஆனபின்பு.) |
| கொந்து உலாம் பொழில் சூழ் | பூங்கொத்துக்கள் நிறைந்த சோலைகளினால் சூழப்பட்ட |
| குடந்தைத் தலை | திருக்குடந்தையில் (எழுந்தருளியுள்ள) |
| கோவினை | ஸ்வாமியும் |
| குடம் ஆடிய கூத்தனை | குடக் கூத்தாடினவனும் |
| எந்தையை | எனக்குத் தந்தையும் |
| எந்தை தந்தை தம்மானை | என் முதகுரவர்க்கும் ஸ்வாமியுமான |
| எம்பிரானை | (திருநறையூர்) நம்பியை |
| எத்தால் | எக்காரணம் பற்றி |
| மறக்கேன் | மறப்பேன் [மறக்கமுடியாது.] |

* * *—எம்பெருமானை யடியேன் மறப்பதற்கு ஒரு ஹேதுவுமில்லையே, எப்படி மறப்பேனென்கிறார். 'வந்தநாள் வந்து என்னெஞ்சிடங் கொண்டான்'= எம்பெருமான் தம்முடைய நெஞ்சினுள் வந்து சேர்வதற்கு உறுப்பாகத் தாம் ஒரு முயற்சிசெய்து கைம்முதலுடையாரா யிருந்தால் இன்னநாளிலே வந்து சேர்ந்தா

னென்று தாம் சொல்லக்கூடும்; அங்ஙனன்றியே எம்பெருமான் தானாகவே தன் பேறாகவே வந்துசேரக் கண்டவராதலால் 'வந்தநாள் வந்து' என்கிறார்.-"ப்ரதம ஸ்வீகாரத்துக்கு முன்பு தாமிட்டது ஒரு பச்சையுண்டாய் அதுக்கு உபகரித்தானாகிலிறே இந்நா ளென்னலாவது; அங்ஙனென்றில்லாமையாலே ப்ரதம ஸ்வீகாரத்தை 'வந்தநாள்' என்னு மித்தனையாய்த்துச் சொல்லலாவது" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி. தானாகவேவந்து என்னை விஷயீகரித்து என்னெஞ்சைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டருளின பின் திருவடி திருவனந்தாழ்வான் முதலானார் பக்கலிலும் போவானாயிருக்கின்றிலன்; அன்றியும், 'ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும்' என்று நான் கொண்டிருக்கும் மநோரதத்தைத் தான் உடையனாய்க் கொண்டு, யமபடர் கையிலே யகப்பட்டு நலிவுபடவேண்டிய பாவங்கள் பலவற்றையும் நான் செய்திருக்கச்செய்தேயும் என்னை அந்த நமன்றமர் கையிலே காட்டிக்கொடாமல் தானே நித்ய கைங்கரியங் கொள்ளா நின்றான். இப்பேறுதான் அவனுடைய நிர்ஹேதுகமான திருவருளடியாகக் கிடைத்ததாகையாலே இதற்கு ஒரு நாளும் குலைதல் இல்லை யென்னும்படி பெற்றேன் என்கிறார் முன்னடிகளில்.

எப்போதும் வஸந்தகாலமாகவே யிருந்துள்ள சோலைகளாலே சூழப்பட்ட திருக்குடந்தையிலே சாய்ந்தருளித் தன்னுடைய ஸர்வ ஸ்வாமித்வத்தை விளங்கக் காட்டிக் கொண்டிருப்பவனும், க்ருஷ்ணாவதாரத்திலே மன்றில் குடக் கூத்தாடித் தன் வடிவழகை ஸர்வஸ்வதானம் செய்தவனும், அடியேனுடைய குலத்துக்கெல்லாம் நாதனா யிருப்பவனுமான எம்பிரான் பக்கலிலே அடியேன் பரமோபகாரம் பெற்று வைத்து, இனி மறப்பதற்கு என்ன ப்ரஸக்தியுண்டு? ஒரு நாளும் ஒரு ஹேதுவாலும் மறவேன் என்கிறார் பின்னடிகளில்.

எத்தால் மறக்கேன்?= அவன் செய்தருளின உபகாரம் ஸ்வல்பமா யிருந்தால் மறக்கலாம்; பெற்ற உபகாரத்திற்கு ஏதேனும் கைம்மாறு செய்திருந்தாலும் மறக்கலாம்; ஒன்றுமில்லையா யிருக்க எங்ஙனே மறப்பது? .... .... (௩)

உரங்களாலியன்ற மன்னர்மாளப்
பாரதத்தொருதே ரைவர்க்காய்ச்சென்று *
இரங்கியூர்ந்தவர்க் கின்னருள்செய்யும்
எம்பிரானை வம்பார்புனல்காவிரி *
அரங்கமாளி யென்னாளிவிண்ணாளி
ஆழிசூழிலங்கை மலங்கச்சென்று
சரங்களாண்ட * தண்டாமரைக்கண்ணனுக்கன்றி
என்மனம் தாழ்ந்துநில்லாதே. (௪)

உரங்களால் இயன்ற மன்னர் மாள { மிடுக்கினால் மிக்க துரியோதனாதியாசர்கள் தொலையும்படி | பாரதத்து பாரதயுத்தத்திலே | ஐவர்க்கு ஆய் சென்று { பஞ்சபாண்டவர்க்குத் துணையாயெழுந்தருளி

| | |
|---|---|
| இரங்கி | (அவர்கள் விஷயத்தில்) மனமிரங்கி |
| ஒரு தேர் ஊர்ந்து | (அவர்களுடையதான) ஒரு தேரை ஸாரதியாயிருந்து நடத்தி |
| அவர்க்கு | அப்பாண்டவர்க்கு |
| இன் அருள் செய்யும் எம்பிரானை | பரம கிருபையைச் செய்தருளின ஸ்வாமியும் |
| வம்பு ஆர் புனல் காவிரி | புதுமைமிக்க தீர்த்தத்தையுடைய திருக்காவேரியால் சூழப்பட்ட. |
| அரங்கம் | திருவரங்கம் பெரியகோயிலை |
| ஆளி | ஆள்பவனும் |
| என் ஆளி | என்னையாள்பவனும் |
| விண் ஆளி | பரமபதத்துக்குத்தலைவனும், |
| ஆழி சூழ் | கடல் சூழ்ந்த |
| இலங்கை | லங்காபுரியானது |
| மலங்க | வியாகுலமாகும்படி |
| சென்று | அங்கெழுந்தருளி |
| சரங்கள் ஆண்ட | அம்புகளை நடத்தின |
| தண் தாமரை கண்ணனுக்கு அன்றி | குளிர்ந்த தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடையனுமான திருநறையூர் நம்பிக்கல்லது (மற்றொருவர்க்கு) |
| என் மனம் | என் மனமானது |
| தாழ்ந்து இல்லாது | நைச்சியம் வஹித்திருக்க மாட்டாது. |

* * *— க்ருஷ்ணாவதார முகத்தாலும் ராமாவதார முகத்தாலும் மண்ணில் பாரங்களை நீக்கியருளின மஹாநுபாவனுக்கன்றி மற்றொருவன் விஷயத்திலே என்னெஞ்சு தாழாது என்கிறார். * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண் தேர்மேல் முன்னின்று அருள் செய்தமையை முன்னடிகளிற் கூறுகின்றார்.

பாண்டவர் துரியோதனாதியர் என்ற இரு வகுப்பினரையும் ஸந்தி செய்விக்கத் திருவுள்ளம் பற்றின கண்ணபிரான் துரியோதனாதியரிடம் தூதாகச் சென்று 'பாண்டவர்களும் நீங்களும் பகைமை கொள்ளவேண்டா; ராஜ்யத்தில் இருவர்க்கும் பாகமுண்டு; ஆதலால் ஸமபாகமாகப் பிரித்துக்கொண்டு ஸமாதானமாக அரசாட்சி செய்து வாழுங்கள்; அதற்கு ஸம்மதியில்லாவிடில் தலைக்கு இரண்டிரண்டு ஊராகப் பாண்டவர் ஐவர்க்கும் பத்து ஊரைக் கொடுங்கள்; அதுவும் அநிஷ்டமாகில் பாண்டவர்கள் குடியிருக்கும்படி ஓரூரையாவது கொடுங்கள்' என்று பலபடி அருளிச்செய்ய, அந்தச் சொல்லுக்குச் சிறிதும் ஸம்மதியாமல் 'பராக்ரமமிருந்தால் போர்செய்து ஜயித்துக்கொள்ளட்டும், இந்தப்பூமி வீரர்க்கே உரியது' என்றிப்படி திரஸ்காரமாக மறுத்துச் சொல்லவே, தான் பாண்டவ பக்ஷபாதியாயிருந்து எதிரிகளைத் தோற்பித்தனனென்க. துரியோதனாதியர் போர்புரிய வந்தது தருமபுத்தியாலல்லாமல் 'வலிமையுடையோம் நாம்' என்கிற கொழுப்பினாலாதலால் 'உரங்களாலியன்ற மன்னர்' எனப்பட்டது. உரம்—வலி. 'உரங்கள்' என்ற பன்மை அவிவக்ஷிதம்; உரத்தினால் என்றபடி.

'சரங்களாண்ட' என்றது "வில்லாண்டான்றன்னை" என்றாற்போலே; 'சத்துருக்களைக் காட்டு, காட்டு' என்று விம்மிக் கிளம்புகின்ற அம்புகளை அடக்கியாள்பவனென்க. "சரங்களாண்ட தண்டாமரைக் கண்ணன்" என்ற சேர்க்கையினால்—தாமரைக் கண்களின் கடாக்ஷத்திற்கு இலக்காகி உய்ந்துபோகப் பெறாதே அம்புகட்கு இலக்காகி மாண்டுபோயினரே பாவிகள்! என்ற பர்தாபங்

தோன்றும். இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே "ந நமேயம்—தாழ மாட்டேன்" என்று மார்பு நெறித்து மாண்டொழிந்தனர் ஆஸுர ப்ரக்ருதிகள்; என் மனம் அங்ஙனன்றியே தாழ்ந்து நின்று உய்வுபெறும் என்றாராயிற்று. (௪)

ஆங்குவெந்நரகத் தழுந்தும்போது
அஞ்சேலென் றடியேனை யங்கேவந்து
தாங்கு * தாமரையன்னபொன்னாரடி
யெம்பிரானை உம்பர்க்கணியாய்நின்ற *
வேங்கடத்தரியைப் பரிகீறியை
வெண்ணெயுண் டுரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினை * தேனைநன்பாலினையன்றி
என்மனம் சிந்தைசெய்யாதே. (௫)

| | |
|---|---|
| ஆங்கு வெம் நரகத்து | அப்படிப்பட்ட கொடிய நரகங்களிலே |
| அழுந்தும் போது | அழுந்தி நோவுபட நேர்ந்தகாலத்து |
| அங்கே வந்து | அவ்விடங்களில் வந்து |
| அஞ்சேல் என்று | பயப்படவேண்டாவென்று |
| அடியேனை தாங்கு | அடியேனைப் பாதுகாத்தருள்கின்ற |
| தாமரை அன்ன பொன் ஆர் அடி | தாமரைபோன்று அழகு மிக்க திருவடிகளை யுடையனும் |
| எம்பிரானை | எமக்கு உபகாரகனும் |
| உம்பர்க்கு அணி ஆய் நின்ற | மேலுலகங்கட்கெல்லாம் அலங்காரமாயிருக்கின்ற |
| வேங்கடத்து | திருமலையில் எழுந்தருளி யிருக்கிற |

| | |
|---|---|
| அரியை | சிங்கம் போன்றவனும் |
| பரி கீறியை | குதிரையுருவாய் வந்த அசுரன் வாயைக் கிழித்தவனும் |
| வெண்ணெய் உண்டு | வெண்ணெயை (க் களவாடி) அமுது செய்து |
| உரலினிடை | உரலோடுகூட |
| ஆப்புண்ட | கட்டுண்டிருந்தவனும் |
| தீம் கரும்பினை | மதுரமான கருப்பஞ்சாறு போன்றவனும் |
| தேனை | தேன்போன்றவனும் |
| நன் பாலினை அன்றி | இனிய பால்போன்றவனுமான திருநறையூர் நம்பியையல்லது (மற்றொருவரை) |
| என் மனம் | எனது நெஞ்சானது |
| சிந்தை செய்யாது | நினைக்கமாட்டாது. |

* * *—பலவகைகளாலும் கனக்கப் பாவங்களைப்பண்ணி அவற்றின் பலன்களை யநுபவிக்கக் கொடிய நரகங்களிலே சென்று நோவுபடுங்கால், 'தான் பண்ணின் பாவங்களின் பலனைத் தான் அநுபவிக்கட்டும்; நமக்கு வந்ததென்ன?' என்றிராமல் அங்கே யெழுந்தருளி 'நாம் இருக்க நீ பாபங்களின் பலனை அநுபவிக்க ப்ராப்தியுண்டோ? அஞ்சாதே' என்று அபயப்ரதானம்பண்ணி ரக்ஷித்தருளு மெம்பிரானையே என்மனம் சிந்திக்கின்றதென்கிறார்.

நரகத்திலே அழுந்தும்போது அங்கே வந்து தாங்குவதாகச் சொல்லுகிற விதற்குக் கருத்து என் எனில்;? * தென்னவன்தமர் செப்பமிலாதார் சேவதக்

குவார் போலப் புகுந்து பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின் முன்னாக விழுப்பதாகிற யமதண்டனைகளை யநுபவித்துக் கொண்டிருக்கையில் எம்பெருமான் அங்கே வந்து காத்தருள்கின்றானென்கிறதன்று; 'ஐயோ! நாம் எல்லையில்லாத பாவங்களைப் பண்ணிவிட்டோமே; வெவ்விய நரகங்களிலே சென்று கொடிய துன்பங்களை யநுபவிக்க நேருமே, என் செய்வோம்!' என்று கவலைப்பட்டு வருந்தியிருக்கு மிருப்பிலே வந்து அபயப்ரதானம் பண்ணும்படியைச் சொன்னவாறு.

உம்பர்க்கு அணியாய்நின்ற வேங்கடத்தரியை=' உம்பர் ' என்பது மேலுலகத்திற்கும் மேலுலகத்திலுள்ளவர்க்கும் பெயர். 'மேலுலகங்களுக்கு அலங்காரமாய் நின்ற' என்று பொருள்கொண்டு வேங்கடத்திற்கு விசேஷணமாக வுரைக்கலாம்; 'நித்யஸூரிகளுக்கு அலங்காரபூதனாய் நின்ற' என்று பொருள்கொண்டு வேங்கடத்தரிக்கு விசேஷணமாகவு முரைக்கலாம். முந்தின நிர்வாஹத்தில், திருவேங்கடமலை விண்ணுலகம்வரை ஓங்கியிருக்கின்றதென்கிற அதிசயோக்தி வெளியாம்; பிந்தின நிர்வாஹத்தில், நித்யஸூரிநிர்வாஹகனா யிருக்குமவன் அவர்களை விட்டு நம்போலியர்க்கு முகங்கொடுக்கத் திருமலையிலே வந்திருக்கிறானென்பது வெளியாம். அரி-ஹரி.

பரி கீறியை = கண்ணபிரானைக் கொல்லுமாறு கம்ஸனா லேவப்பட்ட அஸுரர்களில் கேசி யென்பவன் குதிரையி னுருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் தூரத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இரு பிளவாக வகிர்ந்து தள்ளினனென்ற வரலாறு அறிக.

உரலினிடை ஆப்புண்ட தீங்கரும்பினை=ஒரு கரும்பு உரலினிடை ஆப்புண்டதென்கிறார்; உரலிலே கட்டுண்டவன் கண்ணபிரானல்லன்; ஒரு கரும்பு தான் கட்டுண்டது என்கிறார் போலும். உரலில் கட்டுண்ட நிலைமையிலே அவனுடைய ராஸிக்யம் வெளியானபடியைத் திருவுள்ளம்பற்றி இங்ஙனே அருளிச்செய்கிறபடி. யசோதையானவள் கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கண்ணனை உரலோடிணைத்துக் கட்ட முடியாமல் வருந்தி நிற்குமளவிலே தன் திருமேனியைத் தானே சிறுக்கடித்துக்கொண்டு கட்டுண்டு தனது ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணங்களை வெளியிட்டுக்கொண்ட ராஸிக்யத்திலே ஆழ்வாருடைய திருவுள்ளம் சென்றதாயிற்று. .... .... .... .... .... (ரு)

எட்டனைப்பொழுதாகிலும் என்று
மென்மனத்தகலா திருக்கும்புகழ் *
தட்டலர்த்த பொன்னேயலர்கோங்கின்
தாழ்பொழில் திருமாலிருஞ்சோலையங்

கட்டியை, கரும்பீன்ற வின்சாற்றைக்
காதலால்மறைநான்கும் முன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை என்
பண்பனையன்றிப் பாடல்செய்யேனே. (௯)

| | |
|---|---|
| எள் தனை பொழுது ஆகிலும் | எள்ளத்தனை நொடிப் பொழுதுங்கூட |
| என் மனத்து அகலாது | என் மனத்தைவிட்டுப் பிரியாமல் |
| என்றும் | எக்காலத்தும் |
| இருக்கும் | என்மனத்தே யிருக்கையினாலாகிய |
| புகழ் | கீர்த்தியையுடையவனும் |
| தட்டு அலர்த்த | தட்டுப்போலே விகஸிப்பிக்கப்பட்ட |
| பொன் வய் அலர் | பொன்போன்ற அலரை யுடைத்தான |
| கோங்கின் | கோங்குமரங்களினுடைய |
| தாழ் பொழில் | தழைத்த தோப்புகளையுடைய |
| திருமாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையி லெழுந்தருளியிருக்கிற |
| அம் கட்டியை | மதுரமான கற்கண்டுபோல் போக்யனாயிருப்பவனும், |
| கரும்பு ஈன்ற இன் சாற்றை | கரும்பில் நின்று முண்டான இனிய ரஸம்போன்றவனும், |
| முன் | முற்காலத்தில் |
| காதலால் | அன்புடனே |
| மறை நான்கும் | நால்வேதங்களையும் |
| ஓதிய | (ஸாந்தீபிநி பக்கலில்) அத்யயனம் பண்ணின |
| பட்டனை | பண்டிதனும் |
| பரவை | (திருப்பாற்) கடலில் |
| துயில் | கண்வளர்ந்தருளாநின்ற |
| ஏற்றை | பரமபுருஷனும் |
| என் பண்பனை அன்றி | எனக்கு எளியனுமான திருநறையூர்நம்பியைத் தவிர |
| | (மற்றொருவரையும்) |
| பாடல் செய்யேன் | பாடமாட்டேன். |

* * *—"ஒருமா நொடியும் பிரியான்" என்னுமாபோலே க்ஷணகாலமும் என்னெஞ்சை விட்டுப் பிரிகிறதில்லை யென்னுமிதுவே காரணமாகப் பெரும்புகழோங்கப் பெற்றவனும் திருமாலிருஞ் சோலையில் பரமபோக்யமாக ஸேவை ஸாதிப்பவனும் கருப்பஞ்சாறு போலே ரஸமயனாயிருப்பவனும், க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபிநி யென்னுமோர் அந்தணன்பாடே நான்கு வேதங்களையுமோதிப் பாண்டித்யம் பெற்றவனும் திருப்பாற்கடலிலே துயில்கொள்பவனும் தனது திருக்குணங்களை யெல்லாம் என்னை யநுபவிப்பித்தவனுமான திருநறையூர் நம்பியைத் தவிர்த்து மற்றொருவனையும் பாடமாட்டே னென்கிறார்.

எள் + தனை, எட்டனை; மிகச்சிறிய அளவுக்கு எள்ளை உவமை கூறுவதுண்டு; க்ஷணகாலமும் என்றபடி.

தட்டலர்த்த பொன்னேயலர்கோங்கு = திருமாலிருஞ் சோலை மலையை வருணிப்பவர்களனைவரும் அங்கே கோங்குமரங்கள் விசேஷமாயுள்ளனவாக வருணிப்பர்கள்; "கோங்குநின்று பொன்னரிமாலைகள் சூழ்பொழில் மாலிருஞ் சோலையதே" என்றார் பெரியாழ்வார்; "கோங்கலரும் பொழில் மாலிருஞ்

சோலை" என்றுள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி. கோங்குமலர் பொன்போன்ற நிறமுடையது; மலர்ந்தால் பொன் தட்டுப்போல விருக்கும்; ஆகவே "தட்டலர்த்த பொன்னேயலர் கோங்கின்" எனப்பட்டது.

'மறைநான்கும் முன்னோதிய பட்டனை' என்பதற்கு "யோ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிற சுருதியின்படியே நான்முகனுக்கு நான்மறைகளையும் உபதேசித்தவனை என்று பொருள் கொள்ளவுமாம். அப்போது, 'ஓதிய' என்பதற்கு 'ஓதுவித்த' என்ற பிறவினைப்பொருள் கொள்ளவேணும்.

பட்டன்—பட்ட: என்னும் வடசொல் விகாரம்.

பரவைத்துயிலேற்றை=பரந்திருப்பது பரவை; கடல்; இங்கே திருப்பாற்கடலை நினைக்கிறது. .... .... .... .... .... (௬)

பண்ணினின்மொழியாழ்நரம்பில்பெற்ற
பாலையாகி யிங்கேபுகுந்து * என்
கண்ணும்நெஞ்சும் வாயுமிடங்கொண்டான்
கொண்டபின்மறையோர்மனந்தன்னுள் *
விண்ணுளார்பெருமானை யெம்மானை
வீங்குநீர்மகரந்திளைக்குங்கடல்
வண்ணன் * மாமணிவண்ண னெம்மண்ணல்
வண்ணமேயன்றி வாயுரையாதே. (எ)

| | |
|---|---|
| பண்ணின் | இராகங்களுக்குள்ளே |
| இன் | இனிமையான |
| மொழி | சொல்லையுடைய |
| யாழ் | வீணையினுடைய |
| நரம்பில் | தந்திகளில் |
| பெற்ற | உண்டான |
| பாலை ஆகி | பாலையென்கிற சிறந்த பண்போலே மிக இனியனாய்க்கொண்டு |
| இங்கே புகுந்து | என்னெஞ்சில் வந்து புகுந்து |
| என் கண்ணும் நெஞ்சும் வாயும் இடம் கொண்டான் | எனது அவயவங்களைத் தனக்கு இருப்பிடமாக அங்கீகரித்தான்; |
| கொண்ட பின் | அப்படி அங்கீகரித்தபின்பு,— |
| மறையோர் | வைதிகர்களினுடைய |
| மனம் | மனத்தை |
| தன் உள் | தனது வாஸஸ்தானமாகவுடையவனும் |
| விண்ணுளார் பெருமானை | நித்யஸூரிகளுக்குநாதனும் |
| எம்மானை | எனக்கு ஸ்வாமியும் |
| வீங்கு நீர் | நிரம்பிய நீரையுடையதாய் |
| மகரம் திளைக்கும் | மீன்கள் துள்ளிவிளையாடாநின்றுள்ளதான |
| கடல் | கடல்போன்ற |
| வண்ணன் | திருநிறத்தையுடையவனும் |
| மா மணி வண்ணன் | நீலமணி நிறத்தவனும் |
| எம் அண்ணல் | எமக்கு நாதனுமான திருநறையூர் நம்பியினுடைய |
| வண்ணமே அன்றி | ஸ்வபாவத்தையே யல்லது (மற்றொன்றை) |
| என் வாய் உரையாது | என்வாய் சொல்லமாட்டாது. |

* * *—என்னுடைய மனமொழி மெய்கள் அவனையல்லது அறியா என்கிறார். எம்பெருமானுடைய விலக்ஷணமான இனிமைக்கு அபூர்வமான த்ருஷ்டாந்தமொன்று இப்பாட்டில் கூறுகின்றார்; "பண்ணினின்மொழி யாழ்நரம்பிற் பெற்ற பாலையாகி"=பாலை யென்றது ஒரு சிறந்த பண். வீணையின் தந்தியிலே பாலையென்னும் பண்ணை இசைத்தால் எவ்வளவு இனிமையாயிருக்குமோ அவ்வளவு இனிமையாக என்னுள்ளே புகுந்தானென்கை. "யாழ்பயில் மாநஸ ரூபியைப் பாலையாகி யென்று விசேஷிக்கையாலே" என்பது ஆசார்யஹ்ருதய ஸூக்தி.

இரண்டாமடியிலுள்ள 'கொண்டபின்' என்பதற்கு ஈற்றடியில் அந்வயம்; என் கண்ணையும் நெஞ்சையும் வாயையும் இடங்கொண்டானதலால் என் வாயானது எம்மண்ணல் வண்ணமேயன்றி மற்றொன்றை யுரையாது என்கை.

இரண்டாமடியின் முடிவிலுள்ள 'மனந்தன்னுள்' என்பதற்கு 'மனத்திலே' என்று பொருளல்ல; அப்படியாகில் மேல் இயையாது; மறையோர் மனம்—வைதிகர்களின் திருவுள்ளத்தை, தன்—தனக்கு உரிய, உள்—உள்ளாக [இடமாக]க் கொண்டவன் என்க.

'கடல்வண்ணன்' என்று சொல்லிவிடாதே 'விங்குநீர்' என்றும் 'மகரந் திளைக்கும்' என்றும் கடலுக்கு இரண்டு விசேஷணங்களிட்டதன் கருத்து யாதெனில்; கடல் நீர்நிரம்பப் பெற்றிருப்பதுபோல எம்பெருமான் லாவண்யம் நிறைந்தவனென்றும், கடலில் மீன்கள் திளைக்குமாபோலே மீன்போன்ற திருக்கண்கள் திகழப்பெற்றவனெம்பெருமான் என்றும் கொள்க.

வண்ணமேயன்றி=திருமேனி நிறத்தைச் சொன்னதாகவுமாம்; ஆச்ரித ஸௌலப்யம் முதலிய குணங்களைச் சொன்னதாகவுமாம். .... .... (எ)

இனியெப்பாவம்வந்தெய்தும்? சொல்லீர்
எமக்கிம்மையேயருள்பெற்றமையால் * அடும்
துனியைத்தீர்த் தின்பமேதருகின்றதோர்
தோற்றத்தொன்னெறியை * வையம்தொழப்படும்
முனியை வானவரால்வணங்கப்படும்
முத்தினைப் பத்தர்தாம்நுகர்கின்றதோர்
கனியை * காதல்செய்தேன்னுள்ளங்கொண்ட
கள்வனை இன்றுகண்டுகொண்டேனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| இம்மையே | இஹலோகத்திலேயே | எப் பாவம் | எவ்விதமான பாவம் |
| அருள் பெற்றமையால் | எம்பெருமானுடைய திருவருளைப் பெற்றேனாதலால் | வந்து எய்தும் | வந்து கிட்டக்கூடும்? |
| | | சொல்லீர் | சொல்லுங்கள்; |
| இனி | இனிமேல் | அடும் | ஆத்மஹாநியைவிளைக்கிற |
| எமக்கு | எம்மை | துனியை | கருமங்களை |

| | | | |
|---|---|---|---|
| தீர்த்து | தவிர்த்து | முத்தினை | முத்துப்போன்றவனும் |
| இன்பமே | நித்யாநந்தத்தையே | பத்தர் தாம் | பக்தர்களால் |
| தருகின்றது | தருகின்ற | நுகர்கின்றது | உட்கொள்ளப்படுகின்ற |
| ஓர் தோற்றம் தொல் நெறியை | ஒப்பற்ற விலக்ஷணமாய் அநாதியான உபாயமாயிருப்பவனும் | ஓர் கனியை | ஒரு பழம்போன்றவனும் |
| வையம் | உலகத்தவர்களால் | காதல் செய்து | ஆசையுற்று |
| தொழப்படும் | ஆச்ரயிக்கப்படுகின்றவனும் | என் உள்ளம் கொண்ட | என் நெஞ்சைக் கொள்ளை கொண்ட |
| முனியை | (அவர்களுடைய நன்மைகளைச்) சிந்திப்பவனும் | கள்வனை | கள்வனுமான பெருமானை |
| வானவரால் வணங்கப்படும் | நித்யஸூரிகளால் வணங்கப்படுகின்ற | | இன்று கண்டுகொண்டேன்—. |

* * *—பாசுரந் தொடங்கும்போதே "இனியெப்பாவம் வந்தெய்தும் சொல்லீர்" என்று கம்பீரமாகத் தொடங்குகிற மிடுக்கு நோக்கத்தக்கது. இனிப் பரமபதமென்று வேறொரு ஸ்தாநவிசேஷமுண்டென்றும் அங்குப்போய்ப் பெற வேண்டிய பேறு வேறொன்று இருக்கின்றதென்றும் தாம் கொண்டிலாமையைத் தெரிவிக்கின்றார் 'இம்மையே அருள் பெற்றமையால்' என்று. ஸகல பாபங்களும் தொலைந்து பெறவேண்டிய பேறு இப்பிறவிதன்னிலே இவ்வுலகந்தன்னிலே பெறப்பட்டதாதலால் இனி ஒரு பாவமும் என்னை வந்து அணுக ப்ரஸக்தியில்லை யென்கிறார்.

அடுந்துனியைத் தீர்த்து—துனி என்று துன்பத்திற்குப் பெயராயினும் துன்பத்திற்கு மூலகாரணமான கருமம் இங்கே பொருளாகக் கடவது; "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற சரமச்லோகத்தின்படியே ஸகல பாபங்களையுந் தொலைத்தருளி நித்யமான ஆநந்தத்தைத் தந்தருளவல்ல ஸித்தோபாயமான எம்பெருமானைக் கண்டுகொண்டேனென்கிறார். "ஸத்யதவைஷ ஸேது:" இத்யாதி ச்ருதிகளை உட்கொண்டு எம்பெருமானை 'நெறி' என்னுஞ் சொல்லாற் சொல்லுகிறார். தன்னையடைதற்குத் தானே மார்க்கமாயிருப்பானிறே எம்பெருமான். .... .... .... .... .... .... (அ)

என்செய்கே னடியேனுரையீர் இதற்கென்று
மென்மனத்தே யிருக்கும்புகழ் *
தஞ்சையாளியைப் பொன்பெயரோன்
நெஞ்சமன் றிடந்தவனைத் தழலேபுரை *
மின்செய் வாளரக்கன்நகர் பாழ்படச்
சூழ்கடல்சிறைவைத் திமையோர்தொழும் *
பொன்செய்மால்வரையை மணிக்குன்றினையன்றி
என்மனம் போற்றியென்னாதே. (கூ)

| | |
|---|---|
| அடியேன் | பாதந்திரனான நான் |
| இதற்கு என் செய்கேன் | (அவன் பண்ணின மஹோபகாரமாகிய) இதற்கு என்ன கைம்மாறு செய்வேன்? |
| உரையீர் | சொல்லுங்கள்; |
| என்றும் | எக்காலமும் |
| என் மனத்தே | என்னுள்ளத்திலேயே |
| இருக்கும் | குடியிருப்பதனாலாகிய |
| புகழ் | கீர்த்தியையுடையவனும் |
| தஞ்சை ஆளியை | தஞ்சைமாமணிக்கோயிலை ஆள்பவனும் |
| அன்று | நாஸிம்ஹாவதாரத்தில் |
| பொன் பெயரோன் | இரணியனுடைய |
| நெஞ்சம் | மார்பை |
| இடந்தவனை | பிளந்தொழித்தவனும் |
| தழலே புரை | நெருப்புப்போன்றவனாய் |
| மின் செய் | ஒளிவிடுகின்ற |
| வாள் | வாட்படையை யுடையனான |

| | |
|---|---|
| அரக்கன் | இராவணனுடைய |
| நகர் | நகரமாகிய இலங்கை |
| பாழ்பட | பாழாகும்படி |
| சூழ் | அந்நகரியைச் சூழ்ந்து கொண்டு அகழாயிருந்த |
| கடல் | கடலை |
| சிறை வைத்து | அணைகட்டினவனும் |
| இமையோர் தொழும் | தேவர்களால் ஆச்ரயிக்கப் படுமவனும் |
| பொன் செய் மால் வரையை | விரும்பத்தக்க பெரிய மலைபோன்றவனும் |
| மணி குன்றினை அன்றி | நீலமணிமயமான பர்வதம் போன்றவனுமான திருநறையூர் நம்பியைத் தவிர்த்து (மற்றொருவனை நோக்கி) |
| என் மனம் | என் மனமானது |
| போற்றி என்னாது | மங்களாசாஸனம் பண்ணமாட்டாது. |

* * *—எம்பெருமான் செய்தருளின உபகாரத்திற்குப் பிரதிபுபகாரம் பண்ணாமலிருக்க முடியவில்லை, பண்ணுவோமென்றாலும் அவனுக்கு நாம் பண்ணலாவதொரு உபகாரமில்லை என்று கொண்டு ‘என்செய்கேனடியே னுரையீர்’ என்கிறார். எனக்கென்ன ஒரு கைம்முதலில்லாதபடி ஸ்வரூபமே பிடித்து பரதந்திரனான நான் எதைச் செய்வேன் என்பது தோன்ற இங்கு ‘அடியேன்’ என்றது.

எப்போதும் என்னுடைய ஹ்ருதயத்தை விட்டுப் பிரியாமையால் வந்த புகழையுடையனாய், தஞ்சைமாமணிக்கோயிலிலே நித்ய ஸந்நிதி பண்ணியிருக்குமவனாய், ப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே பக்ஷபாதாதிசயத்தாலே இரணியனது மார்பைப் பிளந்தொழித்தவனாய், நெருப்புப்போல் செம்பட்ட வுடம்பையுடைய இராவணனது இருப்பிடமான இலங்காபுரியைச் சுடுகாடாக்குவதற்குக் கடலிலே அணைகட்டி யெழுந்தருளினவனாய், இப்படிப்பட்ட அதிமாநுஷ சேஷ்டிதங்களுக்குத் தோற்றுத் தேவர்களால் வணங்கப்படுமவனாய், அப்படி வணங்கப் பெறுதலால் புகர் பெற்ற வடிவை யுடையனான எம்பெருமானையன்றி மற்றொருவனை என்மனம் வாழ்த்த விரும்பமாட்டாது. ஸம்ஸாரியான நான் நித்யஸூரிகள் பெறும் பேற்றைப் பெற்றேன்; பரதந்திரனாயிருக்கையாலே ப்ரத்யுபகாரம் பண்ணலாவது காண்கின்றிலேன், எதைச் செய்வேன்? சொல்லுங்கோள் என்றாராயிற்று. .... .... .... .... .... (க)

தொடுவிண்டலர் பூம்பொழில்மங்கையர்
தோன்றல் வாட்கலியன்திருவாலி
நாடன் * நன்னறையூர்நின்றநம்பிதன்
நல்லமாமலர்ச்சேவடி சென்னியிற்
சூடியும் தொழுதுமெழுந்தாடியும்
தொண்டர்கட் கவன் சொன்னசொல்மாலை *
பாடல்பத்திவை பாடுமின்தொண்டீர்!
பாடநும்மிடைப் பாவம்நில்லாவே (கo)

| | |
|---|---|
| தொடு | இதழ்களானவை |
| விண்டு | விரிந்து |
| அலர் | விகஸிக்கப்பெற்ற |
| பூ பொழில் | பூஞ்சோலைகளை யுடைய |
| மங்கையர் தோன்றல் | திருமங்கை நாட்டிலுள்ளவர்கட்குத் தலைவரும் |
| திரு ஆலி நாடன் | திருவாலி நாட்டுக்குப் பிரபுவானவரும் |
| வாள் | வாளை யுடையவருமான |
| கலியன் அவன் | அத் திருமங்கையாழ்வார் |
| நல் நறையூர் நின்ற நம்பி தன் | திருநறையூர் நம்பியினுடைய |
| நல்ல மா மலர் சே அடி | அழகிய சிறந்த திருவடித் தாமரைகளை |
| சென்னியில் சூடியும் | (தமது) தலைமே லணிந்துகொண்டும் |
| தொழுதும் | வணங்கியும் |
| எழுந்து | எழுந்திருந்து |
| ஆடியும் | (ப்ரீதிக்குப் போக்குவீடாகக்) கூத்தாடியும் |
| தொண்டர் கட்கு | பாகவதர்களுக்கு (உஜ்ஜீவனமாக) |
| சொன்ன | அருளிச்செய்த |
| சொல் மாலை | சொல் தொடையாகிய |
| இவை பத்து பாடல் | இந்தப் பத்துப் பாசுரங்களையும் |
| தொண்டீர் | எம்பெருமானடியார்களே! |
| பாடுமின் | நீங்கள் ஓதுங்கள்; |
| பாட | அங்ஙனம் ஓதவே |
| நும்மிடை பாவம் நில்லா | உங்களிடத்திற் பாவங்கள் நிற்கமாட்டா. |

* * *—இத் திருமொழிகற்றார்க்குப் பயனுரைத்துத் தலைகட்டும் பாசுரம் இது. கீழ் ஆரம்பத்தில் "கண்ணுஞ்சுழன்று" என்ற திருமொழி தொடங்கி இத் திருமொழியளவாக நூறு பாசுரங்கள் கொண்ட பத்துத் திருமொழிகளால் திருநறையூர்த் திருப்பதியை மங்களாசாஸநம் செய்தாராயிற்று. திருநறையூர் நம்பிக்கு அஸாதாரணமாகவுள்ள ஒரு தன்மை இங்குத் தொனிக்கின்றது காண்மின்;—திருநறையூர்க்கு 'நாச்சியார் கோயில்' என்னுந் திருநாமமே மிகப்ரஸித்தமாக வழங்கிவருவது. திருவீதிப் புறப்பாடுகளில் நாச்சியார் முன்னே யெழுந்தருளவும் நம்பி பின்னே யெழுந்தருளவுமான ஒரு ஸம்ப்ரதாயமும் காண்கிறோமங்கு. எம்பெருமான் தன்னுடைய மேன்மையை அடக்கிக்கொண்டு தன்னடியார்க்கு மேன்மையைப் ப்ரகாசப்படுத்துகிற திருப்பதி இதுவாதலால், இத் திருப்பதியின் பாடலைத் தலைக்கட்டுகின்ற இப்பாசுரத்தில் எம்பெருமானுடைய அத்தன்மை விளங்க, பாசுரம் தொடங்கும்போதே (மற்ற பலச்ருதிப் பாசுரங்

களிற் போலல்லாமல்) ஆழ்வார் தம்முடைய திருப்புகழை முற்கொண்டு பேசுகிறபடி காண்மின். "தோடு விண்டலர் பூம்பொழில் மங்கையர் தோன்றல் வாட்கலியன் திருவாலி நாடன்" என்னுமளவும் ஆழ்வார் தம்முடைய திருநாம ஸங்கீர்த்தநமேயிறே.

"தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகள் சொன்னேன்" என்னுமா போலே பக்தர்களுக்கு அம்ருதமாக அருளிச் செய்யப்பட்ட இத்திருமொழியைக் கற்பவர்கள் பக்கலில் பாவமொன்றும் நில்லாது என்றதாயிற்று. (கo)

அடிவரவு:—சினவில் தாய் வந்த உரங்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி என்செய்கேன் தோடு கண்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—நான்காந்திருமொழி,

## கண்சோர வெங்குருதி.

---

உரையவதாரிகை:—இது திருச்சேறைத் திருப்பதிமங்களாசாஸநத் திருப்பதிகம். எம்பெருமானுக்கு அடிமைப்படுவதிற் காட்டிலும் பாகவதர்களுக்கு அடிமைப்படுதல் விசேஷம் என்கிற ஸகலசாஸ்த்ர ஸாரப்பொருளை ஸ்ரீஸாரநாதப் பெருமாளுடைய திருவருளால் ஸ்மரிக்கப்பெற்று, அந்த பாகவதபக்தி நிஷ்டையிலே தாம் ஊன்றினபடியை இத்திருமொழியில் வெளியிடுகிறார். இத்திருமொழிக்குத் திருச்சேறைத்திருப்பதி விஷயமாயினும் இப்போது இவர்க்கு உத்தேச்யம் திருச்சேறையன்று; அத்திருப்பதியிலெழுந்தருளியிருக்கிற எம்பெருமானும் உத்தேச்யனல்லன்; அத்திருப்பதியையோ அப்பெருமானையோ இடைவிடாது சிந்திக்கின்ற பாகவதர்களுண்டே, அவர்கள்தாம் உத்தேச்யர் என்பது சொற்போக்கில் வெளியாகின்றது. முடிவில் பயனுரைக்கும் பாசுரத்தில் "தண் சேறையம்மான் றன்னை" என்றருளிச் செய்ததற்கும் ஒரு குறையில்லை;—

ஒருவன் ஒரு வஸ்துவினிடத்தில் அன்பு வைத்தால் அவ்வன்பு அளவற்றதுமாயிருந்தால் அஃது அவ்வஸ்துவோடே நின்றுவிடாமல் அதனோடு ஸம்பந்த ஸம்பந்தம் பெற்ற வஸ்துக்களிலும் பெருகிச் செல்லுமென்பதை அனைவரும்தம் தம் அநுபவத்தாலறிவர். அப்படியே பாகவத பக்தியென்பது பகவத் பக்தியின் எல்லை நிலமாக உண்டாமது. பகவத்பக்தியின் உறைப்பையே பாகவத பக்தி வெளிப்படுத்தும். ஸ்வாமியினுடைய பாதுகைகளிலே நாம் ஆதரம் வைத்து

அவற்றைக் கண்களிலொற்றிக் கொள்வதும் தலைமே லணிந்துகொள்வதும் அலம்பித் தீர்த்தம் பருகுவதும் செய்கிறோம்; இதனால் நமக்கு ஸ்வாமியிடத்துள்ள பக்தி அபாரமானது என்பதேயன்றோ வெளியாகின்றது. அதுபோலவே, 'திருச்சேறையையும் அவ்விடத் தெம்பெருமானையும் பணிகின்ற பாகவதர்களே எனக்கு உத்தேச்யர்' என்று அருளிச்செய்கிற முகத்தால் அத்திருப்பதியினிடத்தும் அப் பெருமானிடத்தும் தமக்குள்ள பக்திப் பெருங்காதலே விளக்கப் பட்டதா மென்றுணர்க.

கீழ் இரண்டாம்பத்தில் திருக்கடன்மல்லைத் திருப்பதியை மங்களாசாஸநம் செய்த "நண்ணாதவாளவுணர்" என்னுந் திருமொழியிலும் இந்த பாகவத நிஷ்டை வெளியிடப் பட்டுள்ளமை இங்கு ஸ்மரிக்கத் தக்கது. .... *

**கண்சோர வெங்குருதிவந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை ***
**மண்சேர முலையுண்ட மாமதலாய்! வானவர்தங்கோவேயென்று ***
**விண்சேருமிளந்திங்க ளகடுரிஞ்சு மணிமாடமல்கு * செல்வத்**
**தண்சேறை யெம்பெருமான் தாள்தொழுவார்காண்மினென் தலைமேலாரே.**

| | |
|---|---|
| கண் சோர | கண்கள் சுழலமிட்டுத் தளரும்படியாகவும் |
| வெம் குருதி | வெவ்விய ரத்தமானது |
| வந்து இழிய | வெள்ளமிட்டுப் பெருகவுமாய் |
| மண் சேர | மாண்டுபோம்படி |
| வெம் தழல் போல் கூந்தலாளை | நெருப்புப்போல் செம்பட்ட மயிரையுடையளான பூதனையினுடைய |
| முலை | (விஷங்கலந்த) முலையை |
| உண்ட | உறிஞ்சியுண்ட |
| மா மதலாய் | இளம்பிள்ளையே! |
| வானவர் தம் கோவே | தேவாதிதேவனே! |
| என்று | என்று இவ்வண்ணமாகத் துதிசெய்து, |
| விண் சேரும் இள திங்கள் | ஆகாயத்தில் திரிகின்ற பாலசந்திரனுடைய |
| அகடு | கீழ்வயிற்றை |
| உரிஞ்சு | அளாவுகின்ற |
| மணி மாடம் | திருமாளிகைகள் |
| மல்கு | நிறைந்திருக்கப்பெற்ற |
| செல்வம் | வளம்மிக்க |
| தண் | குளிர்ந்த |
| சேறை | திருச்சேறையிலெழுந் தருளியிருக்கின்ற |
| எம்பெருமான் | ஸாரநாதப்பெருமாளுடைய |
| தாள் | திருவடிகளை |
| தொழுவார் காண்மின் | வணங்குமவர்கள் தாம் |
| என் தலை மேலார் | என்தலைமேல் வீற்றிருக்க வுரியார். |

* * *—சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற மாட மாளிகைகள் நிறைந்த திருச்சேறையி லெழுந்தருளியிருக்கும் எம்பெருமானை நோக்கி 'பூதனையைமுடித்த சிறுகுழந்தாய்!' என்றும் 'நித்யஸூரிகட்குத் தலைவனே!' என்றும் சொல்லி அவனுடைய பரத்வ ஸௌலப்யங்களைப் போற்றி உருகுகின்ற பாகவதர்கள் எவரோ, அவர்கள் என்தலைமேல் வீற்றிருக்கவுரியார் என்கிறார்.

கண்ணபிரானைத் தொட்டிற் பருவத்திலேயே முடிக்கவந்தவள் பூதனை; இவள் யசோதைப் பிராட்டியைப்போல வடிவெடுத்துவந்தாலும் உண்மையில் அரக்கியாதலால் செம்பட்ட மயிரையுடையளாயிருப்பள்; ஆகவே 'வேந்தழல் போற்கூந்தலாளை' எனப்பட்டது: "கஞ்சன்புணர்ப்பினில் வந்த கருநிறச் செம்மயிர்ப்பேயை", என்றார் பெரியாழ்வாரும். இப்பேய்ச்சி கண்ணபிரானை மகனாகப்பாவித்து முலைகொடுத்ததற்கிணங்க அவனும் இவளைத் தாயாகவே பாவித்து முலையுண்கிற பாவனையில் உயிரை உறிஞ்சியுண்டனனாதலால், கண்கள் சோர்ந்து ரத்தவெள்ளங்கொழிக்க நிலத்தில் வீழ்ந்து மாண்டொழிந்தனளென்க.

மாமதலாய்!=பிள்ளைத்தனத்தில் குறையற்றவனே! என்றபடி. 'மதலை' என்பதன்விளி 'மதலாய்' என்றும்.

இத்திருமொழியின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ப்ரவேசத்தில்— "பிள்ளையழகிய மணவாளரரையர் கரையே போகாநிற்க, 'உள்ளே மாமதலைப் பிரானைத் திருவடிதொழுதுபோனாலோ?' என்ன; 'ஆர்தான் திருமங்கையாழ்வாருடைய பசைந்த § வளையத்திலே கால்வைக்கவல்லார்?' என்றருளிச் செய்தார்" என்றுள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத் தக்கவை. இவ்வாக்கியத்தின் கருத்து யாதெனில்; பிள்ளையழகிய மணவாளரரையர் என்பவர் காரியவிசேஷமாய்த் திருச்சேறைவழியாய் ஓரிடத்திற் கெழுந்தருள நேர்ந்தவளவில் திருச்சேறைப்பதியினுட் புகாமல் வயல்வழியே போய்க்கொண்டிருந்தார்; அங்கு அவரைக் கண்டவொருவர் 'வயல்வழியே போவானேன்? திருப்பதியினுள்ளே புகுந்து ஸாரநாதப்பெருமாளை ஸேவித்துப் போகலாகாதோ?' என்று கேட்க; அதற்கு அரையர் சமத்காரமாக ஒரு உத்தரமுரைத்தார்; (யாதெனில்;) இத்திருப்பதி விஷயமாகப் பாசுரமுரைத்த திருமங்கையாழ்வார் "தண்சேறையெம்பெருமான் தாள்தொழுவார்காண்மின் என்தலைமேலாரே" என்றார்; அப்பாசுரத்தின்படி, திருச்சேறை யெம்பெருமானை ஸேவிப்பவர்கள் ஆழ்வாருடைய திருமுடியின்மேலேறவேண்டியதாகுமே; அது நமக்குப் பெருத்த அபசாரமாகுமே; அதற்கு அஞ்சியே உள்ளுப்புகாமல் கரையோரமே போய்விடுகிறேன் என்றாராம். இது ரஸோக்தியேயன்றி வேறில்லை. திருச்சேறை யெம்பெருமானை ஸேவிப்பவர்கள் பக்கலில் ஆழ்வார் வஹித்திருக்கும் ப்ரதிபத்தியை விளங்கக் காட்டினபடி. .... .... .... .... .... (க)

அம்புருவ வரிநெடுங்கண் அலர்மகளைவரையகலத் தமர்ந்து * மல்லல்
கொம்புருவவிளங்கனிமேல் இளங்கன்று கொண்டெறிந்த கூத்தர்போலாம் *
வம்பலரும்தண்சோலை வண்சேறை வானுந்து கோயில்மேய *
எம்பெருமான் தாள்தொழுவார் எப்பொழுதுமென்மனத்தே யிருக்கின்றாரே.

§ வளையம்—திருமுடியிலணியும் மாலை.

| | | | |
|---|---|---|---|
| அம் புருவம் | அழகிய புருவத்தையும் | எறிந்த | வீசியெறிந்த |
| அரி நெடு கண் | செவ்வரி கருவரிபடர்ந்து நீண்ட கண்களையு முடையளான | கூத்தர் ஆம் | நடையழகுடையவனும், |
| அலர் மகளை | பெரியபிராட்டியாரை | வம்பு அலரும் தண் சோலை | பரிமளம்வீசுகின்ற குளிர்ந்த சோலைகளையுடைய |
| வரை அகலத்து | மலைபோன்ற திருமார்பிலே | வண் சேறை | அழகிய திருச்சேறையிலே |
| அமர்ந்து | பொருந்த வைத்துள்ளவனும் | வான் உந்து கோயில் மேய | ஆகாசத்தையளாவுகின்ற ஸந்நிதியில் நித்யவாஸம் செய்பவனுமான |
| மல்லல் கொம்பு உருவம் விளா | தழைத்த கிளைகளை வடிவமாகவுடைய விளா மரத்திலுள்ள | எம்பெருமான் | ஸாரநாதப்பெருமாளுடைய |
| | | தாள் | திருவடிகளை |
| கனி மேல் | பழத்தின்மேலே | தொழுவார் | ஸேவிப்பவர்கள் |
| இள கன்று கொண்டு | (அஸுரவடிவாய் வந்த தொரு) சிறு கன்றை(த் தடியாக)க் கொண்டு | எப்பொழுதும் | எந்நாளும் |
| | | என் மனத்தே இருக்கின்றார் | என்னெஞ்சிலேயே வாஸஞ் செய்கிறார்கள். |

* * *—நான் திருச்சேறை யெம்பெருமானை மனத்திற் கொள்ளுமவனல்லேன்; அப்பெருமான் திருவடிகளைத் தொழுகின்றவர் எவரோ, அவர்களையே இடைவிடாது நெஞ்சிற்கொள்பவ னடியேன் என்கிறார்.

அழகிய திருப்புருவங்களோடும் நீண்ட திருக்கண்களோடுங் கூடின பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்துக் கொண்டிருப்பவனும், முள்ளைக் கொண்டே முள்ளைக் களைவதுபோல, கன்றினுருவங் கொண்டுவந்த ஒரு அஸுரனைக் கொண்டு விளாமரமாய் நின்ற மற்றோரஸுரன்மேல் வீசியெறிந்து இரண்டையும் முடித்தவனும், அழகிய சோலைகளால் சூழப்பட்ட திருச்சேறையில் ஆகாசத்தளவும் ஓங்கியுள்ள ஸந்நிதியில் நித்யவாஸஞ் செய்தருள்பவனுமான எம்பெருமானுடைய திருவடிகளை ஸேவிப்பவர்கள் ஒருநொடிப்பொழுதும் எனது நெஞ்சைவிட்டுப் பிரியாதிருக்கின்றனர் என்றாராயிற்று.

"எப்பொழுதுமென்மனத்தேயிருக்கின்றாரே" என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"நிதித்யாஸிதவ்ய:-நிதித்யாஸிதவ்யஃ என்கிற விஷயத்துக்கு இடங்காண்கிறிலேன்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தி பரமபோக்யம். பாகவதர்கள் ஆழ்வாருடைய திருவுள்ளத்தின் அவகாசத்தை ஆக்ரமித்துக் கொள்ளவே சிந்தனைக்கினிய பெருமானுக்கு அங்கு இடமில்லையாம்.

அம்புருவவரிநெடுங்கண்=‘அம்—புருவம்’ என்று பிரிப்பதுதவிர, ‘அம்பு உருவம்’ என்று பிரிப்பதும் பொருந்தும்; ‘அம்புபோன்ற உருவத்தையுடைய’ என்று பொருளாய், கண்ணுக்கு விசேஷணமாகும். கண்களுக்கு அம்பை உவமையாகச் சொல்லுதல் கவிமரபு: "அம்பன்னகண்ணாளசோதை" என்றதுங்காண்க.

மீதோடிவாளெயிறு மின்னிலக முன்விலகுமுருவினளை *
காதோடுகோடிமூக்கன் றுடனறுத்த கைத்தலத்தாவென்றுநின்று *
தாதோடுவண்டலம்பும் தண்சேறையெம்பெருமான் தாளையேத்தி *
போதோடுபுனல்தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றாரே. (௫)

| | |
|---|---|
| வாள் எயிறு | ஒளி பொருந்திய கோரப்பல்லானது |
| மீது ஓடி | மேல்முகமாக வளர்ந்து |
| மின் இலக | மின்னல்போல் விளங்க |
| முன் விலகும் உருவினளை | முன்னேவந்து நின்ற உருவத்தை யுடையவளான சூர்ப்பணகையினுடைய |
| காதோடு | காதையும் |
| கொடி மூக்கு | கொடி மூக்கையும் |
| அன்று | அப்போது |
| உடன் | உடனே |
| அறுத்த | அறுத்துவிட்ட |
| கைத்தலத்தா | திருக்கையை யுடையவனே! |
| என்று நின்று | என்று நிலைநின்று,— |
| வண்டு | வண்டுகளானவை |
| தாதோடு | பூந்தாதுகளிலே |
| அலம்பும் | ஆரவாரம் செய்யப்பெற்ற |
| தண் சேறை | குளிர்ந்த திருச்சேறையிலுள்ள |
| எம்பெருமான் | ஸாரநாதப்பெருமானுடைய |
| தாளை | திருவடிகளை |
| ஏத்தி | துதித்து |
| போதோடு | புஷ்பங்களோயும் |
| புனல் | நீர்த்தத்தையும் |
| தூவும் | ஸமர்ப்பிக்கிற |
| புண்ணியர் | பாக்யசாலிகள் |
| விண்ணவரில் | நித்யஸூரிகளிற் காட்டிலும் |
| பொலிகின்றார் | மேம்பாடுடையார். |

* * *—சூர்ப்பணகையின் காதையும் மூக்கையுமறுத்த வீரனே! என்று சொல்லி எம்பெருமானுடைய திறலில் ஈடுபட்டு அவனது திருவடிகளையே துதித்து மந்த்ர புஷ்பங்கள் பணிமாறி அர்க்கிய பாத்ய ஆசமநீய தீர்த்தங்கள் ஸமர்ப்பிக்கும் பாகவதர்கள் நித்யஸூரிகளிற்காட்டில் சிறந்தவர்களென்கிறார். எவ்வகையான இடையூறுக்கும் நிலமன்றியே நலமந்த மில்லதோர் நாடாகிய பரமபதத்திலே யிருந்துகொண்டு பகவதாராதநம் செய்வதில் அருமையொன்று மில்லை; இருள்தருமா ஞாலமாகிய இந்நிலத்திலிருந்துகொண்டு பகவதாராதநம் செய்வதே அரிதாதலால் அங்ஙனஞ் செய்பவர்கள் நித்தியஸூரிகளிற் காட்டிலும் மேம்பட்டவர்களேயாகக் குறையில்லை யென்க. "பாற்கடல் பாம்பணைமேல் பள்ளி கொண்டருளும் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியரே" என்ற திருவிருத்தமும் நோக்கத்தக்கது.

சூர்ப்பணகையின் பயங்கரமான உருவத்தைக் கூறுவது முதலடி. "முன் விலகு முருவினள்" என்பதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம்;— முன்னே ஸஞ்சரிக்கிற வடிவையுடையவள் என்றும்; கண்டவர்கள் விட்டு விலக வேண்டும்படியான (பயங்கர) ரூபத்தையுடையவள் என்றும்.

சூர்ப்பணகையின் காதையும் மூக்கையும் அறுத்தது இளைய பெருமாளுடைய தொழிலாயினும் இராமபிரான் ப்ரயோஜக கர்த்தாவாதலால் அவனுடைய தொழிலாகச் சொல்லுதலும் பொருந்தும். "ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்கிற நியாயத்தாலும் பொருந்தும். (ங)

தேராளும்வாளரக்கன் தென்னிலங்கை வெஞ்சமத்துப்பொன்றிவிழ *
போராளுஞ்சிலையதனால் பொருகணைகள் போக்குவித்தாயென்று * நாளும்
தாராளும்வரைமார்பன் தண்சேறையெம்பெருமானும்பராளும் *
பேராளன்பேரோதும் பெரியோரை யொருகாலும் பிரிகிலேனே. (ச)

| | | | |
|---|---|---|---|
| தேர் ஆளும் | தேர்களை நடத்தவல்லவனாய் | நாளும் | நாள்தோறும் |
| வாள் | வாட்படையையுடையனான | தார் ஆளும் வரை மார்பன் | மாலையை அணிந்துள்ள மலைபோன்றதிருமார்பை யுடையவனும் |
| அரக்கன் | இராவணனுடைய | உம்பர் ஆளும் | மேலுலகங்களை ஆள்பவனும் |
| தென் இலங்கை | அழகிய லங்காபுரியை | பேராளன் | பெருமை பொருந்தினவனுமான |
| வெம் சமத்து | கொடிய போர்க்களத்தில் | தண் சேறை எம்பெருமான் | திருச்சேறைப் பெருமானுடைய |
| பொன்றி வீழ | சிதறியழிந்துபோம்படி | பேர் | திருநாமங்களை |
| போர் ஆளும் சிலை அதனால் | போரை நடத்தவல்ல வில்லினால் | ஓதும் | ஓதுகின்ற |
| பொரு கணைகள் | கொடிய அம்புகளை | பெரியோரை | மஹாத்மாக்களை |
| போக்கு வித்தாய் | பிரயோகித்தவனே! | ஒருகாலும் | ஒருபோதும் |
| என்று | என்று சொல்லி, | பிரிகிலேன் | பிரியமாட்டேன். |

* * *—எம்பெருமானைப் பிரிந்து நெடுநாள் தரித்திருப்பினு மிருப்பேன்; பாகவதர்களைப் பிரிந்து ஒரு நொடிப்பொழுதும் தரித்திருக்ககில்லே னென்கிறார். தேர்வீரனான இராவணனுடைய படைவீடான இலங்காபுரியைப் பொடிபடுத்தின பெருவீரனே! என்று சொல்லித் திருச்சேறை யெம்பெருமானுடைய பல பல திருநாமங்களை வாயாரப்பாடும் பெருமையுடையார் எவரோ, அவரை ஒருகாலும் பிரியமாட்டே னென்றாராயிற்று.

கீதையில் "ஸ மஹாத்மா" என்றும் "மஹாத்மாநः" என்றும் அவன்றானே சொல்லிப் போந்தவர்களையாயிற்று இவர் 'பெரியோர்' என்கிறது. .... (ச)

வந்திக்கும்மற்றவர்க்கும் மாசுடம்பின் வல்லமணர் தமக்குமல்லேன் *
முந்திச்சென் றரியுருவாயிரணியனை முரணழித்த முதல்வற்கல்லால் *
சந்தப்பூ மலர்ச்சோலைத் தண்சேறையெம்பெருமான்றாளை * நாளும்
சிந்திப்பார்க்கென்னுள்ளம் தேனூறி யெப்பொழுதும் தித்திக்குமே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| அரி உரு ஆய் | நாரஸிம்ஹரூபியாய் | அமணர் தமக்கும் | ஜைநர்கட்கும் |
| முந்தி சென்று | முந்துற வெளிப்பட்டு | வந்திக்கும் மற்றவர்க்கும் | 'வந்தே' என்று சொல்லிக் கொண்டு திரிகிற பௌத்தர்கட்கும் |
| இரணியன் முரணை | இரணியாசுரனுடைய வலியை | அல்லேன் | கூட்டுப்படக் கடவேனல்லேன்; |
| அழித்த | பாழ்படுத்தின | சந்தம் பூமலர் | சந்தநப்புஷ்பங்களையுடைய |
| முதல்வற்கு அல்லால் | ஜகத்காரணபூதனான எம்பெருமானுக்கல்லது, | சோலை | சோலைகளையுடைத்தான |
| மாசு உடம்பின் | அழுக்கேறின உடம்பையுடையராய் | தண் சேறை | குளிர்ந்த திருச்சேறையிலுள்ள |
| வல் | வலிந்து வாது செய்பவர்களான | எம்பெருமான் | ஸாரநாதப் பெருமானுடைய |

| | | | |
|---|---|---|---|
| தாளை | திருவடியை | என் உள்ளம் | என் மனமானது |
| நாளும் | நாள்தோறும் | தேன் ஊறி | அமுதம் சுரக்கப்பெற்று |
| சிந்திப்பார்க்கு | { தியானம் செய்யும் பாகவதர் திறத்தில் | எப்பொழுதும் | இடைவிடாது |
| | | தித்திக்கும் | தித்திக்கின்றது. |

* * *—தமக்கு பாகவத பக்தி மிக்கிருக்கக் காண்கையாலே அது காரணமாகப் பகவத்பக்தி குறையற்றிருக்கு மென்கிறாரிதில். ப்ராஹ்லாதாழ்வானைக் காத்தருளவேண்டி நாசிங்கமூர்த்தியாய்த் தூணில் தோன்றி ஹிரண்யாஸுரனுடைய மிடுக்கை யொழித்த முழுமுதற்கடவுளான எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷபூதனாயிருப்பே னத்தனையன்றி இப்படியிருக்ககில்லாத ஜைநர் பௌத்தர் முதலானாருடைய திரளிலே சேர்க்கடவேனல்லேன் என்றார் முன்னடிகளில்.

இங்ஙனே உம்மால் திண்ணிதாகச் சொல்லக்கூடுமோ? எது கொண்டு இங்ஙனே நீர் சொல்லுகிறீர்? என்று கேட்பார்க்கு உத்தரமாகப் பின்னடிகளருளிச் செய்கிறார்;—பரமபோக்யமான திருச்சேறையிலெழுந்தருளியிருக்கின்ற ஸாரநாதப் பெருமாளுடைய திருவடிகளைத் தினந்தோறும் சிந்திக்கின்ற பாகவதர்களை நினைத்த மாத்திரத்தில் என்னுள்ளமானது தேனூறித்தித்திக்கின்றதே, இஃது ஒன்றே போராதோ? ஜைந பௌத்தாதிகளின் திரளிலே புகுதற்குரிய விதி எனக்கு இருக்குமானால் இப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவ ப்ராவண்யம் எனக்கு உண்டாகக்கூடுமோ? பாக்ய விசேஷத்தால் இஃது உண்டாகக் காண்கையினால் முன்னடிகளிற்சொன்னபொருள் கல்வெட்டுக்காண்மின் என்கை.

'வந்திக்கும் மற்றவர்' என்றால் எங்ஙனே பௌத்தர்களைக் காட்டும்? என்னில்; பௌத்தர்கள் புத்ததேவதையின் விஷயமாகச் சில ஸ்தோத்ரங்கள் சொல்லுவர்கள்; அவற்றில் 'வந்தே, வந்தே' என்று மிகையாகக் காணப்படுதலால் 'வந்திக்குமவர்' என்ற சொல் பௌத்தர்களைக் குறிக்குமென்ப.

மாசுடம்பின் வல்லமணர்=உடம்பிலுள்ள அழுக்கைக் கழற்றலாகாதென்றும், மலங்களைத் தேஹத்திலேயே தரித்துக் கொண்டிருப்பதனால் தான் மோக்ஷமுண்டாகுமென்றும் அமணர்களின் கொள்கை யென்றுணர்க. 'பௌத்தர்களுக்கும் ஜைநர்களுக்கும் அல்லேன்' என்றது அவர்களைப்போலே பகவத் விமுகர்களாக ஒருகாலும் ஆகமாட்டே னென்றவாறு. .... .... (௫)

பண்டேனமாயுலகையன்றிடந்த பண்பாளா வென்று நின்று *
தொண்டானேன் திருவடியேதுணையல்லால் துணையிலேன்சொல்லுகின்றேன் *
வண்டேந்தும் மலர்ப்புறவில் வண்சேறையெம்பெருமா னடியார்தம்மை *
கண்டேனுக்கிதுகாணீர் என்னெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே. (௬)

| | | | |
|---|---|---|---|
| பண்டு அன்று | முன்பொருகால் | இடந்த | { கோட்டாற் குத்தியெடுத்து வந்த |
| ஏனம் ஆய் | மஹாவராஹரூபியாய் | பண்பாளா | குணசாலியே! |
| உலகை | பூமியை | | |

| | | | |
|---|---|---|---|
| என்று நின்று | என்றுசொல்லி நிலைநின்று | புறவில் | தோப்புகளை யுடைத்தான |
| தொண்டு ஆனேன் | (உனது திருவடிகட்கு) அடிமையானேன்; | வண் சேறை | அழகிய திருச்சேறையி லுள்ள |
| திரு அடியே துணை அல்லால் | (உனது) திருவடிகளே துணையாவதன்றி | எம்பெருமான் | ஸாரநாதப் பெருமாளுடைய |
| துணை இலேன் | வேறு துணையுடையே னல்லேன்; | அடியார் தம்மை | பக்தர்களை |
| சொல்லு கின்றேன் | இதுசத்தியம்; | கண்டேனுக்கு என் நெஞ்சும் | ஸேவிக்கப்பெற்ற எனது மனமும் |
| | | கண் இணையும் | இரண்டு கண்களும் |
| வண்டு எந்தும் | வண்டுகளைத் தரிக்கின்ற | களிக்கும் ஆறு | களிக்கும் விதம் |
| மலர் | பூக்களையுடைய | இது காணீர் | இதோ பாருங்கள். |

* * *—முன்பு வராஹ கல்பத்தின் ஆதியிலே மஹாவராஹ மூர்த்தியாய், அண்டபித்தியிலே சேர்ந்திருந்த பூமியை அதில் நின்றும் ஒட்டு விடுவித்தெடுத்துக் கொணர்ந்த நீர்மையை யுடையவனே! என்று இடையறாதே சொல்லிக்கொண்டு அந்நீர்மையிலே தோற்று உனது திருவடிகட்கே அடிமையானேன்; உனது திருவடிகளே எனக்குத்தஞ்சம்; வேறொரு புகலை உடையேனல்லேன்; இங்ஙனே ஆணையிட்டுச் சொல்லக்கடவேன்.

இப்படி திண்ணிதாக அடியேன் விண்ணப்பஞ் செய்வது எது கொண்டென்னில்; வண்டுகள் மாறாத பசுமலரையுடைத்தான சோலைகளாற் சூழப்பட்ட திருச்சேறையிலெழுந்தருளியுள்ள பெருமாளுடைய அடியார்களைஸேவித்த மாத்திரத்தில் என்னுடைய நெஞ்சும் கண்களும் களிக்கிறபடியைக் காணுங்கோள்; இவ்வளவு பரிபாகம் பெற்றேனை பின்பு அந்த அத்யவஸாயம் திடமாயிருக்கத் தட்டுண்டோ வென்கிறார். .... .... .... .... (சு)

பைவிரியும்வரியரவில் படுகடலுள் துயிலமர்ந்தபண்பா வென்றும் *
மைவிரியும் மணிவரை போல்மாயவனே யென்றென்றும், வண்டார் நீலம் *
செய்விரியுந் தண்சேறையெம்பெருமான் திருவடியைச்சிந்தித்தேற்கு * என்
ஐயறிவுங்கொண்டானுக்கா ளானார்க்கு ஆளாமென் னன்புதானே. (எ)

| | | | |
|---|---|---|---|
| படு கடலில் | ஆழ்ந்த திருப்பாற்கடலில் | மாயவனே என்று என்றும் | ஆச்சரியனே! என்றும் பலகால் சொல்லி, |
| பை விரியும் வரி அரவில் | விரிந்த படங்களையும் புள்ளிகளையுமுடைய திருவனந்தாழ்வான் மீது | வண்டு ஆர் நீலம் | வண்டுகள் படிந்த கருநெய்தல்களானவை |
| துயில் அமர்ந்த | பள்ளிகொண்ட | | |
| பண்பா என்றும் | குணசாலியே! என்றும், | செய் | கழனிகளிலே |
| மை விரியும் மணி வரை போல் | கருநிறம்மிக்க நீலமணி மயமான மலைபோன்ற (திருமேனியையுடைய) | விரியும் | மலரப்பெற்ற |
| | | தண் சேறை | குளிர்ந்த திருச்சேறையி லுள்ள |

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | எம்பெருமானுடைய | ஆள் ஆனார்க்கு | ஆட்பட்ட பாகவதர்களுக்கு |
| திரு அடியை | திருவடிகளை | என் அன்பு தான் | என்னுடைய ப்ரீதியானது |
| சிந்தித்தேற்கு என் | தியானம்பண்ணுகின்ற என்னுடைய | ஆள் ஆம் | உரியதாகும். |
| ஐ அறிவும் கொண்டானுக்கு | ஐம்புலன்களின நிலையும் தன் விஷயத்திலாக்கிக் கொண்ட அப் பெருமானுக்கு | | |

* * *—இடைவிடாது எம்பெருமானை யநுபவிக்கப்பெறுதலால் விகஸித்த படங்களையுடையனும், ஸர்வேச்வரனுக்கும் வைத்த கண்மாறாதே கண்டுகொண்டிருக்க வேண்டும்படியான வரிகளை யுடையனுமான திருவனந்தாழ்வான் மேலே கடலில் திருக்கண் வளர்ந்தருளும் நீர்மையையுடையவனே! என்றும், அஞ்ஜன மலைபோலே குளிர்ந்து தாபஹரமான வடிவையுடைய ஆச்சரியனே! என்றும் சொல்லிக்கொண்டு திருச்சேறை யெம்பெருமானுடைய திருவடியையே சிந்தித்துக் கொண்டிருக்கு மென்னுடைய ஸகலேந்திரிய வுணர்ச்சிகளையும் தன்வச மாக்கிக்கொண்ட அப்பெருமானுக்கு ஆட்பட்டவர் எவரோ, அவர்கள் திறத்திலேயே என்னுடைய அன்பு பெருகுகின்றது என்கிறார்.

தாம் எம்பெருமானை விட்டுப் பாகவதர்களையே பற்றுவதாக அநுஸந்திக்கு மித்திருமொழியில் 'தண்சேறை யெம்பெருமான் திருவடியைச் சிந்தித்தேற்கு' என்று சொல்லிக் கொள்ளுதல் தகுமோ வென்று சிலர் சங்கிப்பர்கள்; எம்பெருமானுடைய அடியார்களென்னுங் காரணத்தினால் பாகவதர்கள் உத்தேச்யர்களாக ஆகிறாப்போலே 'பாகவதர்கள் பற்றுந் தெய்வம்' என்னுங்காரணத்தினால் எம்பெருமானும் உத்தேச்யனாதல் கூடுமென்க. "திரிதந்தாகிலுந் தேவபிரானுடைக் கரிய கோலத் திருவுருக்காண்பன் நான், பெரியவண் குருகூர் நகர் நம்பிக்கு ஆளுரியனாய் அடியேன் பெற்ற நன்மையே" என்ற கண்ணிநுண் சிறுத்தாம்பும் அறிக.

"சிந்தித் தேற்கு என்" என்ற விடத்து, வடமொழியில் ஆர்ஷ ப்ரயோகங்களிற்போல உபபத்தி கூறவேண்டும்: 'சிந்தித்தேற்கு' என்பது 'சிந்தித்த எனக்கு' என்று பொருள்படநின்றாலும், இங்கு அங்ஙனம் பொருள்படாது 'சிந்தித்த' என்று விசேஷண மாத்ரமாக நிற்கும்; திருமாலையில் "மழைக்கன்று வரை முனேந்தும்" என்ற பாசுரத்தில் "உழைக்கின்றேற்கு என்னை" என்ற பிரயோகமும் பிறவும் காணத்தக்கன. .... .... .... (எ)

உண்ணாதவெங்கூற்றம் ஓவாதபாவங்கள்சேரா * மேலை
விண்ணோரும்மண்ணோரும் வந்திறைஞ்சும் மென்தளிர்போ லடியினானை *
பண்ணாரவண்டியம்பும் பைம்பொழில்சூழ் தண்சேறையம்மான்றன்னை *
கண்ணாரக் கண்டுருகிக் கையரத்தொழுவாரைக் கருதுங்காலே. (அ)

| | |
|---|---|
| மேலை விண்ணோரும் | மேலுலகத்தவர்களான நித்ய ஸூரிகளும் |
| மண்ணோரும் | இம் மண்ணுலகத்தி லுள்ளாரும் |
| வந்து இறைஞ்சும் | கிட்டி வணங்கும்படியான |
| மென் தளிர் போல் அடியிணையை | மெல்லிய தளிர்போன்ற [ஸௌகுமாரமான] திருவடிகளை யுடையவனும் |
| பண் ஆர வண்டு இயம்பும் பை பொழில் சூழ் தண் சேறை அம்மான் தன்னை | பண்கள் நிரம்ப வண்டுகள் பாடப் பெற்ற சோலைகளாற் சூழப்பட்ட குளிர்ந்த திருச் சேறையில் எழுந்தருளி யிருப்பவனுமான ஸாரநாதப் பெருமானை |
| கண் ஆர கண்டு | கண்கள் நிறையும்படி ஸேவித்து |
| உருகி | மனம் நெகிழ்ந்து |
| கை ஆர | கைகளின் ஆசை தீரும்படி |
| தொழுவாரை | தொழாநின்ற பாகவதர்களை |
| கருதுங்கால் | சிந்தைசெய்த மாத்திரத்தில், |
| வெம் | கொடிதான |
| கூற்றம் | யமதேவதையானது |
| உண்ணாது | நெருக்கமாட்டாது; |
| ஓவாத பாவங்கள் | இடைவிடாத பாவங்களானவை |
| சேரா | கிட்டமாட்டா. |

* * *—விண்ணுலகத்தவர்களும் மண்ணுலகத்தவர்களும் ஈண்டித்தொழும் படியான திருவடிகளை யுடையனைப் கொண்டு திருச்சேறையி லெழுந்தருளி யிருக்கும் பெருமானைக் கண்ணாரக் கண்டும் கையாரத் தொழுதும் பரவசப்படு கின்ற ஸ்ரீ வைஷ்ணவர்களை நெஞ்சால் நினைத்தமாத்திரத்தில் ம்ருத்யுபயத்திற் கும் பாபபயத்திற்கும் ப்ரஸக்தி யில்லையாகு மென்கிறார்.

உண்ணாது வெங்கூற்றம்=ஸ்ரீ வைஷ்ணவர்களைச் சிந்திக்கின்றவர்களை யமன் உண்ணமாட்டான் என்றால் 'அவர்களுக்கு ஒருநாளும் சாவு இல்லை' என்று பொருளா? என்று சிலர் சங்கிப்பர்கள்; அது பொருளன்று; யமதண்ட னைக்கு அவர்கள் ஆளாகமாட்டார்கள் என்று பொருள் காண்க. அன்றியே, பாகவத பக்தர்கள் மரணத்தைப்பற்றின வருத்தத்தினால் கரையமாட்டார்கள் என்பதாகவும் கருத்துக்கொள்ள இடமுண்டு. "𑌪𑍍𑌰𑌾𑌯𑍋 𑌹𑍍𑌯𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌮𑍃𑌤𑍍𑌯𑍋𑌰𑍁𑌦𑍍𑌵𑌿𑌜𑌤𑍇 𑌜𑌨𑌃। 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍇 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 𑌪𑍍𑌰𑌿𑌯𑌮𑌿𑌵𑌾𑌤𑌿𑌥𑌿𑌮𑍍 =ப்ராயோ ஹ்யக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜநஃ- க்ருதக்ருத்யாஃ ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்." என்கிற ச்லோகம் இங்கு உணரத்தக்கது.

இவ்வுலகில் பலவகையான துக்கங்களுள்ளன. அவற்றுள் மரணதுக்கம் எல்லாவற்றிலும் பெரிது. மரணகாலத்தில் சரீரம் அஸ்வாதீநமாய் விடுகிறது. மனம் கலக்கமுறுகின்றது. புத்தி ஸ்வாதீநமற்றுப் போகின்றது. இந்திரியங்கள் நிலைகுலைகின்றன; என்றிவை முதலான காரணங்களினால் மரணத்தைப் பற்றி மஹத்தான துக்கமுண்டாகிறது. இவ்வுலகத்தோடு அதுவரையிலிருந்த ஸம்பந்தமென்ன, பந்துமித்ர புத்ரகளத்ராதிகளோடு இருந்த ஸம்பந்தமென்ன, இன்னமும் தன்னுடையனவாகப் பாவித்த வீடு வாசல் முதலிய பலவகைப் பொருள்களோடு வைத்துக் கொண்டிருந்த ஸம்பந்தமென்ன, ஆகிய இவற்றை

யெல்லாம் விடநேருகின்றது. தாம் செய்யவேணுமென்று நினைத்துக் கொண்டிருந்த பலவகைக் காரியங்கள் குறைபட்டு நிற்கின்றன.—இந்யாதி காரணங்களாலும் மாணமென்றால் யாருக்கும் ருசிப்பதில்லை. ஆகையால் மரணமென்றால் பெரும்பாலும் மனிதர் துக்கமடைவது இயல்பு.

பாலோகமுண்டென்றும், பாப புண்யங்கட்குப் பலன் கிடைத்தே தீருமென்றும், ஸ்வர்க்க நரகங்கள் புண்ய பாப பலன்களென்றும் நம்பிக்கை யுள்ளவர்களுக்கு ஜீவித்திருந்த காலத்தில் தாம் செய்த பலவகைப் பாவங்களை நினைத்து அவற்றின் பலன்களை யநுபவிக்க நேரிடுமே யென்கிற அச்சத்தினால் மிக்க துக்க முண்டாகக் கூடியது. ஜீவித்திருந்த காலத்திலோவெனில், சிலர் உலக வியாபாரங்களில் மண்டிப் பரலோகத்தைப் பற்றி நினைக்க அவகாசமும் பெறாமல் விஷய ஸுகங்களுக்காகப் பாவஞ் செய்கிறார்கள். சிலர் பரலோகத்தையும் பாப புண்யங்களையும் ஈச்வரனையும் இல்லைசெய்து சரீர ஸுகத்திற்காக வேண்டிற்றெல்லாம் செய்யலாமென்று நினைத்துப் பாவஞ் செய்கிறார்கள். சிலர், நாம் நீண்டகாலம் ஜீவித்திருக்கப் போவதாகவும், கடைசி காலத்தில் பரலோகத்துக்கு வேண்டியதைச் செய்து கொள்ளப் பார்க்கலாமென்றும் நினைத்து உள்ளவரையில் ஸாம்ஸாரிக ஸுகத்துக்காகப் பாவச் செயலில் இழிந்து பிறகு மீள முடியாமல் நிற்கிறார்கள். ம்ருத்யுவோ நமது எண்ணங்களையும் காரியங்களையும் ஸமய ஸந்தர்ப்பங்களையும் கவனிக்காமல் வந்துவிடுகின்றது. ஆகையால் பெரும்பாலும் எல்லோருமே ம்ருத்யுவுக்கு அஞ்சி வருந்துகின்றனர். ஆனால், உண்மையான பக்தர்களும் உலகத்தின் போக்கை நன்றாய்க் கண்டறிந்தவர்களும், எப்போதும் பகவத் பாகவதர்களைச் சிந்தை செய்துகொண்டு ஆத்மாநந்தத்தில் ஆழ்ந்து கிடப்பவர்களும் மாணத்தைப்பற்றிச் சிறிதும் வருந்த மாட்டார்கள்; மரணத்தை அவர்கள் ஒரு உத்ஸவமாக நினைத்து ஸந்தோஷமே யடைவர்கள்.

ஸ்வதேசத்தையும் மாதா பிதாக்களையும் மற்றுமுள்ள உறவினரையும் விட்டுப் பரதேசம் போய்ப் பொருளீட்டும் ஒரு சிறுவன் தன் முயற்சி கைகூடி, மிக்க பொருள் திரட்டிக்கொண்டு தன் வீடு திரும்பும்போது சிறிதும் வருந்துவதில்லையன்றோ. பந்துக்களையும் ஸ்வதேசத்தையும் விட்டு நீண்டகாலம் பரதேசத்தில் வஸித்த அச்சிறுவன் தன்னில்லம் திரும்பி ஸ்நேஹமயியான மாதாவையும் பந்து பாந்தவர்களையும் எப்பொழுது பார்க்கப்போகிறோமென்று ஆவலோடு காத்திருந்தவன் அச்சமயம் நெருங்கும்போது மஹத்தான ஸந்தோஷத்தையே அடைகிறான். ஸாத்யமானவளவும் விரைவில் தன்னில்லம் போய்ச்சேர நினைக்கிறான். மாதா பிதாக்களைக் கிட்டி அவர்களுடைய அன்புக்கு நாம் எப்பொழுது பாத்திரமாகப் போகிறோமென்று நினைக்கிறான். ஏனென்றால், அவன் பரதேசத்தில் நீண்டகாலமிருந்தாலும் தன் முயற்சியில் ஸித்திபெற்று நிரம்பிய பொருளைத் திரட்டியிருப்பதால் ஒருவகையான ஆத்ம ஸந்தோஷத்தை அடைந்திருக்கிறான். இவ்விதமாகத் தான் திரும்பும்போது தகப்பனார் தன்னை மிகவும் பாராட்டப் போகிறார் என்கிற நம்பிக்கை அவனுடைய மனத்தை உத்ஸாஹப்

படுத்திக் கொண்டிருக்கிறது. தன் முயற்சியில் ஸித்தியடைந்த புதல்வன் தன் தந்தையிடம் திரும்பிப் போகும்போது அடையும் ஆநந்தம் விலக்ஷணமாயிருக்கும். அதுபோல் உண்மையாகத் தன் நிலைமையை யறிந்த பக்தனானவன் இவ்வுலகத்தில் தன் கடமைகளை ஒழுங்குபடச் செய்து ஈச்வரனுடைய நியமனத்தால் ப்ராப்தபோகம் முடிந்து பிதாவான அவ்விச்வரனுடைய ஸந்நிதானத்திற்குப் போகுங்காலம் கிட்டும்போது (அதாவது) இவ்வுலகத்தின் 'துக்கமயமான நிலைமையிலிருந்து முடிவாக விடுபடும்போது மஹத்தான ஆநந்தத்தை அடைகின்றான். அவ்வானந்தத்தை எதனோடும் ஒப்பிடமுடியாது. அப்படியே திருச்சேறை யெம்பெருமானைத் தொழுத பாகவதர்களைச் சிந்தை செய்பவர்களும் க்ருதக்ருத்யர்களாதலால் அவர்கள் ஒருகாலும் ம்ருத்யுவுக்கு அஞ்சி யிருக்கமாட்டார்கள்; பாவத்திற்கும் பயப்பட ப்ரஸக்தியில்லை—என்றதாயிற்று. .... (அ)

கள்ளத்தேன் பொய்யகத்தேனாதலால் போதருகால் கவலையென்னும் *
வெள்ளத்தேற்கென்கொலோ விளைவயலுள்கருநீலம் களைஞர்தாளால்
தள்ள, தேன்மணநாறும் தண்சேறையெம்பெருமான்றாளை * நாளும்
உள்ளத்தேவைப்பாருக் கிதுகாணீரேன்னுள்ள முருகுமாறே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| விளை வயலுள் | பயிர்தழைத்த கழனிகளில் (முளைத்திருக்கிற) | வைப்பாருக்கு | வைத்துச் சிந்தைசெய்கின்ற பாகவதர் விஷயத்தில் |
| கரு நீலம் | கருநெய்தலை, | என் உள்ளம் உருகும் ஆறு காணீர் | என்மனம் நீர்ப்பண்டமாக உருகும் விதத்தைப் பாருங்கோள்; |
| களைஞர் | களைபிடுங்குகிற உழவர் | | |
| தாளால் | (தங்கள்) கால்களாலே | கள்ளத்தேன் பொய் அகத்தேன் ஆதலால் | ஆத்மாபஹாரக்கள்வனும் வஞ்ச நெஞ்சை யுடையனுமாய் அடியே னிருப்பதால் |
| தள்ள | ஒதுக்கித்தள்ள, | | |
| தேன் | (அதில்நின்று மொழுகின) தேனினுடைய | | |
| மணம் நாறும் | பரிமளம் வீசப்பெற்ற | போதருகால் | ஒருநொடிப் பொழுதும் இடைவிடாதே |
| தண் சேறை | திருச்சேறையில் எழுந்தருளி யிருக்கின்ற | கவலை என்னும் வெள்ளத் தேற்கு | துக்கமாகிற பெருங் கடலில் அழுந்திக்கிடந்த எனக்கு |
| எம்பெருமான் | ஸாரநாதப்பெருமாளுடைய | | |
| தாளை | திருவடிகளை | | |
| நாளும் | நாள்தோறும் | இது என் கொல் | இப்படிப்பட்ட பேறு எங்ஙனே உண்டாயிற்றோ ?. |
| உள்ளத்தே | நெஞ்சிலே | | |

* * *—பாகவதர்களை ஸேவிக்கப் பெற்றதனால் தமக்குண்டான எல்லை கடந்த ஆனந்தத்தைப் பேசி, அயோக்யனான எனக்கு இப்படிப்பட்ட ஆனந்தத்தை யநுபவிக்கும்படியான பாக்கியம் எங்ஙனே வாய்த்ததோ, தெரியவில்லையே! என்று தம்மில் தாம் விஸ்மயப்படுகிறார்.

நெற்பயிர்கள்விளையுங் கழனிகளிலே இடையிடையே கருநெய்தல்கள் முளைத்திருக்கும்; களைபிடுங்கித்திரியும் உழவர்கள் அவற்றைப் பிடுங்கியெறிய, அவற்றி

னின்றும் ஒழுகாநின்றதேனின் மணம் ஊரெங்கும் வீசுகின்றதாம்; இப்படிப்பட்ட போக்யதையைபொருந்திய திருச்சேறையில் எழுந்தருளியிருக்கின்ற ஸாரநாதப் பெருமாளுடைய திருவடிகளில் அன்புடையரான ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலே என் உள்ளம் நீர்ப்பண்டமாக உருகுகின்றதே!; இப்படிப்பட்ட ஹ்ருதயபரிபாகத்திற்கு நான் உரியேனே? நானே ஆத்மாபஹாரக்கள்வன்; * வஞ்சக்கள்வன் மாமாயனை எம்பெருமானையும் வஞ்சிப்பவனாயிருக்கின்றேன்; இப்படியிருக்கையாலே மேன்மேலும் துக்கங்களையே அநுபவிக்கவுரியேன் நான்; அப்படியிருந்தும் ஒருதுக்கத்துக்கும் ஆட்படாமல், ஸ்ரீவைஷ்ணவர்களை ஸேவிப்பதும் அதனால் நெஞ்சு உருகப்பெறுவதுமாய்ச் சதிர்த்தேனே!, இஃது என்கொல்! என்கிறார்.

கள்ளத்தேன்-கள்ளத்தனமுடையேன். "𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌥𑌾 𑌸𑌨𑍍𑌤𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑌨𑍍𑌯𑌥𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌦𑍍𑌯𑌤𑍇। 𑌕𑌿𑌂 𑌤𑍇𑌨 𑌨 𑌕𑍃𑌤𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌚𑍋𑌰𑍇𑌣𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌾 = யோந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே-கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா?" என்ற ப்ரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. பகவத்சேஷமான ஆத்மவஸ்துவை அங்ஙனம் உணரப்பெறாதவன் பெரிய கள்ளன்; அவன் எல்லாவகையான பாவங்களையும் செய்தவனாவன் என்பது இந்த ச்லோகத்தின்கருத்து. ஆழ்வார் தம்மை அப்படிப்பட்ட கள்வனாக அநுஸந்தித்துக் கொள்ளுகிறார். 'போதோருகால்' என்றபாடம் மறுக்கத்தக்கது.
போதருகால்—நிகழுங்காலமெல்லாம் என்றபடி.

கவலை—மறப்பும் துக்கமும். .... .... .... (௬)

பூமாண்சேர் கருங்குழலார்போல்நடந்து வயல்நின்றபெடையோடு * அன்னம்
தேமாவினின்னிழலில் கண்டுயிலும் தண்சேறையம்மான்தன்னை *
வாமான்தேர்ப்பரகாலன் கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர் *
தூமாண்சேர் பொன்னடிமேல் சூட்டுமின் நுந்துணைக்கையால் தொழுதுநின்றே.

| | | | |
|---|---|---|---|
| அன்னம் | அன்னப்பறவைகள் | அம்மான் தன்னை | எம்பெருமான் விஷயமாக,— |
| வயல் நின்ற பெடையோடு | கழனிகளில் திரிகிற பேடைகளோடு கூட, | வாம்மான்தேர் | ஓடிவருகின்ற குதிரைகள் பூண்ட தேரையுடையரான |
| பூ மாண் சேர் கருங்குழலார் போல் நடந்து | பூக்களணிந்து அழகு பெற்ற கறுத்த கூந்தலையுடைய இளம் பெண்களைப்போல நடந்து | பரகாலன் கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| | (பின்பு) | ஒலி | அருளிச்செய்த |
| தே மாவின் | தேன் மாமரத்தினுடைய | மாலை கொண்டு | இச் சொல்மாலைகளைக் கொண்டு |
| இன் நிழலில் | இனிமையான நிழலில் | தொண்டீர் | ஓ பக்தர்களே!, |
| கண் துயிலும் | கண்ணுறங்கப்பெற்ற | தூ | பரிசுத்தமாய் |
| தண் சேறை | திருச்சேறையிலெழுந்தருளியிருக்கிற | மாண் சேர் | மாட்சிமை தங்கியதாய் |

| | | | |
|---|---|---|---|
| பொன் | விரும்பத்தக்கதான | தொழுது நின்று | ஸேவித்திருந்து |
| அடி மேல் | (அப்பெருமானுடைய) திருவடிகளின் மேலே | | |
| நும் துணை கையால் | உங்களுடைய அஞ்ஜலிபந்த மான கைகளினால் | சூட்டுமின் | சூட்டுங்கோள். |

* * *—கீழ் ஒன்பது பாசுரங்களிலும் பாகவத நிஷ்டையைப் பேசியிருந்தும், பயனுரைக்குமிப் பாசுரத்தில் "தண்சேறையம்மான் தன்னை" என்று எம்பெருமான்விஷயமாக இத்திருமொழி அருளிச்செய்யப்பட்டதென்று தலைக்கட்டுகிறார்—பாகவதர்களுக்கு உத்தேச்யன் என்கிற முறைமையால் எம்பெருமானும் தமக்கு உத்தேச்யன் என்கிற திருவுள்ளத்தைக் காட்டுதற்கு.

இத்திருமொழியைத் திருச்சேறைப் பெருமானுடைய திருவடிகளிலே உங்களுடைய கைகளால் கொண்டு சூட்டுங்கள் என்று தொண்டர்களை நோக்கிச் சொல்லுகிறார்—இத்திருமொழிகற்கைக்கு வேறொருபயன் வேண்டா; எம்பெருமானுடைய திருவடிகட்குத் தாமரைப்பூப்போல அலங்காரமாயிருக்கத்தக்க இத்திருமொழி ஸ்வயம்போக்யம் என்று காட்டினபடி. திருச்சேறைப் பெருமானை ஸேவிக்கப்போமவர்கள் * செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சியென்னப்படுகிற புஷ்பங்களை ஸமர்ப்பிக்கத் தேடவேண்டா; இத்திருமொழியை அநுஸந்தித்துக் கொண்டு செல்லுமளவிலே பூவிட்டதற்கும் மேலாக எம்பெருமானுடைய திருவுள்ளம் உவக்கும் என்பதை உய்த்துணர்க.

மூன்றாமடியில், வாம்—வாவும் என்றபடி; வாவுதல்—தாவுதல்; திருமங்கையாழ்வாருடைய குதிரைக்கு இட்ட விசேஷணம்: "செய்யுமெனெச்ச வீற்றுயிர் மெய்சேறலும்" என்ற நன்னூற் சூத்திரத்தால் எச்சத்து உயிர்மெய்கெட்டது.

மான்—குதிரைக்கும் பெயர். .... .... .... (கo)

அடிவரவு:—கண் அம்பு மீதோடி தோளும் வந்திக்கும் பண்டு பைவிரியும் உண்ணாது கள்ளத்தேன் பூமாண் தந்தை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—ஐந்தாந் திருமொழி,

# தந்தைகாலிற் பெருவிலங்கு.

---

[திருவழுந்தூர் மங்களாசாஸநத் திருப்பதிகம்.]

தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண்
வந்தவெந்தைபெருமானர் மருவிநின்ற வூர்போலும் *
முந்திவானம் மழைபொழிய மூவாவுருவின் மறையாளர் *
அந்திமூன்று மனலோம்பு மணியார்வீதி யழுந்தூரே. (க)

| | |
|---|---|
| வானம் | மேகமானது |
| முந்தி | (யாகஞ் செய்வதற்கு) முன்னமே |
| மழை பொழிய | மழை பெய்யப் பெற்றதும், |
| மூவா உருவின் | கிழத்தனமற்ற உருவத்தை யுடையரான |
| மறையாளர் | பிராமணர்கள் |
| அந்திமூன்றும் | முச்சந்தியும் |
| அனல் ஓம்பும் | அக்நிஹோத்ரம் செய்யப் பெற்றதுமான |
| அணி ஆர் வீதி | அழகுமிக்க திருவீதிகளை யுடைய |
| அழுந்தூர் | திருவழுந்தூரென்னுந் திருப்பதியானது,— |

| | |
|---|---|
| தந்தை | தகப்பனாகிய வஸுதேவருடைய |
| காலில் | காலிலே (பூட்டப்பட்டிருந்த) |
| பெரு விலங்கு தாள் அவிழ | பெரிய விலங்குப்பூட்டு இற்றுவிழும்படியாக |
| நள் இருள் கண் | நடுநிசியிலே |
| வந்த | திருவவதரித்த |
| எந்தை பெருமானர் | எம்பெருமான் |
| மருவி நின்ற | நித்யவாஸஞ் செய்யப்பெற்ற |
| ஊர் போலும் | திவ்யதேசமாகும். |

* * *—இத்திருமொழியும் மேல்மூன்று திருமொழிகளுமாக நாற்பது பாசுரங்கள் திருவழுந்தூர்ப்பதி விஷயமாக அருளிச் செய்யப்படுமவை. தனது தவத்தின் வலிமையால் இரதத்துடன் வானத்திற் செல்லுந்தன்மையனை உபரிசரவஸு வென்னும் அரசன் தேவர்கட்கும் முனிவர்கட்கும் நேர்ந்தவிவாதத்தில் பக்ஷபாதமாய்த் தீர்ப்புச் சொன்னது காரணமாக முனிவர்களாற் சபிக்கப்பட்டுப் பூமியில் விழுகையில் அவனதுதேர் அழுந்தப்பெற்ற இடமாதல்பற்றி இத்தலத்திற்கு அழுந்தூர் என்று பெயர்வந்தது என்பர். 'தேரழுந்தூர்' எனவும் வழங்கப் பெறும்.

இத்தலத்திலெழுந்தருளியிருக்குமெம்பெருமானுடைய திருநாமம் 'ஆமருவியப்பன்' என்பதாதலால் "தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண்வந்த வெந்தை பெருமானர் மருவிநின்றவூர்" என்று தொடங்குகின்றார்.

கம்ஸனால் விலங்கிடப்பட்டுச் சிறையிருந்த வஸுதேவதேவகிகளின் கால் விலங்குகள் கண்ணபிரான் திருவவதரிக்கும்போது இற்று முறிந்தொழிந்த வரலாறு அறியத்தக்கது.

[முந்திவான மித்யாதி.] இவ்வூரில் நித்யாக்நிஹோத்ரிகளான பிராமணர்கள் மலிந்திருப்பர்களென்கிறது. அந்தணர்கள் யஜ்ஞயாகங்கள் செய்தால் நன்றாக மழைபொழிந்து தேசங்கள் ஸுபிக்ஷமாயிருக்குமென்று சொல்லுவர்கள்; திருவழுந்தூரின் நிலைமை எப்படிப்பட்டதென்னில்; அந்தணர்கள் யாகஞ்செய்யத் தொடங்கு முன்னமே வானம் மழைபொழியப்பெறுகின்றதாம். இங்ஙனம் பேசுதல் சபலாதிசயோக்தியென்றாவது அத்யந்தாதிசயோக்தி யென்றாவது அலங்காரசாஸ்த்ரிகளால் கூறப்படும். காரணமுண்டாவதற்கு முன்னமே காரியமுண்டாய்விடுவதாகச் சொல்லுவதன் கருத்து—காரணமுண்டானவுடனே ஒரு நொடிப்பொழுதும் தாமதியாமல் காரியமுண்டாய்விடுகிறது என்பதேயாம். இதனால், அவ்விடத்து அந்தணர்கள் செய்யும் யஜ்ஞங்கள் தவறாது பயனளிப்பவை யென்றதாம்.

மூன்றாமடியின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் "வானமானது முந்தி மழையைப் பொழியுமாய்த்து" என்றிருக்கும் ஸ்ரீஸூக்தியைக் கண்டவர்கள் "முந்திவானம் மழைபொழியும்" என்று மூலபாடத்தைக் கற்பித்தனர்; இது அந்வயிக்க அரிதாதலால் "முந்திவானம் மழைபொழிய" என்ற ப்ராசீந பாடமே கொள்ளத்தக்கது. இதில் வியாக்கியானவிரோதமுமில்லை; வியாக்கியானம் தாத்பர்யரீதியிற் செல்லுதலால்.

மூவாவுருவின் = அங்குள்ள ப்ராஹ்மணர்கள் வைதிககருமங்களை நேர்பட அநுஷ்டிக்கவல்ல சக்திவாய்ந்த யௌவநசாலிகள் என்கை. அந்திமூன்றும் = ப்ராதஸ்ஸவநம், மாத்யந்திநஸவநம், ஸாயம்ஸவநம் என்ற முப்போதும். (க)

பாரித்தெழுந்த படைமன்னர்தம்மை மாள * பாரதத்துத்
தேரில்பாகனாயூர்ந்த தேவதேவ னூர்போலும் *
நீரில்பணைத்தநெடுவாளைக்கு அஞ்சிப்போனகுருகினங்கள் *
ஆரல்கவுளோ டருகணையும் அணியார்வயல் சூழழுந்தூரே. (உ)

| | | | |
|---|---|---|---|
| நீரில் | தண்ணீரில் | அணி ஆர் வயல் சூழ் அழுந்தூர் | அழகுமிக்க கழனிகளால் சூழப்பட்ட திருவழுந்தூரானது,— |
| பணைத்த | செழித்து வளர்ந்த | பாரித்து எழுந்த | (வெற்றி பெறவேணுமென்று) ஊக்கங்கொண்டு கிளர்ந்த |
| நெடு வாளைக்கு | பெரிய மீன்களுக்கு | படை மன்னர் தம்மை மாள | ஆயுதபாணிகளான அரசர்கள் முடியும்படி |
| அஞ்சி | பயப்பட்டு | பாரதத்து | பாரதப் போரில் |
| போன | ஓடிப்போன | தேரில் | (அர்ஜுநனுடைய) தேரிலே |
| குருகு இனங்கள் | குருகு என்னும் பறவைக் கணங்கள் | பாகன் ஆய் ஊர்ந்த | ஸாரதியாயிருந்து கொண்டு நடத்தின |
| ஆரல் | ஆரல் என்னுஞ் சிறுமீனை | | |
| கவுளோடு | கதுப்பிலேகொண்டு | | |
| அருகு அணையும் | பின்னையும் அணுகி வந்து சேரப்பெற்ற | | |

தேவ தேவன் தேவாதிதேவனுடைய | ஊர்போலும் திவ்யதேசமாகும்.

* * *— 'ஸ்ரீமஹாவிஷ்ணுவான கண்ணபிரான் பாண்டவர்களுக்குப் பக்ஷபாதியா யிருக்கையாலே நாம் கனவிலும் வெற்றிபெற முடியாது' என்று தெரிந்துகொண்டு வணங்கி வாழ்ந்து போகலாமா யிருக்கச்செய்தேயும் அது செய்யாதே, 'அவர்கள் ஐந்துபேர், நாம் நூறுபேர்; நவகோடி நாராயணர்களும் நம் பக்ஷத்திலே உண்டு; நமக்கே வெற்றியுண்டாகத் தக்கது' என்று ப்ரமித்துப் பரபரப்புடன் போர்செய்யவந்த துரியோதனாதியரைப் பாரதப்போரில் முடித்து மண்ணின்பாரம் நீக்குதற்காக அர்ஜுநனுக்கு ஸாரதியாய்த் தேரை நடத்தின பெருமான் வாழுமிடம் திருவழுந்தூர்.

பின்னடிகளில் அவ்விடத்து வயல்வளஞ் சொல்லுகிறது. குருகுகளானவை திரள்திரளாக மீன்களைப் பிடிக்க நீர்நிலங்களில் வந்து இழிந்து தம் வாய்க்கு அடங்கக்கூடிய சிறுமீனைப் பிடித்துக் கதுப்பிலே அடக்கிக்கொண் டிருக்கச் செய்தே வேறேயொரு பெரியமீன் வந்து தோற்ற, அதைப்பிடிக்க அஞ்சி ஓடிப்போய், பின்னையும் ஆசையினால் வந்து கிட்டாநிற்கு மென்கை. இந்த வர்ணனையின் உட்கருத்தைப் பெரியவாச்சான்பிள்ளை வெளியிடுகிறார் காண்மின் :— "பாரத ஸமரத்தில் பீஷ்மாதிகள் 'அதிரதர், மஹாரதர் என்றிங்ஙனே பேர்பெற்று ஜீவித்திருந்தோம், இப்போதாகப் பூசல்கோழைகளாக வொண்ணாது' என்று ஸாரதி பக்கலிலே வந்து கிட்டுவது, தேர்க்காலிலே உழக்குண்டு போகவொண்ணாதென்று அகலுவதாய்க்கொண்டு அவர்கள் படுவனவற்றைப் படாநின்றனவாய்த்துக் குருகினங்களும்" என்று. .... .... (உ)

செம்பொன்மதில்சூழ் தென்னிலங்கைக்கிறைவன் சிரங்க ளையிரண்டும் *
உம்பர்வாளிக் கிலக்காக உதிர்த்தவரவோ னூர்போலும் *
கொம்பிலார்ந்த மாதவிமேல் கோதிமேய்ந்த வண்டினங்கள் *
அம்பராவுங் கண்மடவார் ஐம்பாலணையு மழுந்தூரே. (௩)

| | |
|---|---|
| செம் பொன் மதிள் சூழ் | செம்பொன் மயமான மதிள்களாலே சூழப்பட்ட |
| தென் இலங்கைக்கு | தென்னிலங்காபுரிக்கு |
| இறைவன் | நாயகனான இராவணனது |
| சிரங்கள் ஐ இரண்டும் | பத்துத்தலைகளையும் |
| உம்பர்வாளிக்கு | ப்ரஹ்மாஸ்திரத்திற்கு |
| இலக்கு ஆக | லக்ஷியமாக்கி |
| உதிர்த்த | அறுத்தொழித்த |
| உரவோன் | பெருமிடுக்கனான பெருமானுடைய |
| ஊர் போலும் | திவ்யதேசமாகும். |
| கொம்பில் ஆர்ந்த | கிளைகளினால் நிறைந்திருக்கிற |
| மாதவி மேல் | குருக்கத்திமரத்தின் மேலே |
| கோதி | (தளிர்களைக்) கோதி |
| மேய்ந்த | மதுபானம் பண்ணின |
| வண்டு இனங்கள் | வண்டுத்திரள்கள் |
| அம்பு அராவும் கண் மடவார் | அம்புபோன்ற கண்களை யுடையரான மாதர்களினுடைய |
| ஐம்பால் | கூந்தலின்மீது |
| அணையும் | வந்தசேர்ப்பெற்ற |
| அழுந்தூர் | திருவழுந்தூர்,— |

* * *— 'அரண்மிக்க ஊரிலேயன்றோ நாம் வாழ்கிறோம், இப்படிப்பட்ட ஆருக்சன்றோ நாம் கடவோம், நம்மை வெல்வாருண்டோ?' என்று மார்பு நெறித்துக்கிடந்த இராவணனுடைய தலைகள் பத்தையும் ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காக்கி உதிர்த்தொழித்த பெருமிடுக்கன் வாழுமிடம் திருவழுந்தூர். இந்திரன் முதலானருடைய வஜ்ராயுதம் முதலிய பெரும்படைகட்கும் அழியாத அவன் தலைகளை ஸாதாரண மநுஷ்ய ஜந்மத்திற் பிறந்து அழித்த மிடுக்கை நோக்கி உரவோன் என்கிறார். உரம்—வலிமை; அதனையுடையவன் உரவோன்.

திருவழுந்தூரிலுள்ள மாதர்கள் தேனொழுகுங் கூந்தலையுடையார் என்கிறது பின்னடிகளில். மதுமிக்க பூக்களை எப்போதும் கூந்தலி லணிந்திருப்பவர்களென்கை. இதுவும் நகர்ச் சிறப்புகளுள் ஒன்றாம். கொம்புகள் செறிந்திருந்துள்ள குருக்கத்தியின் மேலே செருக்காலே தளிரையும் பூக்களையும் கோதி அவற்றில் நின்றும் மதுபானம் பண்ணின வண்டினங்கள், அவற்றிற் காட்டிலும் போக்யதையும் இருட்சியும் மிக்கதொரு இடந் தேடிப்போய் இராத் தங்க வேணும் என்று பார்த்து அங்குள்ள ஸ்த்ரீகளின் கூந்தற்கற்றையி லேறுகின்றனவாம். குருக்கத்தியி லிருப்பதிற் காட்டிலும் அங்குற்ற மாதர்களின் தலையிலிருப்பது போக்ய மென்னும் முகத்தால் அவர்களது சிறப்புச் சொல்லிற்றாயிற்று.

ஐம்பால்= ஐவகைப் பான்மைகளை யுடையதென்று கூந்தலுக்குக் காரணப் பெயர். சுருண்டிருத்தல், நீண்டிருத்தல், அடர்ந்திருத்தல், கறுத்திருத்தல், நறுமணங் கொண்டிருத்தல் ஆகிய இவ்வைந்து தன்மைகள் உத்தம கேச லக்ஷணம் என்க. .... .... .... .... (ரு)

வெள்ளத்துள்ளோராலிலைமேல் மேவியடியேன் மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளுங் கண்ணுள்ளும் நின்றார்நின்றவூர்போலும் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப் போனகாதற் பேடையோடும் *
அள்ளற்சேறுவில் கயல்நாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. (சு)

காதல் பெடையோடும் { அன்பார்ந்த பேடையோடு கூடி

பிள்ளைக்கு இரை தேடி போன { குட்டிக்காக இரைதேடிக் கொண்டு சென்ற

புள்ளு — பறவையானது

அள்ளல் சேறுவில் { சேறு மிக்க விளைநிலங்களிலே

கயல் — மீன்களை

நாடும் — தேடப்பெற்ற

அணி ஆர் வயல் சூழ் அழுந்தூர்—;

வெள்ளத்துள் { பிரளய வெள்ளம் நேர்ந்த காலத்தில்

ஓர் ஆல் இலை மேல் மேவி { ஒப்பற்றவொரு ஆலந்தளிரின்மீது பொருந்தியிருந்து

அடியேன் மனம் புகுந்து { (அந்த நிலைமையுடனே) அடியேனது நெஞ்சினுட் புகுந்து

என் உள்ளத்துள்ளும் { எனது அந்த நெஞ்சினுள்ளும்

கண்ணுள்ளும் — கண்களினுள்ளும்

நின்றார் — நிலைத்து நின்ற பெருமான்

நின்ற — நித்யவாஸம் பண்ணுகிற

ஊர் போலும் — திவ்யதேசமாகும்.

* * *— பிரளயப் பெருவெள்ளத்திலே ஒரு ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளினவனுய், 'அந்தோ! சிறு குழவியாய்ப் பிரளயத்திலே கண்வளர்ந்தருளா நின்றானே, பரிகைக்கு ஒருவருமில்லையே; க்ருஷ்ணாவதாரம் முதலியவற்றில் யசோதை முதலானவர்களாகிலு மிருந்தார்கள், இங்கு ஒருவரும் பரிவாரில்லையே; என்ன திங்கு நேருமோ?' என்று எனக்கு ஆராய்ச்சி பிறக்கும்படி பண்ணி, அந்த ஆராய்ச்சியே ஹேதுவாக என்னுள்ளத்தே வந்து புகுந்தவனுய், மாநஸாநுபவ மாத்திரமே யன்றியே கண்ணுக்கும் தானே விஷயமாய் ஹ்ருதயமும் வேறொன்றிலே போகாதபடி தானே விஷயமாகு மெம்பெருமான் எழுந்தருளி யிருக்குமிடம் திருவழுந்தூர்.

வயல்வளங் கூறுவன பின்னடிகள். குட்டிக்கு இரைதேடிப் போகிற புள்ளானது தனியேபோகாதே தனது காதற்பெடையோடேபோய், சேறு என்றால் பின்வாங்கவேண்டியதா யிருந்தும் அங்குள்ள போக்யதையின் மிகுதியினால் இருயாது புகுந்து இரைதேடித் திரியுமாம்.

இங்கே ஒரு சங்கை பிறக்கும்;— அவ்விடத்து வயல்களிலே மீன்கள் நிரம்பிக் கிடக்கின்றனவாகக் கீழும் மேலும் சொல்லாநிற்க, இங்கு 'இரைதேடும்' என்றது எங்ஙனே? மீன் அருமைப்பட் டிருந்தாலன்றோ இரைதேட வேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறைபற்றுக் கிடக்கும்போது தேடிப் பிடிப்பதாகச் சொல்வது பொருந்தாதன்றோ? என்று. இங்கே "புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடி" என்றுள்ள சொற்போக்கைக் குறிக்கொண்டால் இந்த சங்கை பிறவாது. அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே தூணும் துலாமும் போலே தடித்திருக்கும்; அவை பறவைக் குட்டிகளின் வாய்க்குப் பிடிக்க மாட்டாவாகையால் உரிய சிறிய மீன்கள் தேடிப்பிடிக்க வேண்டுமத்தனையன்றோ. (ச)

பகலுமிரவந் தானேயாய்ப் பாரும்விண்ணுந்தானேயாய் *
நிகரில்சுடரா யிருளாகி நின்றார்நின்ற வூர்போலும் *
துகிலின்கொடியும் தேர்த்துகளும் துன்னிமாதர்கூந்தல்வாய் *
அகிலின்புகையால் முகிலேய்க்கும் அணியார்வீதி யழுந்தூரே. (ரு)

அழுந்தூர்—;

| | |
|---|---|
| பகலும்இரவும் தானே ஆய் | பகற்போதுக்கும் இராப்போதுக்கும் நியாமகனாய் |
| பாரும் விண்ணும் தானே ஆய் | லீலா விபூதிக்கும் நித்யவிபூதிக்கும் நியாமகனாய் |
| நிகர் இல் சுடர் ஆய் | ஒப்பில்லாத தேஜஸ் பதார்த்தங்களுக்கும் ப்ரகாசியாய் |
| இருள் ஆகி நின்றார் | இருளையும் ப்ரகாசமாக வுடையரான பெருமான் |
| நின்ற | நித்யவாஸம் பண்ணப்பெற்ற |
| ஊர் போலும் | திவ்யதேசமாகும். |
| துகிலின் கொடியும் | துணிகளோடு கூடின த்வஜங்களும் |
| தேர் துகளும் | தேர் நடத்தும்போது உண்டாகும் தூள்களும் |
| துன்னி | நெருங்கி |
| மாதர் | ஸ்திரீகளுடைய |
| கூந்தல் வாய் | கூந்தலிலே (ஊட்டப்பட்ட) |
| அகிலின் புகையால் | அகிற்புகையுமாகிய இவற்றால் |
| முகில் எய்க்கும் | வர்ஷாகாலத்தை ஒத்திருக்கின்ற |
| அணி ஆர் வீதி | அழகிய திருவீதிகளை யுடைத்தான |

* * *—பகலுமிரவுந் தானேயாய்—"ஸீஷாஹ்ஸாஸ்ய ஸூர்ய: வவதெ। ஸீஷொதெதி ஸூர்ய:। ஸீஷாஹ்ஸாதிஞ்ஜெ வூ" என்ற உபநிஷத்தின்படியே பகற்போதுக்கு இறைவனை ஸூர்யனும் இராப்போதுக்கு இறைவனை சந்திரனும் தனது கட்டளைக்குக் கீழ்ப்பட்டு நடக்கும்படியான நிர்வாஹ சக்தி வாய்ந்தவன் திருமால் என்றபடி. தன் ஸங்கல்பத்தாலே பகலை இரவாக்கவும் இரவைப்பகலாக்கவும் வல்லவன் என்றுமாம்; பாரதப்போரில் ஜயத்ரதவத வ்ருத்தாந்தந்தை நினைப்பது.

பாரும் விண்ணும் தானேயாய்—உபயவிபூதிக்கும் நிர்வாஹகனென்கை. நிகரில் சுடராய் இருளாகி நின்றார்—நக்ஷத்ரம் முதலிய சுடர்ப் பொருள்களையும் அவற்றுக்கு எதிர்த்தட்டான இருட்டையும் வடிவாகவுடையவன். ஸாத்விகர்களாய் ஜாயமாநகால கடாக்ஷம் பெற்றவர்களுக்கு ப்ரகாசமாக ஸேவைஸாதிப்பவன்; ராஜஸர்க்கும் தாமஸர்க்கும் தோன்றாதே இருள்மூடிக் கிடப்பவன் என்றவாறு. ஆகவிப்படி ஜகத்ரூபியா யிருந்தாலும் அஸாதாரண திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்டனாய் ஸேவை ஸாதிக்குமிடம் திருவழுந்தூர்.

[துகிலின் கொடியும் இத்யாதி.] அவ்வூரில் எப்போதும் கார்காலமாகவே யிருக்குமென்கிறது. காற்றும் தூள்களும் மேகப்படலங்களும் விசேஷமாகக் கார்காலத்தில் காணப்படும்; அவை இங்குமுண்டு; அங்குள்ள மாளிகைகளெல்லாம் செல்வம் மிக்கனவாதலால் ஒவ்வொன்றிலும் கொடி கட்டியிருக்கும்; அவற்றின் முனையிற் கட்டப்பட்டுள்ள துணிகளின் அலைச்சலினாலுண்டாகும் காற்று; செல்வத் திருவீதிகளில் தேர்கள் ஸஞ்சரிப்பதனால் கிளப்பப்படும் தூள்; மாதர்கள் தங்கள் கூந்தலுக்குப் பரிமள மூட்டுதற்காகச் செய்து கொள்ளும் அகிற்புகை (மேகத்திரள் போன்றது) ஆக இவற்றால் நித்தியமும் வர்ஷாகாலமாகவே தோற்றியிருக்கும். .... .... .... .... ... (ரு)

ஏடிலங்கு தாமரைபோல் சேவ்வாய்முறுவல் செய்தருளி *
மாடுவந்தேன்மனம்புகுந்து நின்றார்நின்ற வூர்போலும் *
நீடுமாடத் தனிச்சூலம்போழ்கக் கோண்டல் துளிதூவ *
ஆடலரவத் தார்ப்போவா அணியார்வீதி யழுந்தூரே. (சு)

| | | | |
|---|---|---|---|
| நீடு மாடம் | உயர்ந்த மாடங்களில் (நாட்டப்பட்ட) | ஏடு இலங்கு தாமரை போல் | இதழ்விளங்குகின்ற தாமரைப்பூ மலர்ந்தாலொப்ப |
| தனி சூலம் | ஒப்பற்ற சூலமானது | செம் வாய் முறுவல் செய்தருளி | சிவந்த திருப்பவளத்தினால் புன்முறுவல் செய்து கொண்டு |
| போழ்க | (மேகத்தின் வயிற்றைக்) கீண்ட வளவிலே | | |
| கொண்டல் | மேகமானது | | |
| துளி தூவ | மழைபொழியப் பெற்றதும் | மாடு வந்து | என்பக்கலிலே வந்து |
| ஆடல் அரவத்து ஆர்ப்பு ஓவா | கூத்தாட்டவொலிகளினாலுண்டான கோலாஹலம் ஓயாமலிருக்கப்பெற்றதுமான | என் மனம் புகுந்து நின்றார் | என்மனத்திலே புகுந்து நின்ற பெருமான் |
| | | நின்ற | நித்யவாஸம் பண்ணப்பெற்ற |
| அணி ஆர் வீதி அழுந்தூர்—; | | ஊர் போலும் | திவ்யதேசமாகும். |

* * *—என்னைப் பெறுதற்கு நெடுநாள் ஸமயம் பார்த்திருந்து பெறுகையால் அலப்யலாபம் பெற்றவர்போல ஸந்தோஷித்து அந்த ஸந்தோஷம் விளங்குமாறு, தாமரைப்பூ மலர்ந்தாற்போலே திருப்பவளத்தைத் திறந்து புன்முறுவல் செய்து அதிலே என்னை யீடுபடுத்தி ஹ்ருதயத்திலே வந்து புகுந்து 'இனி இவர்க்கொரு போக்கில்லை' என்று தோற்ற நின்றவர் கண்ணுக்கு இலக்காக வந்து நிற்கிற திவ்யதேசம் திருவழுந்தூர்.

அத்திருப்பதி எப்படிப்பட்டது?; அங்குள்ள மாடமாளிகைகள் மேக மண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்றன. மாளிகைகளின் முனையிலே பாதுகாப்புக் குறுப்பாகச் சூலங்கள் நாட்டப்படும். ("சிலையிலங்கு மணிமாடத் துச்சிமிசைச் சூலம் செழுங் கொண்டலகடிரிய" (3-9-4.) என்றார் வைகுந்த விண்ணகரத் திருப்பதிகத்திலும்.) அந்த சூலங்கள் மேகங்களினுடைய கீழ்வயிற்றை யிடித்துப் பிளக்க, மழை சொரிகின்றதாம். (இவ்வதிசயோக்தியினால் மாடமாளிகைகளின் ஒக்கம் உணர்த்தப்பட்டதாம்.) இன்னமும், மாதர்கள் ஆடுகிறபோதுண்டான ஆரவாரம் இடையறாதே செல்லுகின்றதாம். .... .... (சு)

மாலைப்புகுந்து மலரணைமேல்வைகி யடியேன்மனம்புகுந்து * என்
நீலக்கண்கள் பனிமல்க நின்றார்நின்ற வூர்போலும் *
வேலைக்கடல் போல்நெடுவீதி விண்டோய்சுதை வெண்மணிமாடத்து *
ஆலைப் புகையாலழற்கதிரை மறைக்கும் வீதி யழுந்தூரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| வேலை கடல் போல் | கரையையுடைய ஸமுத்ரம் போல | வீதி | தெருக்களையுடைத்தான |
| | | | அழுந்தூர்—; |
| நெடு | நீண்டிருக்கின்ற | மாலை புகுந்து | மாலைப்பொழுதிலே வந்து |
| வீதி | வீதிகளிலுண்டான | மலர் அணை மேல் வைகி | பூம்படுக்கையில் தங்கியிருந்து |
| விண் தோய் | ஆகாசத்தளவு மோங்கியிருக்கிற | அடியேன் மனம் புகுந்து | அடியேனுடைய மனத்திற் பிரவேசித்து |
| | | | (பின்பு பிரிவதாகப் பிரஸங்கித்து) |
| சுதை வெண் மணி மாடத்து | சாந்திட்டு வெளுத்திருக்கின்ற திருமாளிகைகளின்மேல் | என் நீலம் கண்கள் | எனது நீலோற்பலம் போன்ற கண்கள் |
| அழல் கதிரை | ஸூர்யகிரணங்களை | பனி மல்க | நீர் தளும்பும்படி |
| ஆலைப் புகையால் | ஆலையாடிக்கிளர்ந்த புகையினால் | நின்றார் | நின்று கொண்டிருந்தவர் |
| | | நின்ற | நித்யவாஸம் பண்ணுகிற |
| மறைக்கும் | மறைக்கப்பெற்ற | ஊர் போலும் | திவ்யதேசமாகும். |

* * *—இதுமுதல் மேல் மூன்று பாசுரங்களிலும் ஆழ்வார்க்கு நாயகி பாவனை நிகழ்வதாகக் கொள்ளத்தகும்.

என்னோடு கலவிசெய்ய விருப்பங்கொண்டு அதற்கு உரிய மாலைப் பொழுதிலே வந்து சேர்ந்து மென்மலர்ப் பள்ளியிலே தங்கி, அவ்விருப்பில் த்ருப்தி பெறாதே என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே ஏகதத்துவமாகப் புகுந்து, கலவி

யானது பிரிவோடே சேர்ந்தல்லது இருக்கமாட்டாததாகையாலே உடனே பிரிந்து போவதாகப் பிரஸ்தாவித்து, அவ்வளவிலே எனது கண்களில் நின்றும் நீர் பெருக, அதைக்கண்டு 'இவ்வளவு ஆற்றாமையிலே இந்த நாயகியை எங்ஙனம் விட்டுப் பிரிவது ?' என்று கலங்கிக் கால் பெயர்ந்து போகமாட்டாதே நின்றவர் நித்யவாஸம் பண்ணுகிற திவ்யதேசம் திருவழுந்தூர்.

அவ்விடத்தில் ஒவ்வொரு திருவீதியும் கடல்போன்று பெருமை பொருந்தியிருக்கும். சாந்திட்டு வெண்ணிறமாயிருக்கின்ற மணிமாடங்கள் விண்ணுலகத்தளவும் ஓங்கியிருக்கும். ஸூர்ய கிரணங்களைக் கரும்பாலைப்புகை வந்து மறைத்து எங்கும் நிழல் செய்யும். இதுவாயிற்று அவ்வூர்ப் பெருமை.

சுதை—'ஸுதா' என்னும் வடசொல் விகாரம். .... .... (எ)

வஞ்சிமருங்கு லிடைநோவ மணந்துநின்ற கனவகத்து * என்
நெஞ்சுநிறையக்கைகூப்பி நின்றார் நின்றவூர்போலும் *
பஞ்சியன்னமெல்லடி நற்பாவைமார்களாடகத்தின் *
அஞ்சிலம்பினார்ப்போவா அணியார்வீதி யழுந்தூரே. (அ)

| | |
|---|---|
| பஞ்சி அன்ன மெல் அடி | பஞ்சுபோன்று மிருதுவான பாதங்களையுடைய |
| நல் பாவைமார்கள் | நல்ல ஸ்திரீகளினுடைய |
| ஆடகத்தின் அம்சிலம்பின் | பொன்மயமான அழகிய சிலம்புகளினின்று முண்டான |
| ஆர்ப்பு | ஆரவாரமானது |
| ஓவா | இடைவிடாதிருக்கிற |
| அணி ஆர் வீதி அழுந்தூர்—, | |
| வஞ்சி | வஞ்சிக்கொடிபோன்ற |
| மருங்குல் இடை | இடுப்பானது |
| நோவ | நோகும்படியாக |
| மணந்துநின்ற | ஸம்ச்லேஷித்துநின்ற |
| கனவகத்து | கனவிலே |
| என் நெஞ்சு நிறைய | எனது நெஞ்சு நிறையுமாறு |
| கை கூப்பி | நான் அஞ்ஜலி செய்யப் பெற்று |
| நின்றார் | நின்று கொண்டிருந்தவர் |
| நின்ற | நித்யவாஸம் பண்ணுகிற |
| ஊர் போலும் | திவ்ய தேசமாகும். |

* * *—இதுவும் ஆழ்வார் நாயகி ஸமாதியால் பேசும் பாசுரம். கனவிலே வந்து கலந்து பிரிந்து போனவர் மற்றுள்ள அன்பரோடும் § நனவிலே கலவி செய்ய வந்து நிற்கிற விடம் திருவழுந்தூர்.

வஞ்சிமருங்குலிடைநோவ=பெண்டிருடைய இடைக்கு வஞ்சிக்கொடியை உவமை சொல்வது கவிமரபு. இடை நோவ மணந்து நின்றானென்றதனால் பூர்ண ஸம்ச்லேஷம் நடந்தமை தோன்றும். 'மருங்குல்' என்றாலும் 'இடை' என்றாலும் இடுப்புக்கே பெயர் ; இரண்டு சொற்களையும் சேரப் பிரயோகித்தது தமிழ் வழக்கு. கைகூப்பி—எச்சத்திரிபு.

§ நனவு—கனவுக்கு எதிர்த்தட்டு ; ப்ரத்யக்ஷம்,

அங்குள்ள மாதர்கள் பொன்மயமான நூபுரங்களைக் காலிலணிந்து கொண்டு நர்த்தனம் பண்ணு நிற்பர்கள் ; அதனாலுண்டான ஆரவாரம் ஓயாதிருக்கு மென்கிறது பின்னடிகளில்.

பஞ்சி—பஞ்சு ; போலி. பாவைமார்—பதுமைபோல அழகியவர்கள் ; உவமையாகு பெயர். 'ஹாடகம்' என்னும் வடசொல் ஆடகமெனத்திரிந்தது. (அ)

என்னைம்புலனுமெழிலுங்கொண்டு இங்கேநெருநலெழுந்தருளி *
பொன்னங்கலைகள் மெலிவெய்தப் போனபுனிதரூர்போலும் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட *
அன்னம்பெடையோடுடனாடும் அணியார்வயல்சூழழுந்தூரே. (௯)

| | |
|---|---|
| மன்னு முது நீர் | ஒருநாளும் தண்ணீர் வற்றாத ஆழ்ந்த நீர் நிலைகளிலுள்ள |
| அரவிந்தம் மலர் மேல் | தாமரைப் பூக்களிலே |
| வரி வண்டு | வரி வண்டுகள் |
| இசை பாட | இசைகளைப்பாடா நிற்க |
| (அந்த இசைப்பாட்டுக்குச் சேர) | |
| அன்னம் | அன்னப்பறவை |
| பெடையோடுடன் | தன் பேடையோடுகூட |
| ஆடும் | நர்த்தனம் பண்ணப்பெற்ற |
| அணி ஆர் வயல் சூழ் அழுந்தூர்—, | |

| | |
|---|---|
| நெருநல் | நேற்று |
| இங்கே | நானிருக்குமிடத்து |
| எழுந்தருளி | எழுந்தருளி |
| என் ஐம்புலனும் | எனது பஞ்சேந்திரிய அறிவையும் |
| எழிலும் | அழகையும் |
| கொண்டு | கொள்ளை கொண்டு |
| பொன் அம் கலைகள் | மிக அழகிய (எனது) வஸ்திரங்கள் |
| மெலிவு எய்த | தளரும்படியாகச் செய்து |
| போன | பிரிந்துபோன |
| புனிதர் | பரமபவித்திருடைய |
| ஊர் போலும் | திவ்யதேசமாகும். |

* * *—இப்பாசுரமும் நாயகி ஸமாதியாற் பேசுவதாம். என்னுடைய செவி வாய் கண் மூக்கு உடல் என்னும் பஞ்சேந்திரியங்களினுடையவும் வ்ருத்திகளைத் தன்வசமாக்கிக் கொண்டவரும், எனது மேனியழகைக் கொள்ளை கொண்டவரும், அரையில் பரியட்டம் தங்காதபடி பண்ணிவிட்டுப் போனவருமான தலைவர் வாழுமிடம் திருவழுந்தூர்.

ஐம்புலனையுங் கொள்கையாவது—லௌகிக பதார்த்தங்களில் ஒரு உறுப்புஞ் செல்லவொண்ணாமல் "ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிம் சேதோ பஜ ஸ்ரீதரம் பாணித்வந்த்வ! ஸமர்ச்சயாச்யுதகதாः ச்ரோத்ரத்வய! த்வம் ச்ருணு க்ருஷ்ணம் லோகய லோசநத்வய! ஹரேः கச்சாங்க்ரியுக்மாலயம் ஜிக்ர க்ராண! முகுந்த பாத துலஸீம் மூர்த்தந்! நமாதோக்ஷஜம்" (முகுந்தமாலை) என்றச்லோகத்தின் படியே ஸகல கரணவ்ருத்திகளையும் தன்வசப் படுத்திக்கொள்ளுதலாம். எழில் கொள்ளுகை—பிரிவுத்துயரத்தினால் மேனிநிறமழியச்செய்கை.

போன புனிதர் ஊர் போலும்=இங்கே 'புனிதர்' என்றது எதிர்மறையிலக்கணை யென்னலாம் ; இப்படி என்னைப் படுகொலை செய்பவர் எங்ஙனே. பரிசுத்த

ராவர்? பெண்கொலைப்பாதகியன்றோ இவர் என்று ப்ரணயரோஷந்தோற்றச் சொல்லுகிறதாகலாம்.

வயல்களிலுங்கூடப் பாட்டுங் கூத்தும் நடை பெறுகின்றன வென்கிறார் பின்னடிகளில்.

அரவிந்தம்—தற்சம வடசொல். .... .... (கூ)

நெல்லிற்குவளை கண்காட்ட நீரிற்குமுதம்வாய்காட்ட *
அல்லிக்கமலமுகங்காட்டும் கழனியழுந்தூர் நின்றானை *
வல்லிப்போதும்பில் குயில்கூவும் மங்கைவேந்தன் பரகாலன் *
சொல்லிற்பொலிந்த தமிழ்மாலை சொல்லப்பாவம்நில்லாவே. (கம)

| | |
|---|---|
| நெல்லில் | நெற்பயிரினிடையே (முளைத்த) |
| குவளை | கருநெய்தற் பூக்கள் |
| கண் காட்ட | (அவ்வூர்ப்பெண்களது) கண்கள் போன்றுவிளங்கவும் |
| நீரில் | நீரிலே முளைத்த |
| குமுதம் | ஆம்பல் பூக்கள் |
| வாய் காட்ட | (அவர்களது) வாய் போன்று விளங்கவும் |
| அல்லி கமலம் | இதழ்மிக்க தாமரைப் பூக்கள் |
| முகம் காட்டும் | (அவர்களது) முகம்போன்று விளங்கவும் பெற்ற |
| கழனி | கழனிகளையுடைய |
| அழுந்தூர் | திருவழுந்தூரிலே |
| நின்றானை | எழுந்தருளியிருக்கு மெம்பிரான் விஷயமாக,— |
| வல்லி பொதும்பில் | பூங்கொடிகள் மிக்க முழஞ்சுகளிலே |
| குயில் கூவும் | குயில்கள் கூவப்பெற்ற |
| மங்கை | திருமங்கைநாட்டுக்கு |
| வேந்தன் | தலைவரான |
| பரகாலன் | ஆழ்வார் (அருளிச்செய்த) |
| சொல்லில் பொலிந்த | நல்ல சொற்களினால் விளங்குகின்ற |
| தமிழ் மாலை | இத்தமிழ்ப் பாசுரங்களை |
| சொல்ல | ஓதவே |
| பாவம் | பாவங்கள் |
| நில்லா | இல்லையாய்விடும். |

* * *—நெல்லுக்குக் களையாக முளைத்த குவளைப்பூக்கள் அவ்வூரிலுள்ள மாதர்களின் கண்போலவும், நீர்நிலங்களிலுண்டான அரக்காம்பல்கள் அவர்களின் அதரம் போலவும், தாமரைப்பூக்கள் அவர்களது முகமண்டலம் போலவும் தோன்றப் பெற்ற வயல்களாற் சூழப்பட்ட திருவழுந்தூரில் நித்யவாஸஞ் செய்தருளா நின்ற ஆமருவியப்பன் விஷயமாகத் திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்களுக்குப் பாவங்களெல்லாம் தொலைந்து போமென்று பயனுரைத்தாராயிற்று. .... .... (கம)

அடிவரவு:—தந்தை பாரித்த செம்பொன் வெள்ளத்துள் பகல் எடு மாலை வஞ்சி என் நெல்லில் சிங்கம்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—ஆறுந்திருமொழி,

# சிங்கமதாயவுணன்.

### [இதுவும் திருவழுந்தூர்த் திருப்பதிகம்.]

சிங்கமதாயவுணன் திறலாகமுன்கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை *
செங்கமலத் தயனனையார் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டுகொண்டேனே. (க)

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்னொருகால், | செம் கமலத்து அயன் அனையார் | செவ்விய (திருநாபிக்) கமலத்திற் பிறந்த பிரமனைப்போன்ற பிராமணர்கள் (வாழ்கிற) |
| சிங்கம் அது ஆய் | நாஸிம்ஹ ரூபியாய்க் கொண்டு | தென் அழுந்தையில் | அழகிய திருவழுந்தூரிலே |
| அவுணன் | இரணியாசுரனுடைய | மன்னி நின்ற | நித்யவாஸம் செய்பவனும் |
| திறல் ஆகம் | வலிமிக்க மார்வை | அம் கமலம் கண்ணனை | அழகிய தாமரை மலர் போன்ற திருக்கண்களை யுடையனுமான ஆமருவியப்பனை |
| கீண்டு | இருபிளவாக்கி | அடியேன் கண்டு கொண்டேன் | அடியேன் ஸேவிக்கப் பெற்றேன். |
| உகந்த | திருவுள்ளமுவந்தவனும் | | |
| சங்கம் இடத்தானை | சங்கை இடத்திருக்கையி லுடையவனும் | | |
| தழல் ஆழி வலத்தானை | தீக்ஷ்ணமான திருவாழியை வலத்திருக்கையி லுடையவனும் | | |

* * * தன்னிடத்துப் பரமபக்தி கொண்டு தனது திருநாமங்களையே அநுஸந்தித்துக் கொண்டிருந்தது காரணமாகச் சிறுக்கனான ப்ரஹ்லாதாழ்வானைப் பலவகைகளிலும் நலிந்து கொண்டிருந்த இரணியனைத் தொலைப்பதற்குத் தூணில் நின்றும் நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி அவனது மார்பைப் பிளந்து 'ஆச்ரிதனுடைய விரோதி தொலையப் பெற்றோம்' என்று திருவுள்ள முவந்தவனும், அவ்விரணியனது உடல் திருநகங்களுக்கே இரை போராமையாலே திருவாழி திருச்சங்குகள் வலவருகிலும் இடவருகிலும் இருந்தபடியே திகழப் பெற்றவனும், நாபிக்கமலத்தில் தோன்றிய நான்முகக்கடவுளைப்போல ஸ்ருஷ்டி செய்யவும் வல்லர்களான அந்தணர்கள் வாழப்பெற்ற தென்னழுந்தையில் நித்ய வாஸம் செய்தருளா நின்றவனுமான புண்டரிகாக்ஷனை அடியேன் ஸேவிக்கப் பெற்றேனென்றூராயிற்று.

"நரசிங்கமாய்" என்னாமல் 'சிங்கமதாய்' என்றது என்னென்னில்; முகமே முக்கிய மாதலால், அதுதான் சிங்கவுருவமாதலால் சொல்லிற்று.

செங்கமலத்தயனனையார்=அவ்வூரிலுள்ளவர்கள் நான்முகனை யொத்திருக்கின்றார்கள் என்றால் 'எந்த விஷயத்தில்?' என்று கேள்விபிறக்கும்; ஓயாது வேதமோதும் விஷயத்தில் என்றாவது, ஸ்ருஷ்டியை நடத்தும் விஷயத்தில் என்றாவது கொள்க. "தூடிாஸ்ரீ தாநாம் ஜமடிூஜவஷிதி வூணாஶவஸஂவாாவிஜைாவநாடியஃ। ஹவதி ஸ்ரீஷாஃ" என்ற ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்திகாண்க. (க)

கோவாணர்மடியக் கொலையார் மழுக்கொண்டருளும் *
மூவாவானவனை முழுநீர்வண்ணனை * அடியார்க்கு
ஆவா வென்றிரங்கித் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
தேவாதிதேவனை யான்கண்டுகொண்டு திளைத்தேனே. (உ)

| | |
|---|---|
| கோ ஆனர் | க்ஷத்ரியர்களென்று பேர் பெற்றவரடங்கலும் |
| மடிய | மடிந்தொழியும்படி |
| கொலை ஆர் மழு | கொலைத்தொழில் வல்ல மழுப்படையை |
| கொண்டருளும் | (திருக்கையில்) எந்தியுள்ளவனும் |
| மூவா வானவனை | கிழத்தனம் முதலிய விகாரங்களில்லாத தேவாதி தேவனும் |
| முழுநீர் வண்ணனை | கடல்போன்ற திருநிறத்தை யுடையவனும் |
| அடியார்க்கு | அடியார் விஷயத்திலே |
| ஆ ஆ என்று இரங்கி | ஐயோ வென்று கிருபை பண்ணி |
| தென் அழுந்தையில் மன்னி நின்ற—; | |
| தேவாதி தேவனை | தேவர்கட்கும் சிறந்த தேவனுமான பெருமானை |
| யான் கண்டு கொண்டு | அடியேன் ஸேவித்து |
| திளைத்தேன் | களிக்கப்பெற்றேன். |

* * *—கார்த்த வீரியார்ஜுநன் செய்த குற்றங்காரணமாக, உலகில் க்ஷத்திரிய ரென்று பேர்பெற்றா ரெல்லாரும் முடியும்படி இருபத்தொருபடிகால் க்ஷத்ரிய குலத்தை அறுத்தொழித்த கோடாலிப் படையைக்கையிலேந்தின பரசுராமனாகத் திருவவதரித்தவனும், நரை திரை மூப்பு என்னப்படுகிற விகாரங்களொன்றுமின்றியே எப்போதும் ஒருபடிப்பட்டிருப்பவனும், கடல்போன்ற நிறத்தை யுடையவனும், அடியார்கட்கு ஏதேனும் துன்பமுண்டானால் அவர்களுக்கு முன்னே தான் ஐயோவென்று இரங்கும் நீர்மையையுடையவனும் தென்னழுந்தையில் நித்யவாஸஞ் செய்தருள்பவனுமான தேவாதிதேவனை அடியேன் ஸேவிக்கப்பெற்று அதனாலுண்டான களிப்புக்குப் போக்கு விடாக நர்த்தனஞ் செய்கிறேனென்கிறார்.

அடியார்க்கு ஆ! ஆ!! என்றிரங்கி=எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களுள் தயை என்பதும் ஒன்று. பிறர்படும் துயரத்தை ஸஹித்திருக்கமாட்டாமையும், பிறர் துயரப்படக்கண்டு தானும் துயரப்படுகையும் தயைஎன்று பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். பிறர் படும் துயரத்தை நீக்க வேணுமென்கிற விருப்பமே தயை என்று ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் திருவுள்ளம் பற்றுகிறார். "யா டிஃவாவாஷிகீஷா வாஹிதஜநவஃ வெஷவ

𑌤𑌸𑍍𑌯𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌾" என்று அதிகரண ஸாராவளியிலும், "𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌂—𑌪𑌰𑌦𑍁𑌃𑌖𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑍇𑌚𑍍𑌛𑌾" என்று சரணாகதி கத்ய பாஷ்யத்திலும் அருளிச்செய்தார். 'பிறர் படும் துக்கத்தைக்கண்டு தானும் துக்கப்படுகை தயை' என்பது பொருந்தாதென்றும் தேசிகன் கருதுகின்றார். 𑌪𑌰𑌦𑍁𑌃𑌖𑌾𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁𑌤𑍍𑌵மும் 𑌪𑌰𑌦𑍁𑌃𑌖 𑌨𑌿𑌰𑌾𑌚𑌿𑌕𑍀𑌰𑍍𑌷𑍈யும் பர்யாயமென்று மயங்கிக்கிடக்கும் சிலர் "𑌪𑌰𑌦𑍁𑌃𑌖𑌾𑌸𑌹𑌿𑌷𑍍𑌣𑍁𑌤𑍍𑌵𑌂—𑌦𑌯𑌾" என்று ஸ்ரீபாஷ்யகாராதிகள் அருளிச்செய்ததில் எமக்கு விவாதமில்லை யென்கிறார்கள்.

'பிறர்படும் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்படுகை தயை' என்பதில் விப்ரதிபத்தி பண்ணுமவர்களை ஒன்று கேட்கிறோம்; உலகத்தில் ஸாமாந்யமாகப் 𑌪𑌰𑌦𑍁𑌃𑌖𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍍𑌵மென்பது குணமா? தோஷமா? ஸ்ரீராமபிரானுடைய திருக்கல்யாண குணங்களைச் சொல்லிக்கொண்டுவரும் ப்ரகரணத்திலே "𑌵𑍍𑌯𑌸𑌨𑍇𑌷𑍁 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌭𑍃𑌶𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑌃 = வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:" என்னநின்றதென்பது ஒரு புறம் நிற்க. உலகத்தில் ஒருவன் துக்கப்படும்போது அந்த துக்கத்தைக் கண்டுகொண்டிரா நின்ற மற்றொருவன் தானும் துக்கப்படாதொழியில் அவனைக் கல்நெஞ்சனென்றும் நிர்க்ருணனென்றும் வசை கூறுவதும், பிறர் துக்கிப்பதைக்கண்டு பரவசமாக ஒருவன் துக்கிப்பனாகில் அவனை ஈரநெஞ்சன் என்றும் இரக்கமுள்ளவனென்றும் பரமதயாளுவென்றும் சொல்லிப்புகழ்வதும் இன்றாக ஒருவராலும் அபலாபம் செய்ய வொண்ணாதவை. ஆகவே பரது:க்க து:க்கித்வ மென்பது சிறந்த குணங்களில் முதன்மையாகக் கணக்கிடக் கூடியதே யன்றி, துர்க்குணமாக ஒருவராலும் கூறவொண்ணாதது. இப்படிப்பட்ட வொரு சிறந்த குணம் எம்பெருமானுக்கு இல்லையென்று ஸ்ரீராமாநுஜ ஸம்ப்ரதாயமுடையார் சொல்லத் தகுமோ?

பரது:க்கது:க்கித்வம் எம்பெருமானுக்குக் கூடாதென்று கூறுமவர்கள் முக்கியமாகச் சொல்லும் யுக்தி யாதென்னில்; பிறர்படும் துக்கத்தைப் பரிஹரிக்க வல்ல சக்தி நமக்கில்லாமையாலே நாம் பரது:க்கது:க்கிகளாயிருக்கலாம்; பரிபூர்ண சக்தி யுக்தனான எம்பெருமான் எலியெலும்பரான நம்மைப் போலன்றிக்கே பிறருடைய துயரத்தை எளிதிற் போக்கவல்லவனாகையாலே அவன் பிறர்படும் துக்கத்தைக்கண்டு தானும் துக்கப்படக் காரணமேயில்லை யென்கிறார்கள். 𑌪𑌰𑌦𑍁𑌃𑌖𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍍𑌵மும் 𑌪𑌰𑌦𑍁𑌃𑌖 𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯மும் பரஸ்பரவிருத்தமென்று இவர்களுடைய நினைவுபோலும். உண்மையில் இவை ஒன்றோடொன்று விரோத முடையனவல்ல; தன் குழந்தைக்கு ஒரு துன்பம் நேர்ந்து விட்டால் அதனை உடனே பரிஹரிக்கவல்ல சக்தி மாதாவுக்கு இருக்கச் செய்தேயும், அப்படியே அத்துன்பத்தை அவள் பரிஹரித்துவிடச் செய்தேயும் 'குழந்தைக்குத் துன்பம் நேராமல் காக்க வேண்டியது நம் கடமையாயிருந்தும் ஏமாந்து போனேமே!, அந்தோ! அநியாயமாய்க் குழந்தையைத் துடிக்க

விட்டோமே!' என்றிப்படி பலவாறாகக் கதறி வருந்தும்படியைக் காணாதாருண்டோ?

துச்சாஸநன் கையிலே த்ரௌபதி பரிபவப்பட்டுக் கூவினபோது கண்ணபிரான் ஒருவாறு அவளது துயரைத் தீர்த்திருக்கச் செய்தேயும் 'ஐயோ! அவள் கூவினபோது நான் நேரில் சென்றிருந்து உதவா தொழிந்தேனே!' என்றும் 'ஐயோ! அவளுக்குப் பரிபவம் நேர்ந்து அவள் கதறின பின்பு நான் அதைப் போக்கினேனேயன்றி முதல் தன்னிலே பரிபவமே உண்டாகாதபடி ஜாகரூகனாயிருக்கை தவிர்ந்தேனே! அவளுக்கு நான் பெரிய கடனாளியாய் விட்டேனே! என் பிறவி என்னாயிற்று!' என்றும் தன் காவற்சோர்வை நினைத்துத் திருவுள்ளம் வேவுண்டு பலவாறு கதறின படியைக் கேட்டறியீர்களோ?

"த்ரௌபதி 'சரணம்' என்ற உக்தியித்தனையும் திருவுள்ளத்திலே கிடந்து, ஸதஸ்ஸில் அவன் பரிபவித்த பரிபவத்தையும் பரிஹரித்து துர்யோதநாதிகளேயும் நிரஸித்து தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலேயும் முடிப்பித்துப் பின்பும் "ரோவிஜெதி யதாகு ஈஜ கூஷா ஊ்ஂ ஊ-ீ வாஸிநஂ। ஜேணஂ ஹூவாஜஜிவ ௭ ஹாஜயா நூாவஸவஷ்தி" என்று குறைவாளனாய், பரமபதத்துக் கெழுந்தருளுகிற போதும் 'நாதிஸூஹூகநா யமெள' என்னும்படி திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று" என்று நம் ஆசார்யர்கள் ஈடுபட்டருளிச்செய்யும் வார்த்தை.

மடுவின் கரையிலே முதலைதன்னாலடர்ப்புண்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய இடரை எம்பெருமான் தீர்த்தருளினனேலும் அவன்றான் பட்டபரிதாபம் பேச்சுக்கு நிலமன்றே; "ஹூஹூஷாஂஊயமாயமஂ ஓயாநொ யிஜூ்தூ நுமஜமஜுஃஜமநூ = ஸ்ரக் பூஷாம்பர மயதாயதம் ததாநோ திங்மாமித்ய நகஜகர்ஜ மாஜகந்த" என்று ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்திலே பட்டர் அருளிச்செய்தமை கண்டீரே. 'ஊஂயிக், ஊஂயிக்' [கெட்டேன் கெட்டேன்] என்று நொந்துகொண்டே எம்பெருமான் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தானென்றால் இது என்கொல்!. ஸஹஸ்ரநாமத்தில் 'ஊக்ஷ:' என்னுந் திருநாமத்தின் பாஷ்யத்திலும் இதனை விளக்கியருளினர்பட்டர். ஆழ்வானும் ஸ்ரீ வைகுண்டஸ்தவத்தில்— "விஸூஂ யிமெவ விாவயூ நிவாயூ ஹ-ியஃ ஸஂஜஹூஷஹூதி ஸஊஸிூத வதூலெவெ: குஜஜூஷஹூவ மஜொதூஊவூஂஹிதெ ந வாஜஂ வாாஊஷ்வ ஷொவிவ கா ஊநீஷா?" என்றருளிச்செய்தார். எம்பெருமான் தான் சாத்தியருளின திருப்பரிவட்டத் தலைப்பைச் சுருட்டித் திருப்பவளத்திலே வைத்து ஊதி கஜேந்த்ராழ்வானுடைய புண்வாயை வெதுகொண்டு திருக்கையாலே குளிரத்தடவிக் கொடுத்தானென்றால் அந்த ஸமயத்திலே எம்பெருமான் திருவுள்ளத்திற் கொதிப்பு வாசாமகோசரமன்றோ?

இப்படி எம்பெருமான் நெஞ்சாறல்பட்ட ப்ரகரணங்கள் பல்லாயிரமுண்டு. இவ்விடங்களுக்குத் தூப்புல்பிள்ளை பேசுவதென்னென்னில், எம்பெருமான் அகில ஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாநதையாலே அவனுக்கு மெய்யே துக்க முண்டாக ப்ரஸக்தியில்லை; துக்கப்படுபவன்போல அபிநயிக்குமளவேயன்றி உண்மையான விகாரங்கள் அவனுக்கில்லை யென்று திருவுள்ளம் பற்றுகிறார்.

பகவதவதாரங்களிலே து:க்காநுபவம் அபிநயமாத்திர மென்பது ச்ருத ப்ரகாசிகை முதலியவற்றிலு முள்ளது. ஆனால், ராவணாதிகளோடு போர்புரிந்த காலத்தில் பெருமான் அஸ்த்ரங்களால் கட்டுண்டு மூர்ச்சித்துக் கிடந்தாரென்றும் ஆய்ச்சியர்தாம்பினால் கட்டுண்டு அடியுண்டு அழுதேங்கினானென்றும் இப்படி யாகச் சொல்லும் துக்கங்கள் ஒரு காரியப்பாடாக அபிநயிக்கப்பட்டவை என்று சொல்லிற்றத்தனை யொழிய தயாளுத்வத்திற்கு ஐகாந்திகமான து:க்கம் அபிநயரூபமாகச் சொல்லப்படவில்லை. ராமக்ருஷ்ணாத்யவதாரங்களொன்றும் மெய்யே கிடையாதென்றும் ‘ராமாதிகளைப்போலே யிருக்கவேணும், ராவணாதி களைப்போலே யிருந்தால் கேடுவிளையும்’ என்று இதமுணர்த்துதற்காகவே கதைகள் தொடுக்கப்பட்டனவென்றும் சொல்லுமவர்களைக் காணநின்றேமுக்கு இதில் வியப்பொன்றுமில்லை.

“அவிகாராய ஶுத்தாய—அவிகாராய சுத்தாய” என்ற ஸாமாந்ய வார்த்தையொன்றையே பற்றிநின்று விசேஷ குணங்களை இல்லை செய்கை ஸமஞ்ஜஸ மன்று. ஆச்ரித ஸம்ச்லேஷ விச்லேஷங்களில் எம்பெருமானுக்கு விகார முண்டாவதில்லை யென்று சொல்லுதல் எம்பெருமானை காஷ்ட லோஷ்ட ப்ராயனாக இசைந்தமைக்குப் பர்யாயமாமத்தனை. * எருது மிறையோனு மென்கிற திருவாய் மொழியில் மூன்றாம் பாட்டில், “படநாகத் தணைக்கிடந்த பருவரைத்தோள் பரம்புருடன்” என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரத்திலே—“திருவனந்தாழ்வானோட்டை ஸ்பர்சத்தாலே ஏகரூபமான விக்ரஹத்துக்குப் பிறக்கும் விகாரத்தைச் சொல்லுகிறது. கர்ம நிபந்தநமான விகாராதிகள் இல்லை யென்றவித்தனை போக்கி ஆச்ரித ஸம்ச்லேஷத்தில் விகாரமில்லை யென்னில் அவ்வஸ்துவை அணைய ஆசைப்பட வேண்டாவே” என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இங்ஙனே விரிப்பிற் பெருகும். அடியார்க்கு ஆவாவென்று இரங்குகை எம்பெருமான் பக்கலிலே யதார்த்தமே யென்றும் அதுதான் சிறந்த குணமே யென்றும் கொள்க. ‘ஹா ஹா’ என்னும் வடமொழி அவ்யயங்கள் ஆவா வெனத்திரிந்தன. (உ)

உடையானை யொலிநீ ருலகங்கள் படைத்தானை *
விடையானோடன்று விறலாழி விசைத்தானை *
அடையார் தென்னிலங்கை யழித்தானை யணியழுந்தூர்
உடையானை * அடியேனடைந் துய்ந்துபோனேனே. (ங)

| | | | |
|---|---|---|---|
| உடையானை | ஸர்வஸ்வாமியானவனும் | அடையார் தென் இலங்கை அழித்தானை | பகைவர் நிறைந்திருக்கிற தென்னிலங்கையை அழியச் செய்தவனும் |
| ஒலி நீர் உலகங்கள் படைத் தானை | கடல் சூழ்ந்த உலகங்களைப் படைத்தவனும் | அணி அழுந்தூர் உடையானை | அழகிய திருவழுந்தூரை இருப்பிடமாக வுடையனுமான பெருமானை |
| அன்று | பாணாஸுர யுத்தத்தினன்று | | அடியேன் அடைந்து—; |
| விடையான் ஓட | பரமசிவன் தோற்று ஓடும்படி | உய்ந்து போனேன் | உஜ்ஜீவித்து விட்டேன். |
| விறல் ஆழி | வலிமிக்க திருவாழியை | | |
| விசைத்தானை | வேகமாகப் பிரயோகித்தவனும் | | |

* * *—"வஶிநம் விஶ்வஸ்யாஜதேஶாநம்" என்று சுருதி சொன்னபடியே ஸகலத்தையும் தன் உடைமையாகக் கொண்டிருப்பவனும், எல்லாம் உபஸம்ஹரிக்கப் பட்டுக் கரண களேபரங்களை யிழந்து இறகொடிந்த பறவை போலிருக்குமளவில் அவற்றை மீண்டும் ப்ரவ்ருத்திக்கு ஸமர்த்தமாம்படி செய்தருள்பவனும் தன்னால் நாட்டுக்கு ரக்ஷகராக நிறுத்தப்பட்டவர்கள் தாங்களே ஆஸுரப்ரக்ருதிகளோடே கூடித் தீங்கு செய்ய வருமளவிலும் அவர்களைச் சிக்ஷித்து நாட்டை ரக்ஷித்தருள்பவனும், பிரதிகூலர்களைக் குடியோடே களைந்தொழிப்பவனுமான பெருமானைத் திருவழுந்தூரிலே ஸேவிக்கப் பெற்று க்ருதார்த்தனானே னென்கிறார்.

**உடையான்**—ஸ்வாமி. **ஒலிநீர்**—ஒலிக்கின்ற நீரையுடையது, கடல். **விடையான்**—எருதை வாஹநமாக வுடையவன், சிவன். இரண்டா மடியில் பாணாஸுர யுத்த சரித்திரம் அறியத்தக்கது. **அடையார்**—தன்னை வந்து அடையாதவர்கள், பகைவர் என்றபடி. அவர்களுடைய தென்னிலங்கை யென்றது—அவர்கட்கு இருப்பிடமான இலங்கை என்றபடி. .... .... (௩)

குன்றால்மாரிதடுத்தவனைக் குலவேழமன்று
பொன்றாமை * அதனுக்கருள்செய்த போரேற்றை *
அன்றாவின் நறுநெய்யமர்ந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை * அடியேன் கண்டுகொண்டு நிறைந்தேனே. (௪)

| | | | |
|---|---|---|---|
| குன்றால் | கோவர்த்தந கிரியைக் கொண்டு | போர் எற்றை | போர் செய்யவல்ல காளை போன்றவனும் |
| மாரி | பெருமழையை | ஆவின் நறு நெய் | பசுவின் மண நெய்யை |
| தடுத்தவனை | தடை செய்தவனும் | அமர்ந்து உண்ண | விரும்பியமுது செய்ய |
| குலம் வேழம் | சிறந்தகுலத்துப் பிறந்த கஜேந்திராழ்வான் | அன்று | அன்றேபிடித்து |
| பொன்றாமை | (முதலைவாய்ப்பட்டு) முடிந்து போகாமல் | அணி அழுந்தூர் நின்றானை | அழகிய திருவழுந்தூரில் நிற்பவனுமான பெருமானை |
| அன்று | அக்காலத்து | | அடியேன் கண்டுகொண்டு—; |
| அதனுக்கு அருள்செய்த | அதற்கு அருள்புரிந்தவனும் | நிறைந்தேன் | குறையற்றவனானேன், |

* * *—தலைக்காவலாக வைக்கப்பட்டிருந்த இந்திரன் பசிக்கோபத்தினால் பெருமழையை எழுநாள் பெய்வித்தவன்று கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துப் பிடித்து ஆய்ப்பாடியைக் காத்தருளினவனும், நற்குலத்திற் பிறந்து பகவானை அர்ச்சிப்பதையே போதுபோக்காகக் கொண்டிருந்த கஜேந்திராழ்வானுக்கு மடுவின் கரையிலே புள்ளேறி வந்து அருள் செய்தவனும், இன்னமும் இப்படிப்பட்ட ஆபத்துக்களைப் போக்கவல்ல ஆண் புலியும், பசு நெய்யை விரும்பி அமுது செய்ய ஆமருவியப்பனைத் திருவழுந்தூரில் நித்ய ஸந்நிதி பண்ணி யிருப்பவனுமான பெருமானைக்கண்டு குறைகளெல்லாம் தீர்ந்து நிறைந்தே னென்கிறார்.

பொன்றுமை—பொன்றுதல்—அழிதல். அதனுக்கு அருள்செய்த—அது தன் கையிற் பறித்து வைத்துக்கொண்டிருந்த தாமரைப்பூவைத் திருவடிகளிலே ஸமர்ப்பிக்கப் பெற்றுக் கொள்வதாகிற அருளைச் செய்தவனென்க. திருவாய்ப்பாடியின் ஸ்தானத்திலே திருவழுந்தூரைத் திருவுள்ளம் பற்றினானென்பது மூன்றாமடியின் கருத்து .... .... .... .... (௪)

கஞ்சனைக் காய்ந்தானைக் கண்ணமங்கையுள் நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூடுயிர் வாய்மடுத் துண்டானை *
செஞ்சொல்நான்மறையோர் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றந்தன்னை யடியேன் கண்டுகொண்டேனே. (௫)

| | |
|---|---|
| கஞ்சனை | கம்ஸனை |
| காய்ந்தானை | சீறித் தொலைத்தவனும் |
| கண்ண மங்கையுள் நின்றானை | திருக்கண்ணமங்கையில் நிற்பவனும் |
| வஞ்சனம் | வஞ்சனையையுடையளான |
| பேய் | பேய்ச்சியினுடைய |
| முலையூடு | முலைவழியே |
| வாய் மடுத்து | வாய்வைத்து |
| உயிர் | (அவளது) பிராணனை |
| உண்டானை | அபஹரித்தவனும், |
| செம் சொல் நால் மறையோர் | அழகிய சொற்கள்நிறைந்த நான்குவேதங்களையும் வல்ல வைதிகர்கள் வாழ்கிற |
| தென் அழுந்தையில் மன்னி நின்ற—; | |
| அஞ்சனம் குன்றம் தன்னை | மைமலைபோன்ற வடிவழகையுடையனுமான பெருமானை |
| அடியேன் கண்டுகொண்டேன்—. | |

* * *—தன் திறத்தில் கொடிய தீங்குகளை யிழைத்த கம்ஸனைச் சீறி முடித்தவனும், அக்கஞ்சனால் ஏவப்பட்டு முலைகொடுத்துக் கொல்லவந்த பூதனையை முலையுண்கிற பாவனையில் முடித்தவனும், பரமவைதிகர்கள் வாழ்கிற திருவழுந்தூரில் ஒரு அஞ்சனமலை நிற்குமாபோலே நிற்பவனுமான பெருமானை அடியேன் ஸேவிக்கப்பெற்றே னென்றாராயிற்று.

ஆழ்வார் திருவழுந்தூ ரெம்பெருமான் திறத்தில் மிக்க ஈடுபாடு கொண்டிருப்பதைக் கண்ட திருகண்ணமங்கை யெம்பெருமான் 'இவ்வாழ்வார் நம்மை மறந்தொழிவரோ என்னவோ' என்று திடுக்கிட்டுச் சடக்கென ஓடிவந்து எதிரே

நிற்க, 'கண்ணமங்கையுள் நின்றானை' என்கிறார் என்று அழகிய மணவாளச் சீயருடைய ரஸோக்தி. .... .... .... .... (ரு)

பெரியானை யமரர்தலைவற்கும் பிரமனுக்கும் *
உரியானையுகந்தானவனுக்கும் உணர்வதனுக்
கரியானை * அழுந்தூர்மறையோர்கள் அடிபணியும்
கரியானை * அடியேன் கண்டுகொண்டுகளித்தேனே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பெரியானை | எல்லாரிலும் மேம்பட்டவனும் | உணர்வதனுக்கு அரியானை | உள்ளபடி அறியக்கூடாதவனும் |
| அமரர் தலைவற்கும் | தேவேந்திரனுக்கும் | அழுந்தூர் | திருவழுந்தூரிலே |
| பிரமனுக்கும் | ப்ரஹ்மாவுக்கும் | மறையோர்கள் | வைதிகர்கள் |
| யானை உரி உகந்தானவனுக்கும் | யானைத்தோலை உகந்து தரிக்கின்ற சிவபிரானுக்கும் | அடி பணியும் | திருவடிதொழப்பெற்ற |
| | | கரியானை | நீலநிறத்தனுமான பெருமானை |
| | | | அடியேன் கண்டுகொண்டு களித்தேன்—. |

* * *—1. "யாங்கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கு மாங்கடவுள் நீ" என்கிறபடியே தெய்வங்களுட் பெரிய தெய்வமாயிருப்பவனும், இந்திரன் பிரமன் சிவன் என்னப்படுகிற மேலை விண்ணோர்களாலும் உள்ளபடி யறியக்கூடாத ஸ்வரூபஸ்வபாவங்களை யுடையவனும், திருவழுந்தூரில் வைதிகர்கள் அடிபணிய நிற்பவனுமான நீலமணி வண்ணனை அடியேன் ஸேவிக்கப் பெற்றுப் பரமாநந்தமடைந்தே னென்கிறார்.

இப்பாட்டை ஓதும் முறைமையில் நெடுநாளாகவே ஒரு விபரீதம் நேர்ந்திருக்கின்றது; "பெரியானை, அமரர் தலைவற்கும் பிரமனுக்கு முரியானை" என்றே பலரும் ஓதுவர்கள்: பெரியானை, உரியானை, அரியானை, கரியானை, என்று ப்ராஸமாக நிறுத்துவது அழகு என்று நினைத்தனர் போலும். இது அர்த்தத்திற்குச் சேராது. பெரியானை, அரியானை. கரியானை, என்னும் பதங்கள் போல் 'உரியானை' என்பது எம்பெருமானுக்கு விசேஷண மாவதன்று. 'உரியானை யுகந்தானவன்' என்று ஒரு சொல்லாய், வட மொழியில் க்ருத்திவாஸாः' என்னப்படுகிற சிவனைச் சொல்லுகிறது; ஆகவே, "பெரியானை, அமரர் தலைவற்கும் பிரமனுக்கும், உரியானை யுகந்தானவனுக்கும் உணர்வதனுக் கரியானை" என்று ஓதுதல் தகுதி.

உரியானை—யானை உரி என்று மொழி மாற்றுக. சிவபிரான் நடன மாடும் போது யானையுரியைப் போர்த்துக் கொண்டு நடன மாடுவனென்ப.

கரியான்—'கருமை' என்னும் பண்படியாப் பிறந்த பெயர். (கூ)

1. திருவரங்கக் கலம்பகம். 1.

திருவாழ்மார்வன்றன்னைத் திசைமண்ணீரேரி முதலா *
உருவாய்நின்றவனை ஒலிசேரும்மாருதத்தை *
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கருவார் கற்பகத்தைக் கண்டுகொண்டுகளித்தேனே. (எ)

| | |
|---|---|
| திரு வாழ் மார்வன் தன்னை | பிராட்டிவாழ்கிற திருமார்பை யுடையவனும் |
| திசை | திக்குக்களென்ன |
| மண் | பூமியென்ன |
| நீர் | ஜலமென்ன |
| எரி | அக்நியென்ன |
| முதலா | ஆகிய இவைமுதலான |
| உரு ஆய் நின்றவனை | பதார்த்தங்களாய் நிற்பவனும் |
| ஒலி சேரும் மாருதத்தை | சப்தத்தையும் குணமாக வுடைய வாயுவுக்கு நிர்வாஹகனும் |
| அரு ஆய் நின்றவனை | அரூபியாயிருப்பவனும் |
| தென் அழுந்தையில் மன்னி நின்ற—; | |
| கரு ஆர் கற்பகத்தை | வேர்ப்பற்றையுடைத்தான கல்பவ்ருக்ஷம் போன்றவனுமான பெருமானை |
| கண்டுகொண்டு களித்தேன்—. | |

* * *—"அகலகில்லே னிறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா" என்கிறபடியே எப்போதும் பெரியபிராட்டியா ரிருந்து வாழப்பெற்ற திருமார்பை யுடையவனும், பஞ்ச பூதங்களுக்கும் அந்தர்யாமியா யிருந்து உலக வாழ்க்கையை நிர்வஹிப்பவனும், திருவழுந்தூரிலே ஸந்நிதி பண்ணிக் கல்பவ்ருக்ஷம்போலே ஸர்வாபேக்ஷிதங்களையும் தலைக்கட்டிக் கொடுத்தருள்பவனுமான பெருமானைக் கண்டு களித்தே னென்கிறார்.

ஒலிசேரும் மாருத்தை = "ஆகாஶாத்வாயுः। வாயோரக்நிः। அக்நேராபः। அத்ப்யः ப்ருதிவீ" என்ற உபநிஷத் க்ரமத்திலே வாயுவானது ஆகாசத்தில் நின்றும் பிறந்ததாதலால் பூர்வ பூர்வ பூதங்களின் குணமும் உத்தரோத்தர பூதங்களில் தொடர்ந்துவருங் கணக்கிலே வாயுவுக்குத் தன் குணமான ஸ்பர்சமும், தனக்குக் காரணமான ஆகாசத்தின் குணமாகிய சப்தமும் உண்டென்க. "பூநிலாய வைந்துமாய்" என்ற திருச்சந்த விருத்த முதற்பாசுரத்தில் 'சிறந்தகா லிரண்டுமோய்" என்றதுங்காண்க.

கருவார்கற்பகத்தை = 'கரு' என்று கர்ப்பத்தைச் சொல்லுகிறது; அடியுடைத்தான கல்பவ்ருக்ஷ மென்கை. ஸ்வர்க்க லோகத்தில் ஆலம்பன மொன்றுமின்றியே நிற்கிற கற்பகத்தருபோ லல்லாமல் பூமியிலே வேர்ப்பற்றுடைத்தான கற்பகமாம் எம்பெருமான். .... .... .... .... .... .... (எ)

நிலையாளாக என்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள்வித்தகனை முதுநான்மறை வீதிதோறும் *
அலையாருங்கடல்போல் முழங்கும் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
கலையார்சொற்பொருளைக் கண்டுகொண்டு களித்தேனே. (அ)

| | |
|---|---|
| என்னை | என்னை |
| நிலை ஆள் ஆக | நிலைநின்ற அடியவனாக |
| உகந்தானை | உகந்து திருவுள்ளம் பற்றினவனும் |
| நிலம் மகள் தன் | பூமிப்பிராட்டியினுடைய |
| முலை | திருமுலைத்தடங்களை |
| ஆள் | ஆளவல்ல |
| வித்தகனை | ஸமர்த்தனும், |
| வீதி தோறும் | தெருக்கள் தோறும் |
| முது நால் மறை | புராதனமான நால் வேதங்களும் |
| அலை ஆரும் கடல் போல் முழங்கும் | அலைகள்நிரம்பிய கடல் போலப் பெருமுழக்கம் செய்யப்பெற்ற |
| தென் அழுந்தையில் மன்னி நின்ற—; | |
| கலை ஆர் சொல் பொருளை | சாஸ்த்ரங்களில் நிறைந்துள்ள சொற்களுக்குப் பொருளாயிருப்பவனு மான பெருமானை |
| கண்டு கொண்டு களித்தேன்—. | |

* * —நிலையாளாக என்னை உகந்தானை = ஐச்வரியம் முதலிய க்ஷுத்ர பலன்களை விரும்புமவர்கள் அப்பலன் கைபுகுமளவும் ஆட்பட்டிருந்து பலன் கைபுகுந்தவாறே அகன்று போவர்கள்; அடியேன் அப்படியன்றியே எம்பெருமானையே உபாயமும் உபேயமுமாகப் பற்றினவனாதலால் என்னுடைய அடிமைக்கு ஒருநாளும் குலைதல் இல்லை; ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யும் நித்யகிங்கரனாக என்னைத் திருவுள்ளம்பற்றினனென்கிறார்.

நிலமகள்தன் முலையாள் வித்தகனை = "ஸ்ரீபூமிப்பிராட்டியினுடைய திருமுலைத் தடத்துக்கு ஆனைக்குக் குதிரை வைக்கவல்ல ஆச்சர்யபூதனை" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி. இதில், ஆனைக்குக் குதிரை வைக்கை யென்பது சதுரங்க ஆட்டத்தின் முறைமைப் பேச்சு. அவ்வாட்டத்தில் அரசன், மந்திரி, ஆனை, குதிரை இத்யாதி நாமங்கள் காய்களுக்கு வழங்கும். ஆனை துர்ப்பலமென்றும் குதிரை பிரபலமென்றும் அதிற்கொள்வர்; அதுபோல, இங்கு ச்ருங்காரவிலாஸ சேஷ்டிதங்களில் பூமிப் பிராட்டியை ஆனையின்ஸ்தானத்திலே நிறுத்தி எம்பெருமான் குதிரையின் ஸ்தானத்திலே நிற்பனென்றால் ஹோமகேளிகளில் பூமிப்பிராட்டிக்குத் தோலாதவன் என்றவாறு. "முலை ஆள் வித்தகனை" என்ற சொல்நயத்தில் கிடைத்த பொருளாமிது.

[முதுநான்மறை யித்யாதி.] திருவழுந்தூர்த் திருவீதிகள்தோறும் வேத கோஷம் கடலோசைபோல் முழங்குமாம். இப்படிப்பட்ட திருப்பதியிலெழுந்தருளியிருக்கு மெம்பிரானைக் கண்டுகளித்தே னென்றாராயிற்று.

கலையார்சொற்பொருளை = ஸகலசாஸ்த்ரங்களிலுமுள்ள ஸகல சப்தங்களுக்கும் எம்பெருமானேயிறே பொருள். ஸகல கலைகளாலும் புருஷார்த்தமாகப் பிரதிபாதிக்கப்படுபவன் என்றுமாம். மூன்றாமடியில் "அலையார்கடல்" என்றும் பாடமுண்டு. .... .... .... .... .... (அ)

பேரானைக் குடந்தைப்பெருமானை * இலங்கொளிசேர்
வாரார்வனமுலையாள் மலர்மங்கைநாயகனை *
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
காரார்கருமுகிலைக் கண்டுகொண்டு களித்தேனே. (கூ)

| | |
|---|---|
| பேரானை | திருப்பேர்நகரில் பள்ளி கொண்டிருப்பவனும் |
| குடந்தை பெருமானை | திருக்குடந்தையில் தன் பெருமைகளெல்லாம் தோற்ற சயனித் திருப்பவனும் |
| இலங்கு ஒளி சேர் | விளங்குகின்ற காந்தியோடு கூடின |
| வார் ஆர் | கச்சுநிறைந்த |
| வனம் முலையாள் | அழகிய முலைகளையுடையளான |
| மலர் மங்கை | பெரியபிராட்டியார்க்கு |
| நாயகனை | வல்லபனும் |
| ஆரா இன் அமுதை | எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபெறமுடியாத இனிய அமுதம் போன்றவனும் |

தென் அழுந்தையில் மன்னி நின்ற—;

| | |
|---|---|
| கார் ஆர் கரு முகிலை | மழைகாலத்துக் காளமேகம் போன்றவனுமான பெருமானை |

கண்டுகொண்டு களித்தேன்—.

* * *—திருப்பேர் நகரிலும் திருக்குடந்தையிலும் அரவணையின்மீது பள்ளிகொண்டிருப்பவனும், நித்யயுவதியான பெரியபிராட்டியார்க்குநாயகனும், "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும், அப்பொழுதைக்கப் பொழு தென்னாரா வமுதமே" என்னுமா போலே எவ்வளவு அநுபவித்தாலும் திருப்தியுண்டாகாத அமுத மாயிருப்பவனும், கார்காலத்துக் காளமேகம் போலத் திருவழுந்தூரில் ஸேவை ஸாதிப்பவனுமான பெருமானைக்கண்டு களித்தேன்.

பேரான் = அப்பக்குடத்தான். .... .... .... .... (௯)

திறல்முருகனனையார் தென்னழுந்தையில் மன்னிநின்ற *
அறமுதல்வனவனை யணியாலியர்கோன் * மருவார்
கறைநெடுவேல்வலவன் கலிகன்றிசொல் ஐயிரண்டும் *
முறைவழுவாமைவல்லார் முழுதாள்வர் வானுலகே. (௰)

| | |
|---|---|
| திறல் முருகன் அனையார் | வலிமையில் ஸுப்ரஹ்மண்யன் போன்றவர்கள் நிறைந்த |

தென் அழுந்தையில், மன்னி நின்ற—;

| | |
|---|---|
| அறம் முதல்வனவனை | ஸகலதர்மங்களுக்கும் மூலகாரணமான பெருமான் விஷயமாக, |
| அணி ஆலியர் கோன் | அழகிய திருவாலிப்பதியிலுள்ளார்க்குத்தலைவராய் |
| மருவார் | பகைவருடைய |
| கறை | ரக்தக்கறையையுடைத்தான |
| நெடு வேல் | நீண்ட வேற்படையை |
| வலவன் | ஆளவல்லவரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| சொல் | அருளிச்செய்த |
| ஐ இரண்டும் | இப்பத்துப்பாசுரங்களையும் |
| முறை வழுவாமை | முறைதப்பாமல் |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| வான் உலகு | பரமபதத்தை |
| முழுது | பூர்ணமாக |
| ஆள்வர் | ஆளப்பெறுவர். |

* * *— மிடுக்கில் தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யனிற் குறையாதவர்கள் வாழுமிடமான திருவழுந்தூரில் தர்ம ஸம்ஸ்தாபநத்திற்கு வேர்ப்பற்றாக எழுந்தருளியிராநின்ற ஆமருவியப்பன் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச்

செய்த இத்திருமொழியை முறை தவறாது ஓதியுணருமவர்கள் பரமபதத்தைத் தாங்களிட்ட வழக்காக நிர்வஹிக்கப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக் கட்டினாராயிற்று.

கறை நெடு வேல்- பகைவர்களைக் கொன்று எறிந ரத்தக்கறையோடு கூடின வேற்படை. "தானுகந்த வூரெல்லாம் தன்தாள்பாடி." என்கிறபடியே திவ்ய தேசாநுபவமே போதுபோக்கா யிருக்குமிவர்க்கு வேற்படையில் ரத்தக்கறை கழுவுவதற்கு அவகாசமில்லையாம். .... .... .... (கo)

அடிவரவு:—சிங்கமத கோ உடையானை குன்றால் கஞ்சனை பெரியானை திருநீலை போரானை திறல் திரு.

ஆறுந்திருமொழிஉரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—ஏழாந்திருமொழி,

# திருவுக்குந் திருவாகிய செல்வா.

உரையவதாரிகை:- கீழ்த்திருமொழியில் "கண்டுகொண்டு நிறைந்தேனே" என்றும் "கண்டு கொண்டு களித்தேனே" என்றும் பரமாநந்தம் பொலியப் பேசினர்; இவ்வாநந்தம் நமக்கு நித்யமாய்ச் செல்லுமோ வென்று ஆராய்ந்து பார்த்தார்; பஞ்சேந்திரியங்களுடனே கூடத் தம்மை இந்நிலத்திலே நிறுத்தி யிருக்கக்காண்கையாலும், இவ்விந்திரியங்கள் தாம் விஷயாந்தரங்களிலேருசியைப் பிறப்பித்து ஹிம்ஸிக்கக் காண்கையாலும் இவற்றோடே கூடிவாழ்வது ஒரு வாழ்ச்சியோவென்று திருவுள்ளம் நொந்து இவ்விந்திரியங்களால் படும்பாட்டைப் போக்கியருளவேணுமென்று ஆமருவியப்பன் திருவடிகளிலே வேரற்றமரம் போலே விழுந்து சரணம் புகுகிறார் இத்திருமொழியில்.

நம்மாழ்வாரும் திருவாய்மொழியின் ஏழாம்பத்திலே "உண்ணிலாவிய ஐவரால் குமைதீற்றி யென்னையுன் பாதபங்கயம், நண்ணிலா வீகையே நலிவா னின்ன மெண்ணுகின்றாய்" என்று தொடங்கி ஒரு திருவாய்மொழியாலே, இந்திரியங்கள் படுத்தும் பாடு பொறுமே வருந்திக் கூப்பிட்டார்; இவ்வாழ்வாரும் ஏழாம்பத்திலே யாயிற்று அங்ஙனம் கூப்பிடுவது. .... .... *

திருவுக்குந் திருவாகியசெல்வா !
  தெய்வத்துக்கரசே ! செய்யகண்ணா ! *
உருவச்செஞ்சுடராழி வல்லானே !
  உலகுண்டவொருவா ! திருமார்பா ! *

ஒருவற்காற்றி யுய்யும்வகையன்றால்
உடனின்றைவ ரென்னுள்புகுந்து * ஒழியாது
அருவித்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (க)

| | |
|---|---|
| திருவுக்கும் | ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் |
| திரு ஆகிய | லக்ஷ்மீகாந்தன |
| செல்வா | செல்வனே! |
| தெய்வத்துக்கு அரசே | நித்யஸூரிகட்குத் தலைவனே! |
| செய்ய கண்ணா | புண்டரீகாக்ஷனே! |
| உருவம் | அழகிய வடிவையுடைத்தாய் |
| செம் சுடர் | செவ்விய சுடர்மயமான |
| ஆழி | திருவாழியை (ப்ரயோகிப்பதில்) |
| வல்லானே | ஸமர்த்தனே! |
| உலகு உண்ட ஒருவா | (ப்ரளயத்தில்) உலகங்களை யமுதுசெய்த அத்விதீயனே! |
| திரு மார்பா | பிராட்டியைத் திருமார்பி லுடையவனே! |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| மேல் திசை நின்ற அம்மானே | மேலைத்திசையில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, |
| ஒருவற்கு ஆற்றி உய்யும் வகை அன்று | ஒரு இந்திரியத்துக்கும் தப்பிப்பிழைக்கும்வழி இல்லை; |
| ஆல் | அந்தோ!; |
| ஐவர் | ஐந்து இந்திரியங்கள் |
| உடன் நின்று | நெருங்கியிருந்து |
| என்னுள் புகுந்து | என்பக்கலிலே வந்து புகுந்து |
| ஒழியாது | ஓயாமல் [எப்போதும்] |
| அருவி | அலைத்து |
| தின்றிட | நெருக்க |
| அஞ்சி | (அதற்கு) அஞ்சி |
| நின் அடைந்தேன் | உன்னைச் சரணம் புகுந்தேன். |

* * *—முன்னடிகளில் எம்பெருமானுடைய பெருமைகளைச் சொல்லி யேத்தி, இப்படிப்பட்ட நீ அடியேனைப் பஞ்சமஹா பாதகர் கையிலே காட்டிக் கொடுத்துக் கொலைசெய்விக்கை தகுதியோ? பிரானே! உன்னைச் சரணம் புகுகின்றேன், கிருபை செய்தருளாய் என்கிறார் பின்னடிகளில்.

திருவுக்கும் திருவாகிய செல்வா!= எம்பெருமான் ஸ்ரீக்கும் ஸ்ரீயாயிருப்ப னென்றால் என்ன கருத்தென்னில்; ஸ்ரீ என்றாலும் திரு என்றாலும் 'அதிசயத்தை விளைப்பவள்' என்று பொருள் கொள்ளத் தக்கது; எல்லார்க்கும் அதிசயத்தை விளைப்பவளான அவள்தனக்கும் அதிசயத்தை விளைப்பவன் எம்பெருமான் என்றவாறு. இவ்வருளிச்செயலை அடிபொற்றியே ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்நத்தில் "கஃஸ்ரீ:ஸ்ரிய:" என்றும், ஆழ்வான் ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் "ஸ்வாம்ஹி ஸ்ரியஃஸ்ரியமுதாஹரந்தாவா வ:" என்றும், பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்தில் "ஸ்ரியஃஸ்ரீ:ஸ்ரீரங்கேசய" என்று மருளிச்செய்தது. பிராட்டிக்கு எம்பெருமானுடைய ஸம்பந்தத்தினால் அதிசயம்; எம்பெருமானுக்குப் பிராட்டியின் ஸம்பந்தத்தினால் அதிசயம் என்றுணர்க. பிராட்டிக்கு எம்பெருமானுடைய ஸம்பந்தத்தினால் அதிசயம் என்பதற்கு மேலுதாஹரிக்கப்

பட்ட ஸ்ரீஸூக்திகள் ப்ரமாணம்; எம்பெருமானுக்குப் பிராட்டியின் ஸம்பந்தத்தினால் அதிசயம் என்பதற்கு 1. "ஸ்ரூயெயஂஹி தநெஜொ யஸ்ய வா ஜநகாத்மஜா" என்னும் ஸ்ரீராமாயண வசநம் ப்ரமாணம்.

தெய்வத்துக்கு அரசே=தெய்வமென்றது ஜாத்யேக வசநம்; தெய்வங்கட்கு என்றபடி; அயர்வறுமமரர்களதிபதியே என்கை.

[ஒருவற்கு இத்யாதி.] பஞ்சேந்திரியங்களுள் தனித்தனி ஒவ்வொரு இந்திரியத்திற்கே ஆடல் கொடுப்பது அரிது; அப்படியிருக்க ஐந்து இந்திரியங்களையும் உடனிருத்தினால், அவை நாம் 'எனக்கு வேண்டிய விஷயத்தைக் காட்டு, எனக்கு வேண்டிய விஷயத்தைக் காட்டு' என்று மூலையடியே இழுத்துக் கொலை செய்தால் நான் எங்ஙனே வாழ்வது? இவை இன்னமும் என்னை எவ்வாறு நலியத் தேடுகின்றனவோவென்று சாலவும் அஞ்சி, அஞ்சினார்க்குப் புகலிடமான உன் திருவடிகளை வந்து பற்றினேன்; நீயோ தெய்வத்துக்கரசு;— இந்திரியங்களுக்கு வசப்படாத ஒரு நாட்டை ஆள்பவன்; என்னையும் அந்நாட்டிலே புகுவிக்க வல்லையல்லையோ? செய்ய கண்ணனான வுனக்கு அத்திருக்கண்களாலே குளிரக் கடாக்ஷித்தருளி "அங்க ணிரண்டுங் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல், எங்கள்மேற்சாப மிழிந்து" என்கிறபடியே இத்துன்பத்தைத் தீர்க்க வல்லையல்லையோ? செஞ்சுடராழி வல்லானான நீ இவ்வைவர் மேல் ஆழி விடுத்துக் காரியஞ் செய்ய மாட்டிற்றிலையோ? அன்றொருகால் உலகுண்டு நோக்கினையென்று எட்டுப் புறத்திலே கேட்டுப் போகாமே இன்று என்னைக் காத்தருளாய். திருமார்பனான நீ அத்திருவின் பரிகரமான அடியேனுக்கு இத்தனையருள் செய்கை மிகையோ என்றாராயிற்று.

மூன்றாமடியில் "உய்யும் வகை யென்றால்" என்றே எங்கும் பாடம் வழங்கி வருகின்றது; இப்பாடத்திற்கு ஒரு பொருளும் சொல்லப் போகாது; வியாக்கியானத்திற்கும் இணங்காது: "ஒருவற்கு ஆடல் கொடுத்து உஜ்ஜீவிக்கும் படியாயிருக்கிறதில்லை" என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி. ஆகவே, "ஒருவற்காற்றி உய்யும் வகை அன்றால்" என்னும் பாடமே பொருந்தத் தக்கது என்று அழகிய மணவாளச்சீய ரருளிச் செய்யும்படி. 'அன்று ஆல்' என்று பிரிக்க: ஆல்—ஐயோ வென்றபடி.

ஐவர்—அஃறிணையான பஞ்சேந்திரியங்களை 'ஐவர்' என்று உயர்த்திக் கூறியது, அவற்றின் மேல் தமக்குள்ள சீற்றமிகுதியையும், அவற்றின் கொடுமைக் கனத்தையும் காட்டுதற்கென்க: திணைவழுவமைதி. .... (க)

பந்தார்மேல்விரல் நல்வளைத்தோளி
பாவைபூமகள் தன்னொடுமுடனே
வந்தாய் * என்மனத்தே மன்னிநின்றாய்
மால்வண்ணா! மழைபோலொளிவண்ணா! *

1. ஆரண்யகாண்டம்—இராவணனை நோக்கி மாரீசன் சொன்னது.

சந்தோகா! பௌழியா! தைத்திரியா!
சாமவேதியனே! நெடுமாலே! *
அந்தோ! நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (௨)

| | |
|---|---|
| பந்து ஆர் மெல் விரல் | பந்துபொருந்திய மெல்லிய கைவிரல்களையுடையளும் |
| நல் வளை தோளி | நல்ல வளைகளையணிந்த தோள்களையுடையளும் |
| பாவை | பதுமைபோன்றவளுமான |
| பூ மகள் தன்னொடும் உடனே வந்தாய் | பெரியபிராட்டியாரோடு கூட எழுந்தருளினவனாய் |
| என் மனத்தே மன்னி நின்றாய் | என்நெஞ்சிலே பொருந்தியெழுந்தருளியிருக்குமவனே! |
| மால் வண்ணா | கறுத்தநிறத்தையுடையவனே! |
| மழை போல் ஒளி வண்ணா | மேகம்போன்று குளிர்ந்து அழகிய வடிவையுடையவனே! |
| சந்தோகா | சாந்தோக்ய உபநிஷத்தை உணர்ந்தவனே! |
| பௌழியா | கௌஷீதகிப்ராஹ்மணமுணர்ந்தவனே! |
| தைத்திரியா | தைத்திரீய உபநிஷத்தை உணர்ந்தவனே! |
| சாம வேதியனே | ஸாமவேத முணர்ந்தவனே! |
| நெடு மாலே | ஸர்வஸ்மாத்பரனே! |
| அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!—; | |
| நின் அடி அன்றி | உனது திருவடிகளையன்றி |
| மற்று அறியேன் | வேறொருபுகல் அறிகிறேனில்லை. |

* * *=1. "அரவத் தமளியினோடு மழகிய பாற்கடலோடும், அரவிந்தப் பாவையுந்தானு பகம்படி. வந்துபுகுந்து....பள்ளிகொள்கின்றபிரானை" என்னுமாப்போலே பிராட்டியையும் உடனழைத்துக்கொண்டுவந்து அடியேனுடைய மனத்திலே மன்னி நிற்பவனே!, ஆர்த்தர்களை ரக்ஷிக்கைக்குப் பாங்கான ஸர்வஜ்ஞத்வத்தை யுடையவனே!, ஸர்வஸ்மாத்பரனே! அடியேன் உன்னுடைய திருவடிகளன்றி வேறொரு புகலிருப்பதாகக் கனவிலும் கருதுகின்றிலேன்; அடியேன் போல்வாரைக் காத்தருள்வதற்கென்றே திருவழுந்தூரில் நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கின்ற வுனக்கு, பஞ்சேந்திரியங்களின் கையிலே படுகொலைப் படாதபடி என்னைக் காத்தருள்கை மிகையன்றுகாண் என்றாராயிற்று.

"பந்தார் மெல்விரல்" என்ற அடைமொழி மடந்தையர்க்கு இயற்கையாக இடுவதாம். சேலைகள் ஆபரணங்கள் முதலியவற்றை வருணித்துச் சொல்வது போல விளையாட்டுக் கருவிகளையிட்டு விசேஷிப்பதும் கவிமரபு. .... (௨)

நெய்யாராழியுஞ் சங்கமுமேந்தும்
நீண்டதோளுடையாய்! * அடியேனைச்
செய்யாதவுலகத்திடைச் செய்தாய்
சிறுமைக்கும் பெருமைக்குமுள்புகுந்து *

1. பெரியாழ்வார் திருமொழி 5—2—10.

போய்யால்ஐவரென் மெய்குடியேறிப்
போற்றிவாழ்வதற்கஞ்சி நின்னடைந்தேன் *
ஐயா ! நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே ! (௫.)

ஐயா — ஸ்வாமீ !
அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே !—;
நெய் ஆர் ஆழியும் — நெய்யிட்டிருக்கிற சக்கரத்தையும்
சங்கமும் — ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
ஏந்தும் — தரித்திருக்கின்ற
நீண்ட தோள் உடையாய் — பெரிய திருக்கைகளை யுடையவனே !
அடியேனை — உனக்கே உரியவனான என்திறத்தில்
உலகத்திடை — இவ்வுலகத்திலே
செய்யாத செய்தாய் — செய்யத்தகாதவற்றை யெல்லாம் செய்தாய் ;

ஐவர் — பஞ்சேந்திரியங்கள்
பொய்யால் — க்ருத்ரிமத்தோடுகூடி
சிறுமைக்கும் பெருமைக்கும் உள் புகுந்து — சிற்றின்பவாழ்வுக்கும் பேரின்பவாழ்வுக்கும் பொதுவாக என்னுள்ளே புகுந்து
என் மெய் குடி ஏறி — என் சரீரத்திலே குடியேறியிருக்க
போற்றி வாழ்வதற்கு அஞ்சி — அவற்றை த்ருப்தியடையச் செய்து வாழ்வதற்குப் பயப்பட்டு
நின் அடைந்தேன்—;
நின் அடி அன்றி மற்று அறியேன்—.

* * *—திருவாழி திருச்சங்குகளைப் பூவேந்துமா போலே ஏந்தி நிற்பவனே! அடியேன் திறத்தில் இவ்வுலகத்துச் செய்யத் தகாதவற்றைச் செய்து வைத்தாய்; (அதாவது—) உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்தவர்களைப் போலே என்னையுமாக்கி யிருந்தால் இவ்விருள்தருமா ஞாலத்திலே இந்திரியங்களுடனேகூட என்னை வைத்திருப்பது தகுதியாகும்; என்னையோ அடியவனென்று பேர் சுமக்கும்படி பண்ணிவைத்து அடிமைத் தொழிலுக்கு இடையூறான இந்திரியங்களுடனே நிறுத்தி வைத்திருக்கின்றாய்; இதுவோ செய்யத் தக்கது; இந்திரியங்களுடனேகூட வைப்பதாயிருந்தால் அடியவனாக் காதே ஸம்ஸாரியாக்கி வைக்க வேணும்; அடியவனாக வைப்பதானால் இந்திரியங்களை யொழித்து வைக்கவேணும்; அடியவனாகவும் ஆக்கி இந்திரியங்களையும் உடன் நிறுத்ினால் இஃது என் கொல்?.

'இந்திரியங்களுடன் வைத்ததால் என்ன கெடுதி? நல்லகதைகளைக் கேட்கச் செவி வேண்டாவோ? நல்ல துதிகளை வாயாரச் சொல்ல வாய் வேண்டாவோ?; "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக் கினியன கண்டோம்" என்று காண்பதற்குக் கண் வேண்டாவோ?, திவ்ய தேசங்களுக்கு நடந்து செல்லக் கரணகளேபரங்கள் வேண்டாவோ; இவையெல்லாம் நன்மைக்கு வேணுமென்று தானே உமக்கு இந்திரியங்களைத் தந்தது; "விவிதா தெஹஸம்வ ஷீரீஸ்வராய . நிவெதிதாம்" என்றது அறியீரோ?" என்று எம்பெருமான் திருவுள்ளமாக. அதற்கு மறுமொழியாகக் கூறுகின்றார் சிறுமைக்கும் பெருமைக்கு முள்புகுந் தேன்று தொடங்கி. இந்திரியங்களோ வென்னில், சிற்றின்பத்தைப் பெறுத்து

தற்கும் பேரின்பத்தைப் பெறுந்துதற்கும் பொதுவாயிரா நின்றன ; ஸமித்து வெட்டுதற்குத் தந்த வாள்தானே சிலர்க்குக் கண்ணைக் கலக்கிக்கொள்ள உறுப்பாகின்றதில்லையோ ? ஸாதகத்வம் பாதகத்வம் என்ற இரண்டு தன்மைகளும் வாளுக்கு இருப்பது போல, இந்திரியங்கட்கும் அத்தன்மைகள் உள்ளனவன்றோ ? 1. "அன்பாழியானை யணுகென்னும் நா அவன்றன், பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும், முன்பூழி காணானைக் காணென்னுங்கண் செவி கேளென்னும், பூணாரம்பூண்டான் புகழ்" என்கிறபடியே பகவத் விஷயத்திற் படிந்து பேரின்பம் பெறுவிக்கவும் இவை வல்லன; விஷயாந்தரங்களில் கொண்டு மூட்டிச் சிற்றின்பம் பெறுவிக்கவும் இவை வல்லன. [சிறுமைக்கும் பெருமைக்கு முள் புகுந்து என்றதன் உட்கருத்து இது.] இப்படிப்பட்ட இந்திரியங்கள் நல்லெண்ணமின்றியே வஞ்சகத்தோடு என்னுட் புகுந்திருப்பதனால், அவை இழுத்துக் கொண்டு போகும் வழிகளிலெல்லாஞ் சென்று அவற்றுக்கு வேண்டிய இரைகளைத் தந்து ஆராதிப்பதற்கு அடியேன் அசக்தனாதலால் அவற்றால் நலிவுபடா நின்றேன் ; அந்நலிவு தீர உன்னை வந்து சரணம் புகுந்தேனென்றாராயிற்று.

'நெய்யா ராழியும்' என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"கடைந்து பற்றற நெய்யிட்டிருக்கிற திவ்யாயுதங்களை யுடையவனே!" என்ற வாக்கியங்கட்குப் பின் காணப்படுகிற "நெய்—கூர்மை ; ஆர்தல்—மிகுதி ; கூர்மைமிக்கதிருவாழி." என்ற வாக்கியம் இடைச் சொருகலாய் வந்ததென்பர் பெரியோர்.

செய்யாத உலகத்திடைச் செய்தாய்= 'செய்யாத' என்பது உலகத்துக்கு விசேஷணமென்று பலரும் மயங்குவர் ; அங்ஙனன்று ; 'உலகத்திடைச் செய்யாத செய்தாய்' என்று அந்வயம். இரண்டனுருபு தொக்க எதிர்மறைவினையாலணையும் பெயர்.

குடியேறி=ஏறி—எச்சத்திரிபு. .... .... .... .... (௫)

பரனே ! பஞ்சவன்பௌழியன்சோழன்
பார்மன்னர்மன்னர்தாம் பணிந்தேத்து
வரனே ! * மாதவனே ! மதுசூதா !
மற்றோர்நல்துணை நின்னலாலிலேன்காண் *
நரனே ! நாரணனே ! திருநறையூர்நம்பீ !
எம்பெருமான் ! உம்பராளும்
அரனே ! * ஆதிவராகமுன்னாய் !
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே ! (௬)

1. முதல் திருவந்தாதி.

| | |
|---|---|
| பரனே | பரமபுருஷனே ! |
| பஞ்சவன் பௌழியன் சோழன் | பஞ்சவனென்றும் பௌழியனென்றும் சோழனென்றும் பெயர் கொண்ட |
| பார் மன்னர் மன்னர் தாம் | பூமிக்கு ராஜாதிராஜர்களானவர்கள் |
| பணிந்து ஏத்தும் | பணிந்து துதிக்கும்படியான |
| வரனே | சிறந்தவனே ! |
| மாதவனே | திருமாலே ! |
| மதுசூதா | மதுவென்னு மசுரனைக் கொன்றவனே ! |
| நரனே நாரணனே | நரநாராயணாவதாரம் செய்தருளினவனே ! |
| திரு நறையூர் நம்பீ | திருநறையூரி லெழுந்தருளியிருக்கின்ற பரிபூர்ணனே ! |
| எம் பெருமான் | எமக்குத் தலைவனே ! |
| உம்பர் ஆளும் அரனே | தேவதைகளை ஆளவல்ல ருத்ரனுக்கு அந்தர்யாமியானவனே ! |
| முன் | முன்பொருகாலத்தில் |
| ஆதி வராகம் ஆனாய் | ஆதிவராஹ மூர்த்தியாய் அவதரித்தவனே ! |
| அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே !—; | |
| நின் அலால் | உன்னையொழிய |
| மற்று ஓர் நல் துணை | வேறொரு நல்ல ரக்ஷகனை |
| இலேன் | உடையேனல்லேன். |

* * *—ஒத்தார் மிக்காரை யுடைய னாகாதவனே !, பஞ்சவ னென்றும் பௌழிய னென்றும் சோழ னென்றும் சொல்லப்படுகிற ராஜாதி ராஜர்கள் பணிந்தேத்தும் படியாக வுள்ளவனே !, திருமாலே, வேதவிளக்கைக் கொள்ளை கொண்டு உலகமெங்கு மிருள்மூட்ச்செய்த மதுகைடபர்களைக் கொன்றொழித்தவனே !, ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் நரனென்னுஞ் சிஷ்யனாகவும் நாராயணனென்னும் ஆசார்யனாகவும் வடிவெடுத்து ஆசார்ய சிஷ்யக்ரமத்தை யுணர்த்தித் திருமந்திரத்தை வெளியிட்ட ருளினவனே ! உன்னையன்றி மற்றொரு நற்றுணை யுடையேனல்லே னென்கிறார்.

முதலடியில் ‘மன்னர் மன்னர்’ என்றது—மன்னர்க்கும் மன்னர் என்றபடி. பரன், வரன்—வடசொற்கள்.

இவ்வாழ்வார் வாக்கினின்று திருநறையூர் நம்பி நூறுபாசுரங்கள் பெற்றுக் கொண்டிருந்தும் திருப்தி பெறாதவனாய் மீண்டும் வந்து முகங்காட்டினன் போலும், திருநறையூர் நம்பீ ! என்கிறார். ஆழ்வார் திருநறையூர்க்கு எழுந்தருள்வதற்கு முன்பும் எதிர்கொண்டு சென்றான் நம்பி ; திருவிண்ணகரில் ஆழ்வார் எழுந்தருளி யிருக்கும்போது நம்பி எதிர்கொண்டு செல்லவேயன்றோ “திருநறை யூர்த்தேனே வருபுனல் சூழ்திரு விண்ணகரானே !” என்று திருவிண்ணகர்ப்பதிகத்திற் பேசலாயிற்று ; ஆழ்வார் திருநறை யூரினின்று மீண்டு திருவழுந்தூர் செல்லுமளவும் கூடவந்து வழிவிட்டுத் திரும்புகையாலன்றோ இங்கு “திருநறையூர் நம்பீ !........அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே !” என்று பேசலாயிற்று என்று அழகிய மணவாளச் சீயர் ரஸமாக உபந்யஸிக்கக் கேட்டிருக்கை. .... .... .... .... .... (௪)

விண்டான் விண்புக வெஞ்சமத்தரியாய்ப்
பரியோன்மார்வகம் பற்றிப்பிளந்து *
பண்டானுய்ய வோர்மால்வரையேந்தும்
பண்பாளா! பரனே! பவித்திரனே! *
கண்டேன்நான் கலியுகத்ததன் தன்மை
கருமமாவது மென்றனக்கறிந்தேன் *
அண்டா! நின்னடியன்றிமற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (௫)

| | |
|---|---|
| விண்டான் | பகைவனான இரணியன் |
| விண் புக | வீரஸ்வர்க்கம் சென்று சேரும்படி |
| வெம் சமத்து | வெவ்விய போர்க்களத்திலே |
| அரி ஆய் | நாசிங்கமாய்த்தோன்றி |
| பரியோன் | பருத்தவடிவையுடையனான அவ்விரணியனுடைய |
| மார்வகம் | மார்பை |
| பற்றி பிளந்து | பிடித்துக்கிழித்தவனும், |
| பண்டு | முன்பு [க்ருஷ்ணாவதாரத்தில்] |
| ஆன் உய்ய | பசுக்கள் ஜீவிக்கும்படி |
| ஓர் மால் வரை | ஒரு பெரிய மலையை |
| ஏந்தும் | எடுத்துப்பிடித்த |
| பண்பாளா | நீர்மையையுடையவனே! |
| பரனே | சிறந்தவனே! |
| பவித்திரனே | பரிசுத்தனே! |
| அண்டா | அண்டங்கட்கு இறைவனே! |
| அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!—; | |
| கலியுகத்த தன் தன்மை | இக்கலியுகத்தின் ஸ்வபாவத்தை |
| நான் கண்டேன் | நான் தெரிந்துகொண்டேன்; |
| என் தனக்கு | எனக்கு |
| கருமம் ஆவதும் | செய்யத்தக்கதையும் |
| அறிந்தேன் | அறிந்துகொண்டேன்; |
| நின் அடி அன்றி மற்று அறியேன்—. | |

* * *—ப்ரஹ்லாதாழ்வானுக்கு இரணியனால் நேர்ந்த நலிவுகளைத் தவிர்த்தருளினது போலவும், திருவாய்ப் பாடிக்கு இந்திரன் விடுத்த பெரு மழைத் தீங்கை மலையெடுத்துக் காத்தது போலவும் அடியேனுக்கு இந்திரியங்களால் நேர்ந்த துயரத்தைத் தொலைத்தருளவேணு மென்கிறார்.

விண்டான்—தன்னை விட்டு நீங்கினவன் என்று பொருள்பட்டுப் பகைவனை உணர்த்தும் சொல் இது. அமர்க்களத்தில் மாண்டொழிந்தவர்கள் வீரஸ்வர்க்கம் புகுவர்களென்பது நூற்கொள்கை யாதலால் 'விண்புக' எனப்பட்டது.

கண்டேன் நான் கலியுகத்ததன் தன்மை=மஹாபாரதத்தில் மோக்ஷதர்மத்தில் "ததஃ கலியுகெ ப்ராப்தெ...... ஸவிஷ்யத்யபொத்தரம்" என்று சொல்லியிருக்கிறபடியே தலைகீழாக நடக்குங் கலியுகத் தன்மைகளைக் கண்டு கொண்டேன்: இப்படிப்பட்ட நிலைமையில் நமக்குச் செய்யத்தக்கதேது என்று ஆராய்ந்து பார்த்தவளவில் உன் திருவடிகளை ஆச்ரயிப்பதே கருமம் என்று துணிந்து கொண்டேன்; அத்துணிவுக்கிடாக உனது திருவடிகளை யன்றி வேறொன்றையு மறியாதவனா யிருக்கின்றே னென்றாராயிற்று.

விண்டான், பரியோன் என்ற சொற்கள் இராவணனைக் குறிப்பன.

கலியுகத்ததன்தன்மை கண்டேன் = பகவத் விஷயத்தில் வெறுப்பைப் பிறப்பித்து ஆத்மஹாநியை விளைப்பதே இக்கலியுகத்தின் தன்மையென்று தெரிந்து கொண்டேனென்கை. கருமம்—வடசொல்; கர்மம். அண்டா= அண்டங்கட்கு அதிபதியே! என்றும், இடையனாகப் பிறந்தவனே! என்றும் பொருள்படும். .... .... .... .... .... (௫)

தோயாவின்தயிர் நெய்யமுதுண்ணச்
சொன்னார்சொல்லி நகும்பரிசே * பெற்ற
தாயால்ஆப்புண்டிருந் தழுதேங்கும்
தாடாளா! தரையோர்க்கும் விண்ணோர்க்கும்
சேயாய்! * கிரேதத்ரேததுவாபர
கலியுகமிவைநான்கு முனானாய்! *
ஆயா! நின்னடியன்றி மற்றறியேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (௬)

| | |
|---|---|
| சொன்னார் | எதையும் வாய்வந்தபடி சொல்லுகிறவர்கள் |
| சொல்லி | வசைகூறி |
| நகும் பரிசே | சிரிக்கும்படியாக |
| தோயா இன் தயிர் நெய் அமுது உண்ண | நன்றாகத்தோயாத இனிய தயிரையும் நெய்யையும் அமுது செய்ய (அப்பொழுது) |
| பெற்ற தாயால் | தாயாகிய யசோதையினால் |
| ஆப்புண்டு | கட்டுண்டு |
| இருந்து | போகமாட்டாதே நின்ற |
| அழுது ஏங்கும் | விக்கிவிக்கியழுத |
| தாடாளா | பெரியோனே! |
| தரையோர்க்கும் | பூமியிலுள்ளவர்களுக்கும் |
| விண்ணோர்க்கும் | விண்ணுலகத்திலுள்ளவர்களுக்கும் |
| சேயாய் | கிட்டக்கூடாதவனே! |
| முன் | முன்னமே |
| கிரேத த்ரேத த்வாபர கலியுகம் இவை நான்கும் ஆனாய் | கிருதயுகம் த்ரேதாயுகம் த்வாபரயுகம் கலியுகம் என்னுமிந்த நான்கு யுகங்களுக்கும் நிர்வாஹகனானவனே! |
| ஆயா | கோபாலக்ருஷ்ணனே! |

அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!—; நின் அடி அன்றி மற்று அறியேன்—.

* * *—உன்மேல் ஏதாகிலும் பழிசொல்லியே பொழுதைப் போக்க நினைத்திருப்பாருடைய வாய்க்கு நல்ல இரை கிடைக்கும்படி தோயாத தயிரையும் நெய்யையும் களவாடியுண்டு யசோதை கையிலே பிடியுண்டு தாம்பினால் கட்டுண்டு 'நம்முடைய ஸௌலப்ய குணம் நன்கு வெளியாகப் பெற்றது' என்று நெஞ்சினுள்ளே பெருமகிழ்ச்சி கிடக்கச் செய்தேயும் வருந்தினவன்போல அபிநயித்து விக்கிவிக்கியழுத பெருமானே!, இந்நிலத்திலுள்ளாராகவுமாம், விண்ணுலகத்திலுள்ளாராகவுமாம், யாராயினும் தம்முயற்சியாலே உன்னைப்பெற

நினைப்பாரையின் அவர்கட்கு எட்டாதபடி தூரஸ்தனுயுள்ளவனே! க்ருதத்ரேதா த்வாபர கலியுகங்களென்கிற நான்கு யுகங்களையும் தானிட்ட வழக்காக நிர்வஹிக்குமவனே ! திருவழுந்தூர்ப் பெருமானே! உன்திருவடிகளை யன்றி மற்றொன்றும் நானறியே னென்றுராயிற்று.

‘தோயா இன் தயிர்’ என்றும், ‘தோய் ஆவின் தயிர்’ என்றும் பிரிக்கலாம்; இரட்டுற மொழிதலாகக் கொண்டு, சிலவிடங்களில் தோயாதபசுவின் தயிரை யுண்பனென்றும், சிலவிடங்களில்தோய்ந்த பசுவின்தயிரை யுண்பனென்றுங் கொள்ளலாம். சொன்னூர்=வாய்வந்தபடி சொல்லித்திரிகின்றவர்கள் என்றவாறு. யசோதைப் பிராட்டியைப் பெற்றதாயென்றது—பெற்ற தாய்போலப் பரிவுடன் வளர்த்தமைபற்றி யென்க.

‘க்ருத’ என்னும் வடசொல் ‘கிரேத’ என விகாரப் பட்டது. ‘யுகமிவை நான்கும் முன்னுனாய்’ என்று விளிப்பதன் கருத்தாவது—கலியுகத்திலும் கிருதயுக ரீதியை நடை பெறுத்தவல்ல சக்தி உனக்கு இருக்கச் செய்தேயும் என்னைக் கலிநலிவுக்கு ஆளாக்கித் துன்பப்படுத்துவதேன்? என்பதாம். .... (௬)

கறுத்துக்கஞ்சனை யஞ்சமுனிந்தாய் !
கார்வண்ணா ! கடல்போலொளிவண்ணா ! *
இறுத்திட் டான்விடையேழு முன்வென்றாய் !
எந்தாய் ! அந்தரமேழுமுனாய் ! *
பொறுத்துக்கொண்டிருந்தாற் பொறுக்கொணாப்
போகமேநுகர்வான்புகுந்து * ஐவர்
அறுத்துத்தின்றிடவஞ்சி நின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே ! (எ)

| | |
|---|---|
| கஞ்சனை | கம்ஸனை |
| அஞ்ச | அவன் பயப்படும்படி |
| கறுத்து | கோபித்து |
| முனிந்தாய் | நிரஸித்தவனே ! |
| கார் வண்ணா | மேகம் போல் குளிர்ந்த வடிவையுடையவனே ! |
| கடல் போல் ஒளி வண்ணா | கடல்போன்று அழகிய வடிவையுடையவனே ! |
| முன் | முன்பொருகால் |
| ஆன் விடை ஏழும் இறுத்திட்டு வென்றாய் | ஏழுஎருதுகளையும் முறித்து வென்றவனே ! |
| எந்தாய் | எம்பெருமானே ! |
| முன் | முற்காலமே தொடங்கி |
| அந்தரம் ஏழும் ஆனாய் | மேலுலகங்களேழுக்கும் நியாமகனானவனே !, |

அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே !—;

| | |
|---|---|
| பொறுத்துக் கொண்டு இருந்தால் பொறுக்க ஒணா | (வருந்தி) ஸஹித்துக் கொண்டிருப்போ மென்றாலும் ஸஹிக்க முடியாதபடியான |
| போகமே | துக்காநுபவங்களையே |
| நுகர்வான் | பெறுவிப்பதற்காக |
| ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |
| புகுந்து | என்னிடம் வந்து சேர்ந்து |
| அறுத்து தின்றிட | ஹிம்ஸித்து ஆத்ம நாசத்தைப்பண்ண |
| அஞ்சி | (அதற்குப்) பயப்பட்டு |
| நின் அடைந்தேன் | உன்னை ஆச்ரயித்தேன். |

* * *—உன்பக்கலில் நல்லெண்ணங் கொண்டு வாழ்ந்து போகலாமாயிருக்க அது செய்யாதே தீயபுத்தியைக் கொண்ட கம்ஸன் அஞ்சி யொழியும்படி அவனைச் சினந்து நிக்ரஹித்தவனே; நப்பின்னைப் பிராட்டியோடு கலவிசெய்ய இடையூறாயிருந்த எழு விருஷபங்களையும் வலியடக்கி அப்பிராட்டியைத் தழுவிக்கொண்டவனே!, பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் ஸத்யலோகம் மஹோலோகம் ஜநலோகம் தபோலோகம் ஸத்யலோகம் ஆகிய மேலேழுலகங்களையும் நிர்வஹித்து நடத்துமவனே!, பல்லைக்கடித்துக்கொண்டு பொறுத்திருப்போமென்றாலும் பொறுத்திருக்கமுடியாத துக்கானுபவங்களை நான் அடைந்திடும்படி பஞ்சேந்திரியங்கள் என்னுள்புகுந்து ஹிம்ஸிக்க, அந்த ஹிம்ஸைகளுக்கு அஞ்சி உன் திருவடிகளிலே வந்து புகுந்தேனென்றாராயிற்று.

போகம்—போக மென்ற வட சொல்விகாரம்; அநுபவம்; துன்பங்களின் அநுபவ மென்பது அர்த்தாத் ஸித்தம். நுகர்வான்—நான் அநுபவிக்கும்படி செய்வதற்காக. .... .... .... .... .... (எ)

நெடியானே! கடியார்கலிநம்பீ!
நின்னையே நினைந்திங்கிருப்பேனை *
கடியார்காளைய ரைவர்புகுந்து
காவல்செய்த வக்காவலைப்பிழைத்து *
குடிபோந்துன்னடிக்கீழ் வந்துபுகுந்தேன்
கூறைசோறிவை தந்தெனக்கருளி *
அடியேனைப் பணியாண்டுகொளெந்தாய்!
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (அ)

| | |
|---|---|
| நெடியானே | எல்லார்க்கும் மேற்பட்டவனே! |
| கடி | (பூமிக்கு) அரணாகிய |
| ஆர்கலி | ஸமுத்ரத்தில் (பள்ளி கொண்டிருக்கிற) |
| நம்பீ | பூர்ணனே! |
| எந்தாய் | எம்பெருமானே! |
| அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!—; | |
| நின்னையே நினைந்து | உன்னையே தியானித்துக் கொண்டு |
| இங்கு இருப்பேனை | இங்கு இருக்கிற என்னை |
| கடியார் | க்ரூரர்களாயும் |
| காளையர் | (ஹிம்ஸிப்பதில்) யௌவன பருவ முள்ளனவாயுமிருக்கிற |
| ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |

| | |
|---|---|
| புகுந்து | என்னிடம் நெருங்கி |
| காவல் செய்த அக் காவலை பிழைத்து | (என்னை உன்னிடம் வர வொட்டாதபடி) தடை செய்த அந்தச் சிறைக்குத் தப்பிவந்து |
| உன் அடி கீழ் | உன் திருவடிகளின் கீழே |
| குடி போந்து | குடியிருக்கக் கருதி |
| வந்து புகுந்தேன் | வந்து சேர்ந்தேன்; |
| எனக்கு | அடியேனுக்கு |
| கூறை சோறு இவை தந்தருளி | அணியும் சோறுமாகிய இத்திருவடிகளைத் தந்தருளி |
| அடியேனை பணி ஆண்டு கொள் | அடியேனை நித்ய கிங்கரனாக்கிக் கொள்ள வேணும். |

* * *—ஆர்கலி என்று கடலுக்குப் பெயர்; திருப்பாற்கடலை நினைக்கிறது. ஆர்த்தர்களுடைய கூக்குரல் கேட்டுப் பதறி யெழுந்து வந்து ரக்ஷிப்பதற்காக நீ திருப்பாற்கடலில் உறங்குவான்போல் யோகு செய்யும் பெருமானே யிருக்கிற படியை அநுஸந்தித்து அத்திருக்குணத்தி லீடுபட்டிருக்கின்ற அடியேனைப் பஞ்சேந்திரியங்கள் சிறைப்படுத்தி நலிந்த நலிவுக்குத் தப்பிப் பிழைத்து உன் திருவடிகளிலே வந்து சேர்ந்தேன்; இனி அடியேனுக்கு வேண்டிய கூறை சோறு களைக் கொடுத்தருளி நித்யகைங்கரியங் கொண்டருள வேணுமென்கிறார்.

பஞ்சேந்திரியங்களுக்குக் கொடுத்த 'காளையர்' என்னும் விசேஷண த்தின் கருத்தைப் பெரியவாச்சான்பிள்ளை வெளியிட்டருளுகிறார் காண்மின்;— "நெஞ்சில் நன்மையின்றிக்கே பிறரை நலியநலிய இளகிப்பதியாநின்றபருவத்தை யுடைய ஐவர்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. "காளையே எருது பாலைக் கதிபன் நல்லிளையோன் பேராம்" என்பது நிகண்டு; நல்லிளையோனென்ற பொருள் இங்குக்கொள்ளப்பட்டது; ஹிம்ஸிக்குந்திறத்தில் மூப்பு இன்றியே யௌவனங்கொண்டிருக்கிற இந்திரியங்களென்றபடி.

கூறைசோறிவைதந்தெனக்கருளி=1. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்றும் 2. "கூறைசோறிவைவேண்டுவ தில்லை" என்றும் சொல்லுமாபோலே கூறை சோறு முதலிய போக்ய போகோப கரணங்களில் விருப்பமற்றிருக்கின்ற இவ்வாழ்வார் கூறை சோறுகளை விரும்ப ப்ரஸக்தி யில்லாமையாலே 'எனக்குக் கூறையும் சோறுமாயிருக்கிற இத்திருவடி களைத் தந்தருளி' என்று உரைக்கப்பட்டது. "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:—வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" [எல்லாப்பொருளும் எம்பெருமானே யென்றிருக்கும் மஹாத்மா கிடைப்பதரிது] என்ற கீதாசார்யனுடைய குறைதீரவிறே ஆழ்வார்கள் திருவவதரித்தருளிற்று.

அடியேனைப் பணியாண்டுகொள்=ராஜகுமாரனுப் பிறந்து முடியிழந்து போகும் தௌர்ப்பாக்ய சாலிகளைப் போலாகாமே அடியேனை நான் அடிமைத் தொழில் செய்து ஸ்வரூபம் நிறம் பெறுமாறு செய்தருளா யென்கிறது. ஸ்ரீவிபீஷணழ்வானுக்கு வந்து புகுரலாம்படி கடற்கரை வெளியிலே வந்து நின்றாப் போலே எனக்கு உறவு முறையார் கைவிட்டவன்று வந்து கிட்டலாம் படி யன்றோ நீ திருவழுந்தூரில் வந்து நிற்கிறது, இந்நிலையிலும் அடியேன் இழந்து போகலாமோ வென்கிறது ஈற்றுவிளியினல். .... .... (அ)

கோவாயைவரென் மெய்குடியேறிக்
கூறைசோறிவை தாவென்றுகுமைத்துப்
போகார் * நானவரைப்பொறுக்ககிலேன்
புனிதா! புட்கொடியாய்! நெடுமாலே! *

---

1. திருவாய்மொழி 6—7—1. 2. பெரியாழ்வார் திருமொழி 5—1—4.

தீவாய்நாகணையில் துயில்வானே!
திருமாலே! இனிச்செய்வதொன்றறியேன் *
ஆவாவென்றடியேற் கிறையிரங்காய்
அழுந்தூர்மேல்திசைநின்ற வம்மானே! (௯)

| | |
|---|---|
| புனிதா | பரிசுத்தனே! |
| புள் கொடியாய் | கருடத்வஜனே! |
| நெடுமாலே | ஸர்வாதிகனே! |
| தீ வாய் நாக அணையில் துயில்வானே | (பகைவர்மேலே) நெருப்பை உமிழ்கிற ஸர்ப்பமாகிய படுக்கையில் சயனித்திருப்பவனே! |
| திருமாலே!, அழுந்தூர் மேல்திசை நின்ற அம்மானே!—; | |
| ஐவர் | பஞ்சேந்திரியங்கள் |
| கோ ஆய் | என்னை நியமிப்பனவாய்க் கொண்டு |
| என் மெய் | என் சரீரத்தில் |
| குடி ஏறி | குடிபுகுந்து |
| கூறை சோறு இவை தா என்று | துணியையும் சோற்றையும கொடு என்று |
| குமைத்து | அடர்த்துக் கொண்டிருந்து |
| போகார் | விட்டுப்போகின்றனவில்லை; |
| நான் | அடியேன் |
| அவரை | அவ்விந்திரியங்களின் கொடுமைகளை |
| பொறுக்ககிலேன் | ஸஹிக்கமாட்டுகின்றிலேன்; |
| இனி செய்வது ஒன்று அறியேன் | உன்னையே புகலாக நான் அடைந்தேனான பின்பு (என்னுடைய ஹிதத்துக்காக) நான் செய்து கொள்ளத்தக்கது ஒன்றுமறிகின்றிலேன்; |
| அடியேற்கு | அடியேன் விஷயத்தில் |
| ஆ ஆ என்று | ஐயோவென்று |
| இறை இரங்காய் | சிறிது கிருபைசெய்தருளவேணும். |

* * *—கீழ்ப்பாட்டில் "ஐவர் புகுந்து காவல்செய்த வக்காவலைப் பிழைத்துக் குடிபோந்துன்னடிக்கீழ் வந்து புகுந்தேன்" என்று இந்திரியங்களுக்கு ஒருவாறு தப்பிப்பிழைத்துத் திருவடிவாரத்திலே வந்து சேர்ந்ததாகச் சொன்னார்; அதுதான் இந்நிலத்திலேயாகையாலே இந்திரியங்களின் நலிவு தொடர்ந்தே வருவதாயிருக்கிறபடியைக்கண்டு மீண்டும் கதறுகிறார். அடியேன் உன்னொருவனையே ஸ்வாமியாகக் கொண்டவனே யன்றி ஐவரை ஸ்வாமியாகக்கொண்டவனல்லேன்; அப்படியிருந்தும் ஐவர்என்னை அடக்கியாள்பவராக நின்று என்னுடலிலே குடிபுகுந்து தங்களுக்கு வேண்டிய இரைகளைப் பெறவேண்டிக் குமைத்து ஒரு நொடிப்பொழுதுங் கால்வாங்குகின்றிலர்; நான் அவர்களுடைய நலிவைப் பொறுக்கமாட்டுகின்றிலேன்; அழுந்தூர் மேற்றிசை நின்றவம்மானே! நீயோ விரோதிகளைப் போக்கி ஆச்ரிதரை ரக்ஷிப்பதைத் தன்பேறாக நினைக்கும்படியான பரிசுத்தியை யுடையையாயிருக்கின்றாய்; இந்த நிலைமைக்குக் கொடிகட்டி வாழ்கின்றாய்; அடியவர்களோடு நித்ய ஸம்ச்லேஷம் பண்ணியிருப்பதே உனக்குத் தொழில் என்பது விளங்க அடியவர்களில் தலைவனை திருவனந்தாழ்வானை விட்டுப் பிரியாதிருக்கின்றாய்; அடியவர்கட்குப் புருஷகாரம் செய்யவல்ல பிராட்டியிடத்தில் மால் கொண்டிருக்கின்றாய்; நீ இப்படிப்பட்டவனான பின்பு என்னுடைய காரியம் நீ செய்யவேண்டுமத்தனையல்லது நான் செய்வதொன்றறியேன்; நீ தானும் மிகையாகச் செய்யவேண்டுவதொன்றுமில்லை; ஐயோவென்று திருவுள்ளத்திலே சிறிது இரங்கியருளினாற் போதுமானது என்கிறார்.

தீவாய் நாகணை=1. "ஆங்கார வாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்கிறபடியே பகவத் விரோதிகள் யாரேனும் வந்து புகுந்தார்களோ வென்று அஸ்தாநே பயசங்கை பண்ணி விஷாக்நியைக் கக்குவதே தொழிலாயிருப்பனும் ஆதிசேஷன்.

நாக+அணை, 'நாகவணை' என்றாக வேண்டுவது 'நாகணை' என்றானது தொகுத்தல் விகாரம். .... .... .... .... (௯)

அன்னமன்னு பைம்பூம்பொழில் சூழ்ந்த
அழுந்தூர் மேல்திசைநின்ற வம்மானை *
கன்னிமன்னு திண்டோள் கலிகன்றி
ஆலிநாடன் மங்கைக்குலவேந்தன் *
சொன்னவின்தமிழ் நன்மணிக்கோவை
தூயமாலை யிவைபத்தும்வல்லார் *
மன்னிமன்னவரா யுலகாண்டு
மானவெண்குடைக்கீழ் மகிழ்வாரே. (௧௦)

| | |
|---|---|
| அன்னம் மன்னு | அன்னப்பறவைகள் பொருந்திவாழ்கிற |
| பை பூ பொழில் சூழ்ந்த | பரந்த பூஞ்சோலைகளாற் சூழப்பட்ட |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| மேல் திசை நின்ற | மேலைத்திக்கில் எழுந்தருளியிருக்கின்ற |
| அம்மானை | எம்பெருமானைக்குறித்து,— |
| கன்னி மன்னு திண் தோள் | ஒருநாளு மழியாத மிடுக்கையுடைய தோள்களையுடையராய் |
| ஆலி நாடன் | திருவாலிநாட்டுக்குத் தலைவராய் |
| மங்கை | திருமங்கையிலுள்ளார்க்கு |
| குலம் வேந்தன் | குலக்கிரமமாகவந்த ராஜாவான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| சொன்ன | அருளிச்செய்த |
| இன் தமிழ் | மதுரமான தமிழ்ப்பாஷையிலாகிய |
| நல் மணி கோவை | நல்ல ரத்னமாலை போலச் சிறந்த |
| தூய மாலை இவை பத்தும் | பரிசுத்தமான இந்தச் சொல்மாலைகள் பத்தையும் |
| வல்லார் | ஓதியுணருமவர் |
| மன்னவர் ஆய் | பிரபுக்களாய் |
| மன்னி | நெடுநாள் வாழ்ந்து |
| உலகு ஆண்டு | லோகங்களை அரசாட்சி செய்து கொண்டு |
| மானம் | பெரிய |
| வெண் குடை கீழ் | வெண்குடை நிழலிலே இருந்து |
| மகிழ்வார் | மகிழப்பெறுவர். |

* * *—அன்னப்பறவைகள் நித்யவாஸம் பண்ணுகிற பூக்கள் நிறைந்த சோலைகளாற் சூழப்பட்ட திருவழுந்தூரில் மேலைத் திசையில் நின்றதிருக்கோலமாக ஸந்நிதி பண்ணியிருக்கும் ஆமருவியப்பன் விஷயமாகத் திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இத்திருமொழியை ஓதி யுணரவல்லவர்கள் இஹலோக

1. நான்முகன் திருவந்தாதி.

ஸம்பத்திலும் குறைவற்றிருப்பர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. .... .... .... .... .... (௧0)

அடிவரவு:—திருவுக்கும் பந்தார் நெய் பானே விண்டான் தோயா கறுத்து நெடியானே கோவாய் அன்னம் செங்கமலம்.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—எட்டாந்திருமொழி,

# செங்கமலத்திருமகளும்.

உரையவதாரிகை:—பஞ்சேந்திரியங்களின் வலிமையை நினைந்து அஞ்சிக் கலங்கிய ஆழ்வார் கீழ்த்திருமொழியில் எம்பெருமானைக் குறித்து ஓலமிட, அவன் 'நீர் இங்ஙனே கூப்பிடுகிறதென்? பிரமன் முதலியோரும் தமது ஆபத்தை அறிவிக்கும்போது அக்கரையில் நின்று கூப்பிடுமாறு அவர்கட்கும் கிட்டவொண்ணாதபடி பாற்கடலிற் பள்ளிகொள்ளுகின்ற நாம் உமது குறையைத் தீர்க்கைக்காகவன்றோ திருவழுந்தூரில் வந்து நின்றோம்' என்று தனது நிலையைக் காட்டிக்கொடுக்க; அதனை யநுஸந்தித்து த்ருப்தராய்ப் பிறரைப்பார்த்து 'இவனல்லது ஆச்ரயணியனில்லை; எல்லாரும் இவனையே ஆச்ரயித்து உய்யப்பாருங்கோள்' என்று உபதேசிக்கிறார் இத்திருமொழியில். (பாசுரந்தோறும் 'காண்மின்' என்றது உபதேச ஸூசகம்.) .... .... .... *

செங்கமலத் திருமகளும் புவியும் செம்போன்
திருவடியி னிணைவருட முனிவரேத்த *
வங்கமலி தடங்கடலு ளநந்தனென்னும்
வரியரவி னணைத்துயின்ற மாயோன் காண்மின் *
எங்குமலி நிறைபுகழ் நால்வேதமைந்து
வேள்விகளும் கேள்விகளு மியன்றதன்மை *
அங்கமலத்தயனனையார் பயிலுஞ்செல்வத்து
அணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௧)

(உலகத்தவர்களே!)

| | |
|---|---|
| எங்கும் மலி நிறை புகழ் நால் வேதம் | எவ்விடத்திலும் நிறைந்து பரவிய கீர்த்தியை யுடைய நான்கு வேதங்களும் |
| ஐந்து வேள்விகளும் | பஞ்சமஹாயஜ்ஞங்களும் |
| கேள்விகளும் | (மற்றும் இன்றியமையாத) நூற்கேள்விகளும் (ஆகிய இவற்றை) |
| இயன்ற | இயற்கையாகவே அறிந்துள்ள |
| தன்மை | குணத்தையுடையராய் |
| அம் கமலத்து அயன் அனையார் | (எம்பெருமானுடைய) அழகிய நாபீகமலத்தில் தோன்றியவனாகிய பிரமனையொத்தவரான அந்தணர்கள் |
| பயிலும் | நித்யவாஸஞ் செய்கிற |
| செல்வத்து | சிறப்பையுடைய |
| அணி | அழகிய |
| அழுந்தூர் | திருவழுந்தூரில் |
| நின்று | வந்துநின்று |
| உகந்த | (அத்தலத்தில் வாழ்க்கையையே பெரும் பேறாக நினைத்து) அகமகிழ்கின்ற |
| அமரர் கோ | நித்யஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமான் (யாவனென்னில்,) |
| செம் கமலம் திரு மகளும் | செந்தாமரைமலரில் வாழ்கின்ற ஸ்ரீதேவியும் |
| புவியும் | பூமிதேவியும் |
| செம் பொன் திரு அடியின் இணை வருட | (தனது) சிவந்தபொன்மயமான இரண்டுதிருவடிகளையும் தடவவும் |
| முனிவர் எத்த | மஹர்ஷிகள் புகழ்ந்து துதிக்கவும் |
| வங்கம் மலி தட கடலுள் | அலைகள்நிரம்பிய பெரிய திருப்பாற்கடலில் |
| அனந்தன் என்னும் வரி அரவின் அணை | திருவனந்தாழ்வானென்கிற—புள்ளிகளையுடைய ஸர்ப்பசயனத்தில் |
| துயின்ற | (பள்ளிகொண்டு) யோக நித்திரைசெய்கின்ற |
| மாயோன் | ஆச்சரியமான குணமுடையவன்; |
| காண்மின் | காணுங்கள். |

* * *—திருப்பாற்கடலிற் பாம்பணையிற் பள்ளிகொள்ளுகின்ற வ்யூஹ மூர்த்தியே திருவழுந்தூரில் அர்ச்சாவதார ரூபியாய் எழுந்தருளியுள்ள தேவாதி தேவனுவன் என்கிறார். ஸ்ரீதேவியும் பூதேவியுமான இரண்டு மனைவியரும் திருவடிவருடவும் ஸநகர் முதலிய தேவரிஷிகள் துதிக்கவும் எம்பெருமான் பாற்கடலில் யோகநித்திரை யமர்கின்றனனென்க.

திரு மகள்—செல்வத்திற்கு உரிய மகள்; லக்ஷ்மி. வங்கம்—'ஸம்ரு:' என்ற வடசொல்லின் சிதைவு: "ஸம்ருஸாம்ரு ஊர்மிர்வா" என்பது அமர கோசம். இனி, வங்கம் என்பதற்கு மரக்கலம் என்ற பொருளு முண்டு. அநந்தன்=எக்காலத்தும் அழிவில்லாதவன். இப்பெயர் ஆதிசேஷனுக்கு முண்டு, திருமாலுக்கு முண்டு; "அநந்த னென்னும் மாயோன்" என்று அந்வயித்துப் பொருள் கொண்டால் திருமாலைக் குறித்ததாகும். தேசம் காலம் வஸ்து என்ற மூவகையாலும் எல்லையில்லாதவன் என்பது இத்திருநாமத்தின் பொருள்; அதாவது—'இன்னதேசத்திலுள்ளான், இன்னதேசத்திலில்லை' என்கிற பரிச்சேத மில்லாமையாலே தேச பரிச்சேத மற்றவன்; 'இன்ன காலத்திலுள்ளான்,

இன்ன காலத்திலில்லை' என்கிற பரிச்சேத மில்லாமையாலே கால் பரிச்சேத மற்றவன் ; 'இன்ன வஸ்துவைப் போலுள்ளான்' என்பதில்லாமையாலே வஸ்து பரிச்சேத மற்றவன். ('இன்ன வஸ்துவாக உள்ளான், இன்ன வஸ்துவாக இல்லை' என்பதில்லாமையாலே வஸ்து பரிச்சேத மற்றவன் என்பது முண்டு.)

மாயோன்—மாயையை யுடையவன் ; மாயையாவது—கூடாததையுங் கூட்டு விக்குந்திறம்.

வேதங்கள் வேறொரு பிரமாணத்தை வேண்டாது ஸ்வயம் ப்ரமாண மாக நிற்குஞ் சிறப்பையுடையனவாதல்பற்றி 'எங்குமலி நிறைபுகழ் நால்வேதம்' என்றார். "எங்குமலி நிறைபுகழ்" என்ற தொடரை அயனைபார்க்கு விசேஷண மாக்கி யுரைப்பது மொக்கும்.

ஐந்து வேள்விகளாவன—ப்ரஹ்மயஜ்ஞம், தேவயஜ்ஞம், பூதயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், என்பனவாம். வேத மோதுதல் பிரமயஜ்ஞம் ; யாகஞ்செய்தல் தேவயஜ்ஞம்; பலியீதல் பூதயஜ்ஞம் ; பித்ருக்களையுத்தேசித்துத் தர்ப்பணம் விடுதல் பித்ருயஜ்ஞம் ; விருந்தினர்க்கு உணவளித்தல் மநுஷ்ய யஜ்ஞம்.

கேள்வியாவது—கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல் ; இது, கற்றவர்க்கு அக்கற்றதனாலாகிய அறிவை உறுதிப்படுத்தவும் கல்லாதவர்க்கு அவ்வறிவை உண்டாக்கவும் வல்லது. வேதம் முதலியன அவ்வூரிலுள்ள அந்தணர்களிடம் இயற்கையில் நிறைந்திருத்தலால் அவர் ஒவ்வொருவரும் பிரமனை யொத்திருப்பரென்கிறது. அன்றியே, தமது தவ வலிமையால் அவ்வூரிலுள்ள அந்தணர் ஒவ்வொருவரும் பிரமனைப் போல ஸ்ருஷ்டிக்க வல்லவரெனினுமாம். பயிலுதல்—எப்பொழுதும் நெருங்கி வஸித்தல். அணி—இந்நிலவுலகத்திற்கு ஆபரணம் போன்ற, அழுந்தூர் எனினுமாம். (க)

முன்னிவ்வுலகேழு மிருள்மண்டியுண்ண
முனிவரோடு தானவர்கள் திசைப்ப * வந்து
பன்னுகலை நால்வேதப் பொருளையெல்லாம்
பரிமுகமாயருளியவென்பரமன் காண்மின் *
செந்நெல்மலி கதிர்க்கவரிவீசச்
சங்கமவைமுரலச் செங்கமலமலரையேறி*
அன்னமலி பேடையோடு மமருஞ்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த வமரர்கோவே* (உ)

| | |
|---|---|
| செந்நெல் மலி கதிர் | செந்நெற்பயிரினது (நெல்) நிரம்பிய கதிர்கள் |
| கவரி வீச | சாமரங்கள்போல் அசைந்தாடா நிற்கவும் |
| சங்கம் அவை முரல | சங்கங்கள் ஒலியாநிற்கவும் |
| அன்னம் | ஆணன்னங்கள் |
| மலி பெடையோடும் | (தம்மிடத்தில் அன்பு) மிக்குள்ள பெண்ணன்னங்களுடனே |

| | | | |
|---|---|---|---|
| செம் கமலம் மலரை ஏறி அமரும் | செந்தாமரைமலர்களின்மீது ஏறிவீற்றிருக்கப் பெற்ற | (அப்பொழுது) | |
| செல்வத்து | சிறப்பையுடைய | வந்து | திருப்பாற்கடலினின்று திருவவதரித்து |
| அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; | | பன்னு | பரவிய |
| (யாவனென்னில் ;) | | கலை | (அங்கங்களாகிய) சாஸ்திரங்களையுடைய |
| முன் | முற்காலத்தில் | நால் வேதம் | நான்குவேதங்களினது |
| இ எழ் உலகும் | இந்த ஏழுலகங்களையும் | பொருளை எல்லாம் | அர்த்தங்களையெல்லாம் |
| இருள் | (அஜ்ஞானமாகிற) அந்தகாரமானது | பரி முகம் ஆய் | ஹயக்ரீவமூர்த்தியாய் |
| மண்டி உண்ண | மிகுந்து தன்வசமாக்கிக் கொள்ள | அருளிய | மீட்டுக்கொணர்ந்தருளிய |
| (அதனால்) | | எம் பரமன் | நமது சிறந்த கடவுளாவன். |
| முனிவரொடு தானவர்கள் திசைப்ப | முனிவர்களும் அசுரர்களும் அறிவுகெட்டுக்கலங்க, | | |

* * *—திருவழுந்தூரி லெழுந்தருளியுள்ள எம்பெருமானைப் பாற்கடலிற் பள்ளி கொண்டிருக்கின்ற பரமனாகக் கீழ்ப்பாசுரத்தில் அநுஸந்தித்த ஆழ்வார், இப்பாசுரத்தில், அத்திருப்பாற்கடலினின்று அவதரித்து வேதப்ரதானம் பண்ணின ஹயக்ரீவனாக அநுஸந்திக்கிறார்.

ஞானதீபத்திற்கு முதல் துணையான வேதங்களை யிழந்ததனால் எல்லாவுலகங்களும் அஜ்ஞாநாந்தகாரத்தால் மழுங்கவும், அவற்றிலுள்ள முனிவர் முதலியோர் திகைக்கவும் நேர்ந்த தென்க. வேதங்கள்—சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என்னும் ஆறு அங்கங்களை யுடைமையால் 'பன்னு கலை நால்வேதம்' எனப்பட்டது. குதிரையின் முகத்தையுடைய எம்பெருமானை 'பரிமுகம்' என்றார்; இலக்கணை. ராஜசிஹ்நமாகிய வெண்சாமரை வீசவும் வாத்தியங்கள் ஒலிக்கவும் ஓரரசன் தனது பட்டமஹிஷியுடனே சிங்காசனத்தின் மீது வீற்றிருத்தல் போல, இத்திருப்பதியில், செந்நெற் கதிர்களாகிய சாமரைகள் வீசவும் சங்கங்கள் முழக்கவும் அன்னப்பறவைகள் தமது பேடைகளுடனே செந்தாமரை மலர்களில் ஏறி வீற்றிருக்கு மென்பது பின்னடிகளிற் கூறிய வருணனையின் கருத்து.

ஏழுலகு—பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மஹாலோகம் ஜநலோகம் தபோலோகம் ஸத்யலோகம் என்னும் மேலேழுலகங்கள். திசைத்தல் எனினும் திகைத்தல் எனினும் ஒக்கும். மூன்றாமடியில் "கதிர்கவரி" என்று பாடமின்றியே "கதிர்க்கவரி" என்று பாடமாயின், 'செந்நெற் பயிர்களானவை தமது கதிர்களாகிய கவரியை வீச' என்று பொருள் காண்க. சங்கம்—நீர்வாழுயிர்களிலொன்று. .... .... .... .... . (உ)

குலத்தலைய மதவேழம் பொய்கைபுக்குக்
கோள்முதலை பிடிக்கவதற் கனுங்கிநின்று *
நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதீ! என்ன
நெஞ்சிடர் தீர்த்தருளியவென் நிமலன்காண்மின் *
மலைத்திகழ்சந்தகில் கனகமணியுங்கொண்டு
வந்துந்தி வயல்கள்தோறும் மடைகள்பாய *
அலைத்துவரும் பொன்னிவளம் பெருகுஞ்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த வமரர்கோவே. (௫)

| | |
|---|---|
| மலை | ஸஹ்யமலையினிடத்து |
| திகழ் | பொருந்திவிளங்குகின்ற |
| சந்து | சந்தன மரங்களையும் |
| அகில் | அகிற்கட்டைகளையும் |
| கனகம் | பொன்னையும் |
| மணியும் | ரத்னங்களையும் |
| கொண்டு வந்து | திரட்டிக்கொணர்ந்து |
| உந்தி | தள்ளி |
| வயல்கள் தோறும் | கழனிகளிலெல்லாம் |
| மடைகள் | நீர்பாயும் வழிகளிலே |
| பாய | பாய்ந்து செல்லும்படி |
| அலைத்து வரும் | அலையெறிந்து கொண்டு வாராநின்றுள்ள |
| பொன்னி | காவேரியினால் |
| வளம் பெருகும் | செழிப்பு மிகப்பெற்ற |
| செல்வத்து | சிறப்பையுடைய |

அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; (யாவனெனில்;)

| | |
|---|---|
| குலம் தலைய மதம் வேழம் | நல்லசாதியிற்பிறந்த யானைகட்குள்ளே தலைமையையுடைய மதங்கொண்ட கஜேந்திராழ்வான் |
| பொய்கைபுக்கு | தடாகத்திலிறங்கினபோது |
| கோள் முதலை பிடிக்க | வலிமையையுடைய முதலை யானது (தன்னைப்) பிடித்திழுத்ததனால் |
| அதற்கு அனுங்கி நின்று | அம்முதலைக்கு அஞ்சிநின்று |
| நில திகழும் | நிலாவிளங்குகின்ற |
| மலர் | பாவுதலையுடைய |
| சுடர் | சந்திரனை |
| ஏய் | ஒத்த |
| சோதீ | குளிர்ந்த ஒளியை [தண்ணளியை] யுடையவனே! |
| என்ன | என்று ஓலமிட்டுத் துதிக்க, |
| நெஞ்சு இடர் தீர்த்து அருளிய | (அந்தக்கஜேந்திரனது) மனத்துன்பத்தை நீக்கியருளிய |
| எம் நிமலன் | எமது குற்றமற்ற கடவுளாவன். |

* * *—இப்பாசுரத்தில் அஜ்ஞாநம்போம்படி வேதப்ரதாநம் பண்ணிய படியை அருளிச்செய்த ஆழ்வார், அந்த வேதத்தின் முக்கிய தாத்பர்யமான கைங்கரியத்தைச் செய்கையில் அதற்கு நேரும் இடையூறுகளை யொழித்து அக்கைங்கரியத்தைத் தானே கைக்கொண்டருளுமவன் எம்பெருமானென்பதை உணர்த்துமாறு ஸ்ரீ கஜேந்திராழ்வானது வரலாற்றை இப்பாசுரத்தில் உபதேசிக்கின்றாரென்க.

"குலத்தலைய மதவேழம்" "நிலத்திகழும்" மலர்ச்சுடரேய்" என்ற பாடங்களே வியாக்கியானத்திற்கு மிகப்பொருத்தமான பழைய பாடங்கள். "கோலைத்தலைய"

என்றும் "நிலைத்திகழும் மலர்ச்சுடரே" என்றும் சிலர் ஓதுவர்; நான்கு அடிகளிலும் எதுகையில் லகாரம் வருதல் நன்று என்பர். இப்பாடத்திற்கு, கொலைதலைய—கொல்லுதல் தொழிலைத் தன்னிடத்தே யுடைய என்று பொருள்: "கோடு கைம் முதலா வொன்பதுறுப்பினுங் கோறல் வல்ல, நீடுயர் மா" என்றபடி யானை கால்கள் நான்கு துதிக்கை யொன்று தந்தம் இரண்டு மஸ்தகம் ஒன்று வால் ஒன்று என்னும் ஒன்பது உறுப்புக்களினாலும் கொல்லுந் தன்மையதாதல் அறிக. நிலை திகழும் மலர் சுடரே = நிலைபாக விளங்குகின்ற பரவுதலையுடைய ஒளிவடிவ மானவனே! என்றபடி.

கோள் முதலை-மலையொத்த யானையையும் தன்னிலமான நீரிலே யிழுத்துச் செல்லும் பேராற்றலமைந்த முதலை என்கை. நிமலன்—ஒரு குற்றமும் தன்னிடத்தில் பற்றப் பெறுதவன்.

நில—நிலா; "குறியதன்கீழ் ஆக்குறுகலும்" என்பது நன்னூல்.

[மலைத்திகழ் இத்யாதி.] ஸஹ்ய பர்வதத்தினின்று உத்பத்தியாகிப் பெரு வெள்ளமாய்ப் பெருகிவரும் விசையில் குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய சந்தனம் முதலியவற்றைப் புரட்டி யடித்துக் கொண்டுவருங் காவேரி தான் கொணர்ந்து வரும் சந்தனம் முதலியவைகள் கழனிகளில் நீர்மடை வழியாகப் பாய்தலினால் மிக்க வளத்தை யுண்டாக்கிப் பெருஞ்சிறப்பை இத் திருவழுந்தூர்க்கு விளைக்குமென்க. "மலைத்தலைய கடற்காவிரி, புனல் பரந்து பொன் கொழிக்கும்" என்கிறபடியே தான் பெருகும் பொழுது பொன்னைக் கொழித்துக் கொண்டு வருதலால் காவேரிக்குப் பொன்னியென்று பெயர். இ—உடைமைப் பொருள் காட்டும் பெண்பால் விகுதி. எம்பெருமான் தான் பெருந்துயரத்தினால் வருந்துகின்ற அன்பருள்ள விடங்களிற் சென்று பாதுகாப்பது போலவே இக்காவேரியின் வெள்ளமும் வேண்டுமிடங்களிலெல்லாம் வந்து பாயுமென நயந்தோன்றுமாறு இங்கு அருளிச் செய்யப்பட்டுள்ளமை உய்த்துணரத் தக்கது. .... .... .... .... .... (ங)

சிலம்புமுதல் கலனணிந்தோர் சேங்கண்குன்றம்
திகழ்ந்ததெனத் திருவுருவம் பன்றியாகி *
இலங்குபுவி மடந்தைதனை யிடந்துபுல்கி
எயிற்றிடை வைத்தருளியவெம் மீசன் காண்மின் *
புலம்புசிறை வண்டோலிப்பப் பூகம்தோக்க
பொழில்கள்தோறும் குயில்கூவ மயில்களால *
அலம்புதிரை புனல்புடைசூழ்ந்தழகார்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த வமரர்கோவே. (ச)

| | | | |
|---|---|---|---|
| பூகம் தொக்க | பாக்குமரங்கள் நிறைந்துள்ள | சிறை புலம்பு வண்டு ஒலிப்ப | சிறகுகளையுடையனவாய் ரீங்காரஞ்செய்யுந்தன்மையனவான வண்டுகள் ஒலிக்கவும் |
| பொழில்கள் தோறும் | சோலைகளிலெங்கும் | | |

| | |
|---|---|
| குயில் கூவ | குயில்கள் கூவவும் |
| மயில்கள் ஆல | மயில்கள் கூத்தாடவும் |
| அலம்பு திரை புனல் புடை சூழ்ந்து | அலைகின்ற அலைகளையுடைய காவிரியின் நீரானது பக்கங்களிலே சுற்றிப்பாய்தலினால் |
| அழகு ஆர் | அழகு மிக்கிருக்கின்ற |
| செல்வத்து | சிறப்பையுடைய |
| அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; (யாவனெனில் ;) | |
| செம் கண் ஓர் குன்றம் | சிவந்த கண்களையுடையதொரு மலை |
| சிலம்பு முதல் கலன் அணிந்து | தண்டைமுதலிய ஆபரணங்களைப் பூண்டு |
| திகழ்ந்தது என | விளங்குவதுபோல |

| | |
|---|---|
| திரு உருவம் பன்றி ஆகி | மஹாவராஹரூபியாய், |
| இலங்கு புவி மடந்தை தனை | விளங்குகின்ற பூமிப்பிராட்டியை |
| இடந்து | (அண்டபித்தியினின்றுங் கோட்டாற்) குத்தியெடுத்து |
| புல்கி | அணைந்து |
| எயிற்றிடை | (தனது) கோரதந்தத்தினிடத்தில் |
| வைத்து அருளிய | வைத்தருளினவனான |
| எம் ஈசன் | எமது தலைவனானவன். |

* * *—கீழ்ப்பாட்டில் "நிலத்திகழும் மலர்ச்சுடரேய் சோதி!" என்று பெருமிடறுசெய்து கூப்பிட வந்து உபகரித்தவனென்றீர்; ஸம்ஸார ப்ரளயங் கொண்டிருக்கிற எங்களுக்கு அங்ஙன் கூப்பிடக் கூடுமோ? என்னும் சங்கையிலே, 'பிரளயத்திலகப்பட்டுக் கூப்பிட வறியாத பூமியை யெடுத்தாற்போலே நம்மையும் எடுக்கவல்லவன் கிடீர்' என்று வராஹ வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்கிறார் இப்பாசுரத்தில்.

"சிலம்பு முதற்கலனணிந்தோர் செங்கட் குறதம்" என்றது மஹா வராஹத்துக்கு அபூதோபமை [இல்பொருளுவமை]யாம். "செங்கற்குன்றம்" என்றபாடமே வியாக்கியானத்திற்கு இணங்கியது. சிவந்த ரத்னங்களையுடைய மேருமலையென்று பொருள். கலன்—கலம் என்பதன் ஈற்றுப்போலி.

பின்னடிகள் இத்தலத்தின் நிலவள நீர்வளங்களைக் காட்டும். ஆலுதல்—ஆரவாரித்தலுமாம். .... .... .... .... (ச)

சினமேவு:மடலரியி னுருவமாகித்
திறல்மேவு மிரணியன தாகங்கீண்டு *
மனமேவு வஞ்சனையால் வந்தபேய்ச்சி
மாளவுயிர்வேளவியவெம்மாயோன் காண்மின் *
இனமேவு வரிவளைக் கையேந்துங்கோவை
யேய்வாயு மரகதம்போல் கிளியினின்சொல் *
அனமேவு நடைமடவார் பயிலும்செல்வத்து
அணியழுந்தூர்நின்றுகந்த வமரர்கோவே. (ரு)

| | |
|---|---|
| இனம் மேவு வரி வளை கை ஏந்தும் | கூட்டமாக அணியப்பெற்ற கோடுகளை யுடைய வளையல்களை யணிந்த (தமது) கைகளிலே ஏந்தப் பெற்றதும் |
| கோவை ஏய் வாய | கொவ்வைக்கனியை யொத்த வாயையுடையதும் |
| மரகதம் போல் | மரகதரத்னம் போலப் பச்சை நிறமுடையதுமான |
| கிளியின் | கிளியைப்போன்ற |
| இன் சொல் | மதுரமான சொற்களையும் |
| அனம் மேவும் நடை | அன்னப்பேடை போன்ற நடையழகையுமுடைய |
| மடவார் | இளமகளிர் |
| பயிலும் | மிகுதியாகப் பொருந்தப் பெற்ற |
| செல்வத்து | சிறப்பையுடைய |

அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ-;

(யாவனெனில் ;)

| | |
|---|---|
| சினம் மேவும் அடல் அரியின் உருவம் ஆகி | மிக்க சீற்றங்கொண்டுள்ள வலிய நரசிங்க மூர்த்தியாய் |
| திறல் மேவும் இரணியனது ஆகம் கீண்டு | மிக்க பராக்ரமமமைந்த ஹிரண்யாஸுரனது மார்பைப் பிளந்து |
| மனம் மேவு வஞ்சனையால் வந்த | மனத்திற்கொண்டுள்ள வஞ்சகக்குணத்தோடு (தன்னைக்கொல்ல) வந்த |
| பேய்ச்சி | பூதனையென்னும் பேய்மகள் |
| மாள | இறக்கும்படி |
| உயிர் வெளவிய | (அவளது) உயிரைக் கவர்ந்த |

எம் மாயோன் காண்மின்—.

* * *—கஜேந்திராழ்வானைப் போல அநுகூலராகாமலும் ஸ்ரீ பூமிப்பிராட்டியைப்போல ஒருவகையான நெருங்கிய உறவுமுறையில்லாமலு மிருத்தலோடு அவனை அணுகுதற்குக் கூடாதபடி. விரோதியான தீவினையு மிருக்கின்ற எங்களை அவ் வெம்பெருமான் எவ்வாறு பாதுகாப்பன்? என்று ஒரு ஆசங்கை தோன்ற, ஹிரண்யாஸுரனது வரலாற்றைக் கூறும் முகத்தால் இந்தப் பாசுரத்தில் விரோதி நிரஸநசீலன் அவ் வெம்பெருமான் என்று எடுத்துக்காட்டுகின்றாரென்க.

ஸர்வரக்ஷகனும் பரமதயாளுவுமான எம்பெருமான் தனது அடியவனான ப்ரஹ்லாதன் பக்கலிலே இரணியன் செய்த கொடுமைகளைக் கண்டு பொறுக்க மாட்டாமல் பெருஞ்சீற்றத்தையும் அதற்கு ஏற்றவாறு பெருவலிமையையுங் கொண்டு நரசிங்கமாகத் திருவவதரித்தன னென்பார் "சினமேவு மடலரியி னுருவமாகி" என்றும், அந்த நரசிங்கத்தின் வெருவத்தக்க வுருவத்தைக் கண்டும் பிற்காலியாத மிடுக்கை யுடையவன் இரணியனென்பார் "திறல் மேவு மிரணியன்" என்று மருளிச் செய்தார். அரி—ஹரி என்ற வடசொற் சிதைவு. (யானை முதலிய 'பெரிய பிராணிகளையும்) அழிக்கவல்லதென்று சிங்கத்திற்கு காரணப்பெயர். "ஸத்வஸ்ய மாத்ருஸ்ஸிம்ஹஃ ப்ரதாநம்" என்றபடி உறுப்புக்களெல்லாவற்றினுஞ் சிறந்ததான தலை சிங்கத்தின் தலையாக அமைந்திருத்தல் பற்றி நரசிங்கத்தை 'அரி' என்றே கூறினர்.

பூதனை, தன் கொடுமையை வெளிக்காட்டாது மனத்திலே கொண்டு அன்பு மிக்க தாய் வடிவத்தோடு வந்தவளாதலால் "மனமேவு வஞ்சனையால் வந்த பேய்ச்சி" என்றார்.

கிளியைப்போன்ற இன் சொல்லையும் அன்னப்பேடை போன்ற மென்ன டையையுமுடைய மடவார் நிறைந்துள்ளது திருவழுந்தூரென்பது பின்னடிகளிற் கூறியது. கிளியின் சிவந்த வாய்க்குக் கொவ்வைப்பழமும், மேனியின் பசு நிறத் துக்கு மரகத ரத்னமும் உவமையாம். அனம்—அன்னம் என்பதன் தொகுத் தல். மடவார்—மடப்பத்தை யுடையவர்; மடப்பமாவது—அறிந்தும் அறியா தது போலிருத்தல். .... .... .... .... (ரு)

வானவர்தம் துயர்தீர வந்துதோன்றி
மாணுருவாய் மூவடி மாவலியைவேண்டி*
தானமர வேழுலகு மளந்தவென்றித்
தனிமுதல் சக்கரப்படையென்தலைவன்காண்மின்*
தேனமரும் பொழில்தழுவு மெழில்கொள்வீதிச்
செழுமாட மாளிகைகள் கூடந்தோறும்*
ஆனதொல்சீர் மறையாளர் பயிலுஞ்செல்வத்து
அணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (சு)

| | |
|---|---|
| தேன் அமரும் | தேன் எப்போதும் பொருந்தியுள்ள |
| பொழில் தழுவும் | சோலைகளாற்சூழப்பட்ட |
| எழில் கொள் | அழகைக்கொண்ட |
| வீதி | தெருக்களிலேயுள்ள |
| செழு மாடம் மாளிகைகள் | செழித்த உபரிகை வீடுகளிலும் சிறந்த வீடுகளிலும் |
| கூடம் தோறும் | மற்றுமுள்ள இடங்களிலும் |
| ஆன தொல் சீர் மறையாளர் பயிலும் | கல்வி யொழுக்கங்களாற் சிறப்புப் பொருந்திப் பழமையான கீர்த்தியை யுடைய வேதம்வல்ல அந்தணர்கள் நெருங்கி வஸிக்கப்பெற்ற |
| செல்வத்து | சிறப்பையுடைய |
| அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; | |
| (யாவனென்னில் ;) | |
| வானவர் தம் | தேவர்களுடைய |
| துயர் தீர | வருத்தம் நீங்கும்படி |
| வந்து தோன்றி | (வாமனனாய்) வந்து அவதரித்து |
| மாண் உரு ஆய் | பிரமசாரியாய் |
| மா வலியை மூ அடி வேண்டி | மஹாபலியினிடத்தில் மூன்றடி நிலத்தை வேண்டிப்பெற்று |
| (அவனாற் கொடுக்கப்பட்டவுடனே) | |
| தான் | தானே |
| அமர | (தனது காலடியின் கீழ்) அடங்கும்படி |
| ஏழ் உலகமும் அளந்த | கீழேழ் மேலேழ் என்னும் எல்லா வுலகங்களையும் அளந்து தனதாக்கிக்கொண்ட |
| வென்றி தனி முதல் சக்கரம் படை | வெற்றியையுடையதும் ஒப்பற்றதும் (ஆயுதங் களிற்) பிரதானமுமான சக்கராயுதத்தைக் கையிலேந்திய |
| எம் தலைவன் | எமது ஸ்வாமியாவன். |

* * *—கீழ்ப்பாட்டினால் எம்பெருமான் விரோதி நிரஸந சீலனென்று ஏற் படினும், அந்த எம்பெருமானைத் தவிர வேறு விஷயங்களிற் பற்றுக் கொண் டேனை எங்களை அவன் பாதுகாத்தருள்வனோ? என்று ஒரு ஆசங்கை தோன்ற,

ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களின் காரியத்தைத் தலைக்கட்டுகைக்காகத் தன்னை இரப்பாள [யாசக]னாக்கிய சிறந்த சீலகுணமுடையவனாகையால் அவன் ப்ரயோஜநாந்தரபரரான உங்களையும் பாதுகாப்பனென்று தெரிவித்தற்காக வாமநாவதாரவ்ருத்தாந்தத்தைக் கூறுகின்றார் இப்பாட்டில்.

வானவர்க்கு நேர்ந்த துயராவது—மூவுலகங்களையும் மஹாபலி சக்ரவர்த்தி கையிற் பறிகொடுத்து அரசிழந்தமையாலானது. மாணுரு—'மாணியுரு' என்பதன் விகாரம். அன்றியே, மாணுரு—மாட்சிமை தங்கிய உரு என்றுமாம்; இவ்வுருவத்துக்கு மாட்சிமையாவது—"ஆலமர்வித்தினருங் குறளானான்" என்கிறபடியே மூவுலகத்தையும் ஈரடியிலே அடக்கவல்ல பேருருவத்தைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருத்தல்: தானறிந்த ஸம்பந்தமே ஹேதுவாக எல்லாவுயிர்களின் முடியிலும், அவைகளறியாதே கிடக்கையிலும் தானாக அடிவைத்து அவற்றை ஆட்கொண்டருளும் உதாரகுணமுமாம்.

'மூவடி' என்பதற்கு மூவடி நிலம் என்று பொருள்பட வேண்டுதலால் நீட்டலளவையாகு பெயர். தானளந்த என்றதில்—அவாப்த ஸமஸ்தகாமனான தான் தனக்கென்று ஒன்றும் வேண்டாதிருக்கையிலும் துரபிமானிகளாய் ப்ரயோஜநாந்தரபரர்களான தேவர்களின் துயரத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமையாலே தானே நேரிற் சென்று இரந்து அளந்த எம்பெருமானது கருணைத்திறமும் பரத்வமும் ஸௌலப்யமும் விளங்கும்.

மண்டபம் முதலிய எல்லா விடங்களிலும் வேதமோதிய அந்தணர் நிறைந்து பழகுஞ் சிறப்பு வாய்ந்தது திருவழுந்தூரென்பன பின்னடிகள். (௬)

பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப்
பகலவன்மீ தியங்காத விலங்கைவேந்தன் *
அந்தமில்திண் கரஞ்சிரங்கள் புரண்டுவீழ
அடலணையா லெய்துகந்த வம்மான்காண்மின் *
செந்தமிழும் வடகலையும் திகழ்ந்தநாவர்
திசைமுகனை யனையவர்கள் * செம்மைமிக்க
அந்தணர்த மாகுதியின் புகையார்செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர்கோவே. (௭)

| | |
|---|---|
| செம் தமிழும் | செவ்விய தமிழ்ப் பாஷையும் |
| வட கலையும் | ஸம்ஸ்க்ருத பாஷையும் |
| திகழ்ந்த | விளங்குகின்ற |
| நாவர் | நாக்கையுடையவர்களும் |
| திசைமுகனை அனையவர்கள் | (தனித்தனி) பிரமனையொத்தவர்களுமான |
| செம்மைமிக்க அந்தணர் தம் | நற்குணங்கள் நிறைந்த ப்ராஹ்மணர்களது |

| | |
|---|---|
| ஆகுதியின் புகை ஆர் | ஹோமஞ் செய்வதனால் தோன்றுகின்ற புகை நிரம்பப்பெற்றன்ன |
| செல்வத்து | சிறப்பையுடைய |
| அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; (யாவனென்னில்;) | |
| பந்து அணைந்த மெல் விரலாள் சீதைக்கு ஆகி | பந்து பொருந்திய மெல்லிய கைவிரல்களையுடைய சீதையின் நிமித்தம், |

| | | | |
|---|---|---|---|
| மீது பகலவன் இயங்காத இலங்கை வேந்தன் | (தனக்கு நேராக) மேலிடத்திலே (அச்சத்தினால்) ஸூர்யனும் ஸஞ்சரிக்க மாட்டாத இலங்கைக்கு அரசனான இராவணனது | புரண்டு வீழ | (அறுபட்டுக்) கீழ் விழுந்து புரளும்படி. |
| | | அடு கணையால் | கொல்லுந்தன்மையுள்ள அம்பினால் |
| | | எய்து | பிரயோகித்து |
| அந்தம் இல் திண் கரம் சிரங்கள் | அழிவில்லாத வலிய தோள்களும் தலைகளும் | உகந்த | மகிழ்ந்த |
| | | அம்மான் | தலைவனவன். |

* * *—எம்பெருமான் ப்ரயோஜநாந்தரபரர்களிடத்து அன்புகொண்டு தன்னை யாசகனுக்கியும் அவர்கள் தொழிலைச்செய்து முடிக்கைக்கு ஹேது எதென்ன, பிராட்டியினிடத்தில் மிக்க அன்புகொண்டிருத்தல் போலவே சேதநரெல்லாரிடத்திலும் மிக்க அன்புகொண்டிருப்பதே ஹேது என்று தெரிவித்தற்காக, அப்பிரான் பிராட்டியைச் சிறையினின்று மீட்பதன்நிமித்தம் ராவணஸம்ஹாரஞ் செய்தவரலாற்றைக் கூறுகின்றார் இப்பாசுரத்தில்.

சீதை—'ஸீதா' என்ற வடசொல்லின் விகாரம்; அச்சொல்லுக்கு—கலப்பையுழுபடைச்சால் என்று முதலிற் பொருள். ஜநகமஹாராஜன் யாகஞ் செய்தற்குச் சாலையமைத்தற்பொருட்டு நிலத்தையுழுதபொழுது அப்படைச்சாலினின்று தோன்றியவளாதலால் பிராட்டிக்குச் சீதையென்று பேராயிற்று: இடவாகு பெயராகிய காரணக்குறி. இத்திருநாமம்—இவள் மற்றையோர் போல ஒரு தாயின்வயிற்றினின்று பிறந்தவளல்லளெனப் பிராட்டியினது அயோநிஜத்வமாகிய திருவவதாரச்சிறப்புத் தோன்றநின்றது. சீதைக்காகி என்றது—சீதையைச்சிறையினின்று மீட்பதற்காக என்றபடி.

இராவணனிடத்து அச்சத்தால் மற்றையிடங்களிற்போலச் சூரியன் தனது வெப்பத்தோடு செல்லுதற்கு அஞ்சி ஒடுங்கிச் செல்வனென்னுங்கருத்தால் "பகலவன் மீதியங்காத விலங்கை" எனப்பட்டது: "இருசுடர் மீதினிலியங்கா மும்மதிளிலங்கை" என்பர் திருவெழுகூற்றிருக்கையிலும். இராமபிரானது திருவவதாரத்திற்கு முந்தித் தம்மை யெதிர்த்தொழிப்பவரில்லாமையால் இராவணனது கரங்கள், 'அந்தமில்திண்கரம்' என்றும், பிரமாஸ்த்ரத்தினலன்றி மற்றைப்படி இராமபிரானே அறுத்துத்தள்ளவும் மீண்டும் மீண்டும் முளைத்தனவாதலால் அவனது சிரங்கள் 'அந்தமில் திண்சிரங்கள்' என்றும் கூறப்பட்டன புரண்டு வீழ—விழ்ந்து புரள; விகுதி பிரித்துக்கூட்டல். எய்து உகந்த=பாகவதவிரோதி ஒழிந்ததனாலும், தண்டகாரணியம் புகுகையில் தன்னிடத்து முறையிட்ட முனிவர்க்குத் "தான்வாக்களித்திருந்தபடி விரோதிநிரஸநஞ்செய்து அவர்கட்குக் குடியிருப்பைச்செய்து கொடுத்ததனாலும் இராமபிரான் திருவுள்ள முவந்தனனென்க.

'செந்தமிழும் வடகலையுந் திகழ்ந்த நாவர்' என்றதனால் அத்திருப்பதியிலுள்ள அந்தணர்கள் திராவிடவேதம் ஸம்ஸ்க்ருத வேதம் என்னும் இரண்டு வேதங்களிலும் வல்லவராவரென்பது தோன்றும். தமிழுக்குச் செம்மை—செவிக்கினிய

செஞ்சொல்லாயிருத்தலோடு அர்த்தத்தை நேராகக் காட்டவல்லதாயிருத்தல். ஆதிகாலத்தில் ஸம்ஸ்க்ருதம் வடதிசையில் இமயமலைப்பிராந்தத்தில் கங்காதீரத்தில் காசி முதலிய இடங்களில் விசேஷமாய் வழங்கி வந்ததனால் வடமொழியென்றும் வடகலையென்றும் வழங்கப்படுமென்ப.

ஆஹுதி—வடசொல்; அக்நியில் மந்த்ரபூர்வமாக ஹோமஞ்செய்யப்படும் நெய் முதலிய ஹவிஸ்ஸுக்கள். .... .... .... (எ)

கும்பமிகு மதவேழம் குலையக் கொம்பு
பறித்து மழவிடையடர்த்துக் குரவை கோத்து *
வம்பவிழும் மலர்க்குழலா ளாய்ச்சி வைத்த
தயிர்வெண்ணெ யுண்டுகந்த மாயோன் காண்மின் *
செம்பவள மரதகம் நன்முத்தம் காட்டத்
திகழ்பூகம் கதலிபல வளமிக்கெங்கும் *
அம்பொன்மதிள் பொழில் புடைசூழ்ந் தழகார் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர் கோவே. (அ)

| | |
|---|---|
| செம் பவளம் மரதகம் நல் முத்தம் காட்ட திகழ் பூகம் | செந்நிறமான பவழத்தையும் (பசுநிறமான) மரகத ரத்னத்தையும் (வெண்ணிறமான) முத்தையும் தம்மிடத்தில் தோற்றும்படிவிளங்குகின்ற பாக்குமரங்களும் |
| பல கதலி | பல வாழைமரங்களும் |
| வளம் மிக்கு | செழிப்புமிகுந்து, |
| எங்கும் | எல்லாப்பக்கங்களிலும் |
| அம் பொன் மதிள் பொழில் புடை சூழ்ந்து | அழகிய பொன்மயமான மதிள்களாலும் சோலைகளாலும் சுற்றிலும் சூழப்பெற்று |
| அழகு ஆர் | அதனால் அழகுநிறைந்த |
| செல்வத்து | சிறப்பையுடைய |
| அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—; | (யாவனெனில் ;) |
| கும்பம் மிகு | மஸ்தகம் பருத்திருக்கப்பெற்றதாய் |
| மதம் | மதத்தையுடைத்தான |
| வேழம் | (குவலயாபீடமென்னும்) யானை |

| | |
|---|---|
| குலைய | அழியும்படி |
| கொம்பு பறித்து | (அதன்) தந்தங்களைப் பறித்தும் |
| மழ விடை அடர்த்து | இளமையான ஏழு எருதுகளை வலியடக்கியும் |
| குரவை கோத்து | (ஆய்ச்சியரோடு) குரவைக்கூத்தாடியும் |
| வம்பு அவிழும் | நறுமணம் வீசுகின்ற |
| மலர் | மலர்களைச் சூடியுள்ள |
| குழலாள் | கூந்தலையுடையவளாகிய |
| ஆய்ச்சி | யசோதையென்னும் இடைச்சி |
| வைத்த | (உறிகளில் சேமித்து) வைத்திருந்த |
| தயிர் | தயிரையும் |
| வெண்ணெய் | வெண்ணெயையும் |
| உண்டு | புஜித்தும் |
| உகந்த | மனமகிழ்ந்திருந்த |
| மாயோன் | விசித்ரசக்தியையுடையவன். |

* * *—எம்பெருமான் பிராட்டியிடத்திற்போலவே எல்லாரிடத்திலும் அன்பு கொள்கைக்குத்தான் யாது காரணம்? என்று ஒரு சங்கை தோன்ற, ஆச்ரிதருடைய ஸம்பந்தமுள்ள பொருளையொழியப் பொழுது போக்கமாட்டாத

அவனுடைய தன்மையே அவ்வாறு அன்பு செலுத்தக்காரணமென்று தெரிவிக்க, அப்பிரான் யசோதை வைத்திருந்த தயிர் வெண்ணெய்களைக் களவுகண்டு தனது ஜீவனத்தைக்கொண்ட சரிதங்கூறுகின்றார் இப்பாசுரத்தில்.

கும்பம்—வடசொல்; யானையின் தலைமீதுள்ள குடம்போன்ற ஒருறுப்பு. குரவையாவது—கைகோத்தாடுங்கூத்து. “குரவைக்கூத்தே கைகோத்தாடல்” என்பது திவாகரம். இதற்கு வடமொழியில் ராஸக்ரீடை என்று வ்யவஹாரம். ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்தில் ஒவ்வொருகண்ணனாக உருவெடுத்து நின்று ஆடுதல் என்பர். “அங்கநாமங்கநாமந்தரே மாதவ: மாதவம் மாதவம் சாந்தரேணாங்கநா” என்றது காண்க. பல நாட்டியப்பெண்கள் வட்டமாய் நின்று சித்திரமான தாளலயங்களுடன் மெதுவாகவும் உந்நதமாகவும் கூத்தாடுதல் குரவைக்கூத்தின் இலக்கணமென்பர் தமிழர். “குரவையென்பது—காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்து ஆடுவது; ‘குரவையென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்தகாமமும் விறலும், எய்தக்கூறு மியல்பிற்றென்ப’ எனவும், ‘குரவையென்பதெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக்கை கோத்து, அந்நிலை கொட்ப நின்றாடலாகும்’ எனவுஞ் சொன்னாராதலின்” என்பது சிலப்பதிகாரத்து அடியார்க்கு நல்லாருரை.

[செம்பவள மித்யாதி.] பாக்குமரங்களில் முதிர்ந்தபழங்கள்-பவழத்தையும், பசுங்காய்கள்—மரகதரத்னத்தையும், விரிந்தபாளைகள் வெண்முத்துக்களையும் நினைப்பூட்டுமென்க. .... .... .... .... (அ)

ஊடேறு கஞ்சனொடு மல்லும் வில்லும்
ஒண்கரியு முருள்சகடு முடையச் செற்ற*
நீடேறு பெருவலித்தோ ளுடைய வென்றி
நிலவுபுகழ் நேமியங்கை நெடியோன் காண்மின் *
சேடேறு பொழில்தழுவு மெழில்கோள் வீதித்
திருவிழவில் மணியணிந்த திண்ணைதோறும் *
ஆடேறு மலர்க்குழலார் பயிலுஞ் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த வமரர் கோவே. (கூ)

சேடு ஏறு — இளமைமிக்குத் தோன்றுகின்ற
பொழில் — சோலைகளால்
தழுவும் — அணையப்பெற்ற
எழில் கொள் வீதி — அழகிய தெருக்களிலே நடக்கின்ற
திரு விழவில் — திருவிழாக்களிலே
மணி அணிந்த திண்ணை தோறும் — ரத்னங்கள் பதிக்கப்பெற்ற திண்ணைகளிலெல்லாம்

ஆடு ஏறு — கூத்தாடுந்தொழிலில் வல்லவர்களான
மலர் குழலார் — மலர்களையணிந்த கூந்தலையுடையமகளிர்
பயிலும் — நெருங்கியிருக்கப்பெற்ற
செல்வத்து — சிறப்பையுடைய
அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோ—;
(யாவனெனில்;)

| | |
|---|---|
| ஊடு எறு கஞ்சனொடு | (மஞ்சத்தின்) மத்தியில் எறியுள்ள கம்ஸனும் |
| மல்லும் | மல்லர்களும் |
| வில்லும் | (தநுர்யாகத்தில் வைக்கப்பட்டிருந்த) வில்லும் |
| ஒள் கரியும் | அழகிய (குவலயாபீடமென்னும்) யானையும் |
| உருள் சகடும் | உருண்டு செல்லுந் தன்மையதான சகடமும் |
| உடைய | அழிந்தொழியும்படி |
| செற்ற | அழித்திட்ட |
| நீடு எறு பெரு வலி தோள் உடைய | நீண்டு உயர்ந்துள்ள மிக்க வலிமைகொண்ட தோள்களை யுடையவனும் |
| வென்றி நிலவு புகழ் நேமி அம் கை | வெற்றியினால் விளங்குகின்ற புகழையும் சக்கரமேந்திய அழகிய கைகளை யுமுடையனுமான |
| நெடியோன் | பரமபுருஷனுவன். |

* * *—ஆச்ரிதருடைய விரோதிகளைப் போக்குந்தன்மையைப் பல படியாகக்கூறிய ஆழ்வார் திருவாழியைப்போலவே உங்களையும் ஒருபோதுங் கைவிடாதே கொள்வனெம்பெருமானென்று இப்பாசுரத்தாற் கூறுகின்றார்.

கண்ணபிரான், கம்ஸனையும் அவனுலேவப்பட்ட மல்லர்களையும் அவனுடைய வில்லையும் அவனது பிரேரணையினுல் வந்த அஸுரர்களினுல் ஆவேசிக்கப்பட்ட குவலயாபீட யானையையும் சகடத்தையும் தொலைத்தொழித்தமை ப்ரஸித்தம்.

செற்ற=செறு--பகுதி. நெடியோன்=த்ரிவிக்ரமாவதாரஞ்செய்தவனென்றும் விச்வரூபங்கொள்ளுமியல்புடையவனென்றும், திருக்கல்யாண குணங்களால் யாவரினும் பெரியோனென்றும், அடியார் பக்கல் ஆதரம் மிக்கவனென்றும் பொருள் கொள்ளலாம்.

சேடு—அழகு, இளமை, பெருமை. திருவிழாக்காலங்களில் வீதியில் நடக்கும் அத்திருவிழாவைக் காணும்பொருட்டு வீதியின் இருபுறங்களிலுமுள்ள மாளிகைகளின் திண்ணைகளில் ஆடவில்வல்ல மடவார் ஏறியிருக்கப்பெற்ற திருவழுந்தூரென்பன பின்னடிகள். "ஆடு ஏறும் மலர்க்குழலார்"—'நறுமணம் மிக்க மலர்களைச்சூடிய கூந்தலையுடைய மடவார்' என்று வியாக்கியானத்திலுரைக்கப்பட்டுள்ளது. .... .... .... .... .... (௯)

பன்றியாய் மீனாகி யரியாய்ப்பாரைப்
படைத்துக்காத் துண்டுமிழ்ந்த பரமன்றன்னை *
அன்றமரர்க் கதிபதியு மயனுஞ்சேயு
மடிபணிய வணியழுந்தூர்நின்ற கோவை *
கன்றிநெடு வேல்வலவ னாலிநாடன்
கலிகன்றி யொலிசெய்த வின்பப்பாடல் *
ஒன்றினொடு நான்குமோரைந்தும் வல்லார்
ஒலிகடல்சூ ழுலகாளு மும்பர்தாமே. (௧௦)

| | |
|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் |
| பன்றி ஆய் | வாராஹாவதாரமாகியும் |
| மீன் ஆகி | மத்ஸ்யாவதாரமாகியும் |
| அரி ஆய் | நாஸிம்ஹாவதாரமாகியும் |
| பாரை | நிலவுலகத்தை |
| படைத்து | ஸ்ருஷ்டித்தும் |
| காத்து | ரக்ஷித்தும் |
| உண்டு | பிரளயகாலத்தில் உட்கொண்டும் |
| உமிழ்ந்த | (அந்தப்பிரளயம் நீங்கினவாறே வெளிநாடுகாண) உமிழ்ந்துமருளிய |
| பரமன் தன்னை | பரம்பொருளானவனும் |
| அமரர்க்கு அதிபதியும் | தேவர்கட்குத் தலைவனான இந்திரனென்ன |
| அயனும் | பிரமதேவனென்ன |
| சேயும் | அவனது மகனான சிவபிரானென்ன ஆகிய இவர்கள் |
| அடி பணிய | தனது திருவடிகளை வணங்கும்படி |
| அணி அழுந்தூர் நின்ற | திருவழுந்தூரில் நின்றதிருக்கோலமாக எழுந்தருளியிருக்கிற |
| கோவை | தேவாதிதேவனுமான எம்பெருமானைப்பற்றி |
| கன்றி நெடு வேல் வலவன் | சினங்கொண்டு நீண்டுள்ள வேற்படையில்வல்லவரும் |
| ஆலி நாடன் | திருவாலிநாட்டுக்குத் தலைவரும் |
| கலிகன்றி | கலிகன்றியென்னுந்திருநாமமுடையவருமான திருமங்கையாழ்வார் |
| ஒலி செய்த | இன்னோசையுடையனவாம்படி பாடியருளிய |
| இன்பம் பாடல் | மதுரமானபாடல்களான |
| ஒன்றினொடு நான்கும் ஓர் ஐந்தும் | இப் பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் | ஓதியுணர்ந்தவர்கள் |
| ஒலிகடல் சூழ் | ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட |
| உலகு | இவ்வுலகங்களை |
| ஆளும் | ஆளவல்ல |
| உம்பர் தாம் | தேவர்களாவர். |

* * *—திருமங்கையாழ்வார் திருவழுந்தூர் ஆமருவியப்பனைப்பாடிய இப் பதிகத்தின் பாசுரங்களை ஓதியுணர்ந்தவர் அவ்வெம்பெருமானருளால் எல்லாவுலகங்கட்கும் தலைவராவரென்று பயன் கூறினாராயிற்று. எம்பெருமானருளால் மயர்வற மதிநலமருளப்பெற்ற இவ்வாழ்வார் இத்திருமொழிக்குப்பலனாக நச்வரமான உலகாளுஞ் செல்வத்தைக்கூறியது என்னையோ? எனின்; பகவத் கைங்கர்யத்துக்கு எல்லை நிலமான பாகவத கைங்கர்யத்தை நன்றாகச்செய்வதற்கு உறுப்பாயிருக்கையாலே கூறினரென்க.

திருமால் நான்முகக்கடவுளாகி நின்று ஜங்கமஸ்தாவரங்களான உயிர்களையெல்லாம் படைத்துத் தானான தன்மையில் காப்பனென்பதும், யாவும் அழியும் பிரளயகாலத்தில் ஸ்ரீமஹாவிஷ்ணு அண்டங்களை யெல்லாம் தனது திருவயிற்றில் வைத்து அப்பிரளயம் நீங்கி ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே வெளிநாடுகாண உமிழ்வ னென்பதும் நூற்கொள்கை.

செம்மைநிறமுடைமைபற்றி முருகக்கடவுளுக்குப் பெயரான சேய் என்ற சொல் இலக்கணையால் இங்கே பலபராக்ரம ஸௌந்தர்யங்களையுடைய மகனென்ற பொருளில் வந்தது.

அவதாரங்கட்கு மூலமான பாற்கடலிற் பள்ளிகொள்ளும் வ்யூஹமூர்த்தியை ஒரு பாசுரத்திலும், அங்கு நின்று விலங்காகித் திருவவதரித்தமையை ௨. ௪. ௫. ௧௦. ஆம் பாசுரங்களாகிய நான்கு பாடல்களிலும், கஜேந்த்ர ரக்ஷணத்தின் பொருட்டாகவும் வாமந ராமக்ருஷ்ண ரூபமாகவும் வந்து அவதரித்தமையை மற்றை ஐந்து பாடல்களிலுமாக இவ்வாறு தாம் பாடி அநுபவித்தமை தோற்ற 'ஒன்றினோடு நான்கும் ஓரைந்தும்' என்று பிரித்தருளிச் செய்தாரென்னலாம்.(௧௦)

அடிவரவு:—செங்கமலம் முன் குலம் சிலம்பு சினம் வானவர் பந்து கும்பம் ஊடேறு பன்றி கள்ளம்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—ஒன்பதாந்திருமொழி,

# கள்ளம்மனம் விள்ளும்வகை.

[சிறுபுலியூர்ச் சலசயனத் திருப்பதிகம்.]

அவதாரிகை:—திருவழுந்தூரில் நின்றும் திருச்சிறுபுலியூர்த் திருப்பதியில் ஈடுபட்ட ஆழ்வார், பலரையும் நோக்கி 'நீங்கள் பாஹ்ய குத்ருஷ்டிகளின் திரளிற் புகாமே சிறுபுலியூர்ப் பெருமானடிகளை யடைந்து வாழ்ந்து போங்கள்' என்று உபதேசிப்பதும் அதனைத்தாம் அநுஷ்டித்துக் காட்டுவதுமாய்ச் செல்லுகிறார் இத்திருமொழியில்.

கள்ளம்மனம் விள்ளும்வகை கருதிக்கழல் தொழுவீர்! *
வெள்ளம்முது பரவைத்திரை விரிய * கரையெங்கும்
தெள்ளும்மணி திகழும் சிறுபுலியூர்ச் சலசயனத்
துள்ளும் * எனதுள்ளத்துளு முறைவாரையுள்ளீரே. (௧)

| | |
|---|---|
| மனம் | மனத்தில் நின்றும் |
| கள்ளம் | க்ருத்ரிமச்செயல் |
| விள்ளும் வகை கருதி | விட்டு நீங்கவேண்டும் வகையை விரும்பி |
| கழல் தொழுவீர் | (எம்பெருமானுடைய) திருவடிகளை ஆச்ரயிக்க வேண்டி யிருக்கிறவர்களே!, |
| முது பரவை | பழையதான கடலினுடைய |
| திரை | அலைகளினாலுண்டான |
| வெள்ளம் | ப்ரவாஹமானது |
| கரை எங்கும் விரிய | கரைகளிலெல்லாம் பரவாநிற்க, |
| தெள்ளும் | (அவ்வலைகளினால்) கொழிக்கப்பட்ட |
| மணி | ரத்னங்கள் |
| திகழும் | விளங்கப்பெற்ற |
| சிறுபுலியூர் | சிறுபுலியூரில் |
| சலசயனத்துள்ளும் | சலசயனமென்கிற ஸந்நிதியினுள்ளும் |
| எனது உள்ளத்துள்ளும் | என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளும் |
| உறைவாரை | நித்யவாஸம் பண்ணுகிற பெருமானை |
| உள்ளீர் | சிந்தனைசெய்யுங்கள். |

* * *—முதல்தன்னிலே ஒருவர்க்கு அடிமைப் பட்டிருப்பதற்கே இசையாதவர்களை நோக்கி 'ஸ்வாதந்திரியம் கூடாது, சேஷத்வமே ஸ்வரூபம்' என்று உரைக்கவேணும்; இந்த உபதேசத்தினால் சேஷத்வத்துக்கு இசைந்தவர்கள் எம்பெருமானல்லாத பிறர்க்கு ஆத்மாவை சேஷப்படுத்தத் தொடங்கினால் அவர்களை நோக்கி 'அந்யசேஷத்வம் கூடாது, ஸ்ரீமந்நாராயணனுக்கு சேஷப்பட்டிருப்பதே ஸ்வரூபம்' என்று உரைக்கவேணும்; இதுவாயிற்று உபதேச முறைமை. இப்பாட்டில், **கள்ளம்மனம் விள்ளும்வகை கருதிக்கழல் தொழுவீர்!'** என்றது—ஸ்வ ஸ்வாதந்திரியத்திற்கு இசையாதே பாரதந்திரியத்திற்கு இசைந்திருப்பவர்களை நோக்கி 'அந்யசேஷத்வப் படுகுழியிற்புகாமே ஸ்ரீமந்நாராயண சேஷத்வத்திலே ஊன்றுங்கோள்' என்று உபதேசிக்கிறபடி. **மனம் கள்ளம் விள்ளும்வகை கருதி**—ஆத்மாவுக்கு ஸ்வரூபமான சேஷத்வத்தை இல்லை செய்வது பெரிய கள்ளத்தனமாகையாலே அந்தக் கள்ளத்தனத்தை யொழிக்கக் கருதிப் பிறர்தாளிலே தலைசாய்க்க விரும்புவீராயின் சிறுபுலியூர்ச் சலசயனத்துறையும் பெருமானைப் பணிமின் என்கிறார். இங்ஙனன்றியே, ஸ்வாதந்திரியத்தையும் விட்டு அந்ய சேஷத்வத்தையும் விட்டு ஸ்ரீமந்நாராயண சேஷத்வமே ஸ்வரூபம் என்னுமளவிலே வந்து நின்றவர்களையே நோக்கி, அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய நிலைமைகளுக்குள்ளே சிறுபுலியூர்ச் சலசயனத்துறையும் நிலைமையைப் பற்றுங்கோள் என்று உபதேசிக்கிறாரென்றுங் கொள்ளலாம். இவ்விரண்டு யோஜனைகட்கும் இணங்க, **கள்ளம், கழல்** என்ற பதங்களுக்குப்பொருளில் வாசியுண்டு. முதல் யோஜனையில், **கள்ளம்**—தன்னைத் தனக்கே சேஷமென்று கொண்டிருக்கையாகிற கள்ளம். **கழல்**—யாரேனு மொருவருடைய பாதம். இனி இரண்டாவது யோஜனையில், **கள்ளம்**—எம்பெருமானுக்கே உரித்தான ஆத்மவஸ்துவைத் தேவதாந்தரங்கட்கு உரிமைப்படுத்துகையாகிற கள்ளம். **கழல்**—எம்பெருமானுடைய திருவடிகள்.

கடல்வெள்ளம் அலையெறிந்து நவரத்னங்களைக் கொண்டு கொழிக்கும் நீர்க்கரைகளையுடைய சிறுபுலியூரென்னுந் திருப்பதியில் சலசயனமென்னும் ஸந்நிதியிலும் அடியேனுடைய நெஞ்சகத்திலும் பொருந்திவாழ்கின்ற பெருமானைச் சிந்தனை செய்யுங்களென்றாராயிற்று.

எம்பெருமான் **வ்யாக்ரபாதர்** என்னும் மாமுனிக்கு ஸேவைஸாதித்த தலமாதல் பற்றி இவ்வூர் சிறுபுலியூ ரெனப்படுமென்ப. **சலசயனம்**='ஜலஶயந' மென்ற வடசொல் விகாரம். **சலம்**—மாயை; உறங்குவான்போல் யோகு செய்வதற்குக்கொண்ட சயனமாதலால் மாயப்படுக்கையென்கிறது. வ்யாக்ரபாத மஹர்ஷிக்குப் பாலசயனமாய் ஸேவை ஸாதித்தானென்க.

சிறுபுலியூரென்பது க்ஷேத்ரத்தின் திருநாமம். சலசயன மென்பது திருக்கோயிலின் திருநாமம். திருக்கடன் மல்லையில் தலசயனப்பெருமாள் கிடக்குமிடம் தலசயன மென்றதுபோல, இங்குச் சலசயனப்பெருமாள் கிடக்குமிடம் சலசயன மெனப்படும்.

நம்மாழ்வார் "திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும், ஒருக்கடுத்து உள்ளேயுறையும் பிரான் கண்டீர்" என்றருளிச் செய்ததுபோல இவரும் "சிறு புலியூர்ச் சலசயனத்துள்ளும் என துள்ளத்துள்ளு முறைவாரை" என்றார்.

உள்ளீர்—ஏவற்பன்மை வினைமுற்று ; உள்ளுதல்—த்யானம் பண்ணுதல்.

தெருவில்திரி சிறுநோன்பியர் செஞ்சோற்றொடு கஞ்சி
மருவி * பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்தடைவீர் ! *
திருவிற்பொலி மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்து *
உருவக்குற ளடிகளடி உணர்மின் னுணர்வீரே. (உ)

| | |
|---|---|
| உணர்வீர் | விவேகிகளே !, |
| தெருவில் திரி | (வேலையற்றுத்) தெருக்கள் தோறும் திரிகின்றவர்களாய் |
| சிறு நோன்பியர் | அற்பங்களான விரதங்களைக் கைக்கொண்டவர்களாய் |
| செஞ் சோற்றொடு கஞ்சி மருவி | செஞ்சோற்றையும் கஞ்சியையுமுண்ண விரும்பி |
| பிரிந்தவர் | வைதிககோஷ்டியிற் சேராதே தனிப்பட்டுப் பிரிந்தவர்களான ஜைநர் முதலானோருடைய |
| வாய் மொழி | வாய்ப்பேச்சுகளை |
| மதியாது | திரஸ்கரித்துவிட்டு |
| வந்து அடைவீர் | (எம்பெருமானளவிலே) வந்து சேருங்கள் ; |
| திருவின் | செல்வத்தினால் |
| பொலி | விளங்குகின்ற |
| மறையோர் | வைதிகர்கள்வாழ்கிற |
| சிறுபுலியூர், சலசயனத்து--; | |
| உருவம் | அழகிய |
| குறள் | வாமநாவதாரஞ்செய்தருளிய |
| அடிகள் | ஸ்வாமியினுடைய |
| அடி | திருவடிகளை |
| உணர்மின் | சிந்தியுங்கள். |

* * *—சமண மதத்தவர்களுடைய சொற்களை மதியாமல் (அவமதித்து விட்டுச்) சிறுபுலியூர்ச் சலசயனப்பெருமாளுடைய திருவடிகளைச் சிந்தை செய்மின் என்று விவேகிகளை நோக்கி உபதேசிக்கின்றார். சமணமதத்தில் ப்ரஸித்தமாக ஒரு விரதமுண்டு ; அதாவது—பெருஞ்சோறுண்ணுதல். (இது வெஞ்சோறுண்ணுதல் எனவும் வேகு சோறுண்ணுதல் எனவும் வ்யவஹரிக்கப்படுமாம்.) தயிர்ச்சோறு, செஞ்சோறு, கஞ்சிச்சோறு, என்றிப்படி சில சோறுகளைத்தின்று கொண்டு தெருக்களில் திரிந்து கொண்டிருப்பர்களாம் ; "தருக்கினால் சமண் செய்து சோறு தண் தயிரினால் திரளை, மிடற்றிடை நெருக்குவார்" என்று கீழ் இரண்டாம்பத்திலும் முதற்றிருமொழியி லருளிச்செய்யப்பட்டது காண்க. இப்படி, ஏதோ விரதஞ்செய்வதாகப் பேரிட்டுக்கொண்டு செஞ்சோற்றையும் கஞ்சியையும் உட்கொண்டு தெருத்திரிகின்ற வைதிககோஷ்டீ பஹிஷ்டர்களின் வாய்மொழிகளைத் திரஸ்கரித்து விட்டு வந்து உற்றது பற்றுங்கள் என்றதாயிற்று.

திருவிற்பொலிமறையோர்=திருஎன்றது ஐச்வர்யத்தையாகவுமாம், ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மியையாகவுமாம். உருவக்குறளடிகள்=பண்டு வாமநாவதாரஞ் செய்தருளின பெருமானே இங்கு அர்ச்சையா யெழுந்தருளியிருக்கிறானென்கை. அடிகள்—ஸ்வாமி. .... .... .... .... .... (உ)

பறையும்வினை தொழுதுய்ம்மினீர் பணியுஞ்சிறுதொண்டீர்! *
அறையும்புன லொருபால்வய லொருபாற்பொழி லொருபால் *
சிறைவண்டின மறையுஞ்சிறுபுலியூர்ச் சலசயனத்
துறையும் * இறையடியல்லதொன் றிறையுமறியேனே. (௲)

| | |
|---|---|
| பணியும் சிறு தொண்டீர் | (தகாதவிஷயங்களில்) பணிவுள்ள சிறுதொண்டர்களே! |
| நீர் | நீங்கள் |
| தொழுது | (சிறுபுலியூர்ச் சலசயனத்தைத்) தொழுது |
| உய்மின் | உஜ்ஜீவியுங்கள்; (தொழுதால்) |
| வினை | பாவங்கள் |
| பறையும் | தொலைந்துபோம்; |
| ஒருபால் | ஒருபக்கத்திலுள்ள |
| அறையும் புனல் | ஒலிக்கின்ற ஜலத்திலும் |
| ஒருபால் | மற்றொருபக்கத்திலுள்ள |
| வயல் | கழனிகளிலும் |
| ஒருபால் | மற்றமொருபக்கத்திலுள்ள |
| பொழில் | சோலைகளிலும் |
| சிறை வண்டு இனம் அறையும் | சிறகுகளையுடைய வண்டுத் திரள்கள் ரீங்காரஞ் செய்யப்பெற்ற |
| | சிறுபுலியூர், சலசயனத்து—; |
| உறையும் | பொருந்திவாழ்கின்ற |
| இறை | பெருமானுடைய |
| அடி அல்லது | திருவடிகளையன்றி |
| ஒன்று | வேறொன்றை |
| இறையும் | சிறிதும் |
| அறியேன் | அறியமாட்டேன். |

* * *—க்ஷுத்ரவிஷயங்களிலே தொண்டுபட்டுத்திரிகின்றவர்களை யழைத்து 'நீங்கள் இப்படியிராமே வகுத்த விஷயத்தில் தொண்டுபடுங்கள்' என்று முதலடியால் உபதேசித்து மற்ற மூன்றடிகளால் தமது உறுதியை அவர்கட்கு வெளியிடுகிறார். நான் இருக்கிறபடியைக் கண்டீர்களன்றோ, நீங்களும் இப்படியிருந்து வாழ வேண்டாவோவென்கை.

பணியுஞ்சிறுதொண்டீர்='பணியும்' என்பதைச் சிறுதொண்டர்க்கு விசேஷணமாக்கி யுரைத்தல் ஒன்று; (தகுதியற்றவர்களைப் பணிகின்ற நீசர்களே! என்றபடி.) அன்றியே, 'பணியும்' என்பதைஏவற்பன்மைவினைமுற்றாகக்கொண்டு எம்பெருமானைப் பணியுங்கள் என்னவுமாம். 'பணிமின்' என்றும் பாடமுரைப்பர்.

தீர்த்தங்களிலும் வயல்களிலும் பொழில்களிலும் வண்டுகள் ரீங்காரஞ் செய்யப்பெற்ற சிறுபுலியூரில் சலசயனக்கோயிலில் உறைகின்ற பெருமானுடைய திருவடிகளை யொழிய மற்றொன்றும் நானறியே னென்றாராயிற்று. தீர்த்தங்களில் வண்டுகள் அறையுமோ வென்னில்; தீர்த்தங்கள் மதுவோடு கூடிப் பெருகுமாதலால் மதுவில் நசையாலே வண்டுகள் வந்து மொய்க்குமென்க: "ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்து, ஊக்கமே மிகுந்து உள்தெளிவின்றியே, தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல், வாக்கு தேனுகர் மாக்களைமானுமே." (கம்பராமாயணம்—ஆற்றுப்படலம்—21.) என்றது காண்க. .... .... (௲)

இ. சுந்தரமூர்த்தி



வாஞர்மதி பொதியுஞ்சடை மழுவாளியொ டொருபால் *
தாஞகிய தலைவன்னவ னமரர்க்கதி பதியாம் *
தேஞர்பொழில் தழுவும்சிறு புலியூர்ச்சல சயனத்
தாஞயனது * அடியல்லதொன் றறியே னடியேனே. (௫)

| | |
|---|---|
| ஒருபால் | திருமேனியி ஞெருபக்கத்தில் |
| வான் ஆர் மதி பொதியும் சடை | ஆகாசத்திலே பொருந்தி யிருக்கிற சந்திரன் அடங்கிய ஜடையை யுடையஞய் |
| மழுவாளியொடு | மழுவேந்தியான சிவனேடு கூடி |
| தான் ஆகிய தலைவன் அவன் | தான் என்று சொல்லப்படும் தலைவஞயிருப்பவனும், |
| அமரர்க்கு அதிபதி ஆம் | தேவர்கட்கு இறைவஞன இந்திரனும் தாஞ யிருப்பவனும், |
| தேன் ஆர் பொழில் தழுவும் | தேன்நிறைந்த சோலைகள் தழுவப்பெற்ற |
| சிறுபுலியூர் | திருச்சிறுபுலியூரிலே |
| சலசயனத்து | சலசயனமென்னும் திருக்கோயிலில் எழுந்தருளி யிருப்பவனுமான |
| ஆன் ஆயனது | கோபாலக்ருஷ்ணனுடைய |
| அடி அல்லது | திருவடிகளையன்றி |
| ஒன்று | மற்றென்றையும் |
| | அடியேன் அறியேன்—. |

* * *—சிறு தொண்டர்களிடத்தில் நம்முடைய உபதேசம் பலிப்பது அரிது என்று துணிந்து உபதேசத்தை நிறுத்தித் தமது உறுதியையே இனி வெளியிட்டருளுகிறுர். நம்முடைய உறுதியை வெளியிட்டுக் கொண்டோமாகில் இது கேட்டு இவர்கள் திருந்தக்கூடும் என்று நினைத்து அருளிச் செய்கிறுராகவுமாம்.

“ஏறுளுமிறையோனுந் திசைமுகனுந்திருமகளுந், கூறுளுந்தனியுடம்பன்” என்கிறபடியே சிவனுக்குந் தன் திருமேனியிலே ஒரு கூறு கொடுத்திருப்பவனும் தேவேந்திரனுக்கு அந்தர்யாமியாயிருந்து ஸ்வர்க்க லோகத்தை யாள்பவனுமான சிறுபுலியூர்ச் சலசயனப்பெருமானது திருவடிகளையன்றி மற்றென்றுமறிகின்றிலே னென்றுராயிற்று.

எம்பெருமானுடைய ஸௌசில்ய குணத்தை யநுபவிக்கிறுர் முதலொன்றை யடியால். தாமஸ தேவதையான ருத்ரனுக்கும் தனது திருமேனியின் வலப்பக்கத்தில் இடங்கொடுத்து ஆதரிக்குமவனும் எம்பெருமான். திருவாய்மொழியில் “வலத்தனன் திரிபுரமெரித்தவன்” (1-3-9) என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் “வலெஶூகாடிஶ ஜ ஈஶூாநு தக்ஷிணம் வாஶ்வமாஶ்ரிதாநு।” என்ற மோக்ஷதர்மவசநத்தை யெடுத்துக்காட்டி யிருப்பது இங்கு அநுஸந்திக்கத் தக்கது. “தவஸா தொஷிதஸ்ேந விஷ்ணுநா ஃஹவிஷ்ணுநா। ஸ்வாஶ்வெ் ஒக்ஷிணெ ஶம்ஹொஃ நிவாஸஃ வஶிகல்பிதஃ = தபஸா தோஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா—ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போ: நிவாஸ: பரிகல்பித:.” என்றொரு வசநமும் இருபத்திநாலாயிரப் படியிற் காண்பதுண்டு.

[சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக் கொடுத்தருளினன்—என்பது இதன் பொருள்.]

மழுவாளியென்ற விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம்:— "தமப்பன் பிறரென்று பாராதே கொல்லுகைக்குப் பரிகாமான மழுவையுடைய ருத்ரன்."

ஈற்றடியை "சிறுபுலியூர்ச் சலசயனத்தானுய்! உனதடியல்லது" என்று சிலர் ஓதுவர்; அப்பாடம் வியாக்கியானத்திற்குச் சிறிதும் பொருந்தாது; "க்ருஷ்ணுவதாரம் தீர்த்தம் ப்ரஸாதித்ததென்று வெறுக்க வேண்டாதபடி பிற்பாடர்க்கும் அநுபவிக்கலாம்படி அவ்வவதாரத்தின்படியே வந்து சாய்ந்தவன்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தியாதலால் "சலசயனத்து ஆனுயனது" என்றே ஓதப்பொருந்தும். .... .... .... .... .... .... .... (ச)

நந்தாநெடு நரகத்திடை நணுகாவகை * நாளும்
எந்தாயென விமையோர் தொழுதேத்துமிடம் * எரிநீர்ச்
செந்தாமரைமலரும் சிறுபுலியூர்ச் சலசயனத்து *
அந்தாமரையடியாய்! உனதடியேற் கருள்புரியே. (ரு)

| | |
|---|---|
| இமையோர் | தேவர்கள் |
| நாளும் | நாள்தோறும் |
| எந்தாய் என | எம்பெருமானே! என்று சொல்லி |
| தொழுது | அடிபணிந்து |
| ஏத்தும் | துதிக்கப்பெற்ற |
| இடம் | திவ்யதேசமாய் |
| எரி நீர் செந்தாமரை மலரும் சிறுபுலியூர் | அலைமோதும் நீர் நிலைகளிலே செந்தாமரைப் பூக்கள்மலரப்பெற்றதான சிறுபுலியூரிலுள்ளதான |
| சலசயனத்து | சலசயனக்கோயிலிலே (எழுந்தருளியிருக்கிற) |
| அம் தாமரை அடியாய் | அழகிய தாமரைப் பூப்போன்ற திருவடிகளையுடையவனே! |
| நந்தா நெடு நரகத்திடை | அழிவில்லாத பெரிய நரகத்திலே |
| நணுகாவகை | (நான்) சோாதபடி |
| உனது அடியேற்கு அருள் புரி | உன் அடியவனை என் திறத்தில் க்ருபை பண்ணவேணும். |

* * *—"மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து" என்னுமாபோலே பிறப்பதும் இறப்பதுமாய் ஒய்வின்றிச் செல்லுகிற ஸம்ஸாரமாகிற நரகத்திலே அடியேன் புகாதபடி உன்னடியேனை என் விஷயத்திலே அருள்புரியவேணு மென்கிறார். "நந்தாநெடு நரகத்திடை நணுகாவகை உனதடியேற்கு அருள்புரியே" என்று அந்வயிப்பது. பிரமன் முதலிய தேவர்கள் எப்போதும் வந்து கிட்டி 'எந்தாய்!' என்றிறைஞ்சித் துதிக்குமிடமாயும், நீர்நிலைகளிலே செந்தாமரைப் பூக்கள் மலரப்பெற்ற சிறுபுலியூரிலுள்ளதாயுமிருக்கிற சலசயனத்திலே யெழுந்தருளியிருக்கின்ற கமலபாதனே! நான் இனி ஸம்ஸாரியாகாதபடி எனக்கு அருள் செய்யவேணு மென்றாராயிற்று.

எந்தாய்—'எந்தை' என்பதன் விளி. .... .... .... .... (ரு)

முழுநீலமு மலராம்பலு மரவிந்தமும் விரவி *
கழுநீரோடு மடவாரவர் கண்வாய் முகமலரும் *
செழுநீர்வயல் தழுவுஞ்.சிறுபுலியூர்ச் சலசயனம் *
தொழுநீர்மைய துடையாரடி தொழுவார் துயரிலரே. (சு)

| | |
|---|---|
| முழு நீலமும் | பூர்த்தியாகக் கறுத்திருக்கிற நீலோற்பலமும் |
| ஆம்பல்மலரும் | ஆம்பல் மலர்களும் |
| அரவிந்தமும் | தாமரைகளும் |
| கழுநீரொடு | செங்கழுநீர்ப் பூக்களும் |
| விரவி | சேர்ந்து |
| மடவாரவர் | (அங்குள்ள) மாதர்களினுடைய |
| கண் | கண்கள் போலவும் |
| வாய் | அதரம் போலவும் |
| முகம் | முகம்போலவும் |
| அலரும் | விகஸிக்கப்பெற்ற |
| செழு நீர் வயல் | செழித்த நீர்நிறைந்த வயல்களினால் |
| தழுவும் | சுற்றுஞ் சூழப்பட்ட |
| | சிறுபுலியூர், சலசயனத்தை—, |
| தொழும் நீர்மையது உடையார் | தொழுகையையே ஸ்வபாவமாகவுடையவர்களினுடைய |
| அடி | திருவடிகளை |
| தொழுவார் | தொழுமவர்கள் |
| துயர் இலர் | துக்கமற்றவராவர். |

* * *—சிறுபுலியூரும் வேண்டா; அங்குள்ள சலசயனத் திருக்கோயிலும் வேண்டா; அதிலுள்ள பெருமானும் வேண்டா; அத்திருக்கோயிலைத் தொழுவதையே இயற்கையாகவுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவருளர், அவர் திருவடிகளே சரணமென்றிருப்பார்க்குத் துயரெல்லாம் தொலைந்திடுமென்கிறார்.

சிறுபுலியூரில் ஊர்க்கும் வயலுக்கும் வாசி தெரிந்து கொள்ள வொண்ணாதபடி யிருக்கு மென்கிறார் முன்னடிகளில்; நீலோற்பலங்களைப் பார்த்தால் அவ்வூர்ப் பெண்களினுடைய கண்களாகவும், அரக்காம்பல்களைப் பார்த்தால் அப்பெண்களது அதரமாகவும், தாமரைப்பூக்களைப்பார்த்தால் அவர்களது முகங்களாகவும் விளங்குகின்றமையால் உள் வீதிகளுக்கும் வெளி நிலங்களுக்கும் வாசி தெரிவரிதாம். .... .... .... .... .... (சு)

சேயோங்குதண் திருமாலிருஞ்சோலை மலையுறையு
மாயா! * எனக்குரையாயிது மறைநான்கினு ளாயோ? *
தீயோம்பு கைமறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்
தாயோ? * உனதடியார் மனத்தாயோ வறியேனே. (எ)

| | |
|---|---|
| சேய் ஓங்கு | மிகவும் உயர்ந்ததாய் |
| தண் | குளிர்ந்ததான |
| திருமாலிருஞ் சோலைமலை | திருமாலிருஞ்சோலை மலையிலே |
| உறையும் | நித்யவாஸஞ்செய்கிற |
| மாயா | ஆச்சரியனே! |
| | (நீ) |
| மறை நான்கினுளாயோ | நால் வேதங்களினுள்ளே இருக்கின்றாயோ? |
| தீ ஓம்பு | ஹோமத்தீயை வளர்க்கின்ற |
| கை | கையையுடையரான |
| மறையோர் | வைதிகர்கள் வாழ்கிற |
| சிறு புலியூர் சலசயனத்தாயோ | சிறுபுலியூரில் சலசயனக் கோயிலிலுள்ளாயோ? |

| | | | |
|---|---|---|---|
| உனது அடியார் மனத்தாயோ | உனது அன்பர்களின் நெஞ்சிலுள்ளாயோ ? | அறியேன் | அறிகின்றிலேன் ; |
| | | எனக்கு இது உரையாய் | எனக்கு இதை(த் தெரிய) அருளிச் செய்யவேணும். |

* * *—ஆழ்வார் தமக்குண்டான ஒரு ஸந்தேஹத்தை விண்ணப்பஞ்செய்கிறார். திருமாலே! நீ வேதங்களிலிருக்கின்றாயா? சிறுபுலியூர்ச் சலசயனக் கோயிலில் இருக்கின்றாயா? அன்பர்தம் உள்ளத்திலிருக்கின்றாயா? இன்னவிடத்திலிருக்கின்றாயென்று தெரியவில்லை; அடியேனுக்குத் தெரியவருளிச்செய்யவேணுமென்கிறார்.

சிறுபுலியூர் விஷயமான இத்திருமொழியில் இத்தலத்துப் பெருமானை விளிக்கவேண்டியிருக்க 'திருமாலிருஞ்சோலைமலையுறையும் மாயா!' என்று அழகரை விளித்தது என்னேவெனின்; நால்வேதங்கள், சிறுபுலியூர்ச் சலசயனம், அடியார் மனம் என்னுமிடங்களிலெல்லாமுள்ள எம்பெருமான் ஒருவனே என்று உண்மையை விளக்குதல் இப்பாட்டின் உள்ளுறையாதலால் திருமாலிருஞ்சோலைமலையில் உறைபவனும் இவனே யென்பது விளியினால் பெறப்படும்.

எம்பெருமானே! வேதமும் வைதிகருடைய ஹ்ருதயமும் உனக்கு இருப்பிடமென்று சாஸ்த்ரங்களிலே கேட்கலாயிருந்தாலும் இப்போது ப்ரத்யக்ஷத்தில் சிறுபுலியூர்ச் சலசயனத்திலிருப்புத்தான் காணலாயிருக்கின்றது; ஆகிலும் ப்ரத்யக்ஷப்ரமாணத்தையே ப்ரதாநமாகக்கொண்டு சாஸ்த்ரப்ரமாணங்களை உபமர்த்திக்கும்படியான ஸாஹஸம் அடியேனுக்கு இல்லாமையால் உன் இருப்பிடம் இன்னதென்னுமிடத்தை நீயே சோதிவாய் திறந்து அருளிச் செய்தருளாயென்கிறார் என்று சிலர் நிர்வஹிப்பர்கள்.

இவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம்—"இத்தால் சொல்லிற்றாய்த்து—ஸௌபரி பல வடிவு கொண்டாப்போலே இவ்வோவிடங்கள் தோறும் இனி அவ்வருகில்லை யென்னும்படி குறையற வர்த்திக்கிறபடியைக் காட்டிக்கொடுத்தான்." என்பதாம். சாஸ்த்ரங்களைக்கொண்டே அறியவேண்டிய அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹங்களையும், கண்ணால் கண்டு அநுபவிக்கலாம்படியான அர்ச்சாரூபங்களையும், நெஞ்சாலே அநுபவிக்கலாம்படி அந்தர்யாமியாயிருக்கும் வடிவுகளையும் ஒருகாலே ஸேவை ஸாதிப்பித்த படியாலே கண்டு ஆச்சரியப்படுகிறாரென்றவாறு.

இப்பாசுரத்தைச் சிற்பான்மை அடியொற்றி ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் "ஶ்ருதாநாம் யதிவக்ஷி உஹாஂ வணிதம் வாஞ்ணரீகம் யத்ராதாநம் வாடிவ தத்தாயுரஸநாதிரஸநாஜவு। ஶ்ருதாயாநாம் யதிவிவ ஶஶொ யஶுச விநா ஶாரெ: ஹஸ்த்யத்ரேஶ திஸிதம் தெஷா வாதாஜ யொஜெ?" (…) என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

எம்பெருமான் நால் வேதங்களுக்கும் ப்ரதிபாத்ய வஸ்துவாயிருப்பதே மறை நான்கினுள்ளானகை. .... .... .... .... (எ)

மையார்வரிநீலம் மலர்க்கண்ணார் மனம் விட்டிட்டு *
உய்வானுன கழலேதொழு தெழுவேன் * கிளிமடவார்
செவ்வாய்மொழி பயிலுஞ் சிறுபுலியூர்ச் சலசயனத்து *
ஐவாயரவணைமேலுறை யமலா ! அருளாயே. (அ)

| | |
|---|---|
| கிளி | கிளிகளானவை |
| மடவார் | ஸ்த்ரீகளினுடைய |
| செவ் வாய் | சிவந்த வாயில் நின்று முண்டான |
| மொழி | சொற்களை |
| பயிலும் | ஆவ்ருத்திபண்ணுகின்ற |
| சிறுபுலியூர், சலசயனத்து—; | |
| ஐ வாய் | ஐந்து வாயையுடைய |
| அரவு அணை மேல் | ஆதிசேஷனுகிற சயனத்தின்மீது |
| உறை | உறைகின்ற |
| அமலா | நின்மலனே ! |
| மை ஆர் | மையணிந்ததாய் |
| வரி | ரேகைகளை யுடைத்தாய் |
| நீலம் மலர் | கரு நெய்தல் பூப்போன்றதான |
| கண்ணார் | கண்ணையுடையரான மாதர்களிடத்திலே |
| மனம் | மனத்தை |
| விட்டிட்டு | விட்டொழித்து |
| உய்வான் | உஜ்ஜீவிப்பதற்காக |
| உன கழலே | உனது திருவடிகளையே |
| தொழுது எழுவேன் | வணங்கியெழுகின்றேன் ; |
| அருளாய் | (அடியேன் மீது) க்ருபை செய்தருள். |

* * *—மாதர்களின் கண்ணழகிலீடுபட்டு அழிந்து போகாமே உன்திறத்திலீடுபட்டு உய்வு பெறவேண்டி, சிறுபுலியூர்ச் சலசயனத்தெம்பிரானே! உன்னைத் தொழுகின்றேன் ; உபேக்ஷியாமல் அருள்புரிய வேணுமென்கிறார்.

கிளி மடவார் செவ்வாய்மொழிபயிலும்=இரண்டுவகையாகப்பொருள் கொள்ளலாம் ; கிளிபோன்ற மடவாருடைய சிவந்தவாயில் நின்று முண்டான இன்சொற்களானவை, பயிலும்—நிரம்பியிருக்கப்பெற்ற சிறுபுலியூர் என்றும் ; கிளிகளானவை மடவாருடைய செவ்வாய்மொழிகளை அநுவாதம் செய்யப்பெற்ற சிறுபுலியூர் என்றும். .... .... .... .... (அ)

கருமா முகிலுருவா ! கனலுருவா ! புனலுருவா ! *
பெருமால் வரையுருவா ! பிறவுருவா ! நினதுருவா ! *
திருமாமகள் மருவுஞ் சிறுபுலியூர்ச் சலசயனத்து *
அருமா கடலமுதே ! யுனதடியே சரணமே. (கூ)

| | |
|---|---|
| கரு மா முகில் உருவா | கறுத்துப் பெருத்த மேகம் போன்ற வடிவை யுடையவனே ! |
| கனல் உருவா | (அன்பில்லாதார்க்கு அணுகவொண்ணுதபடி) நெருப்பைப்போலும் உருவமுடையவனே ! |
| புனல் உருவா | நீர்போலே குளிர்ந்த வடிவையுடையவனே! |
| பெரு மால் வரை உருவா | மிகவும் பெரியமலைபோன்ற உருவத்தையுடையவனே! |
| பிற உருவா | மற்றுமுள்ள பொருள்களையும் வடிவாக வுடையவனே! |
| நினது உருவா | உனக்கு அஸாதாரணமான திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையவனே! |

| | | | |
|---|---|---|---|
| திரு மா மகள் மருவும் | பெரியபிராட்டியார் பொருந்தி வாழ்கிற | உனது அடியே | உன்னுடைய திருவடிகளே |
| சிறுபுலியூர் சலசயனத்து—; | | சரண் ஆம் | (அடியேனுக்குப்) புகலிடமாம். |
| அரு மா கடல் அமுதே | பெறுதற்கரிய சிறந்த கடலமுதம் போன்றவனே! | | |

* * *—இப்பாசுரத்தின் இனிமை கனிந்த நெஞ்சினரால் நன்கு அநுபவிக் கத்தக்கது. ஆழ்வார் தமது உள்ளன்பு நன்கு விளங்க எம்பெருமானை வாயார விளிக்கின்றார். காணும்போதே ஸகலதாபமும் தீரும்படி பெரிய காளமேகம் போன்ற திருவுருவத்தை யுடையவனே!, தீயபுந்தியையுடைய கம்ஸன் போல் வார்க்குக் கிட்டவொண்ணாதபடி நெருப்புப் போன்றிருப்பவனே!, அக்ரூரர், விதுரர், மாலாகாரர் போல்வாரான மெய்யன்பர்க்குத் தண்ணீர்போலே விரும்பத் தக்க ரூபத்தை யுடையவனே!, மலைபோல் எல்லைகாண வொண்ணாத ப்ரகாரத்தை யுடையவனே!, "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்களி ரண்டாய் சிவனாயயனானாய்" "தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்று மாய்" இத்யாதிப்படியே எல்லாவடிவுமானவனே!, இப்படி ஜகதாகாரனாயிருப் பதுந்தவிர "கூராராழி வெண்சங்கேந்தி" என்கிற அஸாதாரண வடிவுகளையு முடையவனே!, பெரிய பிராட்டியார் நித்யவாஸம் பண்ணப்பெற்ற சிறுபுலியூர்ச் சலசயனத்துப் பரமபோக்யனே! உன் திருவடிகளே சரணம் என்றாராயிற்று. (கூ)

சீரார் நெடுமறுகில் சிறுபுலியூர்ச் சலசயனத்து *
ஏரார்முகில் வண்ணன்றன்னை யிமையோர் பெருமானை *
காரார்வயல் மங்கைக்கிறை கலியனொலி மாலை *
பாராரிவை பரவித்தொழப் பாவம் பயிலாவே. (க०)

| | | | |
|---|---|---|---|
| சீர் ஆர் நெடு மறுகில் | சீர்மைபொருந்திய நீண்ட திருவீதிகளை யுடைத்தான | இறை | தலைவரான |
| சிறுபுலியூர் | சிறுபுலியூரில் | கலியன் | ஆழ்வார் |
| சலசயனத்து | சலசயனக்கோயிலிலே (எழுந்தருளியிருக்கின்ற) | ஒலி | அருளிச்செய்த |
| ஏர் ஆர் | அழகுமிக்க | மாலை இவை | இச்சொல் மாலைகளை |
| முகில் வண்ணன் தன்னை | மேகம்போன்ற திரு நிறத்தையுடையனாய் | பாரார் | பூமியிலுள்ளவர்கள் |
| இமையோர் பெருமானை | நித்யஸூரிகட்குத் தலைவனான திருமாலைக் குறித்து,— | பரவி | சொல்லி |
| கார் ஆர் வயல் மங்கைக்கு | கருமைபொருந்திய கழனி களையுடைய திருமங்கை நாட்டுக்கு | தொழ | (அப்பெருமானைத்) தொழுமளவில் |
| | | பாவம் | பாவங்கள் |
| | | பயிலா | நிற்கமாட்டா [தொலைந்துபோம்]. |

* * *—செல்வம் மிக்க திருவீதிகளை யுடைய சிறுபுலியூரில் சலசயனக் கோயிலினுறையும் பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய் மலர்க் தருளிய இத்திருமொழியை வாயாலேசொல்லி ஆச்ரயிக்கவே, பாபங்கள் தாமே 'நமக்கு இவ்விடம் இருப்பல்ல' என்று விட்டுப்போம் என்று பயனுரைத்ததா யிற்று.

'பாரார்' என்கையாலே பூமியிற் பிறந்தாரெல்லாரும் இது கற்க அதிகாரி கள் என்றதாகும். .... .... .... .... (௧0)

அடிவரவு:—கள்ளம், மெத்துவில், பறை, வான், நந்தா, முழு, சேயோங்கு, மையார், கரு, சீரார், பெரும்புறம்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாம்பத்து—பத்தாந்திருமொழி,

# பெரும்புறக்கடலை.

[திருக்கண்ணமங்கைத் திருப்பதிகம்.]

அவதாரிகை:—கீழ்த்திருமொழியில், சிறுபுலியூர்ச் சலசயனத் தெம்பெரு மான் பக்கலிற் சென்று 'அருளாயே' என்றும் 'அருள்புரியே' என்றும் கிருபை பண்ணுமாறு பிரார்த்தித்த ஆழ்வார்க்கு எம்பெருமான் தன்னுடைய படிகளை யெல்லாம் விசதமாகக் காட்டிக்கொடுத்து 'ஆழ்வீர்! திருக்கண்ணமங்கையிலே வாரும், பூர்ணாநுபவம் பண்ணலாம்' என்று நியமிக்க, அப்படியே அத்திருப்பதி யிற்போந்து பரமாநந்தம் பொலியப் பேசுகிறார்.

இத்திருமொழியின் இனிமை அநுபவரஸிகர்கட்கே அநுபவயோக்யமாகும்.

பெரும்புறக்கடலை யடலேற்றினைப் பெண்ணை
யானை * எண்ணில் முனிவர்க்
கருள்தருந் தவத்தை முத்தின் திரட்கோவையைப்
பத்தராவியை நித்திலத்தொத்தினை *,
அரும்பினை யலரை யடியேன் மனத்தாசையை
அமுதம்பொதி யின்சுவை * கரும்பினைக்
கனியைச் சென்றுநாடிக் கண்ண
மங்கையுட் கண்டுகொண்டேனே. (௧)

பெரு புறம் கடலை — விசாலமான இடத்தையுடைத்தான கடல் போலே அளவிட முடியாத ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையவனும்

அடல் ஏற்றினை — செருக்குடைய ரிஷபம் போல மேனாணிப் புள்ளவனும்

பெண்ணை — ஸ்திரீயைப்போல் பாரதந்திரியமே வடிவா யிருப்பவனும்

ஆணை — ஸ்வதந்த்ரனாயிருப்பவனும்

எண் இல் முனிவர்க்கு — எண்ணிறந்த யோகிகளுக்கு

அருள் தரும் தவத்தை — அருள் தந்திடும் தவப்பயனா யுள்ளவனும்

முத்தின் திரள் கோவையை — முத்துத்திரளினாலாகிய மாலை போன்றவனும்

பத்தர் ஆவியை — பக்தர்களுக்கு உயிர்நிலையா யிருப்பவனும்

நித்திலம் தொத்தினை — முத்துக்குவியல் போன்றிருப்பவனும்

அரும்பினை — அரும்புபோலே குமாரத் தன்மையுள்ளவனும்

அலரை — மலர்ந்த புஷ்பம்போலே யௌவன பருவமுள்ளவனும்

அடியேன் மனத்து ஆசையை — அடியேனுடைய மனத்திலே புதிதுபுதிதாகத் தோன்றுகிற ஆசைக்கு இலக்கானவனும்

அமுதம் பொதி இன் சுவை கரும்பினை — அமுதத்தை நீராகப் பாய்ச்சி அதனால் வளர்ந்த இனிய சுவையை யுடைய கரும்புபோல் மதுரமானவனும்

கனியை — கனிபோல் அப்போதே அநுபவிக்கத்தக்க போக்யனுமான எம்பெருமானை

சென்று நாடி — தேடித்திரிந்து

கண்ண மங்கையுள் — திருக்கண்ண மங்கையிலே

கண்டு கொண்டேன் — ஸேவிக்கப்பெற்றேன்.

* * *—அடியேன் தேடித்திரிந்து கண்ணமங்கையிற் கண்டுகொண்ட எம்பெருமானுடைய படிகளைச் சொல்லுகிறேன், கேண்மினென்கிறார்.

பெரும்புறக்கடலை='புறம்' என்று இடத்துக்குப் பெயர்; எல்லையில்லாத இடத்தையுடைத்தான கடல்போன்றவன்: பல்லுயிர்கட்கும் உறைவிடமாயிருந்து கொண்டு கம்பீரத் தன்மையோடு கூடியிருக்குங் கடல்போன்றவன். இனி, புறம் என்பதற்கு 'வெளிப்பட்டது' என்கிற பொருளும் உண்டாதலால், பூமியைச் சூழ்ந்திருக்குங் கடல்களெல்லாவற்றிற் காட்டிலும் விலக்ஷணமான கடலாயிருப்பவன் என்று முரைப்ப. கடல்போன்றவன் என்னாதே கடல்தானாகவே சொன்னது உவமையாகுபெயர். இத்திருமொழி முழுதும் பெரும்பாலும் இங்ஙனேயாம்.

அடலேற்றினை=செருக்குக்கொண்ட விருஷபம்போலே ஒருவராலும் அடர்க்கவொண்ணாதவ னென்கை. பெண்ணை=கீழே அடலேறு போன்றிருப்பவனென்றது எதிரம்பு கோப்பவர்கட்கேயன்றி அன்புடையார் திறத்திலேவந்தால் ஸ்த்ரீகளைப்போலே பாரதந்திரியமே வடிவாயிருப்பவனென்றவாறு. "[illegible]" என்ற வரதராஜஸ்தவ ஸூக்தி காண்க.

ஆணை=அரசன் அந்தஃபுரத்திலே மனைவிக்கு விதேயனாயிருப்பினும் சீரிய சிங்காசனத்திலே வந்துவீற்றிருந்தால் ஆண்புலியாயிருப்பனன்றோ; அதுபோல.

திருவாய்மொழியில் "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்" என்றிருக்க, இங்கே 'பெண்ணை ஆணை' என்றல் பொருந்துமோ' எனின்; பொருந்தும்; 'ஆணல்லன் பெண்ணல்லன்' என்பது திவ்யாத்மஸ்வரூபத்தின் உண்மைநிலையைப் பற்றினது; இங்குச் சொல்வது குணத்தைப்பற்றியது: ஸ்திரீலிங்க புல்லிங்கங்களை யுடையவனென்கிறதன்று.

எண்ணில் முனிவர்க்கு அருள்தருந் தவத்தை='முனிவர்' என்றது தன்னைச் சிந்திப்பவர்கள் என்றபடி; அவர்கள் விஷயத்திலே கிருபைபண்ணுமவன்; அவர்களின் தவப்பயனே வடிவெடுத்தது போன்றவன். [முத்தின் திரள்கோவையை.] முத்துஸரம்போலே கண்டபோதே சிரமமெல்லாம் ஆறும்படியிருக்கிறவன். [பத்தர் ஆவியை.] தன் பக்கலில் பக்தியுள்ளவர்கட்குத் தன்னைவிட்டு ஜீவிக்கவொண்ணாதபடி யிருப்பவன். திருநின்றவூர்ப் பெருமானுடைய திருநாமமும் திருக்கண்ணமங்கைப் பெருமானுடைய திருநாமமும் பத்தராவி யென்பதாம். [நித்திலத் தொத்தினை.] ஒருவனுக்கு ஏராளமான முத்துக்குவியல் இருந்தால் 'நமக்கு நிதியுண்டு' என்று அவன் விஸ்ராமமற்றிருக்கலாமன்றோ; அதுபோல எம்பெருமானும் அன்பர்கட்கு.

[அரும்பினை அலரை.] இவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் வருமாறு:-"இரண்டு அவஸ்தையும் ஒருகாலே சூழ்த்துக் கொடுக்கலாம்படி யிருக்கிறவனை; 'யுவாகுமாரஃ.'" என்று. திருவாய்மொழியில் (3-1-8) "மலராது குவியாது" என்றவிடத்து ஈடு முப்பத்தாறாயிரப்படியில்—"'அரும்பினையலரை' என்னும்படியாயிருக்கும். 'யுவாகுமாரஃ' என்கிறபடியே ஏககாலத்திலே இரண்டவஸ்தையும் சொல்லலாயிருக்கை" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இவற்றால், யௌவநமும் கௌமாரமும் எம்பெருமானிடத்தில் குடிகொண்டிருப்பதாகப் பொருள் கூறுவர். அரும்பு என்றது கௌமார நிலைமையைச் சொன்னபடி; அலர் என்றது யௌவந நிலைமையைச் சொன்னபடி என்றும் கூறுவர். இங்கு உதாஹரிக்கப்பட்ட 'யுவாகுமாரஃ' என்றப்ரமாணம் ருக்வேதத்தில் (அஷ்ட. 2-8-25.) அத்யயநம் பண்ணப்பட்டு வரும் வாக்கியம். வைதிகபத பாடத்தில் 'யுவா அகுமாரஃ' என்று பதவிபாகமுள்ளது. ஸ்ரீதேசிகன் பரமபத ஸோபாநத்தில் ஒன்பதாவது பர்வத்தின் தொடக்கத்தில் "அகுமார யுவாவாய்" என்றும் பாதுகாஸஹஸ்ரத்தில் 1. "[illegible]" என்றும் அருளிச்செய்யக் காண்கிறோம். இவற்றையெல்லாமடிபோற்றி 'யுவா அகுமாரஃ' என்றே கொள்ளத் தகும்; நம்பிள்ளை முதலானோருடைய திருவுள்ளமும் இங்ஙனேத்ததே. இங்ஙனே பதவிபாகமாயின், 'கௌமாரமின்றியே யௌவனமாத்ரமே யுள்ளவன்' என்று பொருளாகுமே; நம்பிள்ளை முதலானோருடைய திருவுள்ளம் அப்படி யில்லையேயென்று சங்கிக்கவேண்டா; 'அகுமாரஃ' என்பதற்கு ஈஷத்குமாரஃ [ஸ்வல்பம் கௌமாரமுள்ளவன்] என்று பொருள். ["[illegible]

1. பராக பத்ததி—17.

தஜ்ஞூ தா। சுவூாஸஸூ்யம் விரோயஸூ நகுயலாஷூட் ஷூகீதிலதா°." என்பர் வையாகரணர்.] கௌமாரம் கழியத்தக்கதாய் பௌவனம் வந்து குடிபுகத்தக்கதான நடுப்பருவத்தைச் சொன்னவாறு.

[அடியேன் மனத்தாசையை.] அடியேன் இடைவிடாது நித்யாநுபவம்பண்ணுநிற்கச்செய்தேயும் இதற்கு முன்பு அநுபவித்தறியாமல் அப்போது கண்டதொரு வஸ்துவிற் போல ஆசைப்பெருக்குக்கு விஷயமாயிருப்பவனென்கை.

[அமுதம்போதி இன்சுவைக் கரும்பினை.] அமுதத்தையே தண்ணீராகப் பாய்ச்சி வளர்க்கப்பட்டு அதனால் சுவைமிக்கதான கரும்புபோல் ஆற்றஇனியன். [கனியை] அப்போதே நுகராலம்படி பக்குவ பலமாயிருப்பவன். ஆக இப்படிப்பட்ட பெருமானைத் திருக்கண்ணமங்கையில் ஸேவிக்கப்பெற்றேனென்றாராயிற்று. .... .... .... .... .... .... (க)

மெய்ந்நலத் தவத்தைத் திவத்தைத்தரும் மெய்யைப்
பொய்யினைக் கையிலோர் சங்குடை *
மைந்நிறக் கடலைக் கடல்வண்ணனை மாலை
யாலிலைப் பள்ளிகொள் மாயனை *
நென்னலைப் பகலை யிற்றைநாளினை
நாளையாய்வரும் திங்களை யாண்டினை *
கன்னலைக் கரும்பின்னிடைத் தேறலைக்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (உ)

| | |
|---|---|
| மெய் நலம் தவத்தை | மெய்யாய் நன்றான பக்தியோகத்துக்கு ப்ரவர்த்தகனும் |
| திவத்தை தரும் மெய்யை | பரமபதமளிக்கவல்ல ப்ரபத்தியோகத்திற்கு ப்ரவர்த்தகனும் |
| பொய்யினை | (அன்பில்லாதார்க்குப்) பொய்யனா யிருப்பவனும் |
| கையில் ஓர் சங்கு உடை | திருக்கையில் ஒப்பற்ற ஸ்ரீபாஞ்ச ஜந்யத்தை யுடையவனும் |
| மை நிற கடலை | கறுத்த நிறத்தையுடைய கடல் போன்றவனும் |
| கடல் வண்ணனை | கடல்போல் கம்பீர ஸ்வபாவமுள்ளவனும் |
| மாலை | எல்லாரினும் மேம்பட்டவனும் |
| ஆலிலை பள்ளி கொள்மாயனை | ஆலந்தளிரில் பள்ளி கொண்ட ஆச்சரியனும் |
| நென்னலைப் பகலை | நேற்றைப்போதில் அநுபவிக்கப்பட்ட வஸ்து போல் நெஞ்சை விட்டகலாத போக்யதையை யுடையவனும் |
| இற்றை நாளினை | இன்று அநுபவிக்கப் படுகிற வஸ்து போன்றவனும் |
| நாளையாய் வரும் | மேலுள்ள காலமும் இப்படியே அநுபவிக்க வுரியனானவனும் |
| திங்களை | மாஸத்துக்கு நிர்வாஹகனும் |
| ஆண்டினை | ஸம்வத்ஸரத்துக்கு நிர்வாஹகனும் |
| கன்னலை | கன்னற்கட்டிபோன்றவனும் |
| கரும்பினிடை தேறலை | கரும்புத்தடியிலுண்டான சாறுபோன்றவனுமான பெருமானை |

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன்—,

* * *—அடியேன் திருக்கண்ணமங்கையில் ஸேவிக்கப்பெற்ற எம்பெருமான் எப்படிப்பட்டவன்?—உண்மையாய் விலக்ஷணமான பக்தியோகத்தை ப்ரவர்த்திப்பித்தவன்; (அல்லது) அப்படிப்பட்ட பக்தியோகத்திற்கு விஷயமாகக் கூடியவன்; பரமபதத்தை தரவல்ல ப்ரபத்தியோகத்தை ப்ரவர்த்திப்பித்தவன்; (அல்லது) அதற்கு இலக்காமவன்; கீழ்ச்சொன்ன பக்தியோகமும் ப்ரபத்தியோகமு மில்லாதவர்களுக்குத் தன்னுடைய ஸ்வரூபஸ்வபாவங்களொன்றும் அறியவொண்ணா திருக்குமவன்; கீழ்ச்சொன்ன பக்தி ப்ரபத்திகளையுடையார்க்குக் காட்சிகொடுக்கும் வடிவையுடையவன்: கடல்போல் காம்பீர்யமுள்ளவன்; ஸர்வஸ்பாத்பரன்; சேராதவற்றையும் சேர்ப்பிக்கவல்லவனென்னுமிடத்தை ஆலிலையிற் பள்ளிகொண்ட வரலாற்றினால் காட்டித்தந்தவன்; இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் முக்காலங்களிலும் போக்யதை குன்றாதே யிருந்து, மாஸம் ஸம்வத்ஸரம் என்று சொல்லப்படுகிற காலப்பகுதிகளுக்கு நிர்வாஹகனாயிருக்குமவன்; கன்னற்கட்டியும் கருப்பஞ்சாறும் போல இனிமைதானே வடிவெடுத்தவன்; இப்படிப்பட்டபெருமானையாயிற்று அடியேன் திருக்கண்ணமங்கையிற் கண்டதென்கிறார். .... .... .... .... (உ)

எங்களுக்கருள் செய்கின்ற வீசனை
வாசவார் குழலாள் மலைமங்கை தன்
பங்கனை * பங்கில்வைத் துகந்தான்றனைப்
பான்மையைப் பனிமாமதியந் தவழ் *
மங்குலைச் சுடரை வடமாமலை
யுச்சியை நச்சி நாம் வணங்கப்படும்
கங்குலை * பகலைச் சென்று நாடிக்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (ங)

| | |
|---|---|
| எங்களுக்கு | எங்கள்விஷயத்தில் |
| அருள் செய்கின்ற | கிருபைபண்ணுகிற |
| ஈசனை | ஸர்வேச்வரனும் |
| வாசம் வார் குழலாள் | பரிமளம் வீசாநின்றுள்ள கூந்தலையுடையளான |
| மலைமங்கை தன் பங்கனை | பார்வதியைத் தனக்குப் பாதிபாகமாக வுடையனான ருத்ரனை |
| பங்கில் வைத்து உகந்தான் தன்னை | தனது ஒருபக்கத்திலே (இடங்கொடுத்து) வைத்து உகந்திருப்பவனும் |
| பான்மையை | இப்படிப்பட்ட சீலகுணமே ஸ்வபாவமாயுள்ளவனும் |
| பனி மா மதியம் தவழ் மங்குலை | குளிர்ந்த பூர்ணசந்திரன் தவழப்பெற்ற ஆகாசமாய் நிற்பவனும் |
| சுடரை | ஸூர்யனுக்கு அந்தர்யாமியாயிருப்பவனும் |
| வட மா மலை உச்சியை | வடவேங்கடமலையின் சிகரத்தானாயிருப்பவனும் |
| நச்சி நாம் வணங்கப்படும் | நம்மால் விரும்பி வணங்கப்படுபவனும் |
| கங்குலை | இராப்பொழுதுக்கு ப்ரவர்த்தகனும் |
| பகலை | பகற்பொழுதுக்கு ப்ரவர்த்தகனுமான பெருமானை |

சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டு கொண்டேன்—.

* * *—திருக்கண்ணமங்கை யெம்பெருமான் எப்படிப்பட்டவன்?;— வேறு புகலற்ற அடியேன் போல்வார் திறத்திலே நிர்ஹேதுகமாக க்ருபைபண்ண வல்ல ஸ்வாமி; எங்களைப்போலன்றியே ஈச்வராபிமாநம் கொண்டாடி யிருக்கிற ருத்ரனைத் தன் திருமேனியினொருபுறத்திலே வைத்து அதுதன்னைத் தன்பேறாக நினைத்து உகந்திருக்கும்படியான சில குணத்தாற்சிறந்தவன்; இந்த சிலகுணந் தான் ஏதோவொரு காலத்தளவி லன்றிக்கே எப்போதும் இதுவே இயல்வா யிருப்பவன்; குளிர்ந்த பூர்ண சந்திரனுடைய ஸஞ்சாரத்தை யுடைத்தான ஆகாசத்துக்கும் ஸூர்யனுக்கும் நியாமகன்; வடதிருவேங்கடமலையி லுச்சியை இருப்பிடமாகவுடையவன்; நம்மால் விரும்பி வணங்கப்படுபவன்; போகமநுபவிப்பதற் குறுப்பான இராப் பொழுதென்ன, அதற்குப் பொருளீட்டுதற்குறுப்பான பகற் பொழுதென்ன இவ்விரண்டுக்கும் நிர்வாஹகன். இப்படிப்பட்ட பெருமானைத் திருக்கண்ணமங்கையிற் காணப்பெற்றேன். .... .... .... (௫)

பேய்முலைத்தலை நஞ்சுண்ட பிள்ளையைத்
தெள்ளியார் வணங்கப்படும் தேவனை*
மாயனை மதிட்கோவலிடைகழி
மைந்தனை அன்றி யந்தணர் சிந்தையு
ளீசனை * இலங்குஞ்சுடர்ச் சோதியை
யெந்தையை யெனக்கெய்ப்பினில் வைப்பினை *
காசினை மணியைச்சென்று நாடிக்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| பேய் | பேய்ச்சியாகிய பூதனை யினுடைய | சிந்தையுள் | மனத்திலேயிருந்துகொண்டு |
| முலைத்தலை | முலையிடத்துண்டான | ஈசனை | அவர்களை நியமிப்பவனும் |
| நஞ்சு | விஷத்தை | இலங்கும் | ஒளிபெற்று விளங்குகின்ற |
| உண்ட | அமுது செய்த | சுடர் சோதியை | பெருஞ் சோதிமயமா யிருப்பவனும் |
| பிள்ளையை | சிறுவனும், | எந்தையை | எனக்கு ஸ்வாமியும் |
| தெள்ளியார் | தெளிந்த ஞானிகளால் | எனக்கு | எனக்கு |
| வணங்கப்படும் | ஆச்ரயிக்கப்படுகின்ற | எய்ப்பினில் | தளர்த்தி வருங்காலத்தில் (உதவக்கூடிய) |
| தேவனை | தெய்வமாயிருப்பவனும் | வைப்பினை | நிதி போன்றவனும் |
| மாயனை | ஆச்சரியனும் | காசினை | பொன்போன்றவனும் |
| மதிள் கோவல் இடைகழி மைந்தனை | திருமதிளையுடைய திருக்கோவலூரிலே இடைகழியிலுறைகின்ற யுவாவானவனும் | மணியை | ரத்னம் போன்றவனுமான எம்பெருமானை |
| அன்றி | தவிரவும் | | சென்று நாடி கண்ணமங்கையுள் |
| அந்தணர் | அந்தணர்களினுடைய | | கண்டுகொண்டேன்—. |

* * *—பூதனையினுடைய முலைத்தடத்துண்டான விஷத்தை அமுது செய்த சிறு குழந்தையெனினும் தெள்ளியார் பலர் கைதொழுந்தேவனாயிருப்பவன்; திருக்கோவலிடைகழியில் முதலாழ்வார்களோடு நெருக்கிக் கலந்து நித்யயுவாவா யிருக்குமவன்; அந்தணர்களின் சிந்தையிற் புகுந்து அவர்களைத் தன் வழியே நியமித்துக் கொண்டிருக்கிறவன்; இவர்களுடைய சரீரத்தில் உறைந்திருக்கச் செய்தேயும் அதிலுள்ள தோஷங்கள் தன் பக்கலில் தட்டாமல் ஔஜ்ஜ்வல்யமே வடிவாயிருப்பவன்; இப்படிப்பட்ட தன்மையைக் காட்டி என்னை ஆட்படுத்திக் கொண்டவன்; தளர்ந்த காலத்து உதவும் நிதிபோலே ஆபத்பந்துவாயிருக்குமவன்; பொன்னும் மணியும் போலே விரும்பத்தகுந்தவன்; ஆக இப்படிப்பட்ட பெருமானைத் திருக்கண்ணமங்கையிற் காணப்பெற்றேனென்றதாயிற்று.

"பேய்முலைத்தலை"=தலை-ஏழனுருபு. "முலைத்தலம்" என்றும் பாடமுண்டு; தெள்ளியார்—தெளிவான அறிவு பெற்றவர்கள். தேவன்—"திவு—க்ரீடாவிஜிகீஷாவ்யவஹாரத்யுதி ஸ்துதி மோதமதஸ்வப்நகாந்திகதிஷு" என்னும் வடநூலாருடைய தாது பாடத்தின்படியே பத்துப் பொருள்களுள்ளன. எய்ப்பினில்=எய்ப்பு—தளர்ச்சி; இன்—இடைச்சாரியை; இல்—ஏழாம் வேற்றுமையுருபு. வைப்பு—பூமியில் புதைத்து வைக்கப்படுமது என்று நிதிக்குக் காரணப் பெயர். காசு—பொன். .... .... .... (௪)

ஏற்றினை யிமயத்துளெம் மீசனை
 யிம்மையைமறுமைக்கு மருந்தினை *
ஆற்றலை யண்டத்தப்புறத் துய்த்திடு
 மையனைக் கையிலாழியொன்றேந்திய
கூற்றினை * குருமாமணிக் குன்றினை
 நின்றவூர் நின்ற நித்திலத்தொத்தினை *
காற்றினைப் புனலைச்சென்று நாடிக்
 கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (௫)

| | | | |
|---|---|---|---|
| ஏற்றினை | { காளைபோல் செருக்குடையவனும் | ஆற்றலை | { பரிபூர்ணசக்தியே வடிவெடுத்தது போலிருப்பவனும் |
| இமயத்துள் எம் ஈசனை | { இமயமலைத் திருப்பிரிதியிலெழுந்தருளியிருக்கின்ற ஸ்வாமியும் | அண்டத்து அப்புறத்து | { அண்டங்களுக்கு அப்பாலுள்ள பரமபதத்தில் |
| இம்மையை | { இஹலோகத்துப் பலன்களை யளிப்பவனும் | உய்த்திடும் | { (அன்பர்களைச்) செலுத்தவல்ல |
| | | ஐயனை | ஸ்வாமியும், |
| | | கையில் | திருக்கையில் |
| மறுமைக்கு மருந்தினை | { பரலோகபுருஷார்த்தத்திற்கு ஸாதகமாயிருப்பவனும் | ஒன்று ஆழி | ஒப்பற்ற திருவாழியை |
| | | ஏந்திய | தரித்துக்கொண்டுள்ளவனும் |

| | | | |
|---|---|---|---|
| கூற்றினை | (எதிரிகட்கு) யமன் போன்றவனும், | காற்றினை | காற்றுப்போல் ஸுகமளிப்பவனும் |
| குரு மா மணி குன்றினை | சிறந்த நீலமணிமயமான மலைபோன்றவனும் | புனலை | தண்ணீர்போல் உயிர் தரிக்கச் செய்பவனுமான பெருமானை |
| நின்றவூர் நின்ற நித்திலம் தொத்தினை | திருநின்றவூரி லெழுந்தருளியிருக்கிற முத்துத்திரள் போன்றவனும் | | சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன். |

* * *—நித்யாநந்தத்தினால் காளைபோல் மேனாணித்திருக்குமவன்; இமய மலையில் திருப்பிரிதி யென்னுந் திருப்பதியிலிருக்கு மிருப்பைக்காட்டி என்னை வசப்படுத்திக் கொண்டவன்; இஹலோகத்துப் பலன்களாகிய க்ஷேத்ரபுத்ர களத்ராதிகளையும் ஸ்வர்க்க லோகத்துப் பலன்களையும் விரும்புவார்க்கு அளிக்க வல்லவன்; இதற்குறப்பாக ஸர்வ சக்தியுக்தன்; தான் விரும்பின வ்யக்திகளைப் பரமபதத்திலே கொண்டு வைக்க வல்லவன்; கையிலே திருவாழி கொண்டு வியாபரிக்குந் திறத்தினால் எதிரிகட்கு யமன் போன்றவன்; சிறந்த நீலமணி மயமான பர்வதம்போன்ற வடிவையுடையவன்; திருநின்றவூரிலே முத்துத் திரள் போலே தாபஹரமான வடிவுகொண் டெழுந்தருளியிருப்பவன்; ஸ்பர்சத்தாலே பரமஸுகமளிக்குங் காற்றுப்போலே விரும்பத் தகுந்தவன்; தண்ணீர்போலே உயிர்தரிப்பதற்கு ஹேதுவாயுள்ளவன்; ஆக இப்படிப்பட்ட பெருமானைத் திருக் கண்ணமங்கையிற் காணப்பெற்றே னென்றாராயிற்று.

இமயத்து ளெம்மீசனை=கீழ் முதற்பத்தில் இரண்டாந் திருமொழியில் மங் களாசாஸநஞ் செய்யப்பெற்ற எம்பெருமான். ஆற்றல்—சக்தி. கூற்று—யமன். குருமாமணி='ஶ்ரு' என்னும் வடசொல் குரு எனத்திரிந்தது. 'குருமாமணி' யென்று ஸ்ரீ கௌஸ்துப மணியை வ்யவஹரிப்பது முண்டு; "குருமாமணிப் பூண்குலாவித்திகழுந் திருமார்வு" என்றார் பெரியாழ்வார்.

காற்றினை, புனலை=பஞ்சபூதங்களுள் காற்றையும் நீரையுஞ் சொன்னது மற்ற பூதங்களுக்கும் உபலக்ஷணமாகி, பஞ்ச பூதங்களுக்கும் அந்தர்யாமியா யிருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம். .... .... .... (ரு)

துப்பனைத் துரங்கம்படச் சீறிய
தோன்றலைச் சுடர் வான்கலன் பெய்ததோர்
*செப்பினை *திருமங்கை மணாளனைத் தேவனைத்
திகழும் பவளத்தொளி
யொப்பனை* உலகேழினை யூழியை
ஆழியேந்திய கையனை அந்தணர்
கற்பினை * கழுநீர்மலரும் வயல்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (சு)

| | |
|---|---|
| துப்பனை | ஸத்யஸங்கல்பனும் |
| துரங்கம் | குதிரைவடிவாய்வந்த அஸுரன் |
| பட | அழியும்படி |
| சீறிய | சீற்றங்கொண்ட |
| தோன்றலை | பெருமையிற்சிறந்தவனும் |
| சுடர் வான் கலன் பெய்தது | ஒளி பொருந்திய சிறந்த ஆபரணங்களை இட்டு வைப்பதற்கு உரிய |
| ஓர் செப்பினை | ஒரு கரண்டகம் போன்றவனும் |
| திருமங்கை மணாளனை | திருமகள் கொழுநனும் |
| தேவனை | அத்திருமகளுடைய சேர்த்தியால் விளங்குபவனும் |
| திகழும் பவளத்து ஒளி ஒப்பனை | விளங்குகின்ற பவழங்களின் ஒளியை ஒத்திருப்பவனும் |
| உலகு ஏழினை | ஏழுலகங்கட்கும் நியாமகனும் |
| ஊழியை | காலமாய் நிற்பவனும் |
| ஆழி ஏந்திய கையனை | சக்கரமேந்திய திருக்கையையுடையவனும் |
| அந்தணர் கற்பினை | அந்தணர்களின் கல்விக்கு விஷயமாயிருப்பவனுமான எம்பிரானை |
| கழுநீர் மலரும் வயல் | செங்கழுநீர்ப்பூக்கள் மலரப்பெற்ற வயல்களையுடைத்தான |

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன்—.

* * *—[துப்பன்.] துப்பு உடையவன் துப்பன்; துப்பாவது நினைத்தபடி செய்து தலைக்கட்டிக் கொள்ளவல்ல ஸாமர்த்தியம்; எம்பெருமானுடைய ஸத்யஸங்கல்பத்வத்தைச் சொன்னபடி. துரங்கம்—வடசொல்; விசையாக நடப்பதென்று குதிரைக்குக் காரணப்பெயர் கம்ஸனு லேவப்பட்ட அசுரர்களில் ஒருவனான கேசியென்பவன் குதிரை யுருவங் கொண்டு ஆயர்களுக்கெல்லாம் மிக்க பயங்கரனாய்க் கனைத்துக் கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களை யுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இரு பிளவாக வகிர்ந்து தள்ளினனென்ற வரலாறு காண்க.

சுடர்வான் கலன்பெய்ததோர் செப்பினை=ஒளிமிக்க சிறந்த திருவாபரணமிட்டு வைக்கும் செப்பு என்னலாம் எம்பெருமானை. "செங்கமலக் கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில், தங்கிய பொன்வடமும் தாள நன்மாதுளையின் பூவொடு பொன்மணியும் மோதிரமுங் கிறியும், மங்கல வைம்படையுந் தோள்வளையுங் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியும்" என்னுந் திருவாபரணங்கள் சீர்மை பெறுமிட மென்கை. அன்றியே, 'சுடர்வான்கலன்' என்று பிராட்டியாகிற திருவாபரணத்தைச் சொல்லிற்றாகவுமாம்; இதற்கு விவரணம் 'திருமங்கை மணாளனை' என்றது. 'தேவனை' என்றதற்கு—"பிராட்டியுந் தானுமான சேர்த்தியிலே உண்டான ஒற்றுமஞ்சளும் செம்பஞ்சிக் குழம்பும் மாளிகைச் சாந்தின் நாற்றமுமாய்க் கொண்டு திருமேனியில் புகர்தோன்ற நின்ற நிலை" என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்த வியாக்கியான வாக்கியம் ரஸிக்கத்தக்கது.

அந்தணர் கற்பினை='கற்பு' என்று நீதி நெறிக்கும் கல்விக்கும் பெயர்.

திருத்தனைத் திசைநான்முகன் தந்தையைத்
தேவதேவனை மூவரில் முன்னிய
விருத்தனை * விளங்குஞ் சுடர்ச்சோதியை
விண்ணை மண்ணினைக் கண்ணுதல் கூடிய
அருத்தனை * அரியைப் பரிகீறிய
வப்பனை அப்பி லாரழலாய்நின்ற
கருத்தனை * களிவண்டறையும் பொழில்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (எ)

திருத்தனை — எப்போதும் பூர்ணத்ருப்தி யுள்ளவனும்
திசை நான்முகன் தந்தையை — சதுர்முகப்ரஹ்மாவுக்கு ஜநகனும்
தேவதேவனை — தேவாதி தேவனும்
மூவரில் — ('அரி அயன் அரன்' என்று சொல்லப்படுகிற) மும்மூர்த்திகளுள்
முன்னிய — முற்பட்டிருக்கிற
விருத்தனை — தலைவனும்
விளங்கும் சுடர் சோதியை — விளங்குகின்ற தேஜோராசிமயமான திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவனும்
விண்ணை — மேலுலகங்கட்கு நியாமகனும்
மண்ணினை — மண்ணுலகுக்கு நியாமகனும்
கண் நுதல் கூடிய அருத்தனை — நெற்றிக்கண்ணனான சிவன் கூடப்பெற்ற (தனது திருமேனியிற்) பாதி பாகத்தையுடையவனும்
அரியை — ஹரியென்னுந் திருநாம முடையவனும்
பரி கீறிய அப்பனை — குதிரையாய்வந்த அஸுரனைக்கிழித்த உபகாரகனும்
அப்பில் ஆர் அழல் ஆய் நின்ற கருத்தனை — நீரிலுள்ள பாடபாக்நியானது ஜலமெல்லாம் தன்னிடத்தே வந்து சுவறும்படியிருக்குமா போலே ஸகலபதார்த்தங்களும் தன்னிடத்தே வந்து லயிக்கும்படி யிருக்கிற முழுமுதற்கர்த்தாவுமான எம்பெருமானை
களி வண்டு அறையும் பொழில் — களித்த வண்டுகள் இசை பாடுஞ் சோலைகளை யுடைய
கண்ணமங்கையுள், கண்டுகொண்டேன்—.

* * *—'த்ருப்த:' என்னும் வடசொல் 'திருத்தன்' எனத் திரிந்தது. அவாப்த ஸமஸ்த காமனாகையாலே எப்போதும் திருப்தியையுடையவன் என்றபடி. திசை நான்முகன் தந்தையை=இவ்வருகுண்டான உலகங்களைப் படைப்பதற்காகப் பிரமனைத் தோன்றுவித்தவ னென்கை. 'திசைமுகன்' என்றாவது 'நான்முகன்' என்றாவது பிரயோகிக்கவேண்டியிருக்க, 'திசை நான்முகன்' என்றது தமிழ் வழக்கு. 'வ்ருத்த:' என்னும் வடசொல் விருத்தன் எனத் திரிந்தது.

கண்ணுதல் கூடியவருத்தன்=நுதல்—நெற்றி; நெற்றியிற் கண்ணை

யுடையவன் ருத்ரன்; அவன் கூடிய ஸம்ஹாரத்தை யுடையவன். அரி—ஹரி. பரி—குதிரை; கேசி யென்னு மசுரன்.

அப்பில் ஆரழலாய் நின்ற=அப்பு—ஜலம்; (வடசொல்.) ஜலத்திலுள்ள ஆரழல்—படபாக்நி; அது ஜலாம்சமெல்லாம் தன்னிடத்திலே வந்து சுவறும் படியிருக்குமாபோலே ஸகல பதார்த்தங்களும் தன் பக்கலிலே வந்து லயிக்கும் படியிருக்கிறவன் என்கை. 'கர்த்தா' என்னும் வட சொல் 'கருத்தன்' எனத் திரிந்தது. .... .... .... .... .... (எ)

வெஞ்சினக்களிற்றை விளங்காய்வீழக்
கன்று வீசிய வீசனை * பேய்மகள்
துஞ்ச நஞ்சு சுவைத்துண்ட தோன்றலைத்
தோன்றல் வாளரக்கன் கெடத் தோன்றிய
நஞ்சினை * அமுதத்தினை நாதனை
நச்சுவாருச்சிமேல் நிற்கும் நம்பியை *
கஞ்சனைத்துஞ்ச வஞ்சித்த வஞ்சனைக்
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (அ)

| | |
|---|---|
| வெம் சினம் களிற்றை | கொடிய கோபத்தையுடைய மதயானை போன்ற வனும் |
| விளங்காய் வீழ | (அஸுரனுவேசித்த) விளா மரத்தின் காய்கள் உதிர்ந்து விழும்படி |
| கன்று | (அஸுரனானவொரு) கன்றை |
| வீசிய | தூக்கியெறிந்த |
| ஈசனை | ஸ்வாமியும் |
| பேய் மகள் | (பூதனையென்னும்) பேய்ச்சியானவள் |
| துஞ்ச | முடியும்படி |
| நஞ்சு | (அவளதுமுலையில் தடவி யிருந்த) விஷத்தை |
| சுவைத்து உண்ட | ருசிபார்த்து (உயிருடன்) கவர்ந்த |
| தோன்றலை | இளமகனும், |
| தோன்றல் வாள் அரக்கன் கெட | (இலங்கைக்கு) அரசனும் வாட்படையையுடைய னை இராவணன் மாளும்படி |
| தோன்றிய | திருவவதரித்த |
| நஞ்சினை | விஷம்போன்றவனும், |
| அமுதத்தினை | (அன்பர்க்கு) ஆரா வமுதமாயிருப்பவனும் |
| நாதனை | ஸர்வசேஷியாயிருப்பவனும் |
| நச்சுவார் உச்சி மேல் நிற்கும் நம்பியை | தன்னை ஆசைப்படுமவர் களின் தலைமீது நிற்கின்ற பரிபூர்ணனும் |
| கஞ்சனை துஞ்ச வஞ்சித்த வஞ்சனை | கம்ஸன்முடியும்படி அவனைவஞ்சித்த வஞ்சகனுமான பெருமானை |
| கண்ணமங்கையுள் கண்டு கொண்டேன்— | |

* * *—வெஞ்சினக் களிற்றை=மிக்க கோபங்கொண்ட மதயானை போன்றவன் எம்பெருமான் என்கிறார்; அடியவர்கள் பக்கல் எம்பெருமானுக்கு அநுக்ரஹம் இருக்கவேண்டியது போல, எதிரிகள் பேரில் நிக்ரஹம் இருக்க வேண்டியதும் ஆவச்யகமாதலால் அதனை அநுஸந்திக்கிறபடி. ஆச்ரித விரோதி கள் திறத்தில் வெஞ்சினக்களிறு போன்றவனென்க.

[விளங்காய் இத்யாதி.] முள்ளைக்கொண்டே முள்ளைக்களைவது போல, வத்ஸாஸுரனைக் கொண்டு கபித்தாஸுரன்மேல் வீசி யெறிந்து இருவரையும் ஒன்று சேர முடித்தவன்; பூதனையானவள் மாளும்படி அவளுடைய முலைத் தடத்து நஞ்சை உறிஞ்சியுண்ட மதலை; நானே அரசனென்று மார்பு நெறித்திருந்த இராவணனுக்கு விஷம்போல் தோன்றினவன்: விபீஷணாழ்வான் போல்வார்க்கு அமுதமாயிருப்பவன்; தன்னை விரும்புமன்பர்க்குச் சென்னிக்கு மலர்ந்த பூவாயிருப்பவன்; சம்பனுடைய தீய புத்தியை அவன்றன்னோடே போக்கி, உகவாதாரோடு செவ்வை யழியப் பரிமாறுமவன்; ஆக இப்படிப் பட்டவனைத் திருக்கண்ணமங்கையிற் கண்டேனென்றதாயிற்று.

தோன்றல்—சிறுபிள்ளையும் பெருவீரனும். 'நச்சுவாருச்சிமேல்' என்றவிடத்து உச்சியைச் சொன்னது மற்றும் அவயவங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்; திருவாய்மொழியில் (1-9) "இவையுமவையு முவையும்" என்ற திருவாய்மொழியில் "என்னுடைச் சூழலுளானே—என்னருகலிலானே—என்னொக்கலையானே—என்னெஞ்சினுளானே—என்னுடைத் தோளிணையானே—என்னுடை நாவினுளானே—என் கண்ணினுளானே—என்னெற்றியுளானே—என்னுச்சியுளானே" என்றவைகாண்க. .... .... .... (அ)

பண்ணினைப் பண்ணில்நின்றதோர் பான்மையைப்
பாலுள்நெய்யினை மாலுருவாய்நின்ற
விண்ணினை * விளங்குஞ்சுடர்ச் சோதியை
வேள்வியை விளக்கின் னொளிதன்னை *
மண்ணினை மலையை யலைநீரினை
மாலைமாமதியை மறையோர்தங்கள்
கண்ணினை * கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனே. (கூ,

| | |
|---|---|
| பண்ணினை | ஸங்கீதம்போல் இனியனானவனும் |
| பண்ணில் நின்றது ஓர் பான்மையை | அந்த ஸங்கீதத்தின் ஸாரமான தன்மைபோன்ற தன்மையையுடையவனும் |
| பாலுள் நெய்யினை | பாலினுள்ளே நெய் மறைந்திருப்பது போல எங்கும் மறைந்துறைநின்றவனும் |
| மால் உரு ஆய் நின்ற விண்ணினை | மிக்க பரப்பையுடைத்தான நித்ய விபூதிக்கு நாதனும் |
| விளங்கும் சுடர் சோதியை | விளங்குகின்ற பரஞ்சோதிமயமான திருமேனியையுடையவனும் |
| வேள்வியை | யாகஸ்வரூபியும் |
| விளக்கின் ஒளி தன்னை | விளக்கொளிபோலே ஸ்வயம் ப்ரகாசனும் |
| மண்ணினை | பூமிபோலே எல்லாவற்றையும் பொறுத்திருப்பவனும் |
| மலையை | மலைபோல் ஒருவராலும் அசைக்க வொண்ணாதவனும் |
| அலை நீரினை | தண்ணீர்போலே வேண்டுமிடங்களுக்கு வருவித்துக் கொள்ளவுரியவனும் |
| மாலை | அடியவரிடத்து வியாமோஹமே வடிவு கொண்டிருப்பவனும் |

| | | | |
|---|---|---|---|
| மா மதியை | சிறந்த புத்தியை யளிப்பவனும் | கண்கள் ஆரளவும் நின்ற | கண்கள் த்ருப்தி பெறுமளவும் நின்ற |
| மறையோர் தங்கள் கண்ணினை | வைதிகர்களுக்குக் கண் போன்றிருப்பவனுமான பெருமானை | | கண்ணமங்கையுள் கண்டு கொண்டேன்—. |

***—பண்ணினை = "பஶுர்வேத்தி ஶிஶுர்வேத்தி வேத்தி கா³நரஸம் ஃபணீ—பசுர் வேத்தி சிசுர் வேத்தி வேத்தி காநரஸம் பணீ" [ஸங்கீதத்தின் இனிமையை நாற்கால் விலங்கு அறியும், குழந்தை அறியும், பாம்பு அறியும்] என்கிறபடியே பண் அனைவர்க்கும் ஸ்ப்ருஹணீயமாயிருப்பது போல எம்பெருமானும் விரும்பத்தக்கவன் என்றபடி. [பண்ணில் நின்றதோர் பான்மையை] 'பண்ணினை' என்று கீழ்ச் சொன்னதன் கருத்தே இதற்குமாயினும் எம்பெருமானுடைய போக்யதையைப் பன்னியுரைக்கிறபடி. இதில் புநருக்தி தோஷம் புகாது.

[பாலுள் நெய்யினை.] 1 "கறந்த பாலுள் நெய்யேபோல் இவற்றுளெங்கும்" என்கிறபடியே பாலினுள்ளே உறைந்திருக்கும் நெய்போலே * கரந்த சிலிடந்தொறுமிடந்திகழ் பொருடொறுங் கரந்தெங்கும் பரந்துளன் என்கை. [மாவுருவாய் நின்ற விண்ணினை.] நித்ய விபூதி நிர்வாஹகனாயிருக்குமவனென்கை. 'மாவுருவாய் நின்ற' என்றது விண்ணுக்கு விசேஷணம்; பரமபதமானது த்ரிபாத்விபூதி யென்னப்படும்; "பாதோ³ऽஸ்ய விஶ்வா பூ⁴தாநி த்ரிபாத³ஸ்யாம்ருதம் தி³வி." என்கிற புருஷஸூக்தத்தின்படியே இந்த விபூதியில் எல்லா பூதங்களும் இவனுக்கு காலத்தொன்று என்னும்படி அற்பமாயிருக்கும்; பரமாகாசத்தில் அவனுடைய நித்யமான விபூதி த்ரிபாத் என்னும்படி மும்மடங்காயிருக்கும்; ஆக இந்தப் பரப்பைத் தெரிவிக்கும் இவ்விசேஷணம். [விளங்கும் சுடர்ச் சோதியை.] அங்கே அளவற்ற தேஜோரூபமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய் நிற்பவன். [வேள்வியை.] யஜ்ஞஸ்வரூபி; ஸகல கருமங்களாலும் ஆராதிக்கப்படுமவனென்றவாறு. [விளக்கினொளிதன்னை.] விளக்கொளியானது தன்னைத்தானே பிரகாசிப்பித்துக் கொண்டு பிறவற்றையும் பிரகாசப்படுத்துமா போலே ஸ்வபர ப்ரகாசகன்.

[மண்ணினை.] பூமியானது 'ஸர்வம்ஸஹா' என்ற பெயர்க்கு ஏற்ப எல்லாவற்றையும் பொறுத்திருப்பது போல, செய்தார் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுப்பவனென்கை.

[மலையை.] இப்படிப்பட்ட தன் ஸ்வபாவம் ஒருவரால் சலிப்பிக்கவொண்ணாமே உறுதிகொண்டிருப்பவனென்கை. [அலைநீரினை.] பள்ளமான விடங்களிலே பாயுமே தண்ணீர்; குஹப்பெருமாள், விதுரர், மாலாகாரர் போல்வாரிடத்தும் பாயுந்தண்ணீர் எம்பெருமான். [மால்.] அன்பரிடத்தில் வ்யாமோஹமே வடிவாயிருப்பவன்.

---

1. திருவாய்மொழி 8-5-10.

[மாமதியை.] "தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் । ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்திதே" என்று கீதையில் தானேசோதி வாய்திறந் தருளிச்செய்தபடியே, தன்னைப் பெறுதற் குறுப்பான சிறந்த புத்தியைத் தந்தருள்பவனென்கை; மதி—புத்தி; வடசொல். [மறையோர் தங்கள் கண்ணினை.] வைதிகர்களுடைய கண் வேறெங்கும் பட்டி புகாமல் தன்னையே இலக்காகக் கொண்டிருக்கும்படி எப்போதும் அவர்களது கண்ணைவிட்டுப் பிரியாதவனென்றவாறு. இப்படிப்பட்ட பெருமானைக் கண்ணாரக்கண்டு கொண்டேன் கண்ணமங்கையி லென்கிறார். .... .... .... (௯)

கண்ணமங்கையுட் கண்டுகொண்டேனென்று
காதலாற் கலிகன்றி யுரைசெய்த *
வண்ணவொண்டமி ழொன்பதோ டொன்றிவை
வல்லராயுரைப்பார் மதியந்தவழ் *
விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில் வெண்சங்கமொன்றேந்திய
கண்ண ! * நின்றனக்குங் குறிப்பாகில்
கற்கலாங் கவியின்பொருள்தானே. (க௦)

| | |
|---|---|
| கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன் என்று | 'திருக்கண்ணமங்கையில் (எம்பெருமானை) ஸேவிக்கப்பெற்றேன்' என்று |
| காதலால் உரைசெய்த | அன்புடனருளிச்செய்த |
| வண்ணம் ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்று இவை | இசையையுடைத்தாய் அழகியதான இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் |
| வல்லர் ஆய் உரைப்பார் | நிபுணராய்ச் சொல்லுமவர்கள் |
| மதியம் தவழ் விண்ணில் | சந்திரன் தவழப்பெற்ற மேலுலகங்களில் (சென்று) |
| விண்ணவர் ஆய் | தேவர்களாகி |
| மகிழ்வு எய்துவர் | (போகங்களையநுபவித்து) ஆநந்தமடைவர்கள் ; |
| மெய்ம்மை சொல்லில் | உண்மையாகச் சொல்லப் புகுந்தால், |
| வெண் சங்கம் ஒன்று ஏந்திய கண்ண | வெண்ணிறமாய் விலக்ஷண மான ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் தரித்துள்ள பெருமானே ! |
| குறிப்பு ஆகில் | திருவுள்ளமாயின் |
| கவியின் பொருள் | இப்பாசுரங்களின் பொருள் |
| நின் தனக்கும் கற்கலாம் | (ஸர்வஜ்ஞனை) உனக்கும் கேட்டுணரத்தக்கதாகும். |

* *o*—கலமந்த மில்லாதோர் நாடாகிய திருநாட்டிற் சென்று காண வேண்டிய பரமபுருஷனை இந்நிலத்தில்தானே திருக்கண்ணமங்கையில் காணப் பெற்றேனென்று அபிநிவேசத்தோடே ஆழ்வாருளிச்செய்த இத்திருமொழியை நன்கு ஓதியுணருமவர்கள் விண்ணுலகத்தில் தேவர்களாய் விளங்கி மகிழ்வர்கள் என்று பயனுரைத்து, அவ்வளவோடே தலைக்கட்ட மாட்டாமல் எம்பெருமானை நோக்கி ஒரு வார்த்தை யருளிச்செய்கிறார் ஈற்றடியில்; எம்பெரு

மானே ! உனக்கும் இதிலே ஆதரமுண்டாகில் எனக்கு சிஷ்யனாயிருந்து கற்க வேண்டுங்காண் என்கிறார். இத்திருமொழியின் இனிமையைக் கண்டவாறே எம்பெருமான்றானும் "கலயாமி கலித்வம்ஸம்" என்று தனியன் தொடங்கி அதுஸந்தித்து அதிகரிக்கப் புகுவன் என்று காட்டினவாறு. அவ்வளவு சீரிய பொருள் குடிகொண்டதாம் இத்திருமொழி. சொல்லின்பமும் பொருளின்பமும் எம்பெருமானையும் வணங்கப்பண்ணுமென்க.

"ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனென்று இறுமாந்திருந்தால் போகாது; என்பாடே அதிகரிக்கில் அறியலாம்" என்றும், "ஒரு வஸிஷ்டன்பாடே ஸாந்தீபிநிபாடே தாழநின்று அதிகரிக்கக்கடவ அவனுக்குத் திருமங்கையாழ்வார்பாடே அதிகரிக்கை தாழ்வோ?" என்றுமுள்ள வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் இங்கு அறியத்தக்கன. ராமாவதாரத்தில் வஸிஷ்ட சிஷ்யனென்றும், க்ருஷ்ணாவதாரத்தில் ஸாந்தீபிநி சிஷ்யனென்றும் பேர் பெற்ற பெருமானுக்கு அர்ச்சாவதாரத்தில் பரகால சிஷ்யனென்று பெயர் பெறுகை பெருமையே யாமென்கை.

ஈற்றடியில் 'நீ கற்கலாம்' என்றும் பாடமுண்டு. .... .... (கo)

அடிவரவு:—பெரு, மெய், எங்கள், பேய், எற்றின், தப்பன், திருத்தன், வெஞ்சினம் பண், கண்ண மங்கை, சிலை.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
பெரிய திருமொழி
ஏழாம்பத்து முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழியில்,

## எட்டாம்பத்து—முதல் திருமொழி,

## சிலையிலங்குபொன்னாழி.

[பெருமாள் கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியில், எம்பெருமான் தன்னுடைய படிகளையெல்லாம் ஆழ்வார்க்கு விளங்கக் காட்டிக்கொடுக்க, இனிய பாசுரங்களாலே வாயாரப்பேசி யநுபவித்தார்; இப்படிப்பட்ட மஹாபுருஷனோடே ஸம்ச்லேஷிக்க வேணுமென்று ஆசைகிளர்ந்தது; ஆசைப்பட்டபடியே பாஹ்ய ஸம்ச்லேஷம் கிடைக்கப்பெறாமையாலே தளர்ந்து தம் நிலைமைமாறிப் பிராட்டிதசையையடைந்து அதுதன்னிலும் தன்வாயாலே பேசமாட்டாதே திருத்தாயார்வாயாலே பேசவேண்டும்படியான நிலைமை நேர்ந்தமை இத்திருமொழியில் வெளியாகின்றது.

பரகாலநாயகியாகிய பெண்மகள் பலவற்றையும் சொல்லி வாய்வெருவுகிறபடியைக் கண்ட திருத்தாயார் 'இப்போது இவளுடைய பேச்சுக்களின் ஸந்நிவேசத்தை ஆராயுமளவில் இவள் பரத்வத்திலே ஈடுபட்டிருக்கமாட்டாள்; விபவாவதாரங்களிலும் ஈடுபட்டிருக்கமாட்டாள்; வ்யூஹரூபத்தையாகிலும் அந்தர்யாமித்வத்தையாகிலும் சிந்தித்திருக்கவேமாட்டாள்; அர்ச்சாவதாரங்களில் வைத்துக்கொண்டு திருக்கண்ணபுரத் தெம்பெருமானளவில்தான் ஈடுபட்டவளா யிருக்கவேணும்; இல்லையாகில் இப்படிப்பட்ட வாய்வெருவுதல் இவளுக்குண்டாகப்பெறாது' என்று நெஞ்சிற்கொண்டு,—வினவவந்தவர்களை நோக்கி 'இப்பெண்பிள்ளையின் பேச்சுக்கள் இங்ஙனேயிருக்கையாலே இவள் கண்ணபுரத்தம்மானைக் கண்டவளா யிருக்கவேணும்போலே' என்று சொல்லுகிற அடைவாக இத்திருமொழி அருளிச்செய்யப்படுகிறது.

பெண்மகளின் நிலைமையைக்கண்ட திருத்தாயார் 'இவள் கண்ணபுரத்தம்மானைக் கண்டாளாகவேணும்' என்று தெரிந்துகொண்டது எங்ஙனே? என்கிற சங்கை நீங்குமாறு பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தில் ஓர் ஐதிஹ்யமருளிச்செய்யப்பட்டுள்ளது காணீர்;—

"ராஜேந்த்ர சோழனிலே ஒரு ப்ராஹ்மணன்மகன் புத்த (பௌத்த) சோட்டை ஸம்ப்ரதாயமுண்டாய்ப் பூணூலையும் குடுமியையும் அறுத்துப் போகட்டான்; கூரத்தாழ்வான் அங்கே நடந்தவளவிலே சிகாயஜ்ஞோபவீதங்களைத் தரித்துக் கொண்டுவந்து புகுந்தான்; பிதாவானவன் 'கூரத்தாழ்வானைச் சந்தித்தாயோ?' என்று கேட்டான். நம்பிள்ளை 'நீ இதறிந்தபடி எங்ஙனே?' என்று கேட்க, 'ஆழ்வான் ஸந்நிதியில் தமோபிஹதரும் ஸத்வஸ்தராவர்கள் காண்' என்றான்" என்று.

(அதாவது—) ராஜேந்த்ரசோழனென்னுமூரிலே ஒரு ப்ராஹ்மணகுமாரன் பௌத்தருடைய ஸஹவாஸத்தாலே மதிகெட்டுத் தன்பூணூலை அறுத்தெறிந்தும் குடுமியைச் சிரைத்தொழித்தும் வ்ராத்யனாய்த் திரிந்துகொண்டிருந்தான்; இப்படியிருக்கையில் ஒருநாள் அவ்வூர்க்குக் கூரத்தாழ்வான் எழுந்தருளினார். அந்த ப்ராஹ்மணகுமாரனுக்கு ஆழ்வான் ஏதாவது ஹிதோபதேசம் செய்தருளினரோ இல்லையோ தெரியாது; ஆழ்வான் அவ்வூர்க்கு எழுந்தருளினவளவே தெரியும். அவன் அப்போதே முன்போல ப்ராஹ்மண லக்ஷணங்களுடன் வீட்டுக்குவந்து சேர்ந்தான்; அவனைக்கண்ட அவனது தகப்பனார் 'பிள்ளாய்! கூரத்தாழ்வானோடு சந்திக்கப்பெற்றாயோ?' என்று கேட்க, அங்கிருந்த சிலர் இதைக்கேட்டு, உண்மையில் ஆழ்வானுடைய அருளாலேயே இவன் திருந்தினான் என்பதை அவர்கள் மாத்திரம் நன்கு அறிந்தவர்களாகையாலே இந்த மருமத்தை இவர் எங்ஙனே தெரிந்துகொண்டார் என வியந்து 'நீர் இதை எப்படி தெரிந்துகொண்டீர்?' என்று கேட்க, 'ஆழ்வானுடைய ஸந்நிதாநத்தில் தாமஸர்களும் ஸாத்விகர்களாய்த் திருந்துவது வழக்கமன்றோ? நெடுநாளாகத் தாமஸனாய்க் கெட்டுப்போனவிவன் இன்று ஸாத்விகபுத்தியுண்டாகித் திருந்தினனென்றால் ஆழ்வானோடே இவன் ஸந்தித்திருக்கவேணுமென்று தோன்றிற்று' என்றாராம் அவனது தகப்பனார்.

அதுபோல, இத்தனைநாளுமில்லாமல் இன்று விலக்ஷணமாகவுண்டான இப்பெண்பிள்ளையின் நிலைமையைக்கண்டால் இவள் திருக்கண்ணபுரத் தெம்பெருமானைக் காணப்பெற்றவளாயிருத்தல் வேண்டும்; அப்பெருமானுக்கே இப்பாடுபடுத்தவல்ல சக்தியுண்டு—என்று பரகாலநாயகியின் திருத்தாயார் அறுதியிட்டன ளென்கை.

இதனால், திருக்கண்ணபுரத் தெம்பெருமானுடைய வைலக்ஷண்யமும் ஆழ்வாருடைய இப்போதையநிலைமையின் வைலக்ஷண்யமும் தெரிவிக்கப்பட்டவாறும். .... .... .... *

சிலையிலங்கு பொன்னாழி திண்படை தண்டொண்சங்க மென்கின்றாளால் *
மலையிலங்கு தோள்நான்கே மற்றவனுக்கேற்றே கா ணென்கின்றாளால் *
முலையிலங்கு பூம்பயலை முன்போட அன்போடி யிருக்கின்றாளால் *
கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (க)

| | |
|---|---|
| | (எனது பெண்பிள்ளையானவள்) |
| சிலை | 'சார்ங்கவில்' (என்றும்) |
| இலங்கு பொன் ஆழி | 'விளங்குகின்றதும் விரும்பத்தக்கதுமான திருவாழி' (என்றும்) |
| திண் படை | 'வலிமைபொருந்திய வாட்படை' (என்றும்) |
| தண்டு | 'கதை' (என்றும்) |
| ஒண் சங்கம் என்கின்றாள் | 'அழகிய சங்கு' என்றும் சொல்லாநின்றாள், |
| ஆல்! | இஃது என்னே! |
| மற்று | இன்னமும் |
| அவனுக்கு | 'அப்பெருமானுக்கு |
| மலை இலங்கு | மலைபோல் விளங்குகின்ற |
| நான்கு தோளே | நான்கு திருத்தோள்களும் |
| எற்றே காண் | எப்படி அழகாயிருக்கின்றன பார்' |
| என்கின்றாள் | என்று சொல்லுகிறாள்; |
| முலை இலங்கு | முலையில் விளங்குகின்ற |
| பூ பயலை | அழகிய பசலைநிறமானது |
| முன்பு ஓட | முன்னேசென்று வழிகாட்ட |
| அன்பு ஓடி இருக்கின்றாள் | அன்பு பின்செல்லப் பெற்றிருக்கின்றாள்; |
| கலை இலங்கு மொழி ஆளர் | சாஸ்த்ரப்பயிற்சி விளங்குகின்ற வாய்ப்பேச்சையுடையவர்கள் வாழ்கிற |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற |
| அம்மானை | சௌரிப்பெருமாளை |
| கண்டாள்கொல் ஓ | ஸேவிக்கப்பெற்றாளோ! |
| | [இல்லையாகில் இப்படிப்பட்ட நிலைமை இவளுக்கு எப்படி உண்டாகும்!.] |

* * *—தன் பெண்மகள் சொன்னவார்த்தைகள் தனக்கு மிகவும் ரஸித்திருந்தபடியாலே அவற்றைத் தன்வாயாலும் பேசியநுபவிக்கிறாள் திருத்தாய். என்மகளானவள் எம்பெருமானுடைய திவ்யபூஷணங்களைக் கண்டுகந்து அவற்றையே வாய்வெருவுகின்றாள்; சிலை என்கிறாள்; இலங்கு பொன்னாழி என்கிறாள்; திண்படை என்கிறாள்; தண்டு என்கிறாள்; சங்கு என்கிறாள்; அவனுக்கு மலைபோன்ற நான்கு திருத்தோள்களுண்டு என்கிறாள்; அவற்றின் அழகை என் சொல்வேனென்கிறாள்; நாயகன் விஷயத்தில் அன்பு உண்டான பின்பு முலையிற் பசலைநிறம் தோன்றுவது இயல்பு; இவள் அங்ஙனன்றிக்கே முந்துற முன்னம் பசலைநிறமுண்டாகவும் பின்பு அன்புவிளையவும் பெற்றிருக்கின்றாள்; இப்படிப்பட்ட இவளது தன்மையை நோக்குமளவில் இவள் கண்ணபுரத்தெம்பெருமானைக் கண்டவளாயிருக்கவேணும்போலே—என்றாளாயிற்று.

முதலடியில் எம்பெருமானுடைய பஞ்சாயுதங்கள் கூறப்பட்டிருக்கின்றன; சங்கு சக்கரம் வில் வாள் தண்டு என்பவை எம்பெருமானுக்கு ஆயுதங்களாயிருப்பதுதவிர ஆபரணங்களாகவு மிருக்கும். எம்பெருமானைக்கொண்டு விரோதி நிரஸநம் பண்ணுவித்துக்கொள்ள விரும்புமவர்களே அவற்றை ஆயுதங்களாக அநுஸந்திப்பர்கள்; அவனைக்கொண்டு ஒருகாரியங் கொள்ளுகையின்றியே அவனுக்குப் பல்லாண்டுபாடுகையே புருஷார்த்தமா யிருக்குமாழ்வார் அவற்றை ஆபரணமாகவே அநுஸந்திப்பரென்க.

இலங்குபொன்னாழி=மேகத்திலே மின்னல் மின்னினாற்போலே கரிய திருமேனிக்குப் பரபாகமாய்க் கொண்டு விளங்காநின்ற திருவாழியென்கை. "திண்படை" என்றது நந்தகமென்னும் வாட்படையைச் சொன்னபடி. படை—ஆயுதக்

கட்குப்பொருப்பெயரும் வாளுக்குச் சிறப்புப் பெயருமாம். தண்டு-கௌமோதகி யென்னும் மதை. ஒண்சங்கம்=1. "கருப்பூரம் நாறுமோ கமலப்பூநாறுமோ, திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ? மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும், விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே!" என்றும், 2. "உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம், கண்படை கொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே" என்றும் பேசும்படியான சிறப்புவாய்ந்த சங்கு என்றபடி.

இரண்டாமடியில், எற்றேகாண்—ஆச்சரியக் தோற்றச் சொல்லுகிறபடி. இது மகள்வார்த்தையைத் தாய் அநுவதிக்கிறதாகவுமாம்; அன்றி, மகள் வார்த்தைக்கு ஆச்சரியப்பட்டுத் தாய் சொல்லுகிறதாகவுமாம். தாய்வார்த்தையாகக்கொள்ளில் 'என்கின்ருளால்' என்றதற்குப் பிறகு 'எற்றேகாண்' என்றதை யோஜித்துக் கொள்ளவேணும்.

முலையிலங்கு பூம் பயலே முன்போட அன்போடியிருக்கின்ருள்=நாயகனைப் பிரிந்த வருத்தத்தினுல் முலைத்தடத்தில் தோன்றும் நிறவேறுபாடு 'பசலே' என்றும் 'பயலே என்றும் சொல்லப்படும்; அதாவது தேமல் போன்ற வைவர்ணியம். முதலில் நாயகனிடத்து அன்பு உண்டாகி, அதனுல் கலவி நேர்ந்து, கலவிக்குப் பின்பு பிரிவு வந்தே தீருமாதலால் அப்பிரிவினுல் பயலே உண்டாக வேண்டியது முறைமையாயிருக்க, பயலே முன்பு ஓடவும் பிறகு அன்பு ஓடவும் பெற்றதாக இங்குச் சொல்லப்படுகின்றதே, இஃது என்னெனனில்; இதற்கு இரண்டு வகையாக ஸமாதாநம் கூறலாம்; தாய் மகளை நோக்கும்போது முன்னம் முலையிலங்கு பூம் பயலேயைக் கண்டாள்; பிறகு எம்பெருமானிடத்தில் அவளுக்குண்டான அன்பை அறிந்தாள்; ஆகையாலே, தான் கண்ட க்ரமப்படியே பேசுகிருள் என்பது ஒன்று. மற்ற விஷயங்களைப்போலல்லாமல் பகவத் விஷயம் விலக்ஷணமாகையாலே, அவ்விஷயத்திலுண்டாகும் அன்பின் காரியமும் விலக்ஷணமாயிருக்குமாதலால் முன்னம் பயலே நிறத்தையுண்டாக்கிப் பின்பு அன்பை யுண்டாக்கிற்று என்று ஒருவகை அதிசயோக்தியாகச் சொல்லப்படுகிறது என்பது மற்றொன்று. 3. "முந்திவானம் மழை பொழிய மூவாவுருவின் மறையாளர், அந்தி மூன்று மனலோம்பும்" என்றாப்போலே கொள்க.

ஆக இப்படிப்பட்ட இவளது நிலைமைகளை நோக்குங்கால் இவள் கண்ணபுரத்தம்மானைக் கண்டாளாக வேணுமென்று ஈற்றடியால் தலைக்கட்டுகிறபடி. கலையிலங்கு மொழியாளர்=திருக்கண்ணபுரத்திலுள்ளாருடைய வெறும் வாய்ப்பேச்சுக்களிலும் சாஸ்த்ரம் விளங்குமாம்; அதாவது—அவர்கள் சாஸ்த்ர விஷயமாகப் பேசுகைபன்றியே 'உண்ண உடுக்க' என்று உலக வார்த்தைகள் பேசினும் அவற்றிலும் அவர்களுடைய பாண்டித்தியம் கண்டுகொள்ளலா யிருக்கு

1. நாச்சியார் திருமொழி 7—1. 2. நாச்சியார் திருமொழி 7—8.
3. பெரியதிருமொழி 7-5-1.

மென்கை. அறிவு நிரம்பியிருப்பார் எது பேசினாலும் சாஸ்த்ரார்த்தங்கள் பெருகுமிறே. .... .... .... .... .... (க)

செருவரைமுன் னாசறுத்த சிலையன்றே கைத்தலத்த தென்கின்றாளால் *
பொருவரைமுன் போர்தொலைத்த பொன்னாழி மற்றொருகையென்கின்றாளால் *
ஒருவரையும் நின்னொப்பா ரொப்பிலாவென்னப்பா! வென்கின்றாளால் *
கருவரைபோல் நின்றானைக் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (உ)

| | |
|---|---|
| முன் | முன்னம் |
| செருவரை | போர்வீரர்களை |
| ஆசு | சீக்கிரமாக |
| அறுத்த | தொலைத்த |
| சிலை அன்றே | சார்ங்க வில்லன்றே |
| கைத்தலத்தது | திருக்கையிலுள்ளது |
| என்கின்றாள் | என்று சொல்லுகிறாள்; |
| மற்றொரு கை | மற்றொரு திருக்கையிலே, |
| முன் | முன்பொருகால் |
| பொருவரை | (சிறகோடு கூடிப்) போர் செய்த மலைகளை |
| போர் | யுத்தத்தில் |
| தொலைத்த | பங்கமடைவித்த |
| பொன் ஆழி | அழகிய திருச்சக்கரம் (உள்ளது) |
| | என்கின்றாள் ஆல்—; |
| ஒப்பு | ஒத்திருக்கும் விஷயத்தில் |
| நின் ஒப்பார் ஒருவரையும் இலா | உன்னோடொத்தவர்கள் ஒருவருமில்லாதிருக்கப் பெற்ற |
| என் அப்பா | என் நாயனே! |
| | என்கின்றாள் ஆல்—; |
| கரு வரை போல் நின்றானை | அஞ்சனமலைபோல் நிற்பவனான |
| | கண்ணபுரத்து அம்மானை கண்டாள் கொலோ—. |

* * *—[செருவரையித்யாதி.] ஆசைப்பட்டாரை உகந்து அணைப்பதே எம்பெருமானுடைய ஸ்வபாவமாயிருக்கவும் மிக்க ஆசை கொண்டிராநின்றதம்மை இப்படி அவன் உபேக்ஷித்திருப்பதற்கு என்ன ஹேது? தன் காதலியான மைதிலியைப் பிரிந்திருக்கையில் கலவிக்கு விரோதியாயிருந்தவற்றையொழித்து அவளை அணைந்து கொண்டவனன்றோ அவன்; அப்படியே நம்முடைய கலவிக்கும் ஏதாவது விரோதியுண்டாகில் அதனைத் தொலைத்து வந்து அணைவதற்குறுப்பான உபகரணம் அவனிடம் இல்லையோ? எத்தனை போர்வீரர்கள் எதிரிட்டாலும் அழிக்கவல்ல சார்ங்கவில் கைத்தலத்திலுண்டே; இது கொண்டு முன்னே பல விரோதிகளையும் தொலைத்திருக்கவில்லையோ? அப்படியிருக்க இப்போது வாளாவிருப்பதற்கு என்ன காரணம் என்கிறாள்.

செருவர்—செருச் செய்பவர்; (செரு—யுத்தம்.) ஆசறுத்த='ஆஜி:' என்னும் வட சொல் 'ஆசு' எனத் திரிந்ததென்று கொண்டால் யுத்தமென்று பொருள்; யுத்தத்திலே செருவரை யறுத்த சிலை என்க. அன்றியே, 'ஆசு' என்னும் வட சொல்லின் விகாரமாகக் கொண்டால் 'விரைவாக' என்று பொருள்.

பண்டு திருக்கண்ணபுரத்து அரையரொருவர் விரோதிவர்க்கங்களால் தாம் நோவுபட நேர்ந்த காலத்து சௌரிராஜன் திருமுன்பே சென்று "செருவரை

முன்னைசறுத்த சிலையன்றோ கைத்தலத்தது" என்று தாளந்தட்டி விண்ணப்பம் செய்ய, பெருமாள் திருவுள்ள முவந்தருளி அரையரை நோக்கி 'ஓய்! நீர் அஞ்ச வேண்டா; ஒரு க்ஷணத்திலே விரோதிகளை முடிக்கிறோம்' என்று அருளிச் செய்து அப்படியே தலைக்கட்டினரென்று வியாக்கியானத்தில் ஓர் ஐதிஹ்ய மருளிச்செய்வர்.

பொருவரை முன் போர் தொலைத்த பொன்னாழி மற்றொருகை யென்கின்றாள் = முன்சொன்ன சிலையிற் காட்டிலும் பராக்ரமம் மிக்க திருவாழியாழ்வான் மற்றொரு திருக்கையிலே விற்றிருக்கவும் நம்முடைய கலவிக்கு உண்டான விரோதிவர்க்கம் தொலையுமாறு திருவுள்ளம் பற்றவில்லையே அவர் என்கிறாள். முற்காலத்தில் மலைகளெல்லாம் சிறகெழுந்து பறந்து ஆங்காங்கு வீழ்ந்து பல விடங்களிலும் நாசத்தை யுண்டுபண்ணு நிற்கையில் எம்பெருமான் உபேந்த்ர மூர்த்தியாய் வளர்ந்தருளுகிற காலத்திலே திருவாழியைக் கொண்டு அம்மலைகளின் இறகுகளை அறுத்தொழித்ததாக வரலாறு அறிக. ஸுதர்சந சதகத்தில் "யாதூயாதூதவொகா" (27) என்ற ச்லோகத்தில் "க்ருதஸமாஷிமஹுஷிநா" என்றது காண்க. (அவ்விடத்து உரையில் யாமுரைத்த விசேஷங்களுங் காண்க.)

'பொருவரை முன்போர் தொலைத்த' என்பதற்கு வேறொருவகையாகவும் பொருளுரைப்பர்; 'வரை' என்பதை உவமையாகுபெயராகக் கொண்டு, மலை போன்ற யானை (அதாவது) கம்ஸனுடைய குவலயாபீடமென்னும் மதயானை, அதைத் தொலைத்த என்று. இப்பொருளில் 'பொன்னாழி' என்றது அறுகாழி மோதிரத்தை என்பர்.

ஒருவரையும் நின்னொப்பா ரொப்பிலா வென்னப்பா என்கின்றாள் = திருவிண்ணகரப்பன் திருநாமம் 'ஒப்பிலியப்பன்' என்பது; "மின்னப் பொன் மதிள்சூழ் திருவிண்ணகர்ச் சேர்ந்தவப்பன், தன்னொப்பா ரில்லப்பன்" என்றார் திருவாய்மொழியில்; அப்பெருமானை இங்கு விளிக்கப்படுகிறானென்னலாம். இங்ஙனே கொள்வதற்கு ஒரு பொருத்த முண்டு; பெரிய திருமடலில் "தாமரைமேல் மின்னிடையாள் நாயகனை விண்ணகருட் பொன்மலையை" என்றும் "கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்" என்றும் திருவிண்ணகரப்பனையும் திருக்கண்ணபுரத்தம்மானையும் பொன்மலையாகப் பேசின ஒற்றுமை நயம் உண்டிறே. .... .... .... .... .... (உ)

துன்னுமா மணிமுடிமேல் துழாயலங்கல் தோன்றுமாலென்கின்றாளால் *
மின்னுமா மணிமகரகுண்டலங்கள் வில்வீசுமென்கின்றாளால் *
பொன்னின்மா மணியார மணியாகத்திலங்குமா லென்கின்றாளால் *
கன்னிமா மதிள்புடைசூழ் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள் கொலோ? (௩)

| | |
|---|---|
| துன்னு | நெருங்கியிருக்கின்ற |
| மா மணி | சிறந்த ரத்னங்களிழைக்கப் பெற்ற |
| முடி மேல் | கிரீடத்தின் மீது |
| துழாய் அலங்கல் | திருத்துழாய் மாலை |
| தோன்றும் ஆல் என்கின்றாள் ஆல் | விளங்குகின்றதே! என்று சொல்லுகிறாளே!; |
| மின்னு | ஜ்வலிக்கின்ற |
| மா மணி | சிறந்த மணிகளழுத்தின |
| மகர குண்டலங்கள் | மகரக் குழைகள் |
| வில் வீசும் என்கின்றாள் ஆல் | ஒளிவீசுகின்றன என்று சொல்லுகிறாளே!; |
| பொன்னின் மா மணி ஆரம் | பொன்னாலே செய்யப்பட்டதும் சிறந்த ரத்னங்களழுத்தப்பட்டதுமான ஹாரமானது |
| அணி ஆகத்து | அழகிய திருமார்பிலே |
| இலங்கும் ஆல் என்கின்றாள் ஆல் | விளங்காநின்றதே! என்று சொல்லுகிறாளே!; |
| கன்னி மா மதிள் | அழிவில்லாத பெரிய மதிள்களாலே |
| புடை சூழ் | நாற்புறமும் சூழப்பட்ட |

கண்ணபுரத்து, அம்மானை கண்டாள் கொலோ—.

* * *—துன்னுமா மணிமுடிமேல் துழாயலங்கல் தோன்றுமா லென்கின்றாளால்—'பெண்ணே! உனக்கு அடக்கம் வேண்டும்; இங்ஙனே வாய்வெருவுதல் தகாது' என்று தாயாகிய இவள் ஹிதம் சொன்னால் அதற்கு மகள் இங்ஙனே சொல்லுகிறாளாம்—எம்பெருமான் திருமுடிமேல் அணிந்து கொண்டிருக்கிற திருத்துழாய் மாலையானது என்னெஞ்சைக் கவர்ந்து என் கண்முன்னே தோன்றுகின்றதே!, உங்களுடைய வார்த்தை யொன்றும் என் செவியில் விழுகின்றன வில்லையே! என்கிறாளென்றபடி. திருத்துழாய்மாலை சேஷித்வஸூசகமாதலால், எம்பெருமானுடைய சேஷித்வத்திலே ஈடுபட்டிருக்கிற நான் இனி உங்களுக்கு சேஷப்பட்டிருக்க முடியுமோ என்பதும் குறிப்பிடப்பட்டதாம்.

மின்னுமாமணி மகரகுண்டலங்கள் வில்வீசு மென்கின்றாளால்—திருத்துழாய் மாலையிற் படிந்திருந்த நெஞ்சை மகரக் குழைகள் தம்மிடத்து இழுத்துக் கொண்டனபோலும். திருமுகமண்டல சோபைக்குக் கைவிளக்குப் பிடித்துக் காட்டுவன போன்றிருக்கின்றதாம் மணிமகர குண்டலங்கள்: அவை, வில் வீசும்—திருமேனி யடங்கலும் முட்டாக்கிடும்படி தன் ஒளியைப் பரவச் செய்கின்றன வென்கை. சுறாமீன் வடிவாகச் செய்யப்படும் காதணிக்கு 'மகரக்குழை' என்று பெயர். மகரம்—வடசொல்.

பொன்னின் மாமணியாரம் அணியாகத் திலங்குமா லென்கின்றாளால்—ஒரு ஆபரணமும் வேண்டாதே வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான திருமார்பிலே அவ்வழகுக்கு மேலே ஸ்ரீகௌஸ்துபமணியும் முத்து மாலையும் விளங்காநின்றது என்கிறாள். 'பொன்னின் மாமணியாரம்' என்றதை உம்மைத் தொகையாகக் கொண்டால் பொன்னின் மாமணியும் ஆரமும் என்று பொருள்படும்.

‘கன்னிமா மதிள் புடைசூழ்’ என்ற விடத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்த பரம போக்யமான ஸ்ரீஸூக்தியைக் காண்மின்:— “சேமித்து வைத்த வஸ்துவை இவள் ஒருத்தியுமே அறிந்து கொண்டாள் போலேயிருந்தது” என்று. அதாவது—உள்ளுள்ள எம்பெருமானுடைய சீர்மைக்குத் தகுதியாய் அரணாயிருக்கின்ற திருமதிளால் சேமிக்கப்பட்டு உள்ளே யுறைகின்ற பிரானை என்மகள் எப்படியோ கண்டு கொண்டாளே! என வியந்தவாறு. .... .... .... .... .... .... (ரு.)

தாராயதண்டுளப வண்டுழுத வரைமார்ப னென்கின்றாளால் *
போரானைக் கொம்பொசித்த புட்பாகனென்னம்மா னென்கின்றாளால் *
ஆரானுங்காண்மின்கள் அம்பவளம் வாயவனுக் கென்கின்றாளால் *
கார்வானம் நின்றதிரும் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (சு)

| | |
|---|---|
| தார் ஆய தண் துளபம் | மாலையாகிய குளிர்ந்த திருத்துழாயிலுள்ள |
| வண்டு | வண்டுகளாலே |
| உழுத | (தேனும் சுண்ணமுங் கொண்டு) சேறு செய்யப்பட்ட |
| வரை மார்பன் | மலைபோன்ற திருமார்பை யுடையவன் |
| | என்கின்றாள் ஆல்—; |
| போர் ஆனை | போர்புரிய நின்ற (கம்ஸனது) யானையி னுடைய |
| கொம்பு ஒசித்த | தந்தங்களை முறித்தொழித்த |
| புள் பாகன் | கருடவாஹநன் |
| என் அம்மான் | எனக்கு ஸ்வாமி |
| | என்கின்றாள் ஆல்—; |
| ஆரானும் | யாராகிலும் |
| காண்மின்கள் | பாருங்கள், |
| அவனுக்கு | அப்பெருமானுடைய |
| வாய் | திருவதரமானது |
| அம் பவளம் | அழகியபவளம்போற்சிவந்தது |
| | என்கின்றாள் ஆல்—; |
| கார் வானம் | கறுத்தமேகம் |
| நின்று அதிரும் | நிலைநின்று கோஷிக்கப் பெற்ற |
| | கண்ணபுரத்து அம்மானை கண்டாள் கொலோ—. |

* * *—இவள் தான் அணைய ஆசைப்பட்ட திருமார்பின் படியைப்பேசுபவளாய், பூத்துத் தழைத்துச் செவ்வியை யுடைத்தாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத்துழாய் மாலையிலே படிந்த வண்டுகள் அத்திருத்துழாயின் மது வெள்ளம் வண்டலிட்டுக் கிடக்கின்ற திருமார்பிலே உழுகின்றன என்கின்றாள். தன் முலைகளைக்கொண்டுபோய் அத்திருமார்பிலே நடலாம்படி சேறுசெய்திருக்கின்றதென்கிறாள். அந்தோ! நான் புரளவேண்டிய மார்பிலே வண்டுகள் புரளுகின்றனவே; அவை பண்ணின ஸுக்ருதம் என்னோ? நான் பண்ணின பாவம் என்னோ? என்கிறாள்.

கம்ஸனால் தன்னைக்கொல்லுமாறு மதமூட்டி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் யானையைக் கொம்பொசித்துக் கொன்றொழித்த சிறுச்சேவகத்தையும் பெரிய திருவடியின் முதுகிலே வீற்றிருக்குமிருப்பையும் காட்டி என்னை அகப்படுத்திக் கொண்டவனென்கின்றாள்.

'நங்காய்! சிறுக்கியான நீ இங்ஙனே சொல்லிக்கொண்டிருப்பது தகுதியன்று; நாண்மடமச்சங்கெட்டு வாய்விடுவதைத் தவிரவேண்டும்' என்று ஹிதமுரைக்கத் தொடங்கினல், 'ஆரானும் காண்மின்கள் அம்பவளம்வாய் அவனுக்கு' என்கின்றாள்; 'ஹிதஞ்சொல்லி விலக்கப்பார்கிற நீங்களே பாருங்கள்; அப்பெருமானுக்கு அழகிய பவளம் போன்றிருந்துள்ள திருவதரத்தை ஒருகால் ஸேவித்துப் பாருங்கள்; அது கண்டார்க்கு விட்டுப்போகலாயிருந்ததோ?' என்கிறாள்.

ஆக இப்படிப்பட்ட இவளது நிலைமையை நோக்குங்கால், எப்போதும் வர்ஷாகாலமாய் ஆகாசம் அதிராநின்ற திருக்கண்ணபுரத்துப் பெருமானை இவள் காணப்பெற்றாளாகவேணும். .... .... .... .... (௪)

அடித்தலமுந் தாமரையே அங்கைகளும் பங்கயமே யென்கின்றாளால் *
முடித்தலமும் பொற்பூணு மென்னெஞ்சத்துள்ளகலா தென்கின்றாளால் *
வடித்தடங்கண் மலரவளோ வரையாகத்துள்ளிருப்பா ளென்கின்றாளால் *
கடிக்கமலம் கள்ளுகுக்கும் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (௫)

அடித்தலமும் — திருவடிகளும்
தாமரையே — தாமரைப் பூவே;
அம் கைகளும் — அழகிய திருக்கைகளும்
பங்கயமே — தாமரைப் பூவே;
என்கின்றாள் ஆல்—;
முடித்தலமும் — கிரீடமும்
பொன் பூணும் — (அதிலிழைத்த) திருவாபரணமும்
என் நெஞ்சத்துள் அகலாது — என் மனத்தைவிட்டுப் பிரியாது
என்கின்றாள் ஆல்—;
வடி — கூர்மை பொருந்திய
தட — பெரிய
கண் — கண்களையுடையளான
மலரவளோ — பங்கயச் செல்வியான பெரியபிராட்டியாரோ வென்னில்,
வரை ஆகத்துள் இருப்பாள் என்கின்றாள் — மலைபோன்ற திருமார்பிலிருக்கின்றாளென்று சொல்லுகிறாள்;
கடி கமலம் — பரிமளமுள்ள தாமரைப் பூக்கள்
கள் உகுக்கும் — தேனைப் பொழியப்பெற்ற கண்ணபுரத்து, அம்மானை கண்டாள் கொலோ—.

* * *—'நங்காய்! எவ்வளவு நன்மை சொன்னாலும் கேட்கின்றிலையே!, திடீரென்று நீ இப்படி மாறுபடுவதற்குக் காரணமென்'? என்று கேட்டால், அதற்கு ஒரு மறுமொழியுங் கூறாதே, 'அப்பெருமானுடைய திருவடிகள் ஸாக்ஷாத் தாமரைப்பூவே; திருக்கைகளும் தாமரைப்பூவே' என்கிறாள்; 'இப்படியும் ஒரு வார்த்தையுண்டோ? நான் ஒன்று கேட்டால் நீ ஒன்று சொல்லுகின்றனையே; உனக்கு ஏதேனும் உந்மாதமோ?' என்றால், அப்பெருமானுடைய திருவபிஷேகமும் அது தன்னிற் சாத்தின திருவாபரணமும் என்னெஞ்சை விட்டுப் பேர்ந்து போனாலன்றோ உங்கள் வார்த்தை என்னெஞ்சிலே பதியும் என்கிறாள்.

புருஷகார பூதையான பிராட்டி * அகலகில்லே னிறையுமென்று திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுகின்றாள்; இந்த நிலைமையிலும் நான் இழக்கலாமோ

வென்கிறாள். பிராட்டி மேல்விழுந்து நித்யாநுபவம் பண்ணும்படியான பரம ரஸிகனன்றோ அவன்; அவனையோ நான் இழந்திருப்பது என்கிறாளென்னவு மாம். .... .... .... .... .... .... (ரு)

பேராயிரமுடைய பேராளன் பேராள னென்கின்றாளால், *
ஏரார்கனமகர குண்டலத்த னெண்தோள னென்கின்றாளால் *
நீரார்மழைமுகிலே நீள்வரையேயொக்குமா லென்கின்றாளால் *
காரார்வயலமரும் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (சு)

| | |
|---|---|
| ஆயிரம் பேர் உடைய | ஆயிரந் திருநாமங்களையுடைய |
| பேர் ஆளன் பேர் ஆளன் என்கின்றாள் | மஹாநுபாவனென்று பலகாலும் சொல்லுகின்றாள்; |
| ஏர் ஆர் | அழகுபொருந்திய |
| கனம் | கனகத்தினால் செய்யப்பட்ட |
| மகர குண்டலத்தன் | மகரக்குழைகளையுடையவன், |
| எண் தோளன் | எட்டு புஜங்களையுடையவன் |
| என்கின்றாள் ஆல்—; | |
| நீர் ஆர் | நீர் நிறைந்த |
| மழை முகிலே | கார்காலத்து மேகத்தையும் |
| நீள் வரையே | பெரிய மலையையும் |
| ஒக்கும் | ஒத்திருப்பன் |
| என்கின்றாள் ஆல்—; | |
| கார் ஆர் வயல் அமரும் | கருமை மிக்க கழனிகள் அமர்ந்திருக்கப் பெற்ற |
| கண்ணபுரத்து, அம்மானை கண்டாள் கொலோ—. | |

* * *—வாயாரச் சொல்வதற்குப் பாங்கான ஆயிரந் திருநாமங்களையுடைய பெரியோன், பெரியோன் என்று பலகாலுஞ் சொல்லுகின்றாள்; அவனை ரக்ஷித் தான் இவனை ரக்ஷித்தானென்று அவன் பெற்றிருக்குந் திருநாமங்கள் பல்லாயிர முண்டு; அப்படிப்பட்ட திருநாமங்களையுடைமையினால் மிகப் பெரியோனென்று தன்னை மதித்திருக்கிறானவன்; என்னொருத்தியைக் கைவிட்டதனால் அந்தப் பெருமை யெல்லாம் இல்லையாய்விடப்போகிறதே! என்ற கருத்துப்போலும் பரகால நாயகிக்கு.

நம்மை அவன் உபேக்ஷித்து விட்டாலும் அவனுடைய வடிவழகு அவனை நாம் மறந்து பிழைக்க வொட்டுகின்றதில்லையே; மகரகுண்டலங்கள் தளதள வென்று ஒளிமல்கப் பெற்ற திருத்தோள்களினழகை என் சொல்வே னென் கிறாள்.

மகரகுண்டலம் முதலிய திருவாபரணங்கள் இருக்கவுமாம், இல்லையாகவு மாம்; அவையில்லையே யாகிலும் வெறும் புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும் படியான திருமேனியின் அழகை என்ன சொல்லுவேன்!; 'நீர் கொண்டெழுந்த காளமேகமோ இது, அன்றிப் பச்சைமாமலையோ' என்று விதர்க்கிக்கலாம் படியன்றோ திருமேனியிருப்பது! என்கிறாள். ஆக இப்படியெல்லாம் இவள் சொல்லுகையாலே திருக்கண்ணபுரத்தம்மானை இவள் காணப்பெற்றவளாயிருக்க வேணுமென்கை.

ஈற்றடியில் "வயல் மருவும்" என்று சிலர்க்குப் பாடமாம். .... (சு)

செவ்வரத்தவுடையாடை யதன்மேலோர் சிவளிகைக்கச் சென்கின்றாளால் *
அவ்வரத்தவடியிணையு மங்கைகளும் பங்கயமே யென்கின்றாளால் *
மைவளர்க்கும் மணியுருவம் மரதகமோ மழைமுகிலோ வென்கின்றாளால் *
கைவளர்க்குமழலாளர் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ ? (எ)

| | | | |
|---|---|---|---|
| செம் | சிவந்ததாய் | மைவளர்க்கும் மணி உருவம் | நீலநிறத்தை மிகுதியாகத் தோற்றுவிக்கின்ற நீல மணிபோன்ற திருமேனி |
| வரத்த | சிறந்ததாக | மரதகமோ | மரதகமணியோ, (அன்றி,) |
| உடை | உடுக்கப்பட்ட | மழை முகிலோ | காளமேகமோ |
| ஆடை | பீதாம்பரம் (என்றும்) | | என்கின்றாள் ஆல்—; |
| அதன் மேல் | அந்தப் பீதாம்பரத்தின்மேல் | கை வளர்க்கும் அழல் ஆளர் | தமது கைகளால் ஓம்பப் படுகின்ற அக்கியை யுடையரான அந்தணர் வாழ்கிற |
| ஓர் | ஒப்பற்ற | | கண்ணபுரத்து அம்மானை கண்டாள் கொலோ—. |
| சிவளிகைக் கச்சு என்கின்றாள் | சிவளிகைக்கச்சு (சாத்தப்பட்டிருக்கிறது) என்றும் சொல்லுகிறாள்; | | |
| அவ் வரத்த அடி இணையும் | அப்படிப்பட்ட சிறந்த உபயபாதங்களும் | | |
| அம் கைகளும் | அழகிய திருக்கைகளும் | | |
| பங்கயமே என்கின்றாள் | தாமரைப்பூவே என்று சொல்லுகிறாள்; | | |

* * *—எம்பெருமானுடைய உடைவாய்ப்பிலே தான் தோற்றுளென்பது தோன்ற வாய்விடுகின்றாள்: திருப்பீதாம்பரம் சாத்தினால் திரு அரை பூத்தாற்போலேயாயிற்றிருப்பது; அப்படிப்பட்ட பீதகவாடையுடையழகிலே யீடுபட்டுப் பேசுகின்றாள். அவ்வளவோடு நின்றாளோ? அப்பீதகவாடையின்மேல் 'சிவளிகைக் கச்சு' என்ற கச்சுப்பட்டை கட்டப்பட்டிருக்குமழகை யெடுத்துரைக்கின்றாள்; மீண்டு மீண்டும் 'திருவடிகளும் திருக்கைகளும் தாமரையே' என்கிறாள்; அவை தாமரையே யென்று சிறிதும் ஸந்தேஹமின்றி நிச்சயமாகச் சொல்லுகிறவிவள் திருமேனி விஷயத்தில் மாத்திரம் ஸந்தேஹம்படச் சொல்லுகிறாள்; (அதாவது) 'மை வளர்க்கும் மணியுருவம் மரதகமோ மழை முகிலோ' என்கிறாள்;—திருமேனியானது பச்சைமாமலையோ அல்லது நீர்கொண்டெழுந்த காளமேகமோ தெரியவில்லை யென்கிறாள். இவளுடைய வார்த்தைப் பாங்கை நோக்குமிடத்து நித்யாக்நிஹோத்ரிகள் வாழப்பெற்ற திருக்கண்ணபுரத்து எம்பெருமானை இவள் காணப் பெற்றாளாகவேணும்.

முதலடியிலும் இரண்டாமடியிலும் எதுகையில் 'வரம்' என்னும் வடசொல் புகுந்திருக்கின்றது; அச் சொல் சிறப்புப் பொருளது. இரண்டாமடியில் 'ரக்த' என்னும் வடசொல் 'அரத்த' என்று கிடக்கிறதென்றுங் கொள்ளலாம்; அச் சொல் சிவப்புப் பொருளது. (எ)

கொற்றப்புள்ளொன்றேறி மன்றூடே வருகின்றா னென்கின்றாளால் *
§வெற்றிப்போ ரிந்திரர்க்குமிந்திரனேயொக்குமா லென்கின்றாளால் *
பெற்றக்காலவனாகம் பெண்பிறந்தோ முய்யோமோ வென்கின்றாளால் *
கற்றநூல்மறையாளர் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ ? (அ)

கொற்றம் புள் ஒன்று ஏறி — வெற்றிபொருந்திய ஒரு கருடப்பறவையை மேற்கொண்டு
மன்று ஊடே — திருவீதியிலே
வருகின்றான் — எழுந்தருளுகிறான்
என்கின்றாள் ஆல்—;
வெற்றி போர் — ஜயசீலமான யுத்தத்திலே
இந்திரற்கும் இந்திரனே ஒக்கும் என்கின்றாள் — மஹேந்திரனை ஒத்திருப்பன் என்கின்றாள்;
அவன் ஆகம் — அப்பெருமானுடைய திருமார்பை
பெற்றக்கால் — பெற்றால்
பெண் பிறந்தோம் உய்யோமோ என்கின்றாள் — பெண்ணாய்ப்பிறந்த நாம் வாழ்ந்து போகமாட்டோமோ என்கிறாள்;
கற்ற நூல் மறை ஆளர் — (முறையே) கற்கப்பட்ட சாஸ்த்ரங்களை யுடையரான வைதிகர் வாழ்கிற
கண்ணபுரத்து, அம்மானை கண்டாள் கொலோ—.

* * *—1. "வெள்ளைச் சுரிசங்கொடு ஆழியேந்தித் தாமரைக்கண்ண னென்னெஞ்சினூடே, புள்ளைக்கடாகின்ற ஆற்றைக்காணீர்" என்ற பராங்குச நாயகிக்கு நெஞ்சினுள்ளே கருடவாஹந ஸேவை ஸாதித்தான் எம்பெருமான்; அங்ஙனன்றிக்கே இப் பரகாலநாயகிக்காகத் திருவீதியூடே கருடவாஹந ஸேவை ஸாதித்தான் போலும். ஆகவே 'கொற்றப்புள் ஒன்றேறி மன்றூடே வருகின்றான்' என்கிறாள்; தாஹித்தவர்கள் இருந்தவிடங்களிலே சாய்கரகத்தைக் கொண்டு வந்து சாய்ப்பாரைப்போலே என்னொருத்திக்கே யல்லாமல் மற்றும் என்னைப்போன்ற அன்புடையார்க்கும் ஸேவைஸாதிக்கப் பெரிய திருவடியின் மீதேறி வீதியூடே வந்து உலாவுகின்றான் காண்மின் என்கிறாள். ஒருவர்க்குந் தெரியாமல் வந்து என் கண்ணுள்ளே யிருக்கவேண்டியவன் மஹோத்ஸவமாகத் தெருவோடே வருகிறானே, யாரேனுங்கொள்ளைகொண்டு ஸ்வாநுபவ மாத்திரத்திலே நிறுத்திக்கொள்ளப்போகிறார்களே! என் செய்வேன் என்கிறாள் போலும்.

அப்படி யாரேனும் தன்னைக் கொள்ளை கொண்டாலும் அவர்களுக்குப் பிடி கொடாதே உத்தேசித்தவிடத்தே வந்து சேர்தற்கு உரிய பராக்ரமத்தில் குறை யுடையனல்லன்; வீர்யத்தில் மஹேந்த்ரனை ஒத்திருப்பனென்கிறாள். 'வெற்றிப் போர்' என்பது வழங்கி வரும் பாடம்; 'வெற்றுப் போர்' என்னும் பாடமே வியாக்கியானத்திற்குப் பொருந்தும். "வெறும் போரில்" என்பது பெரிய வாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

"இந்திரற்கு மிந்திரனேயொக்கும்" என்றவிடத்து வியாக்கியானத்தில்— "இந்த்ரனுக்கும் இந்த்ரனுண்டு மஹேந்த்ரன்; க்ரதுவயாதிகளாலே பட்டம்

1. திருவாய்மொழி 7-3-1. § 'வெற்றுப்போர்' என்பது வியாக்கியான பாடம்,

சூடினவன், அவனேமிடாக்குமென்று நின்றான்" என்றுள்ளது. க்ருஷ்ண யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதையில் ஆறாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச் நத்தில்—(16) [illegible] என்றதைத் திருவுள்ளம்பற்றியதாமிது. (இந்திரன் வ்ருத்ராஸுரனைக் கொலைசெய்ததுபற்றி மஹேந்திரனென்று அவனுக்குத் தேவர்கள் பட்டஞ்சூட்டினராம்.)

[பெற்றக்கால் இத்யாதி.] பெண்ணைப் பிறந்தவர்கள் அணைந்து வாழ்வதற் கென்றன்றோ அவன் திருமார்பு படைத்தது; ஒருத்தியைத் திருமார்பிலேயே வாழ வைத்திருக்கின்றானல்லனோ? அங்ஙனே நமக்கும் அத்திருமார்பைப் பெறு வித்தால் பெண்பிறந்த நாமும் வாழ்ந்து போகமாட்டோமோ வென்கிறாள். இத் தனை அபிநிவேசம் இவளுக்குண்டானமை காண்கையாலே இவள் வைதிக வித் வான்கள் வாழும் திருக்கண்ணபுரத்து எம்பெருமானைக் காணப்பெற்றாளாக வேணும். .... .... .... .... (அ)

வண்டமரும் வனமாலைமணிமுடிமேல் மணநாறு மேன்கின்றாளால் *
உண்டிவர்பா லன்பெனக்கென் றேருகாலும் பிரிகிலேனென்கின்றாளால் *
பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில் யாமென்றே பயில்கின்றாளால் *
கண்டவர்தம் மனம்வழங்கும் கண்ணபுரத்தம்மானைக் கண்டாள்கொலோ? (௯)

| | | | |
|---|---|---|---|
| வண்டு அமரும் | வண்டுகள் படிந்த | பண்டு | இதற்கு முன்னம் |
| வனமாலை | திருத்துழாய்மாலை | யாம் கண்டறிவது | நாம் பார்த்திருப்பது |
| மணிமுடிமேல் | ரத்ன கிரீடத்தின்மீது | எவ் ஊரில் | எந்தவூரிலே |
| மணம் நாறும் என்கின்றாள் | பரிமளம் கமழாநிற்கிறது என்கிறாள்; | என்றே பயில்கின்றாள் | என்றே பலகாலும் உருப்போடுகின்றாள்; |
| எனக்கு இவர் பால் அன்பு உண்டு என்று | 'எனக்கு இவரிடத்திலே அன்பு உண்டு' என்று சொல்லி | கண்டவர் | ஸேவித்தவர்களெல்லாரும் |
| | | தம் மனம் | தங்கள் மனத்தை |
| ஒருகாலும் பிரிகிலேன் ஆல் என்கின்றாள் | (அவ்வன்பரை) ஒரு நொடிப் பொழுதும் பிரிந்திருக்க முடியவில்லையே யென்கிறாள்; | வழங்கும் | அர்ப்பணம் செய்து விடும்படியான |
| | | கண்ணபுரத்து, அம்மானை கண்டாள் கொலோ— | |
| இவரை | 'இப்பெரியவரை | | |

* * *—தேன்வெள்ளத்தில் நசையாலே வண்டுகள் படிந்திருக்கப்பெற்ற திருத்துழாய்மாலையானது அப்பெருமானது திருமுடியில் ஏறினவாறே தன் னிலத்திற்காட்டிலும் அதிகமான பரிமளம் வீசப்பெறுகின்றது காண்மின் என் கிறாள். என்னுடைய ப்ரீதிதத்துவம் முழுதும் அப்பெரியவர் பக்கலிலே குடி புகுந்துவிட்டது, ஆகையாலே ஒரு நொடிப்பொழுதும் அவரைப்பிரிந்து தரித் திருக்கமாட்டுகின்றிலேன் என்கிறாள். அதற்குமேல் பாவனையின் முதிர்ச்சி

யாலே அவரைக் கண்ணெதிரே வந்து நிற்பவராகக்கொண்டு 'இவரை முன்னம் எவ்விடத்திலோ பார்த்திருப்பதுபோல் தெரிகின்றதே, எவ்வூரில் கண்டது!' என்று தன்னில் தான் பலகாலும் சொல்லிக்கொள்ளுகிறாள்; இப்போது இவள் இப்படியிருக்கையாலே ஸர்வாங்க ஸுந்தரரான சௌரிப்பெருமானைக் காணப் பெற்றவளா யிருக்கவேண்டும்.

''பண்டிவரைக் கண்டறிவது எவ்வூரில் யாமென்றே பயில்கின்றாளால்'' என்ற மூன்றாமடியின் விசேஷப்பொருள் குறிக்கொள்ளத் தக்கது;—இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வாக்கியங் காண்மின்:—''முதல்நாள் கண்டால் ஸ்வாபாவிகமான ஸ்வாமித்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலுமாக 'முன்பே கண்டறியும் முகமாயிருந்ததி! எவ்வூரில்தான் கண்டது?' என்னும்படி யிருக்கும்; ஸாவாஸியம் பிறந்தால் பின்பு 'முன்போரிடத்திலும் இவரைக் கண்டறியோம்' என்னும்படியாயிருக்கும்; நித்யாபூர்வமான விஷயமென்றபடி. சொன்ன இரண்டர்த்தத்தையும் அது காட்டுமோவென்ன, 'பயில்கின்றாளால் என்றது கண்டாயே; எற்றைக்கும் வார்த்தை இதுவேயன்றோ: இப்படியாக வேண்டாவோ?' என்று ஜீயர்.'' என்று. இதனை விவரிப்போமிங்கு;—பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில்' என்பதற்கு இரண்டு வகையான பொருள் சொல்ல இடமுண்டு; 'முன்பு இவரை எவ்விடத்திலோ பார்த்திருக்கிறோம் போல இருக்கின்றதே, எவ்விடத்தில் பார்த்திருப்போம்!' என்று விமர்சிப்பதாக ஒரு பொருள்; பண்டு இவரை எவ்வூரில் கண்டறிவது—எவ்வூரிலும் கண்டறிந்ததில்லை; இப்போதுதான் முதன்முதலாகக் காண்கிறோம் என்பதாக மற்றொரு பொருள். ஒரு தடவை பிரயோகிக்கப்பட்டிருக்கின்ற வாக்கியம் இவ்விரண்டு பொருளையும் ஏககாலத்தில் எங்ஙனே தருமென்னில்; மூலத்தில் ''என்றே பயில்கின்றாளால்'' என்றிருப்பதால் 'பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில் யாம்' என்னும் வார்த்தையைப் பலகாலும் உருப்போடுகிறாள் என விளங்குதலால், அந்த வார்த்தையை முதல் தடவை சொல்லும்போது முதற்பொருளும் அடுத்த தடவைகளிலெல்லாம் இரண்டாவது பொருளும் சொல்லப்படக் குறையில்லையென்க. இவ்விரண்டு பொருள்களின் ஸ்வாரஸ்ய மென்னவெனில்;—எம்பெருமானை முதன் முதலாகக் காணும்போது திருமுகமண்டலத்தில் தண்ணளி முதலியவற்றைக் கொண்டு 'இவரை முன்பு எங்கோ கண்டாற்போலிருக்கிறதே!' என்று தோன்றும்; அதன்பிறகு எவ்வளவு நெருங்கிப் பழகினாலும் தெகுட்டுதலின்றியே ''எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதொறும், அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே'' என்னும்படியான விஷயமாகையாலே முன்பு எங்குங் கண்டறியாதது போலவும் அப்பொழுதே புதிதாகக் கண்டு அநுபவிப்பதுபோலவுந் தோன்றிக்கொண்டே யிருக்கும். மற்ற விஷயங்களிற் காட்டில் பகவத் விஷயத்திற்குள்ள வைலக்ஷண்யம் இது—என்று காட்டினபடி.

கண்டவர் தம் மனம் வழங்கும்=ஒருகால் ஸேவித்தவர்களும் தங்கள் நெஞ்சைத் தாங்களே 'இஃது எம்மதல்ல, உன்னுடையதே' என்று எழுத்திட்டுக்

கொடுத்துவிடும்படியான ஆகர்ஷகத்வ முடையவன் எம்பெருமான் என்க.....(௯)

மாவளரும் மென்னோக்கிமாதராள் மாயவனைக் கண்டாளென்று *
காவளருங் கடிபொழில்சூழ் கண்ணபுரத்தம்மானைக் கலியன்சொன்ன *
பாவளருந் தமிழ்மாலை பன்னியநூலிவையைந்து மைந்தும்வல்லார் *
பூவளருங் கற்பகஞ்சேர் பொன்னுலகில் மன்னவராய்ப் புகழ்தக்கோரே. (௧௦)

| | |
|---|---|
| மா வளரும் மென் நோக்கி | மானினுடைய நோக்குப் போன்று விசாலமாய் மெல்லிதான நோக்கை யுடையளான |
| மாதராள் | (பரகால) நாயகியானவள் |
| மாயவனை கண்டாள் என்று | ஆச்சரியனான எம் பெருமானைக்கண்டாள் கொலோ என்று |
| கா வளரும் கடி பொழில் சூழ் | சோலைகளில் வளரும் பரி மளமானது பூமியெங்கும் பரவப்பெற்ற |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியுள்ள |
| அம்மானை | ஸ்வாமியைக் குறித்து |
| கலியன் சொன்ன | திருமங்கையாழ்வாரருளிச் செய்த |
| பா வளரும் | சந்தங்கள் நிறைந்திருக்கப் பெற்ற |
| தமிழ் மாலை | தமிழ்ப்பாசுர மாலையாகிய |
| பன்னிய நூல் | கொண்டாடுதற்கு உரிய இத் திவ்யப்ரபந்தத் திற் சேர்ந்த |
| இவை ஐந்தும் ஐந்தும் | இப்பத்துப் பாட்டையும் |
| வல்லார் | ஓதியுணரவல்லவர்கள் |
| பூ வளரும் | பூக்கள் நிறைந்த |
| கற்பகம் சேர் | கல்பவ்ருக்ஷம் பொருந்திய |
| பொன் னுலகில் | பரமபதத்தில் |
| மன்னவர் ஆய் | நிர்வாஹகர்களாகவும் |
| புகழ் தக்கோர் | (இங்குள்ளவனாயில்) புகழ்க் குத் தகுதியுடையவர்க ளாகவம் இருக்கப் பெறுவர். |

* * *—"கண்ணபுரத் தம்மானைக் கண்டாள் கொலோ" என்று சொல்லித் திருத்தாயார் தம் பெண்பிள்ளையின் பகவத்விஷயாநுராகத்தை வெளியிடும் பாசுரமாக ஆழ்வார் தமது அன்பு நிலைமையைத் தாமே வெளியிட்டுக் கொண்ட இத்திருமொழியைக் கற்றுணரவல்லவர்கள் திருநாட்டை ஆளவல்லராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

மா—மான். மாதராள்—'மாதர்' என்று விரும்பப்படும் அழகுக்குப்பெயர்; அதனையுடையவள் மாதராள். பலவிடங்களிலும் அழகையுடையவட்கு வாசகமாக 'மாதர்' என்று பிரயோகமுண்டாகிலும் அது இலக்கணையா லென்க.

பூவளருங் கற்பகஞ்சேர் பொன்னுலகில்=கல்பவ்ருக்ஷமுள்ளது ஸ்வர்க்க லோகத்திலன்றோ, பரமபதத்திலு முண்டோவென்கிற சங்கையில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறார் காண்மின்—"உபரிதந லோகங்களுக்கடைய கற்பகத்தைச் சிறப்பாகச்சொல்லக்கடவர்கள்" என்று.

பொன்னுலகில் மன்னவராய்="வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன்" என்கிறபடியே பரமபதத்தில் நித்யமுக்தர்களைத் தலைவராக்கி எம்பெருமான் இளவரசாயிருப்பனும். .... .... .... .... . (௧௦)

அடிவரவு:—சிலை, செரு, தன்று, தார், அடி, பேர், செவ்வரத்த, சொற்ற, வண்டு, மாவளரும், தெள்ளியீர்.

முதல்திருமொழி உரை முற்றிற்று.
ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—இரண்டாந்திருமொழி,

# தெள்ளியீர் தேவர்க்கும்.

உரையவதாரிகை:—கீழ்த் திருமொழியாக நிகழ்ந்த திருத்தாயார் பாசுரம் இத்திருமொழியாகவும் அநுவர்த்தித்து வருகின்றது. பரகால நாயகியின் நிலைமையைக்கண்ட அத்திருத்தாயார் 'இவள் கண்ணபுரத் தம்மானைக் காணப்பெற்றவளாயிருக்கவேணும்' என்பதாகச் சென்றது கீழ்த்திருமொழி; இத்திருமொழியில் அத் திருக்கண்ணபுரத் தெம்பெருமானையே நேராக நோக்கித் தன் பரிதாபத்தைப் பேசுகிறாள் திருத்தாய். இதிற் சில பாசுரங்கள் தன்னில் தான் நொந்துகொண்டு பேசுவனவாகவுஞ் செல்லும்.

ஆழ்வார் சௌரிப்பெருமாள் பக்கலிலே தமக்குண்டான அளவுகடந்த ப்ராவண்யத்தையும், அவரைப் பிரிந்து மேனி மெலிந்தபடியையும் இங்ஙனே அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறாரென்க. .... .... .... (*)

தெள்ளியீர்! தேவர்க்கும் தேவர் திருத்தக்கீர்!*
வெள்ளியீர் வெய்யவிழுநிதி வண்ணர் * ஓ!
துள்ளுநீர்க் கண்ணபுரந் தொழுதா ளிவள்
கள்வியோ! * கைவளைகொள்வது தக்கதே? (க)

| | | | |
|---|---|---|---|
| தெள்ளியீர் | தெளிந்த அறிவு உடையவரே! | கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| தேவர்க்கும் தேவர் | தேவாதிதேவரே! | தொழுதாள் | கையெடுத்துக் கும்பிட்டாள்; |
| திரு தக்கீர் | பெரியபிராட்டியார்க்குத் தகுதியானவரே! | (இவள்) | இப்படிப்பட்ட இவள் |
| வெள்ளியீர் | சுத்தமான ஸ்வபாவத்தை யுடையவரே! | கள்வியோ | (ஆத்மாபஹாரம் செய்திலளாகையாலே) கள்வியன்றே; |
| வெய்ய விழு நிதி வண்ணர் | காய்ச்சின சிறந்த பொன் போன்றநிறமுடையவரே! | | (அப்படியிருக்க) |
| ஓ! | இஃது என்ன அநியாயம்! | கை வளை கொள்வது | (அடிச்சியான இவளுடைய) கைவளைகளைக் கொள்ளை கொள்வதானது |
| இவள் | இப்பரகால நாயகியானவள் | தக்கதே | உமக்குத் தகுந்ததோ?. |
| துள்ளும் நீர் | கரைபுரண்டு பெருகுகின்ற நீரையுடைத்தான | | |

* * *—என் பெண்பிள்ளை திருக்கண்ணபுரத்தைத் தொழுதாளென்ப தையே வியாஜமாகக் கொண்டு இவளுடைய கைவளையைக் கொள்ளை கொள்வது தகுதியோ சொல்லீர் என்று சௌரிப்பெருமாளை மடிபிடிக்கிருள் திருத்தாய். இவளுடைய கைவளைகளை அவர் கொள்ளை கொள்வதாவது என்னென்னில், பிரிவாற்றுமையினல் இவள் உடம்பு இளைத்துக் கைவளைகள் கழன்று விழும்படியாவதாம். இவளை நீர் இப்படி ஈர்க்குப்போல் இளைத்துப் போம்படி செய்தீரே, இது தகுதிதானே? நித்ய ஸம்ச்லேஷத்தைக் கொடுத்து இவளுடம்பைப் புஷ்டியாக்குவதன்ரே தகுதி என்கிருளென்க.

தெள்ளியீர்'=நீர் மஹா விவேகியென்று பேர்பெற்றவரன்ரே? தெளிந்த ஞானமுள்ளது உமக்கேயன்ரே? பெண்பிறந்தவர்களின் பொருளைக் கொள்ளை கொள்வது தகுதியன்றென்று உமக்குத்தானே தெரியாதோ? ஸர்வஜ்ஞானவுமக்கு அல்பஜ்ஞையான நானே உணர்த்துவது? என்றவாறு.

தேவர்க்குந் தேவர்!=நீர் ஏதேனும் ஸாமாந்யமானவரோ? நித்யஸூரிகளுக்கும் நாயகராய் நிற்கும்படியான பெருமேன்மை பெற்றவரன்ரே நீர்; இப்படி மேம்பாடுடையரான நீர் பிறர்க்கு வேண்டியவற்றைக் கொடுத்தருள வேண்டுவது ப்ராப்தமாயிருக்க, உள்ளதையும் கொள்ளை கொள்வது உம்முடைய மேன்மைக்குத் தகுதியோவென்று பாரீர் என்றவாறு. 'தேவர்!' என்றது அண்மைவிளி.

இவ்விடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்:—"பெருமாள் திருவயோத்யையில் நின்றும் போந்து ச்ருங்கிபேரபுரத்திலெழுந்தருளி யிருந்தவளவிலே ஸ்ரீ குஹப்பெருமாள் மலைத்தேனையும் காட்டுப் பழமுங் கொண்டு சென்று உபஹாரமாகக் கொடுக்க, 'நாம் கொள்ளப் பிறந்தோமல்லோம் காணும், கொடுக்கப் பிறந்தவர்காணும்' என்றருளிச் செய்தாரிறே."—ஆண் பிள்ளைகள் இசைந்து கொடுக்க வந்ததையும் கொள்ளப் பெருதென்ற நீர் பெண்பிறந்தார் பொருளை வலியக்கவர்ந்து கொள்ளுதல் என்ன தகுதி? என்றவாறு.

திருத்தக்கீர்!=பெரிய பிராட்டியாராகிற ஒருபெண்பெண்டாட்டியை ஒரு நொடிப்பொழுதும் விடாது திருமார்பிலே யிருத்தி உவக்குமவர் ஒருத்தியின் கைவளைகளைக் கொள்ளை கொள்வது தகுதியோ? என்றவாறு.

வெள்ளியீர்'=1. "என்னை வெள்ளுயிராக்கவல்ல" என்றூற்போலே வெண்மையாவது சுத்தஸ்வபாவமுடைமை: நீர் பரம பவித்திரரன்ரே? பிறர் பொருளைக் கொள்ளை கொள்வது உம்முடைய பாவநத்வத்திற்குத் தகுமோ?. "யோர்த்தே ஸுசிஸ் ஸஹி ஸுசிர் ந ம்ருத்வாரி ஸுசிஸ் ஸுசி:" [பிறர்பொருளைக் கவராதவன் பரிசுத்தனெனப் படுவனேயன்றி, மண்ணையும் நீரையுங்கொண்டு பலகால் தேஹத்தை சுத்தி செய்பவன் பரிசுத்தனுகமாட்டான்.] என்று சொல்லி யிருப்பது உமக்குத் தெரியாதோ? பெண்பிள்ளையின் பொருளைக் கவர்கின்ற நீர் என்ன பரிசுத்தர்!.

1. திருப்பல்லாண்டு 8.

வெய்ய விழுநிதி வண்ணர்=உம்முடைய திருமேனியின் வைலக்ஷண்யம் உமக்குத் தெரியாதோ? ஆசைப்பட்டார்க்கு அணைக்கக் கொடுப்பதற்கன்றோ நீர் இப்படிப்பட்ட உடம்பு படைத்திருப்பது; இவளை நோவுபடுத்துவதற் கென்றோ இவ்வுடம்பு படைத்தீர்போலும். 'நிதி' என்னுஞ் சொல்லை ஸ்வதந்த்ரமான தமிழ்ச் சொல்லாகக் கொண்டால் 'பொன்' என்று பொருள்படும்; நீலமேக நிறத்தனான எம்பெருமானுக்குப்பொன்னுருவமுண்டோ வென்னில்; 1. "பாலினீர்மை செம்பொனீர்மை" 2. "பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையுந் திருமேனி" 3. "சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி யொளி" இத்யாதிப்படியே அதுவுஞ் சொல்லுவதுண்டு. ஒவ்வொரு யுகத்தில் ஒவ்வொரு நிறங் கொள்வனிறே. பிராட்டி நிறத்தின் நிழலீட்டாலே பொன்னிறமாவதாகச் சொல்வதுமுண்டு. இனி, வெய்ய—விரும்பத்தக்க, விழு—சிறந்த, நிதி—பொன் போன்ற, வண்ணர்—தன்மையையுடையவர் என்றுரைத்து, பொன் எப்படி அனைவராலும் விரும்பத்தகுந்ததாயிருக்கிறதோ அப்படி விரும்பத்தக்கவரென்று கொள்ளவுமாம். 'நிதி' என்னுஞ் சொல்லை வடசொல்லாகக் கொண்டு 'புதையல்' என்றும் பொருள் கொள்ளலாம். அன்பர்க்குச் சேமவைப்பானவர் என்கை; தேவரீர் பிறருடைய உடைமையாயிருக்க வேண்டியவரேயன்றி, பிறருடைமையைக் கொள்ளை கொள்பவராதல் தகுமோ என்றவாறு.

இரண்டாமடியின் முடிவில் 'ஓ' என்றது 'இப்படியும் ஒரு பெண்பிள்ளையைக் கோலைசெய்யலாமோ? என்று கதறி முறையிடுகிறபடி. துள்ளுநீர்க் கண்ணபுரம் தொழுதாளிவள் கள்வியோ ?=இப்பரகால நாயகியானவள் உம்மிடத்தில் ஏதேனும் அபராதப் பட்டதுண்டோ? திருக்கண்ணபுரமென்னுந் திருப்பதி நீர்வாய்ப்புப் பொருந்திக் குளிர்ந்திருக்கின்றதென்று அவ்விடத்தை நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டாள்; இத்தனையே காரணமாக இவளுடைய கைவளையைக் கொள்ளை கொள்ளுதல் தகுதியோ? இவள் § ஆத்மாபஹாரக் கள்வியாகில் நீர் நினைத்தபடியெல்லாம் இவளைப் பரிபவப்படுத்தலாம்; அப்படி இவள் பக்கல் ஒருவகையான கள்ளத்தனமும் இல்லையாயிருக்கவும் கைவளைகொள்வது தக்கதோ.

'இவள் கள்வியோ ?' என்றது—இவளன்று கள்வி, நீர் தாம் கள்வர் என்றபடி. கண்ணபுரந் தொழுதாளாகையாலே இவள் கள்வியல்லள்; தொழுதவளுடைய கைவளையைக்கொள்ளை கொண்டீராகையாலே நீர் கள்வர் என்கை.

கைவளை கோள்வது தக்கதே="யாதி நயாதீதி யவெ வஹதி வாஜஹஸ்தாக்ஷணேந தஸ்மாஹ் ஹ்ருதாநி வாஸாம்ஸ்யநுவாஸாணிவாநஹுலெவ கலிதாநி=யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:— கலிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தலிதாநி" என்ற ச்லோகத்

1. திருச்சந்த விருத்தம். 2. பெரியதிருமொழி. 4—9—8.
3. திருவாய்மொழி. 3—1—2.

§ ஆத்மாபஹாரக் கள்வமாவது ஈச்வர சேஷமான ஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ரமென்று நினைக்கை.

நின் தாற்பர்யம் இங்கே நினைக்கத்தகும். அதாவது நாயகன் நாயகியை 'என் கண்மணி! நான் உன்னைப் பிரிந்து ஓர் 'ஊர்க்குச் செல்லுகின்றேன்' என்று சொன்ன நொடிப்பொழுதிலேயே அவளுடைய கையில் அணிப்பட்டிருந்த வளைகளில் முன்னேயிருந்தவளைகள் கழன்று கீழே வீழ்ந்தன; அதனைக்கண்ட நாயகன் 'இவள் நமது பிரிவைப் பொறுத்திருக்க கில்லாளாகையாலே இவளைப்பிரிந்து நாம் வெளியேறலாகாது' என்று நினைத்து உடனே 'நான் போகவில்லை' என்று சொல்லவே அச்சொல் செவிப்பட்ட நொடிப்பொழுதிலேயே கையில் நின்றும் கழன்றொழிந்தவைபோக நின்ற வளைகள் படீல் என்று வெடித்துத் துகளாய் விழுந்தன என்பது மேற்காட்டிய ச்லோகத்தின் கருத்து. நாயகனுடைய பிரிவு ப்ரஸ்தாவத்தில் வந்த மாத்திரத்திலேயே நாயகியினது உடல் மிகவும் மெலிந்து போம் என்பதும் அந்த விரஹவார்த்தை மாறினவாறே உடம்பு பூரிக்குமென்பதும் இதன் உள்ளுறை. ஆகவே, இங்குக் 'கைவளை கொள்வது தக்கதே' என்றது இவளுக்கு நீர் நித்ய ஸம்ச்லேஷத்தைத் தந்து இவள் உடம்பு பூரித்திருக்கக் காண்கை ப்ராப்தமாயிருக்க, இவளைப்பிரிந்து மேனியை மெலியச்செய்து வருத்துகை தகாது என்றவாறு.

இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின் முடிவில்—"'ந தே ரூபம்' என்கிறாள்" என்று அச்சுப்பிரதிகளில் ஒரு வாக்கியம் காண்கிறது; மேற்குறித்த ப்ரமாணம் ஜிதந்தாஸ்தோத்ரத்திலுள்ளதென்று ஆகரமும் குறிப்பிட்டிருக்கின்றார்கள்; இது ஒரு பெரிய அச்சுப்பிழை; "ந தேநுரூப: என்கிறாள்" என்று திருத்திக்கொள்க; இது ஸ்தோத்ரரத்நத்தின் மேற்கோள்; "[illegible]" என்பது இங்கே விவக்ஷிதம். .... .... .... (க)

நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினாள் *
காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள் *
பாணனார் திண்ண மிருக்க வினியிவள்
நாணுமோ? * நன்று நன்று நறையூரர்க்கே. (உ)

| | |
|---|---|
| இவள் | இப்பராங்குசநாயகியானவள் |
| நீள் நிலா முற்றத்து நின்று | உந்நதஸ்தானத்திலுள்ள நிலாமுற்றத்தில் நின்றுகொண்டு |
| நோக்கினாள் | பார்த்தாள்; (தான் பார்த்துவிட்டு) |
| காணும் ஓ! கண்ணபுரம் என்று காட்டினாள் | 'வாரீர்! பாருங்கோள் இதோ கண்ணபுரம்' என்று (பிறர்க்கும்) காட்டினாள்; |
| பாணனார் திண்ணம் இருக்க | சேர்விக்கும் ஆசார்யருடைய த்ருடாத்யவஸாயம் குறையற்றிருக்கையாலே |
| இனி இவள் நாணுமோ | இனி இவள் வெட்கப்பட்டு மீளக்கூடுமோ? |
| நறையூரர்க்கே | திருநறையூர்ப் பெருமானாகிய எம்பெருமானுக்கே |
| நன்று நன்று | (தன் எண்ணம்) நன்றாய்த் தலைக்கட்டிற்று. |

* * *—இப்பராகாலநாயகியை மநுஷ்ய ஸஞ்சாரமில்லாத வேரிடத்திலே கொண்டுபோய் வைத்தால் திருக்கண்ணபுரத் தெம்பெருமானிடத்து இவளுக் குண்டான அபிநிவேசம் ஒருவாறு தணியக்கூடும்'என்றெண்ணித் திருத்தாய் இவளை ஒரு உயர்ந்த மாடமாளிகையிலே கொண்டுவைத்தாள்; அவ்விடமே நீணிலாமுற்றம் எனப்படுகின்றது; உந்நதமாயும் நிலாவோடு கூடினதாயுமிருக்கிற முற்றம் என்றபடி. அவ்விடத்தில் நின்றுகொண்டு திருக்கண்ணபுரத்தை நோக்கினாள்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (இரண்டாம் பிரகரணத்தில்) "நிலாமுற்றம் ப்ராஜ்ஞா ப்ராஸாத மென்னும் எல்லை நிலம்" என்கிற சூர்ணிகையும், அவ்விடத்து மணவாள மாமுனிகள் வியாக்கியானத்தில்—"நீணிலா முற்றத்து நின்றிவள் நோக்கினாள் என்கிற நிலா முற்றமாகிறது—'ஷுஜ்ஞாஷுாஸாதகாரூஹ்ய $ கஸெளாவு்யெஷூா வகாநு ஜநாநு ஸூஜிஷூா நிவ ஸெஷெஷூா ஹ்ருஜ்ஞாநு ஷுாஜ்ஞ: ஷுவஸ்ய தி.' என்கிறபடியே உத்துங்கமாக நின்று ஸர்வத்தையும் தர்மிக்கைக் குறுப்பாகச் சொல்லப்படுவதாய், அதிலே நின்று தர்சித்தவளவில் காணுமோ கண்ணபுரமென்றுகாட்டினா ளென்கையாலே ததீயவிஷயமே பரமப்ராப்யமென்று பிறர்க்கும் ப்ரகாசிப்பிக்கும்படி சரமாவதியான புருஷார்த்த ஜ்ஞாநமென்கை" என்றுள்ள ஸ்ரீஸூக்திகளும் இங்கு நினைக்கத்தக்கன. உயர்ந்த முற்றம் என்று 'இனி இதற்குமேற்பட உயர்த்தியில்லை' என்னும்படியாய், 'காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள்' என்று-கண்ணபுரத்தெம்பெருமானைக்காட்டாதே அவனுடைய வஸ்துவான இடத்தைக் காட்டினதாகச் சொல்லுகையாலே ததீயவிஷயமே பரமப்ராப்யமென்னும்படி எல்லை நிலமான புருஷார்த்தஜ்ஞானமே நீணிலா முற்றமென்பதற்கு உள்ளுறை யென்க.

காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள்='சாண்நீளச் சிறுக்கியான வளுக்கு இப்படிப்பட்ட ப்ராவண்யம் தகாது'என்று அடிக்கடி சிக்ஷிக்கின்ற தாயாகிய என்னையும் அஞ்சாதே அழைத்து 'அதோபார், திருக்கண்ணபுரம் தெரிகிறதா?' என்று விரலாற் சுட்டிக் காட்டுகின்றாளே. (அன்றியே) 'திருக்கண்ணபுரத்தைப் பாருங்கள்; கைபெடுத்துக் கும்பிடுங்கள்' என்று பன்னியுரைக்கப் புகுந்து விவக்ஷிதங்களைப் பூர்த்தியாகச்சொல்லித் தலைக்கட்டமாட்டாமல் 'காணுமோ கண்ணபுரம்'என்று வாயாற் சொல்லி மற்றதை ஹஸ்தமுத்ரையாலே பூரிக்கின்றாள் என்றுமாம்.

காணும் ஓ= இங்கு 'ஓ' என்றது இரக்கத்தைக் குறிப்பதுமாம்; திருக்கண்ணபுரத்தைக் காண்பதற்காகவேயன்றோ இக்கண்கள் படைக்கப்பட்டன; அப்படியிருக்க, இதனை விலக்குவாரும் சிலர் உண்டாவதே! என்று வருந்துகிறபடி. இவ்விடத்து வியாக்கியானத்தில் ஒரு ஐதிஹ்யமுள்ளது;—வடமதுரைப் பிறந்தா னென்பா ரொருவருடைய புத்திரன் ஸ்ரீரங்கவிமாநத்தை நோக்கினாற்

$ இவ்விடத்தில் அச்சுப்பிழை ஏதாவது இருக்கக்கூடுமென்று தோன்றுகிறது; ஆகரம் தெரியவில்லை; பொருளும் நன்கு விளங்கவில்லை.

போலே நின்று கொண்டு கண்களை மூடிக்கொண்டு ஏதோ ஜபம் செய்து கொண்டிருந்தானும்; பட்டர் அந்த நிலைமையைக் கடாக்ஷித்துக் கொண்டே யெழுந்தருளி § 'புலகயதி விமாநம் பாவநம் லோசநே ந:' என்று கண்களுக்குப் பரமபோக்யமான விமானத்தைக் கண்ணாரக்கண்டு களிக்கலாமாயிருக்க, இவன் கண்களை இறுக மூடிக்கொண்டு திண்டாடுகிறானே; இவனுடைய கண் புண்ணோ? என்று வெறுத்துக் கொண்டே யெழுந்தருளினாராம்; ஒன்றிரண்டு மாதத்திற்குள்ளே அவனுக்குக் கண் கெட்டதாம்.

பாணனார் திண்ணமிருக்க இனியிவள் நாணுமோ?= நாயகனால் நாயகி பக்கலில் அனுப்பப்படுகின்ற தூதுவன்போன்ற ஒருவனுக்குப் பாணன் என்று பெயர்; (பாணன்-பாடுமவன்.) நாயகியினுடைய ப்ரணய ரோஷங்களைப் போக்கி அவளை நாயகனோடே சேர்ப்பிக்குமவன் பாணன் என்று கொள்க. (திருவரங்கக் கலம்பகத்தில் (81) "விடாது பூமடந்தைமார்........அடாததன்று பாண!........" என்ற செய்யுள் நோக்குக.) இங்குப் 'பாணனார்' என்றது பூஜோக்தி. சேதநனை ஈச்வரனோடே சேரச்செய்கின்ற ஆசாரியரே இங்குப் பாணனார் எனப்படுகிறார். திண்ணமிருக்க இனியிவள் நாணுமோ?= "உங்களோடெங்களிடை யில்லையே" என்னும்படி தேஹஸம்பந்திகளோடே உறவையறுத்து பகவத்விஷயத்திலேயே அவகாஹிக்கச் செய்கிற ஆசார்யனுடைய வலிமை இவளுக்கு இருக்கும்போது இனி இவள் அவ்விஷயத்தில் நின்றும் மீளமாட்டாள் போலு மென்கை. [நாணுமோ?] நாணுவது லஜ்ஜை; இலக்கணையால், லஜ்ஜையின் காரியமான மீட்சியை இங்கு விவக்ஷிக்கிறது.

நன்றுநன்று நறையூரர்க்கே=இவளை மீட்கப்பார்க்கிற நமக்கு நல்லகாலமில்லை; முதலிலே இவளைத் தன் வலையிலகப்படுத்திக்கொண்ட திருநறையூர் நம்பியின் எண்ணமே நிறைவேறநின்றமையால் அவர்க்கே நல்லகாலமாயிருக்கின்றதென்கை. .... .... .... .... .... (2)

அருவிசோர் வேங்கடம் நீர்மலை யென்றுவாய்
வெருவினாள் * மெய்யம் வினவி யிருக்கின்றாள் *
பெருகுசீர்க் கண்ணபுரமென்று பேசினாள்
உருகினாள் * உள்மெலிந்தா ளிதுவென்கொலோ?. (௩)

| | |
|---|---|
| இவள் | இப்பரகாலநாயகியானவள் |
| அருவி சோர் வேங்கடம் | அருவிகள் சொரிகின்ற திருமலையென்றும் |
| நீர்மலை என்று | திருநீர்மலையென்றும் சொல்லி |
| வாய் வெருவினாள் | வாய்பிதற்றினாள்; |
| மெய்யம் வினவி | திருமெய்யத்தைப்பற்றிக் கேள்விகேட்டு (அதற்கு ஒருவரும் பதில் சொல்லுவாரில்லாமையாலே) |
| இருக்கின்றாள் | வாளாவிருக்கிறாள்; |

§ ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் விமாந மங்களாசாஸந ச்லோகம்.

| | |
|---|---|
| பெருகு சீர் | சீர்மை மிகுந்த |
| கண்ணபுரம் என்று | திருக்கண்ணபுரம் என்று |
| பேசினள் | வாயாற்சொன்னவளாய்க் கொண்டு (உடனே) |
| உருகினள் | நீர்ப்பண்டமானள்; |
| உள் மெலிந்தாள் | நெஞ்சுசிதிலமாகப் பெற்றாள்; |
| இது என் கொல் | இப்படியுமொருநிலைமை யுண்டாகக்கடவதோ?. |

* * *—இப்பரகாலநாயகியை நோக்கி ஹிதமாக நான் ஏதேனுஞ் சொன்னல் அதை இவள் செவியேற்பதுமில்லை, அதற்கு மறுமொழி கூறுவதுமில்லை; 'திருவேங்கடம்' 'திருநீர்மலை' என்றே இவள் எப்போதும் வாய்வெருவிக்கொண்டிரா நின்றாள்; சிலஸமயங்களில், 'திருமெய்யம்' என்றொரு திவ்யதேசமிருக்கிறதே, அதற்கு 'மெய்யம்' என்று ஏன் திருநாமம் வந்தது? அடியவர்கட்கு மெய்யே நின்று காரியஞ் செய்தவிடம் என்கிற காரணத்தினலோ அத்திருப்பதிக்கு அத்திருநாமமுண்டாயிற்று?' என்று அருகிலுள்ளாரைக் கேட்கிறாள்; இதற்கு மறுமொழி கூறுவார் ஆருமில்லாமையாலே பெருமூச்சுவிட்டு வாளாவிருக்கின்றாள். சிலஸமயங்களில் 'திருக்கண்ணபுரம்' என்று வாய்நிறையப் பேசினவாறே அந்தக்ஷணத்திலேயே நீர்ப்பண்டமாய் உருகுகின்றாள்; நெஞ்சு தளர்கின்றாள்; இப்படி இவள் ஆவதற்கு என்பாபம் தவிர வேறு என்ன காரணமோ அறிகின்றிலேன் என்றாளாயிற்று. .... .... (௩)

உண்ணும் நாளில்லை உறக்கமுந் தானில்லை *
பேண்மையுஞ் சால நிறைந்திலள் பேதைதான் *
கண்ணனூர் கண்ணபுரந் தொழும் கார்க்கடல்
வண்ணர்மேல் * எண்ண மிவட்கிது வென்கொலோ?. (௪)

| | |
|---|---|
| உண்ணும் நாள் இல்லை | இவள் ஒருநாளும் உண்பதில்லை; |
| உறக்கம் தானும் இல்லை | கண்ணுறங்குவது மில்லை; |
| பெண்மையும் சால நிறைந்திலள் | நன்றாகமுதிர்ந்த பெண்மைப்பருவமுடையளல்லள்; |
| பேதை தான் | இளம்பெண்தான்; |
| | (இப்படியிருக்கச் செய்தேயும்) |
| கண்ணன் ஊர் | எம்பெருமானுடைய திவ்யதேசமாகிய |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| தொழும் | தொழாநின்றாள்; |
| இவட்கு எண்ணம் | இவளுடைய எண்ணம் |
| கார் கடல் வண்ணர் மேல் | கரியகடல்போன்றநிறத்தை யுடையரான சௌரிப் பெருமாள்மேலுள்ளது; |
| இது என் கொல் | இது என்ன ஆச்சரியம்!. |

* * *—இவள் முன்பெல்லாம் நம்மைப்போலே உண்பதும் உறங்குவதுமாயிருந்தவள் இப்போது உண்பதுமில்லை உறங்குவதுமில்லை; நாயகனேடே கலவி செய்யும் பருவமாயிருந்தால் ஊணும் உறக்கமுந் தவிர்வது ஸஹஜமேயாகும்; அப்பருவமாவது இவட்கு உண்டோ வென்னில், அதுவுமில்லை; பேதைப் பருவமேயாயிற்று இவளது. இப்படியிருக்கச் செய்தேயும் திருக்கண்ண

புரத்தை நோக்கி அஞ்ஜலி செய்வதே இவளுடைய காயிகவ்யாபாரம்; அவ்வூருக்குள்ளே கடல் தேங்கினாற் போலே நிற்கிற சௌரிப்பெருமாளுடைய திருமேனி நிறத்தைச் சிந்திப்பதே இவளுடைய மாநஸவ்யாபாரம்; இஃது என்ன ஆச்சரியம்! என்றுளளாயிற்று.

'ஊணில்லை' என்னாதே 'உண்ணும் நாளில்லை' என்றதற்குக் கருத்து யாதெனில்; பிராட்டி பெருமாளைப் பிரிந்து அசோகவனத்தில் பத்துமாஸம் உபவாஸத்தால் மெலிந்திருந்தபோது தேவேந்திரன் அம்ருதமயமான அன்னத்தைக் கொண்டுவந்து ராக்ஷஸரும் ராக்ஷஸிகளுங் காணாமே கொடுக்க அதனை அமுது செய்தாளென்று ரிஷி எழுதிவைத்தான்; இவளுக்கு அப்படிப்பட்ட உணவும் ஒருநாளுமில்லையென்பதாம்.

உணவு இல்லாமல் சில நாட்கள் தரித்திருக்கலாம்; உறக்கமின்றித் தரித்திருப்பது அரிதாதலால் 'உறக்கமில்லை' என்னாது 'உறக்கந்தானுமில்லை' என்றது. .... .... .... .... (ச)

கண்ணனூர் கண்ணபுரந் தொழுங் காரிகை *
பெண்மையென்? தன்னுடை யுண்மை யுரைக்கின்றாள் *
வெண்ணெயுண் டாப்புண்ட வண்ணம் விளம்பினால் *
வண்ணமும் பொன்னிறமாவ தொழியுமே. (ரு)

| | |
|---|---|
| கண்ணன் ஊர் | சௌரிப் பெருமாளுடைய திவ்ய தேசமான |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| தொழும் | தொழுகின்ற |
| காரிகை | இவ்வழகியானவள் |
| தன்னுடை | தன்னுடைய |
| உண்மை | (வியாமோஹத்தின்) உண்மையை |
| உரைக்கின்றாள் | வாய்விட்டுச் சொல்லுகிறாள்; |
| பெண்மை என்? | இஃது என்ன பெண்மைக்குணம்? |
| வெண்ணெய் உண்டு | (அவன்) வெண்ணெயை(க் களவாடி) அமுது செய்து |
| ஆப்புண்ட | (தாம்பினால்) கட்டுண்ட |
| வண்ணம் | ஸமாசாரத்தை |
| விளம்பினால் | (யாரேனும் எதிர்) சொன்னால் |
| வண்ணமும் | (இவளுடைய) மேனி நிறமும் |
| பொன் நிறம் ஆவது ஒழியும் | பசலைநிறமாயிருக்குமிருப்பு தவிர்ந்து நல்ல நிறமாம்படி (இவள்) ஸந்தோஷப்படுகிறாள். |

* * *—இப்பாட்டின் இரண்டாமடியில் "பெண்மையும் தன்னுடை" என்று பாடம் வழங்கி வருகின்றது; இப்பாடத்திற்குப் பொருளுமில்லை, வியாக்கியானத்தோடு சேர்த்தியுமில்லை; பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங் காண்மின்— "பெண்மை—ஸ்த்ரீத்வம்; அதாகிறது — ஏதேனும் ஓரவஸ்தை பிறந்தாலும் உயிர்த்தோழிக்குங்கூட மறைக்கும்படியிறே யிருப்பது; அவளும் இவளுடைய வ்யாபாரங்களைக்கண்டு 'இவளுக்கு ஓடுகிற தசை இதுவாகாதே' என்றறியுமித்தனையிறே. ஆயிருக்க பெற்றதாயான எனக்கும் வாய்விடா நின்றாள்; இவளுக்கு என்ன பெண்மை? என்கிறாள்."—இந்த வியாக்கியான ஸ்ரீஸூக்திக்குச் சேர;

"பெண்மை என் ?" என்றே பாடம் கொள்ளத்தக்கது ; இப்பாடமே கற்றுணர்ந்த பெரியோர் ஆதரிப்பதும். 'கண்ணனூர் கண்ணபுரந் தொழுங் காரிகை தன்னுடை உண்மை உரைக்கின்றாள் ; பெண்மை என் ?' என்று அந்வயிப்பது. சௌரிப்பெருமாள் எழுந்தருளியிருக்குமிடமான திருக்கண்ணபுரத்தை நோக்கி அஞ்ஜலி செய்கின்ற இப் பெண்மகள் அந்த காயிக வ்யாபாரத்தோடு நில்லாமல் தன்னெஞ்சில் ஓடுகின்ற எண்ணங்களைச் சிறிதும் ஒளிக்காமல் உள்ளது உள்ளபடியே என் பக்கலில் வாய்விட்டுச் சொல்லுகின்றாள் ; ஒன்றையும் மறைக்காமல் வெட்டவெளிச்சமாக வெளியிடுதற்குரிய உயிர்த்தோழியிடத்தும் ஒளித்தேதீர வேண்டும்படி மருமமான வார்த்தைகளையும் என்னிடத்தில் கூசாதே வாய்விட்டுச் சொல்லுகின்றாளே இவள் ; இஃது என்ன பெண்மை ?—பெண்மைக் குணத்திற்கு இது தகுதியோ ? என்கிறாள். தன்னுடை யுண்மை யுரைக்கின்றாள்= "வடவரை நின்றும் வந்து இன்று கணபுர மிடவகை கொள்வது யாமென்று பேசினாள்" என்று மேற்பாட்டில் சொல்லுகையாலே அதுவே இதற்குப் பொருள் என்றுங் கொள்ளலாம். திருவேங்கட மலையில் நின்றும் திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம்பண்ண வந்திருக்கிறேனென்பதாகத் தன்னுடைய உண்மையை உரைக்கின்றாள் என்க.

[வெண்ணெ யுண்டாப்புண்ட வண்ணம் விளம்பினால் வண்ணமும் பொன்னிறமாவ தோழியு'ம.] இப்பெண்மகள் பிரிவாற்றாமையாலே உடம்பு வெளுத்து வருந்திக் கிடக்கச் செய்தே, எம்பெருமான் பக்கலில் இவளுடைய அநுராகத்தை மாற்றுவதற்காக 'அவனுடைய தீம்புகளையும் அவன் பட்ட பரிபவங்களையும் எடுத்துரைத்தோமாகில் தன்னடையே அவனிடத்தில் இவளுக்கு வெறுப்பு உண்டாகிவிடும்' என்றெண்ணிய சிலர், "கண்ணனும் கண்ணன், என்ன கண்ணன்! ; வெண்ணெய் திருடுவதும் எளியார் கையிலே பிடிபடுவதும் உரலோடு தாம்பினால் பிணிப்புண்டு ஏங்கிக்கிடப்பதும் இவையன்றோ அவனுடைய திவ்ய கீர்த்திகள்!" என்று ஏச்சாகச் சில சொல்லுவர்கள் ; அவன் பக்கலில் இவளுக்கு வெறுப்பைபுண்டாக்குவதற்காகச் சொல்லும் இவ்வார்த்தைகள்தானே அந்தோ! உவப்புக்கு எருவிட்டாற்போலே ஆகின்றன: 'அவாப்தஸமஸ்தகாமனானவன் குறைவாளரைப்போலே வெண்ணெயுண்ண ஆசைப்படுவதே !' அந்த வெண்ணெய்தானும் தன் மனையிலே ஏராளமாகக் கிடைக்கலாயிருக்கச் செய்தேயும் அது பிறருடையதா யிருக்கவேணுமென்றும் அது தன்னையும் களவு வழியிலே ஸம்பாதித்து உண்ணவேணு மென்றும் விரும்பிக் களவு செய்வதே!; அது செய்யினும் ஸாமர்த்தியமாய்ச் செய்து ஜரிப்பித்துக் கொள்ளவல்ல சக்தியிருக்கச் செய்தேயும் அஸமர்த்தரைப் போலே வாயது கையதாக அகப்பட்டுக்கொண்டு கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு அழுது ஏங்கிக்கிடப்பதே!; அஹஹ! இத்தனை ஸௌலப்ய ஸௌசீல்யகுணம் வாய்ந்தவொரு பெருமானையன்றோ நாம் ஆசைப்படப்பெற்றோம்!;, நம்முடைய பாக்கியமே பாக்கியம் !; அவனுடைய ஸம்ச்லேஷம் நமக்குக் கிடையா தொழியினுமொழிக; இப்படிப்

பட்ட மஹானிடத்தில் நாம் ஆசைப்படப் பெற்றதே நமக்கு எல்லாப் பேறும் கிடைத்தபடியாகுமன்றோ? என்று சொல்லி அவனுடைய திருமேனியோடே அணையப் பெற்றால் பிறக்கக்கூடிய ஸந்தோஷ நிலைமையைப் பெறுகின்றாளிப் பெண்பிள்ளை—என்றாளாயிற்று.

“அவாப்த ஸமஸ்தகாமனானவன் ஒருத்தியுடைமையை ஆசைப்படுவதாம்; ஸர்வசக்தியானவன் களவிலே இழிவதாம்; அதுதன்னிலும் அகப்பட்டுக் கட்டுண்ணும்படி எளியனாவதாம்; இனி நமக்கொரு குறையுண்டோ வென்கிறாள்” என்ற பரமபோக்யமான வியாக்கியான ஸ்ரீஸூக்திகாண்மின்.

வண்ணமும் பொன்னிறமாவதொழியுமே—பெண்டிர்க்குப் பிரிவாற்றாமையினால் தோன்றும் பசலைநிறம் பொன்னிற மெனப்படும்; அது வ்யஸநத்திற்கு ஸூசகம்; அந்த நிறம் ஒழிந்ததென்றால் ஸந்தோஷமுண்டாயிற்றென்றபடியாம். அவனுடைய திருக்குணங்களைப் பிறர் ஏச்சாகச் சொன்னாலும் 1 ‘கற்றினம் மேய்க்கவும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றியுரலிடை ஆப்புமுண்டான் பாவிகாள் உங்களுக் கேச்சுக்கொலோ?’ என்னும் மெய்யன்புடையளாதலால் அந்த திவ்ய கீர்த்தி செவிப்பட்ட மாத்திரத்திலும் அவனோடு தனக்குக் கலவி நேர்ந்ததாகவே கொண்டு வைவர்ணியம் மாறப்பெற்றாளென்க. (௫)

வடவரை நின்றும் வந்து * இன்று கணபுரம்
இடவகை கொள்வது யாமென்று பேசினாள் *
மடவரல் மாதரென் பேதை யிவர்க்கிவள்
கடவதென்? * கண்டுயி லின்றிவர் கொள்ளவே. (௬)

| | |
|---|---|
| வடவரை நின்றும் வந்து | ‘வடக்குத் திருமலையில் நின்றும் புறப்பட்டு வந்து |
| இன்று | இப்போது |
| கணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| இடவகை கொள்வது யாம் | இருப்பிடமாகக் கொண்டிருப்பது நானே’ |
| என்று பேசினாள் | என்று (சௌரிப் பெருமாளோடு ஐக்கியமாகத் தன்னைச்) சொல்லிக் கொண்டாள்; |
| இவர் | இந்த சௌரிப்பெருமான் |
| இன்று | இன்றைக்கு |
| கண் துயில் | (இவளுடைய) கண்ணுறக்கத்தை |
| கொள்ள | கொள்ளை கொள்வதற்கு, |
| மடவரல் | மடப்பமென்னுங்குணத்தை யுடையவளும் |
| மாதர் | விரும்பப்படுமழகை யுடையவளுமான |
| என் பேதை இவள் | என்சிறுமியாகிய இவள் |
| இவர்க்கு கடவது என் | இப்பெருமானுக்குக் கடமைப்பட்டிருப்பது என் கொல்!. |

* * *—அநுகாரத்தாலே தரிப்பது என்று ஒன்றுண்டு. பண்டு திருவாய்ப்பாடியிற் பெண்கள் கண்ணபிரானைப் பிரிந்து ஆற்றமாட்டாமல் மாமியார் மாமனார் முதலானாருடைய காவலையுங் கடந்து யமுனையாற்றின் கரையிலே அப்பிரானை

1 நாச்சியார் திருமொழி 12-8.

அநுபவிப்பதாக வந்தவளவிலே அங்கு அவனைக் காணாமல் முன்னிலும் ஆற்றாமை மிஞ்சி, ஏதேனுமொருபடியாலே தரிக்கப் பார்த்து "துஷ்ட காளிய! திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா— துஷ்ட காளிய! திஷ்டாத்ர க்ருஷ்ணோஹமிதி சாபரா" இத்யாதிப்படியே, 'அடா காளியனே! நில்; நான் கண்ணன்; உன்மேலேறித் துவைத்து நர்த்தனம் செய்யப்போகிறேன்' என்றும் மற்றும் பலவிதமாகவும் கண்ணபிரான் போலவே தங்களை அநுகாரஞ் செய்துகொண்டு பேசித் தரித்தார்கள்; நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "கடல் ஞாலஞ் செய்தேனும் யானே யென்னும்" என்று தொடங்கிப் பத்துப் பாசுரங்களாலே தம்மை எம்பெருமானாகப் பேசித் தரித்தார். அந்த நிலைமை பரகாலநாயகிக்கும் நிகழ்கின்றமை இப்பாசுரத்தில் விளங்கும். மற்றை ஆழ்வார்களிற் காட்டிலும் இவ்வாழ்வார்க்கு அர்ச்சாவதாரத்தில் ப்ராவண்யம் அளவற்றதாகையாலே இவ்வநுகாரமும் அர்ச்சாவதார விஷயமாகவே செல்லுகின்றது. வடக்குத் திருமலையாகிய திருவேங்கட மலையில் வாஸத்தைவிட்டுக் கிழை வீடாகிய திருக்கண்ணபுரத்திலே நித்யவாஸம்பண்ண இன்று இங்கு வந்து சேர்ந்திருக்கிறோம் யாம் என்று தன்னைச் சௌரிப்பெருமாளாகவே சொல்லிக்கொள்ளுகிறாள் என்பதைத் திருத்தாய் விளம்புகின்றாள்.

இச்சிறுமியை இப்பாடு படுத்துதல் ஈச்வரனுக்குத் தகாது என்கிறாள் பின்னடிகளில். இதற்கு முந்தின க்ஷணம்வரையில் பந்துவர்க்கங்களின் சொல்தவறாது நடந்துகொண்டிருந்தவளும் மிகச் சிறிய பருவமுள்ளவளும் அழகிற் சிறந்தவளுமான இவளை இங்ஙனே கண்ணுறக்கங் கெட்டு வருந்தவைப்பது அவர்க்கு ப்ராப்தமோ? என்கிறாள். .... .... .... (௯)

தரங்கநீர் பேசினும் தண்மதி காயினும் *
இரங்குமோ? எத்தனை நாளிருந் தெள்கினாள்? *
துரங்கம்வாய் கீண்டுகந்தானது தொன்மையூர் *
அரங்கமே யென்ப திவள்தனக் காசையே. (௰)

| | |
|---|---|
| தரங்கம் நீர் | திரைக்கிளர்ச்சியை யுடைய கடல் |
| பேசினும் | கோஷம் செய்தாலும் |
| தண் மதி | குளிர்ந்த சந்திரன் |
| காயினும் | காய்ந்தாலும் |
| | (இவள்) |
| இரங்குமோ | இளைப்பளோ? (இளைக்கமாட்டாள்.) (ஏனென்னில்) |
| எத்தனை நாள் இருந்து எள்கினாள் | நெடுநாளே பிடித்தும் (இவற்றிலே) ஈடுபட்டிருக்கிறாளன்றோ. |

| | |
|---|---|
| துரங்கம் | குதிரை வடிவாக வந்த அசுரனுடைய |
| வாய் | வாயை |
| கீண்டு | கிழித்தெறிந்து |
| உகந்தானது | மகிழ்ந்த பெருமானுடைய |
| தொன்மை ஊர் | அநாதி திவ்யதேசமாகிய |
| அரங்கம் என்பதே | திருவரங்கம் என்று சொல்லிக் கொண்டிருப்பதே |
| இவள் தனக்கு ஆசை | இவளுடைய ஆசையாயிருக்கிறது. |

* * *–இப்பாட்டில், 'இச் சிறுமியின் கண்ணுறக்கத்தைக் கொள்ளை கொள்வதற்கு இவர்க்கு என்ன ப்ராப்தியுண்டு?' என்ற திருத்தாயை நோக்கிச் சில பெண்டுகள் 'இப்படி நீ சொல்லலாகுமோ? அவர்க்கு என் ப்ராப்தியில்லை; அப்ராப்தஸ்தலத்திலே அவர் தம் செங்கோல் செலுத்துகிறாரல்லர்; உன் மகள் விஷயமாக நீயே சொல்லுகிற வார்த்தைகளினால் இவளுடைய மனமொழி மெய்களாகிற த்ரிகரணமும் அவர் விஷயத்திலே படிந்தனவாக விளங்காநின்றது; 'கார்க்கடல் வண்ணர்மே லெண்ணமிவட்கிது வென்கொலோ' என்றதாகையாலே இவளுடைய சிந்தை அவர் திறத்தே படிந்ததென்று விளங்கிற்று; 'கண்ணபுரமென்று பேசினளுருகினள்' என்றதாகையாலே இவளுடைய பேச்சும் அவர் திறத்தே படிந்ததென்று விளங்கிற்று; 'கண்ணபுரந் தொழும்' என்றதாகையாலே இவளுடைய காயிக வ்யாபாரமும் அவர் திறத்தே படிந்ததென்று விளங்கிற்று; ஆக, சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையினாலும் இவள் அவரையே விஷயீகரித்திருக்கின்றாள் என்னவேண்டியிருக்கும்போது 'மடவரல் மாதரென் பேதை யிவர்க்கிவள் கடவதென் கண்டுயிலின்றிவர் கொள்ளவே' என்று எங்ஙனே சொல்லலாம்? அவரோடும் இவளோடும் கொள்கொடைபற்றோ விருக்கிறது? இது கிடக்கட்டும்; உன் மகள்தான் இக்கஷ்டங்களை யெல்லாம் பொறுத்திருக்க சக்தியுடையவள்தானோ? என்று கேட்க, அதற்கு மறுமொழி கூறுவது போன்றதாம் இப்பாசுரம்.

**தரங்கநீர் பேசினும் தண்மதிகாயினும் இரங்குமோ**=கடல் கோஷித்தலும் நிலாக்காய்தலும் விரஹிகளுக்கு மிக்க இளைப்பை உண்டாக்குமாயினும் அவற்றுக்கெல்லாம் இவள் இளைக்கின்றிலள். அதற்குக் காரணமென்னென்னில்; **எத்தனைநா ளிருந்தேள்கினள்**=நெடுநாளாக அடிபட்டுக் காய்ப்பேறினவனுக்குப் பின்னையும் அடிபடுதல் லக்ஷியமோ? இவள் நெடுநாளாகவே இக்கஷ்டங்களை அநுபவித்து வருகிறாளாகையால் இவை இவட்கு அலக்ஷியமாய் விட்டன என்கை. கீழ்ப்பாட்டில், 'மடவரல்மாத ரென்பேதை' என்று சொல்லிவைத்து இப்பாட்டில் இப்படி சொல்லத் தகுமோ வென்று ஒரு சங்கை தோன்றும்; ஒன்றுமறியாதவளென்றும் நேற்றுவரை பந்துவர்க்கங்களுக்கு உடன்பட்டு நடந்த சிறுமியென்றும், இன்றே இவட்கு இப்படிப்பட்ட அவகாஹம் உண்டாயிற்றென்றும் சொல்லுவதோடு இது முரண்படுமே யென்று சங்கிக்க வேண்டா; "[1]க்ஷுடி யுகாயதே க்ஷணம் த்ருடி யுகாயதே த்வாமபச்யதாம்" என்றும் 2. "பலபல ஊழிகளாயிடும்" 3. "ஒரு பகல் ஆயிர மூழியாலோ" என்றும் சொல்லுகிறபடியே பிரிவுகாலம் பல்லூழியூழிகளாகத் தோன்றுமாதலால், மகளுடைய அப்படிப்பட்ட வசநவ்யக்திகளைக் கொண்டு சொல்லுகிறாள் தாய் எனக் கொள்க.

முன்னடிகட்கு வேறு வகையாகவும் பொருள் கூறலாம்;–'இரங்குமோ' என்பதை 'இரங்கும், ஓ' என்று வாக்ய பேதமாக்கி, கடல் கோஷித்தாலும் நிலாக்

1. கோபிகாகீதை. 2. திருவிருத்தம். 3. திருவாய்மொழி 10.3-1,

காப்தாலும் இவள், இரங்கும்—வருத்தப்படுகின்றாள் ! ஓ!—அந்தோ. எத்தனை நாளிருந்தெள்கினாள் = இப்படி எத்தனை நாளாகக் கஷ்டப்படுவள் என்று.

விரோதிகளை யழிக்கவல்ல எம்பெருமான் நெடுநாளாக நித்யவாஸம்பண்ணுமிடமான திருவாங்கத்தை வாய் வெருவிக்கொண்டிருப்பதே இப்பெண்பிள்ளையின் ஆசையாயிருக்கின்றதென்பன பின்னடிகள்.

துரங்கம்வாய் கீண்ட வாலாறு:—கம்ஸனால் ஏவப்பட்ட அஸுரர்களில் கேசியென்பவன் குதிரையின் உருவத்தோடு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி. கனைத்துத் தூத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி, அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களை யுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இரு பிளவாக வகிர்ந்து தள்ளினன் என்பதாம்.

தாங்கம், துரங்கம்—வட சொற்கள். ... ... (எ)

தொண்டெலாம் நின்னடியே தொழு துய்யுமா
கண்டு * தான் கணபுரந் தொழப் போயினாள் *
வண்டலாங் கோதையென் பேதை மணிநிறம்
கொண்டுதான் * கோயின்மை செய்வது தக்கதே. (அ)

| | | | |
|---|---|---|---|
| தொண்டு எல்லாம் | ஸகல பக்தவர்க்கங்களும் | வண்டு உலாம் கோதை | வண்டுகள் உலாவப்பெற்ற மயிர்முடியை யுடையளான |
| நின் அடியே | உனது திருவடிகளையே | என் பேதை | என் குழந்தையினுடைய |
| தொழுது | ஸேவித்து | மணி நிறம் கொண்டு | அழகிய மேனி நிறத்தைக் கொள்ளைகொண்டு |
| உய்யும் ஆ கண்டு | உஜ்ஜீவித்துப் போவதைப் பார்த்து | தான் | ஸ்வாமியாகிய நீ |
| தான் | இவளும் | கோயின்மை செய்வது | அநியாயம் பண்ணுவது |
| கணபுரம் | திருக்கண்ணபுரத்தை | தக்கதே | தகுதியோ ?. |
| தொழ | ஸேவிப்பதற்கு | | |
| போயினாள் | சென்றாள்; | | |

* * *—தொண்டு எல்லாம்—தொண்டர் எல்லாரும் என்றபடி. பக்தர்களாயிருப்பவர்களெல்லாரும் திருக்கண்ணபுரத் தெம்பெருமானை அடிபணிந்து உஜ்ஜீவித்துப் போகிறார்களென்பதை புணர்ந்து தானும் அப்படி உஜ்ஜீவித்துப் போக ஆசை கொண்டு திருக்கண்ணபுரம் தொழுதாள் இவள்; இப்படி அநர்த்தப்படப் போகிறோமென்று அறிந்திருந்தாளாகில் திருக்கண்ணபுரமுள்ள திக்கையும் நோக்கியிருக்கமாட்டாள்; உஜ்ஜீவிக்க வென்று வந்து தொழுதவளை இப்படி மேனி நிறமழியச் செய்து அநியானவற்றைச் செய்வது ஸர்வேச்வரனென்று பெயர் சுமந்திருப்பார்க்குத் தகுமோ ? என்கிறாள் திருத்தாய்.

" ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப - சதுர்விதா ஜநா: ..." — ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தி ஜ்ஞாநீச பரதர்ஷப-சதுர்விதா

பஞ்சமமாம்" என்று கைதயிலருளிச்செய்தபடியே, இழந்த செல்வத்தை மீண்டும்பெறவிரும்புகின்ற ஆர்த்தர்கள், புதிதாகச் செல்வம்பெறவிரும்புகின்ற அர்த்தார்த்திகள், கைவல்யபோகத்தை விரும்புகின்ற ஆத்மப்ராப்திகாமர்கள், பகவதநுபவத்தையே விரும்புகின்ற ஞானிகள்—ஆகிய நான்கு வகை யதிகாரிகளும் எம்பெருமானை உபாஸித்துப் பேறு பெறுவதைக் கண்டவிவள் தானும் தன் அதிகாரத்திற்குத் தகுதியாகத் தொழுது உய்யலாமென்று திருக்கண்ணபுரந் தொழப்போனாள்; இவளுடைய அழகு எப்படிப்பட்டது? [வண்டுலாங்கோதை யென் பேதை] இவள் மயிரை முடித்துப் பூவைச்சுற்றிவிட்டால் மதுவில் நசையாலே வண்டுகள் மேலே சுழலமிடும். [பேதை] அந்த வண்டுகளுக்கு அஞ்சி உள்ளே வந்து புகும்பருவமுடையவள்.

[மணிநிறங்கொண்டு தான்]* தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள் செய்கையன்றோ முறைமை; தான் நன்மணிவண்ணனாயிருக்க, இவளுடைய மணிநிறத்தைக் கொள்ளை கொள்ளத் தகுதியுண்டோ? [கோயின்மை செய்வது தக்கதே] ராஜநீதியில்லாதார் செய்வதை நீர் செய்யக் கடவீரோ? இழந்தவற்றை மீட்டுக்கொடுக்கை யன்றோ அரசர்கட்கு முறைமை; ராஜாக்களே வழிபறிக்கை நீதியோ? என்கிறாள்.

[கோயின்மை] கோ—அரசன்; இன்மை—இல்லாமை; கேட்பாரற்ற அநீதிச்செயல் என்றபடி. .... ... .... .... (அ)

முள்ளெயி றேய்ந்தில கூழை முடிகொடா *
தெள்ளிய ளென்பதோர் தேசிலள் என்செய்கேன் *
கள்ளவிழ் சோலைக் கணபுரம் கைதொழும்
பிள்ளையை * பிள்ளையென் றெண்ணப் பெறுவரே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| முள் எயிறு | முளைக்கின்ற பற்களும் | என் செய்கேன் | (இப்படிப்பட்ட இவள் விஷயத்தில்) நான் என்ன செய்வேன்! |
| ஏய்ந்தில | நிரம்பவில்லை; | கள் அவிழ் சோலை | மது பெருகுகின்ற சோலைகளையுடைய |
| கூழை | கூந்தலும் | கணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| முடி கொடா | எடுத்து முடிக்கப் போரும்படி வளர்ந்தன வில்லை; | கை தொழும் | கையெடுத்து வணங்குகிற |
| | | பிள்ளையை | பிள்ளையை |
| தெள்ளியள் என்பது ஓர் தேசு இலள் | விவேகமுடையவள் என்று சொல்லும்படியான தேஜஸ்ஸை உடையவளல்லள்; | பிள்ளை என்று எண்ணப் பெறுவரே | பிள்ளையென்று நினைக்க வாகுமோ? [கௌரவிக்க ப்ராப்தியுண்டிறே.] |

* * *—"முலையிலங்கு பூம்பயலை முன்போட அன்போடியிருக்கின்றாளால்" என்று சொன்ன திருத்தாய்தானே இப்போது "முள்ளெயிறேய்ந்தில கூழை முடிகொடா, தெள்ளியளென்பதோர் தேசிலள்" என்றால், இஃது என்னே; பரகால நாயகி யௌவன பருவத்தை யடைந்திருப்பதாகப் பல பாசுரங்களால் விளங்கா

நிற்க, இன்னம் பற்களும் முளைக்கவில்லையென்றும், மயிரும் சேர்த்து முடிக்கலாம் படி கூடினவில்லையென்றும் இங்கே சொல்வது பொருந்துமாறு எங்ஙனே? எனின்; உண்மையில் இவள் யௌவன பருவத்தை யடைந்தவளே; ஆயினும் தாய்க்கு அன்பு மிகுதியால் இவளது மிக்க இளமையே தோற்றுவதென்க.

1. "செய்ய நூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்" 2. "வாயிற் பல்லு மெழுந்தில மயிரும் முடி கூடிற்றில,......மாயன் மாமணிவண்ணன் மேலிவள் மாலுறுகின்றாளே" 3. "கொங்கையின்னங் குவிந்தெழுந்தில" 4. "முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங்குழல் குறிய, கலையோ அரையில்லை நாவோ குழறும்" இத்யாதி பாசுரங்களோடு ஒப்பிடுக.

இப்படி இளம்பருவமுடையளான விவளை நான் எப்படி நியமிப்பேன் என்கிறாள் என் செய்கேன் என்று. இவளை நான் நியமிப்பேனோ, அன்றி அநுவர்த்திப்பேனோ என்கிறாள். இத்தனை சிறு பிராயத்தில் உனக்கு இவ்வளவு ப்ராவண்யம் கூடாது என்று இவளை அடக்குவேனோ, அன்றி, இத்தனை சிறு பிராயத்திலேயே பகவத் விஷயத்தில் அவகாஹிக்கப் பெற்ற விவள் ஸாமாந்யமானவளல்லள், விண்ணுளாரிலும் சீரியள் என்று கொண்டு இவளைக் கைகூப்பி வணங்குவேனோ என்கிறாள்.

இங்ஙனே அலைபாய்ந்த நெஞ்சு ஒரு முடிவுக்கு வந்தமையைப் பின்னடிகளில் வெளியிடுகிறாள். திருக்கண்ணபுரத்தைக் கைதொழும்பிள்ளை நம் வயிற்றில் பிறந்த சிறு பிள்ளையேயாகிலும் ஈடுபட்ட விஷயத்தின் பெருமையையன்றோ நோக்கவேணும்; இவளது சிறுமையால் வருங்குற்றமேது? சிறுமையில்தானே இப்படிபகவத் விஷய ப்ராவண்யமும், உகந்தருளின நிலத்தில் ஊற்றமும் உண்டாகப் பெற்றதே!; ஆகையாலே இவளை நியமிக்கப் பாராமல் அநுவர்த்திப்பதே நன்று என்றாளாயிற்று. "விளங்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில் வெஃகாவில் திருமாலைப்பாடக் கேட்டு, வளர்த்ததனல் பயன் பெற்றேன் வருக வென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினாளே" என்றது திருநெடுந்தாண்டகத்தில்.

கூழை—தலைமயிர். தேள்ளியள்—தெளிந்து வார்த்தை சொல்லவல்லவள், தேசு—தேஜஸ். எண்ணப் பெறுவரே=நெஞ்சால் நினைத்தாலும் ப்ராயச் சித்தம் செய்துகொள்ள வேணுமே யென்றவாறு. .... .... .... (௯)

காார்மலி கண்ணபுரத்தெம்மடிகளை *
பார்மலி மங்கையர்கோன் பரகாலன்சொல் *
சீர்மலி பாட லிவைபத்தும் வல்லவர் *
நீர்மலி வையத்து நீடு நிற்பார்களே. (௧௦)

---

1. பெரியாழ்வார் திருமொழி 3-7-1.
2. ௸ 3-7-2.
3. ௸ 3-7-3.
4. திருவிருத்தம் 60.

| | | | |
|---|---|---|---|
| கார் மலி | மேகங்கள் நிறைந்திருக்கப் பெற்ற | சீர் மலி | பகவத்குணங்கள் நிறைந்த |
| | | பாடல் | பாசுரங்களாகிய |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந் தருளியிருக்கிற | இவை பத்தும் | இத்திருமொழியை |
| எம் அடிகளை | எம்பெருமானைக் குறித்து | வல்லவர் | கற்றுணரவல்லவர்கள் |
| பார் மலி மங்கையர் கோன் பரகாலன் | இப்பூமியெங்கும் புகழ் மிக்க திருமங்கையாழ்வார் | நீர் மலி | கடல்சூழ்ந்த |
| | | வையத்து | இப் பூமண்டலத்திலே |
| | | நீடு | நீண்டகாலம் |
| சொல் | அருளிச்செய்த | நிற்பார்கள் | நிலைநிற்கப் பெறுவர். |

* * *—மேக ஸஞ்சாரம் மாறாத திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கும் சௌரிப்பெருமாள் விஷயமாகத் திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இத்திருமொழியைக் கற்றுணரவல்லவர் கடல்சூழ்ந்த பூமியிலே நெடுங்காலம் வாழப் பெறுவர் என்று பயனுரைத்ததாயிற்று.

ஈற்றடியின் வியாக்கியானத்திற் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்கிறார் காண்மின்:—"இது கற்றார்க்குப் பலன் ஸம்ஸாரத்திலிருக்கையோ வென்னில், பரமபதத்திலே 'தெள்ளியீர்' இல்லையே; தெள்ளியிருள்ளது இங்கேயன்றோ. 'ஹாவொ நாநு௫ஆ ஜஹூதி—பாவோ நாந்யத்ர கச்சதி' என்று திருவடி ராமகுணங்களைக் கேட்டு அத்தாலே பூர்ணனாய் அத்தேசத்தேயிருந்தாப்போலே தெள்ளியிரை இங்கே பாடக்கேட்டுப் பூர்ணரா யிருக்கப்பெறுவர்கள்"—என்று. (அதாவது) இவ்வருளிச் செயலைக் கற்பவர்கள் இருள் தருமா ஞாலத்தி லிருப்பொழிந்து நலமந்தமில்லதோர் நாடுபுகுவர் என்று பயனுரைக்க வேண்டியிருக்க 'நீர்மலி வையத்து நீடு நிற்பார்களே' என்று இக்கொடுவுலகத்தி லிருப்பையே பயனாகவுரைக்கத் தகுமோ வென்று சங்கை; (இதற்கு ஸமாதானம்.) 'தெள்ளியீர் தேவர்க்குந் தேவர் திருத்தக்கீர்' என்று தொடங்கிப் பரம போக்யமாய்த் தேனும் பாலும் நெய்யுங் கன்னலு மமுது மொத்தாற்போலே அருளிச் செய்யப்பட்ட இத்திருமொழி பரமபதத்திலே அநுபவிக்கக் கிடைப்பதரிதாகையாலே, ஸ்ரீராம கதைகளை அநுபவிக்க ஆசைகொண்ட அனுமான் பரமபதத்தை இகழ்ந்து இந்நிலத்திலிருப்பையே உகந்தாப்போலே இத்திருமொழி நடையாடு மிந்நிலத்தில் இருப்பே ஸ்ரீவைஷ்ணவர்கட்குப் பரமோத்தேச்யமாயிருக்குமென்று கொண்டு ஆழ்வார் இங்ஙனே பயனுரைத்தது பொருந்துமென்க. .... .... .... .... .... .... (௧௦)

அடிவரவு:—தெள்ளியீர், நீணிலா, அருவி, உண்ணும், கண்ணன், வடவரை, தாங்கம் தொண்டு, முள், கார், கரை.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—மூன்றாந்திருமொழி,

# கரையெடுத்த சுரிசங்கும்.

உரையவதாரிகை:—கீழ் இரண்டு திருமொழிகளும் தாய்ப் பேச்சாய்ச் சென்றன; இத்திருமொழி மகள் பேச்சாய்ச் செல்லுகிறது. கீழ்த்திருமொழியில் "கைவளை கொள்வது தக்கதே" என்று சௌரிப் பெருமாளை நோக்கித் திருத்தாயார் சொல்லக்கேட்ட தலைமகள் உணர்ந்து தன் கையை நோக்கினாள்; கையில் வளைகளைக் கண்டிலள்; அந்தோ! வளையிழந்தேனே யென்று ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்காற் சொல்லிக் கதறுகின்றாள்.

திருக்கண்ணபுரத் தெம்பெருமானை ஸம்ச்லேஷித்து அநுபவிக்கப் பெறாத பிரிவாற்றாமைக்குப் பரக்கப் பாசுரமிடுகிறபடி. ... *

கரையெடுத்த சுரிசங்கும் கனபவளத் தெழுகொடியும் *
திரையெடுத்து வருபுனல்சூழ் திருக்கண்ண புரத்துறையும் *
விரையெடுத்த துழாயலங்கல் விறல்வரைத்தோள் புடைபெயர *
வரையெடுத்த பெருமானுக் கிழந்தேனென் வரிவளையே. (க)

| | | | |
|---|---|---|---|
| கரை எடுத்த | கோஷத்தையுடைத்தாய் | உறையும் | நித்யவாஸம் செய்தருள் பவனும், |
| சுரி | வளைந்த | விரை எடுத்த | பரிமளம் மிகுந்த |
| சங்கும் | சங்குகளையும் | துழாய் அலங்கல் | திருத்துழாய் மாலையை யணிந்ததாய் |
| கனம் | செறிந்திருக்கிற | விறல் | மிடுக்கையுடையதாய் |
| பவளத்து | பவழங்களினுடைய | வரை | மலைபோன்றதான |
| எழு | வளர்த்தியையுடைய | தோள் | திருத்தோள் |
| கொடியும் | கொடிகளையும் | புடை பெயர | அசையும்படியாக |
| திரை | அலைகளானவை | வரை எடுத்த | கோவர்த்தனமலையை யெடுத்து (க்குடையாக)ப் பிடித்தவனுமான |
| எடுத்து வரு | அடித்துக்கொண்டு வரப்பெற்ற | பெருமானுக்கு | எம்பெருமானுக்கு |
| புனல் | ஜலத்தாலே | என் வரி வளை | எனது அழகிய வளைகளை |
| சூழ் | சூழப்பட்ட | இழந்தேன் | இழந்துவிட்டேன். |
| திருக்கண்ண புரத்து | திருக்கண்ணபுரத்திலே | | |

* * *—பண்டு இந்திரனால் இடையர்க்கும் இடைச்சியர்க்கும் ஆநிரைகட்கும் நேர்ந்த பெருமழைத் துன்பத்தை மலைக்குடை யெடுத்து நீக்கின ஆபத்பந்துவன்றோ; அது என்றைக்கோ நடந்தது என்று நினைக்கவேண்டாதபடி.

இன்றைக்கும் அப்படிப்பட்ட திருக்குணங்களை விளங்கக்காட்டிக் கொண்டு திருக்கண்ணபுரத்தில் நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறானன்றோ; இப்படிப்பட்ட பெருமான் நம்மைக் கைவிடமாட்டானென்று நாம் விச்வஸித்து அவன் பக்கலிலே ஆசை வைத்ததற்குப் பலன் வளையிழக்கலாயிற்றே! என வருந்துகின்றாள் பரகால நாயகி.

"காவிரி நன்னதிபாயுங் கணபுரம்" என்பவாதலால் அக்காவிரி பெருகும் போது சங்குகளையும் பவழக்கொடிகளையும் அலைகளினால் திரட்டிக்கொண்டு வருகின்றதாம்; அப்படிப்பட்ட திருக்காவிரித் தீர்த்தத்தினால் சூழப்பட்டது திருக்கண்ணபுரம். .... .... .... .... (க)

அரிவிரவு முகிற்கணத்தா லகிற்புகையால் வரையோடும் *
தெரிவரிய மணிமாடத் திருக்கண்ண புரத்துறையும் *
வரியரவி னணைத்துயின்று மழைமதத்த சிறுதறுகண் *
கரிவெருவ மருப்பொசித்தாற் கிழந்தேனென் கனவளையே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அரி | கறுப்பானது | அணை | படுக்கையிலே |
| விரவும் | கலந்துபரவப்பெற்ற | துயின்று | சயனிப்பவனும், |
| முகில் கணத்தால் | மேகக் கூட்டங்களாலும் | மழை மதத்த | மழைபோல் பெருகுகின்ற மத ஜலத்தையுடையதும் |
| அகில் புகையால் | அகிற்புகைகளாலும் | சிறு தறு கண் | சிறுத்து வட்டணித்த கண்களை யுடையதுமான |
| வரையோடும் தெரிவு அரிய | மலையோடு வாசியறிய வொண்ணாத | கரி | குவலயாபீட மென்னும் யானையானது |
| மணி மாடம் | மணிமயமான மாளிகைகளை யுடைய | வெருவ | அஞ்சும்படியாக |
| திருக்கண்ணபுரத்து, உறையும்—; | | மருப்பு | (அதன்) தந்தத்தை |
| | | ஒசித்தாற்கு | ஒடித்தொழித்தவனுமுள்ள பெருமானுக்கு |
| வரி | கோடுகளை யுடைய | என் கனம் வளை | எனது பொன்வளைகளை |
| அரவு | ஆதி சேஷனாகிற | | |
| இன் | போக்யமான | | இழந்தேன்—. |

* * *—"ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:। நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" = ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:—நாக பர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்' என்கிறபடியே திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது சயனித்திருந்து அங்கு நின்றும் ஸ்ரீக்ருஷ்ணனாக வந்து அவதரித்து, கம்ஸனால் வில்விழவென்று வியாஜம் வைத்து அழைக்கப்பட்டு அரண்மனை வாசலிற் புகும்போது தன்னைக் கொல்வதற்காக மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீட மென்னும் யானையைக் கொன்றொழிக்கவேண்டி அதன் தந்தங்களையே பறித்து ஆயுதமாகக் கொண்டு கொன்றொழித்து மதுரையிற் பெண்களுக்குத் தன்னுடைய திவ்ய

மங்கள விக்ரஹத்தின் காட்சியை முற்றாட்டாகக் கொடுத்தருளின பெருமானன்றோ; 'அந்த மிடுக்கு இன்றைக்கும் விளங்குமாறு திருக்கண்ணபுரத்தில் நித்யஸந்நிதி பண்ணியிருப்பவனன்றோ; இப்பெருமான் நம்மைக் கைவிடமாட்டானென்று இவன் பக்கலிலே ஆசை வைத்ததற்குப் பலன் விளையிழக்கலாயிற்றே! என இரங்கிக் கூறுகின்றாள்.

காளமேகத் திரள்களாலும், அவ்வூரிலுள்ள செல்வம் மிக்கவர்கள் உண்டாக்குகிற அகிற்புகையாலும் உண்டான இருட்சியாலே மலைக்கும் மாடங்கட்கும் வாசி தெரிந்து கொள்ள வொண்ணாதபடியாய் ரத்னமயமான மாடங்களையுடைத்தான திருக்கண்ணபுரம் என்கிறது முன்னடிகளில்.

'ஹரி' என்னும் வடசொல் அரியெனத்திரிந்தது ; அச்சொல் பலபொருள்களையுடையது; அவற்றுள் 'கறுப்பு நிறம்' என்னும் பொருள் இங்குக் கொள்ளப்பட்டது. கணம்—மணம்: என்ற வடசொல்திரிபு.

சிறு தறுகண் கரி-"வடிவிற் பெருமைக்கு ஈடாகப் பெருத்திருக்கையன்றிக்கே ஜாத்யுசிதமாம்படி சிறுத்து க்ரௌர்யமெல்லாம் தோற்றும்படி பார்க்கிற கண்களையுடைத்தாயிருந்துள்ள குவலயாபீடம்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. 'தறுகண்மை' என்று அஞ்சாமைக்குப் பேராதலால் இங்குத் தறுகண் என்று முழுச் சொல்லாய் 'ஒருவர்க்கும் அஞ்சாதிருந்த யானை' என்று பொருள்கொள்ளலாமென்பர் சிலர்; அப்போது 'சிறு' என்பது அந்வயிக்க இடமில்லாமையால் 'செறு' என்று திருத்தவேணும்.

தறு—க்ரூரம். கரி—வட சொல். ... ... ௨)

துங்கமா மணிமாட நெடுமுகட்டின் சூலிகை * போம்
திங்கள் மாமுகில் துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
பைங்கண்மால் விடையடர்த்துப் பனிமதிகோள் விடுத்துகந்த *
செங்கண்மா லம்மானுக் கிழந்தேனென் செறிவளையே. (௩)

| | | | |
|---|---|---|---|
| துங்கம் | உந்நதமாய் | பைங் கண் | பசுமை தங்கிய கண்களையுடைய |
| மா மணி | சிறந்த ரத்னங்களிழைக்கப் பெற்றதான | மால் | பெரிய |
| மாடம் | மாடமாளிகைகளினுடைய | விடை | எருதுகளை |
| நெடு முகட்டின் | நீண்ட உச்சியிலுள்ள | அடர்த்து | அழியச் செய்தவனும் |
| சூலிகை | சூலமானது | பனி | குளிர்ச்சியை இயல்வாக வுடைய |
| போம் | மேலே ஸஞ்சரிக்கின்ற | மதி | சந்திரனுடைய |
| திங்கள் | சந்திரனையும் | கோள் | க்ஷயத்தை |
| மா முகில் | பெரிய மேகங்களையும் | விடுத்து | போக்கி |
| துணிக்கும் | துண்டிக்கப் பெற்ற | உகந்த | திருவுள்ளமுவந்தவனும் |
| திருக்கண்ணபுரத்து, உறையும்—; | | செம் கண் | புண்டரீகாக்ஷனுமிருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| மால் அம்மானுக்கு | ஸர்வேச்வரன் விஷயத்திலே | செறி | கழலாதிருக்கத்தக்க |
| என் | என்னுடைய | வளை | வளைகளை |
| | | | இழந்தேன்—. |

* * *—நப்பின்னைப் பிராட்டியைப் புணர்வதற்கு விரோதியாயிருந்த விருஷபங்களேழையும் வலியடக்கி அவளை மணந்துகொண்ட பெருமானன்றோ; சந்திரனுடைய க்ஷயரோகத்தைப் போக்கி அவனை அநுக்ரஹித்த பெருமானன்றோ; இன்னமும் இங்ஙனே அநுக்ரஹஞ் செய்தருள்வதற்குத் திருக்கண்ணபுரத்தில் நித்யஸந்நிதி பண்ணியிருக்குமவனன்றோ; நப்பின்னைப் பிராட்டியைப் போலே நம்மையும் மணந்துகொள்வனென்றும் சந்திரனுடைய துயரைத் தீர்த்தாப்போலே நம்முடைய துயரையுந் தீர்ப்பனென்றுங் கருதி அப்பெருமான் திறத்தில் காதல்கொண்டதற்குப் பலன் வளையிழக்கலாயிற்றே! என்கிறாள்.

முன் ஒன்றரை யடியால் திருக்கண்ணபுரத்திலுள்ள திருமாளிகைகள் மேகமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்றமை தெரிவிக்கப்படுகின்றது. மாடமாளிகைகட்குக் காப்பாக மேலே சூலங்கள் நாட்டப்பட்டிருக்கும்; அவை மேலே ஸஞ்சரிக்கின்ற சந்திரனையும் மேகமண்டலத்தையும் கிழிக்கின்றனவாம்; இது அதிசயோக்தி.

துங்கம்—வடசொல். சூலிகை—சூலம். .... .... (௩)

கணமருவு மயிலகவு கடிபொழில்சூழ் நெடுமறுகில் *
திணமருவு கனமதிள்சூழ் திருக்கண்ண புரத்துறையும் *
மணமருவு தோளாய்ச்சி ஆர்க்கப்போயுரலோடும் *
புணர்மருத மிறநடந்தாற் கிழந்தேனென் பொன்வளையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| கணம் மருவு | திரள்கிருந்துள்ள | | திருக்கண்ணபுரத்து, உறையும் —; |
| மயில் | மயில்களானவை | மணம் மருவு தோள் ஆய்ச்சி | பரிமளம் பொருந்திய தோள்களையுடையளான இடைச்சி |
| அகவு | கூத்தாடப்பெற்ற | | |
| கடி பொழில் சூழ் | மணம்மிக்க சோலைகளாற் சூழப்பட்டதாய் | ஆர்க்க | (தாம்பினால்) கட்ட |
| நெடு மறுகில் | பெரிய திருவீதிகளை யுடைத்தாய் | உரலோடும் போய் | உரலோடுகூடச்சென்று |
| திணம் மருவு | திடம் பொருந்திய | புணர் மருதம் | இரட்டை மருதமரங்கள் |
| கனம் | கனகமயமான | இற | இற்று முறிந்து விழும்படி |
| மதிள் | திருமதிள்களாலே | நடந்தாற்கு | நடைகற்ற பெருமானுக்கு |
| சூழ் | சூழப்பட்டதான | | என் பொன் வளை இழந்தேன்—. |

* * *—தயிர்பால் வெண்ணெய் முதலியவற்றைக் களவு செய்த குற்றத்திற்காக ஒரு அபலையின் கையினால் உரலோடு சேர்த்துக் கட்டப்பட்டு அசக்தரைப்போலே கிடந்தானே!, இப்படியும் ஒரு ஸௌலப்ய முண்டோ வென்றும், அப்படி கட்டுண்டு தளர் நடையிட்டுத் தவழ்ந்து செல்லும் பருவத்திலும்

இரட்டை மருதமரங்களை முறித்து அவற்றில் ஆவேசித்துக் கிடந்த அசுரரை வீழ்த்த வலிமை என்னே! என்றும் ஈடுபட்டிருக்கதே காரணமாக வளையிழக்கப் பெற்ற பரிதாபத்தை என் சொல்வேனென்கிறாள்.

புண்ர்மருதமிற நடந்த வரலாறு:—கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பலவிளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருத மரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்த வளவில், முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னுங் குபேர புத்திரர் இருவரும் சாபம் நீர்ந்து சென்றனர். இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கையில் நாரதமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடை யெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தால் வஸ்திரமில்லாமலேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்கு இணங்கி 'நெடுங்காலஞ்சென்றபின்பு திருமால் உங்களருகு அணுகுஞ் சமயத்தில் இவ்வடிவ மொழிந்து முன்னைபவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக் கிடந்தனர் என்பதும் சில புராணங்களிலுண்டு. 'பொய்ம்மாய மருதான வசுரரை' என்று பெரியாழ்வாரு மருளிச்செய்தார்.

மயில்கள் திரள்திரளாகக் கூத்தாடப் பெற்ற சோலைகளாற் சூழப்பட்டும் பெரிய திருவீதிகளையுடைத்தாயும் திடமான திருமதிளாற் சூழப்பட்டு மிருக்கும் திருக்கண்ணபுரம்.

கணம்-மணம் அகவுதல்—கூத்தாடுதல்; 'கேகா' என்று மயில்கள் சப்திக்கின்ற ஒலிக்கும் பெயருண்டு. மறுகு—வீதி. திணம்='திண்ணம்' என்பதன் தொகுத்தல். கனம்='வந' என்னும் வடசொல்லின் விகாரமுமாகலாம்; கநக மென்னும் வடசொல்லின் சிதைவுமாகலாம்.

மணமருவு தோளாய்ச்சி='ஸர்வ-கந்த:' என்ற உபநிஷத்தின்படியே பரிமளமே வடிவெடுத்தவனை கண்ணபிரான் அநவரதமும் யசோதைப் பிராட்டியின் தோளைக் கட்டிக்கொண்டு கிடப்பனிறே. .... .... (ச)

வாயெடுத்த மந்திரத்தா லந்தணர்தம் செய்தொழில்கள் *
தீயெடுத்து மறைவளர்க்குந் திருக்கண்ண புரத்துறையும் *
தாயெடுத்த சிறுகோலுக் குளைந்தோடித் தயிருண்ட *
வாய்துடைத்த மைந்தனுக் கிழந்தேனென் வரிவளையே. (ரு)

அந்தணர் — பிராமணர்கள்
வாய் எடுத்த மந்திரத்தால் { உரக்க உச்சரிக்கப்படுகிற மந்திரங்களைக்கொண்டு
தம் செய் தொழில்கள் { தாங்கள் செய்யும் அநுஷ்டாநமாகிய
தீ எடுத்து { அக்நிகாரியங்களைக் குறை யறச் செய்து
மறை வளர்க்கும் { வேதமரியாதையை ஓங்கச் செய்யுமிடமான
திருக்கண்ணபுரத்து, உறையும்—;

தாய் எடுத்த { தாயான யசோதைப்பிராட்டி கையிலெடுத்த
சிறு கோலுக்கு } சிறியதடிக்கு
உளைந்து ஓடி — அஞ்சி ஓடிச்சென்று
தயிர் உண்ட வாய் துடைத்த } தயிரை அமுதுசெய்த வாயைத்துடைத்த
மைந்தனுக்கு — ஸ்வாமிக்கு
என் வரி வளை இழந்தேன்—.

* * *—வேதமந்திரங்களைக் கொண்டு அந்தணர்கள் அக்நி காரியங்கள் செய்து வேதமரியாதையை நடத்திப் போரும்படியான திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருப்பவனும், முன்பு க்ருஷ்ணாவதாரத்தில் தான் செய்த தீம்புகட்குச் சீற்றங்கொண்ட யசோதைப் பிராட்டி அடிப்பதாகக் கையிற் கோலை யெடுக்க, அதற்கு அஞ்சி ஓடுமளவிலே எதிர்ப்படுமவர்கள் வாயில் தயிருண்ட சுவடு இருப்பதைக் காட்டி, 'நீ தயிர் களவு கண்டாயன்றோ' என்பர்களே யென்று அதை மறைக்க வேண்டி அத் தயிர்ச்சுவடுதன்னைத் துடைக்கப் புகுந்து தயிரை முகம் முழுதும் தடவிக்கொண்ட பரமஸௌலப்யனுமான பெருமானுடைய அக்குணத்திலே யீடுபட்டு வளையிழந்தேனென்கிறாள்.

'தயிருண்ட வாய்துடைத்த மைந்தன்' என்றவிடத்து, "யஸோதேநாய! நவநீதசௌர்யஸம் த்ராஸநாய யதிதே ஸ்திராவிராஸீத், கிம் ஸௌஷ்டி! த்ருஷ்டா கரபல்லவம் தே மார்ஷ்டி ப்ரம்ருஜ்ய நிரகாஃ கில நிர்விசங்கஃ = யசோதாநாத! நவநீத மஷ்சுரஸ்த்வம் தச்சாதநாய யதி தே மதிராவிராஸீத், கிம் முக்த! திக்தமமுநா கரபல்லவம் தே காத்ரே ப்ரம்ருஜ்ய நிரகாஃ கில நிர்விசங்கஃ" என்ற ஆழ்வானுடைய அதிமாநுஷஸ்தவ ஸ்ரீஸூக்தி ஸ்ம்ருதி விஷயமாகும். [வெண்ணெயைக் களவு செய்த கண்ணன் உடையவர்கள் தன்னைப்பிடிக்க வருகிற சுவடறிந்து கையது வாயதான வெண்ணெயை மறைத்திடவேணுமென்றெண்ணி 'வாயிலேயாவது கையிலேயாவது வெண்ணெயிருக்கக் கண்டாலன்றோ நம்முடைய களவு வெளிப்படுவலாவது, கையிலும் வாயிலும் இல்லாதபடி யாக்கிவிடுவோம்' என்று வெண்ணெயை யெல்லாம் உடம்பிலே தடவிக்கொண்டு 'இனி நாம் ஆர்க்கும் அஞ்ச வேண்டியதில்லை' என்று நிர்ப்பயனாய் வெளிப்புறப்பட்டானென்கிற ஒரு ஸௌஷ்டி சேஷ்டிதத்தை அநுஸந்தித்து 'என் நாயனே! இப்படியும் ஒரு மௌக்த்யமுண்டோ? வெண்ணெய்க் களவை மறைக்க நினைத்து அது நன்கு வெளியாம்படியான காரியஞ் செய்தாயே! இது உண்மையில் மௌக்த்யத்தாலோ? அன்றி மௌக்த்யாவதானையாலோ? சொல்லாய் பிரானே! என்றார்.]

முற்காலத்தில் ஒரு பிள்ளை அரசன் தோட்டத்திலே புகுந்து மல்லிகை

மொக்குகளைத் திருடிக்கொண்டிருக்கையில் அதையறிந்த தோட்டக்காரன் அவனைப் பிடித்து ராஜசபைக்குக் கொண்டு போவதாக இருக்கையில் அதனை யுணர்ந்த அக்கள்வன் 'இந்த ஆபத்தில் நின்றும் எங்ஙனே தப்பிப் பிழைப்பது!' என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் இச் செய்தியை யறிந்த அவன் தந்தை 'வாயுண்டானால் பிள்ளை பிழைக்கிறான்' என்று அப் பிள்ளையின் செவியிலே படுமாறு செய்விக்க, 'பாம்பின் சுவடு பாம்புக்குத் தெரியும்' என்றாற்போலே தந்தை சொற்கருத்தை யுணர்ந்த அப்புதல்வன் அந்த மல்லிகை மொக்குகளைத் தின்று மென்று விட்டான்; பிறகு வெறுங்கையனான அவனை என் சொல்லி ராஜதண்டனைக்கு ஆளாக்குவதென்று திகைத்த தோட்டக்காரன் அவனை விட்டிட்டான் என்றொரு கதையுண்டு; தின்னக் கூடாதவற்றையும் வருந்தித்தின்று களவை மறைத்துக் கொள்ளும் பிள்ளைகளின்படி தெரிந்திருந்தும், உண்ட தயிரின் சுவட்டை நாவினால்நக்கி மறைத்துக் கொள்ளலாமாயிருக்க அங்ஙனஞ் செய்யாதே களவு நன்கு வெளிப்படுமாறு தயிர்ச்சுவடு முகமெங்குமாகும்படியாகத் தடவிக் கொண்டது பேதைமையின் பணியன்றோவென்று இக்குணத்திலே உள்குழைந்து வளையிழந்தாள்போலும் பரகாலநாயகி. .... .... (ரு)

மடலெடுத்த நெடுந்தாழை மருங்கெல்லாம் வளர்பவளம் *
திடலெடுத்துச் சுடரிமைக்கும் திருக்கண்ண புரத்துறையும் *
அடலடர்த்தன் றிரணியனை முரணழிய அணியுகிரால் *
உடலெடுத்த பெருமானுக் கிழந்தேனென் னொளிவளையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| மடல் எடுத்த | மடல்களை உயரக்கொண்ட | இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| நெடு | நீண்ட | அடல் | யுத்தத்திலே |
| தாழை | தாழைச்செடிகளின் | அடர்த்து | நெருக்கி |
| மருங்கு எல்லாம் | பக்கங்களிலெல்லாம் | முரண் அழிய | (அவனுடைய) மிடுக்கு அழியும்படியாக |
| வளர் | வளர்கின்ற | அணி உகிரால் | அழகிய நகங்களாலே |
| பவளம் | பவழங்களானவை | உடல் எடுத்த | (அவனது) உடம்பைப் பிளந்தொழித்த |
| திடல் எடுத்து | மேடுகளிலே படர்ந்து | பெருமானுக்கு | ஸர்வேச்வரனுக்கு |
| சுடர் இமைக்கும் | ஒளியுடன் விளங்கப்பெற்ற | | என் ஒளி வளை இழந்தேன்—. |
| திருக்கண்ணபுரத்து, உறையும்—; | | | |
| அன்று | முன்பொருகாலத்தில் | | |

* * *— பரமபக்தனான ப்ரஹ்லாதாழ்வானிடத்துள்ள வாத்ஸல்யத்தினால் அவனுடைய விரோதியான இரணியனைப் பிளந்தொழித்த பெருமானன்றோ; ஆச்ரிதர்களை இப்படி பரிந்து காத்தருள்பவனன்றோ; இதற்காகவே யன்றோ திருக்கண்ணபுரத்தில் நித்ய ஸந்நிதி பண்ணியெழுந்தருளியிருப்பது! என்று ஈடு

பட்ட நான் ப்ரஹ்லாதனைப்போலே பரமக்ருபைக்குப் பாத்திரமாகப் பெறாமல் வளையிழந்தேன் காண்மின் என்கிறாள்.

ஓங்கின மடல்களையுடைய தாழைச்செடிகளின் ப்ராந்தங்களில் வளர்ந்த பவளக்கொடிகளானவை மேட்டுநிலங்கள் மூடப்படர்ந்து நெருப்பு ஜ்வலிக்கும்போலே விளங்குகின்றனவாம் திருக்கண்ணபுரத்தில். .... .... (௬)

வண்டமரும் மலர்ப்புன்னை வரிநீழ லணிமுத்தம் *
தெண்டிரைகள் வரத்திரட்டும் திருகண்ண புரத்துறையும் *
எண்டிசையு மெழுகடலு மிருநிலனும் பெருவிசும்பும் *
உண்டுமிழ்ந்த பெருமானுக் கிழந்தேனென் னொளிவளையே. (௭)

| | |
|---|---|
| வண்டு அமரும் | வண்டுகள் படிந்திருக்கிற |
| மலர் | புஷ்பங்களை யுடைத்தான |
| புன்னை | புன்னைமரத்தினுடைய |
| வரி நீழல் | அகன்றநிழலிலே |
| தெண் திரைகள் | தெளிந்த அலைகளானவை |
| அணி முத்தம் | அழகிய முத்துக்களை |
| வர திரட்டும் | கொண்டுவந்து திரட்டப்பெற்ற |
| திருக்கண்ணபுரத்து, உறையும்—; | |
| எண் திசையும் | எட்டுத்திசைகளையும் |
| எழு கடலும் | எழு கடல்களையும் |
| இரு நிலனும் | விசாலமான பூமியையும் |
| பெரு விசும்பும் | பெரிதான ஆகாசத்தையும் |
| உண்டு | (பிரளயத்தில்) அமுது செய்து |
| உமிழ்ந்த | (பிறகு) வெளிப்படுத்தின |
| பெருமானுக்கு | ஸ்வாமிக்கு |
| என் ஒளி வளை இழந்தேன்—. | |

* * *— ஸகல பதார்த்தங்களையும் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்துக் காத்தருள்பவனன்றோ; மீண்டும் அவற்றை வெளிப்பிட்டருள்பவனன்றோ; இப்படி ஆபத்துக்கு உதவுமவன் என்று நம்பி ஆசைவைத்துக் கெட்டேனென்கிறாள்.

மூன்றாமடியில் "எழுகடரும்" என்ற பாடமே எங்கும் வழங்கிவருகின்றது. இப்பாடம் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் பாடாந்தரமாகக் கொள்ளப்பட்டுள்ளது; 'எழுகடலும்' என்ற பாடமே முந்துறக் கொள்ளப்பட்டது.

கொங்குமலி கருங்குவளை கண்ணாகத் தெண்கயங்கள் *
செங்கமல முகமலர்த்தும் திருக்கண்ண புரத்துறையும் *
வங்கமலி தடங்கடலுள் வரியரவி னணைத்துயின்ற *
செங்கமல நாபனுக் கிழந்தேனென் செறிவளையே. (௮)

| | |
|---|---|
| தெண் கயங்கள் | தெளிந்த தடாகங்களானவை |
| கொங்கு மலி | பரிமளம் மிக்க |
| கரு குவளை | கருநெய்தற்பூக்களை |
| கண் ஆக | கண்களாகவும் |
| செம் கமலம் | செந்தாமரைப்பூக்களை |
| முகம் | முகங்களாகவும் |
| மலர்த்தும் | விகஸிப்பிக்கப்பெற்ற |
| திருக்கண்ணபுரத்து, உறையும்—; | |

| | |
|---|---|
| வங்கம் மலி தடம் கடலுள் | அலைகள்நிரம்பிய பெரிய திருப்பாற்கடலிலே |
| வரி | கோடுகளையுடைய |
| அரவு | திருவனந்தாழ்வானாகிற |
| இன் | இனிமையான |
| அணை | திருப்பள்ளி மெத்தையிலே |
| அமர்ந்த | சயனித்தருளாநின்ற |
| செம் கமலம் நாபனுக்கு | செந்தாமரைப்பூவைத் திருநாபியிலே உடைய னான பெருமானுக்கு |
| | என் செறி வளை இழந்தேன்—. |

* * *—ஆர்த்தியுடையாருடைய கூக்குரல் கேட்டுக் கடுகவெழுந்து வந்து காத்தருள்வதற்காகவன்றோ திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது சயனித்திருப்பது; உலகங்களை யுண்டாக்கின செங்கமல மலரைத் திருநாபியிலுடையவனன்றோ; இப்படி உலகங்களை யெல்லாம் படைத்துக் காத்தருளும் பெருமான் நம்மையோ கைவிடப் போகிறானென்று நம்பி ஆசைவைத்து வளையிழக்கையைப்பலனாகப் பெற்றேனென்கிறாள். வங்கம்—அலை, கப்பல். (அ)

வாராளு மிளங்கொங்கை நெடும்பணைத்தோள் மடப்பாவை *
சீராளும் வரைமார்பன் திருக்கண்ண புரத்துறையும் *
பேராள னாயிரம்பே ராயிரவாயரவணைமேல் *
பேராளர் பெருமானுக் கிழந்தேனென் பெய்வளையே. (௯)

| | |
|---|---|
| வார் ஆளும் இள கொங்கை | கச்சினால் தாங்கப்படுகின்ற இள முலைகளை யுடையளாய் |
| நெடு பணை தோள் | நீண்ட மூங்கில் போன்ற தோள்களை யுடையளாய் |
| மடம் | ஆத்மகுணங்களால் நிறைந்தவளாய் |
| பாவை | பதுமை போன்றவளான பெரிய பிராட்டியார் (நித்யவாஸம் பண்ணப் பெறுகையினாலே) |
| சீர் ஆளும் | சீர்மையையுடைத்தான |
| வரை | மலைபோன்ற |
| மார்பன் | திருமார்பையுடையவனும் திருக்கண்ணபுரத்து, உறையும்—; |
| பேர் ஆளன் | பெருமை பொருந்தியவனும் |
| ஆயிரம்பேர் | ஆயிரந்திருநாமங்களை யுடையவனும் |
| ஆயிரம் வாய் | ஆயிரம் முகங்களையுடைய |
| அரவு | ஆதிசேஷனாகிற |
| அணை மேல் | படுக்கையின்மீது பள்ளி கொண்டிருப்பவனுமான |
| பேராளர் பெருமானுக்கு | தேவாதி தேவனுக்கு |
| | என் பெய் வளை இழந்தேன்—; |

* * *—கச்சணிந்த திருமுலைத்தடங்களை யுடையளாய் நெடியபணைபோலே நேர்நின்ற திருத்தோள்களை யுடையளாய் ஆத்ம குணங்களால் நிறைந்தவளான ஸ்ரீமஹாலக்ஷ்மி நித்யவாஸம் பண்ணப் பெறுகையாலே செல்வம் மிக்கு மலைபோன்றதான திருமார்வையுடையவனும், திருக்கண்ணபுரத்திலே வந்து ஸுலபனாகையால்வந்த ஏற்றத்தை யுடையவனும், ஸஹஸ்ர நாமங்களாலும் பிரதிபாதிக்கப்படும் திவ்யகுண சேஷ்டிதங்களையுடையவனும், நித்யானுபவ ஹர்ஷப்ரகர்ஷத்தாலே ஆயிரமுகமாகப் பெருகின பலவாய்களை யுடையனான திருவனந்தாழ்வான்மீது சயனித்தருள்பவனும், பெருமையுடையாரென்று புகழ்பெற்ற செல்

லாரிற் காட்டிலும் பெருமை பொருந்தினவனுமான எம்பெருமான் 1. 'பெண்ணீர்மையீடழிக்குமிது தமக்கோர் பெருமையே!' என்றதைக் கணிசியாமல் தன் பெருமைக்குப் பொருந்தாதபடி என் வளைகளைக் கவர்ந்தானென்கிறாள்.

பெய்வளை— அணிந்து கொண்டிருந்தவளை.

பேராளர் பெருமான் — பேராளரென்று மஹான்களுக்குப் பெயர்; அவர்கட்கும் மஹான் என்றபடி. .... .... .... .... (௯)

தேமருவு பொழில்புடைசூழ் திருக்கண்ண புரத்துறையும்
வாமனனை * மறிகடல்சூழ் வயலாலி வளநாடன் *
காமருசீர்க் கலிகன்றி கண்டுரைத்த தமிழ்மாலை *
நாமருவி யிவைபாட வினையாய நண்ணாவே. (௧0)

| | | | |
|---|---|---|---|
| தே மருவு | தேன் பொருந்திய | ஆலி நாடன் | திருவாலிநாட்டுக்குத் தலைவரும் |
| பொழில் | சோலைகளினால் | காமரு சீர் | விரும்பத்தக்க குணங்களையுடையவருமான |
| புடை சூழ் | நாற்புறமுஞ் சூழப்பட்ட | கலிகன்றி | திருமங்கையாழ்வார் |
| திருக்கண்ண புரத்து | திருக்கண்ணபுரத்தில் | கண்டு உரைத்த | ஆராய்ந்து அருளிச்செய்த |
| உறையும் | நித்யவாஸஞ் செய்தருளாநின்ற | தமிழ் மாலை இவை | இத்தமிழ்ப்பாசுரங்களை |
| வாமனனை | வாமநாவதாரஞ் செய்தருளின பெருமானைக்குறித்து, | நா மருவி | நாவிலே பொருந்தவைத்து |
| மறி கடல் சூழ் | அலை மடிகின்ற கடலாலே சூழப்பட்டு | பாட | பாடுமளவிலே |
| வயல் வளம் | வயல் வளங்களையுபுடைத்தான | வினை ஆய | பாபமென்று உள்ளவையெல்லாம் |
| | | நண்ணா | கிட்டாதே ஒழிந்துபோம். |

* * *— தேன்மிக்க பொழில்களாலே புடைசூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே வாமநாவதார ஸௌலப்ய ஸௌசீல்ய ஸௌந்தர்யாதிகளைப் பிரகாசிப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும் சௌரிப்பெருமாள் விஷயமாகத் திருமங்கையாழ்வாரருளிச்செய்த இத்திருமொழியை ஓதியுணருமவர்கள் ஸர்வ பாப விநிர்முக்தராவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. .... (௧0)

அடிவரவு :— கரை அரி அங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாராளும் தேமருவு விண்ணவர்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

1. நாச்சியார் திருமொழி 8—1.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து — நான்காந்திருமொழி,

# விண்ணவர்தங்கள் பெருமான்.

உரையவதாரிகை:—இத்திருமொழியும் பிராட்டி யவஸ்தையாய்ச் செல்லுகிறது. எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்கப் பெறாத வருத்தத்தினால் பரகால நாயகி மிகவும் மேனி மெலிந்து துவண்டு கிடந்தாள்; இவள் ஸந்தோஷமாயிருக்கும் ஸமயங்களில் தலையிலே நறுமலர்களைச் சூடியிருப்பள்; அவற்றில் மதுவும் பெருகா நிற்கும்; மதுவைப் பருகுவதற்கு வண்டுகள் வந்து மொய்த்துக்கிடக்கும். இப்போது வருந்திக்கிடக்கும் நிலைமையாகையாலே தலையிற் பூ வாடிப்போய் மதுவும் சுவறிப்போய் இராநின்றாலும் 'உருசி கண்ட பூனை உறியைத் தாவிற்றாம்' என்னும் பழமொழியின்படியே முன்பு மதுவுண்ட வாஸனையாலே இப்போதும் உண்ணப்பெறலாமென்று ஆசைகொண்டு வண்டு அருகே வந்து மொய்க்கப் பார்த்தது; அதனை நோக்கி 'உனக்கு இப்போது இங்கு என்ன உணவு உண்டு? என் தலையில் பூவும் மதுவும் உண்டாகும்படி செய்யப் பாராய்; திருக்கண்ணபுரத்தெம்பெருமான் திருவபிஷேகத்தின்மேல் சாத்திக் கொண்டிருக்கின்ற திருத்துழாயிலே படிந்து அங்குள்ள பரிமளத்தை இங்கே கொண்டு வந்து ஊது; பிறகு உனக்கு இங்கே உண்ணக்கிடைக்கும்' என்கிறாள் பரகால நாயகி.

"கெண்டையொண்கணும் துயிலும் என்னிறம், பண்டு பண்டுபோலாக்கும் மிக்கசீர்த், தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே, வண்டு கொண்டுவந்து ஊதுமாகிலே" (11-1-9) என்று மேலே அருளிச்செய்யும் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. எம்பெருமானுடைய ஸம்ச்லேஷந்தானே நேரிற் கிடைக்காவிட்டாலும் அவனோடு ஸம்பந்தம் பெற்ற வஸ்து ஏதேனும் கிடைக்கப் பெற்றாலும் தரிப்பு உண்டாகுமென்பது இதனால் அறியத்தக்கது.

சைவ சமயாசிரியருள் ஒருவரான மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகத்தில் இத்திருமொழியை ஒருவாறு அடியொற்றி 'திருக்கோத்தும்பி' என்றொரு பதிகம் சொல்லப்பட்டுள்ளது. "சென்றூதாய் கோத்தும்பி" என்ற முடிவுடன் இருபது செய்யுள்கள் பாடப்பட்டுள்ளன. அங்குக் "கோத்தும்பி" என்றுள்ளது; இங்குக் "கோற்றும்பி" என்றுள்ளது. ... .... *

விண்ணவர் தங்கள் பெருமான் திருமார்வன் *
மண்ணவரெல்லாம் வணங்கும் மலிபுகழ்சேர் *
கண்ணபுரத் தெம்பெருமான் கதிர்முடிமேல் *
வண்ண நறுந்துழாய் வந்தூதாய் கோல்தும்பீ!

| | |
|---|---|
| கோல் தும்பீ | கொம்புகளில் திரிகின்ற தும்பியே! |
| விண்ணவர் தங்கள் பெருமான் | நித்யஸூரிகளுக்குத் தலைவனும் |
| திரு மார்வன் | பிராட்டியைத் திருமார்பிற் கொண்டவனும் |
| மண்ணவர் எல்லாம் வணங்கும் | இந்நிலத்திலுள்ளா ரெல்லாராலும் வணங்கப் படுபவனும் |
| மலி புகழ் சேர் | நிறைந்த கீர்த்தியை யுடையவனும் |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலெழுந் தருளி யிருப்பவனுமான |
| எம்பெருமான் | ஸ்வாமியினுடைய |
| கதிர் முடி மேல் | ஒளிபொருந்திய திருமுடி யின் மீதுள்ள |
| வண்ணம் நறு துழாய் | அழகியதும் மணத்ததுமான திருத்துழாயைக் கொண்டு |
| வந்து | இங்கே வந்து |
| ஊதாய் | நீ ஊது. |

* * *—‘தும்பி’ என்பது வண்டுகளில் ஒருவகைச் சாதி; கருவண்டு என்றுங் கூறுவர். மரக்கொம்புகளிலே மதுவுக்காகத் திரியுமியல்வுடைமைபற்றிக் ‘கோல்தும்பீ!’ என விளிக்கப்பட்டது. ஸத்தைபற்றுக் கிடக்கின்ற என்னிடத்திலே இப்போது நீ வந்து சுழலமிடுவதால் என்ன பயனுண்டு? முன்போல் நான் § தளிரும் முறியுமாய்க் கிடக்கிறேனென்றிருக்கிறாயோ? பாராய் நான் வாடி வதங்கிக்கிடக்கும்படியை; என் தலையிலே பூத்தங்கினாலன்றோ மது இருக்கும்; மது இருந்தாலன்றோ நீ இங்கே வந்து சுழலமிடுவதற்கு ஒருபயனுண்டாகும்; உனக்கு இங்கே மதுவுண்ண விருப்பமுண்டாகில் எனக்கு ஸத்தையையுண்டாக்கப்பார்; என்ன செய்தால் ஸத்தையுண்டாகுமென்று கேட்கிறாயோ? கேளாய் கோல்தும்பீ!;—நித்ய ஸூரிகளுக்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற பெருமான் உனக்குத் தெரியுமே; அவனிடத்தில் நாம் அணுக முடியுமோவென்று நினையாதே; அவன் திருமார்வன்; புருஷகாரபூதையாய் ‡ காருண்ய ரூபையான பிராட்டியைத் திருமார்பிலே கொண்டவனாதலால் கூசாதே சென்று புகலாம்; விண்ணவர் தங்கள் பெருமானிடத்தே நான் சென்றால் மீண்டுவர முடியாதேயென்கிறாயோ? அங்குச் செல்லவேண்டா; லீலாவிபூதியிலுள்ளாரெல்லாரும் எளிதாக வணங்கும்படி நிற்பவன்; ‘பரத்வ நிலைமையைவிட்டு இப்படி ஸுலபனாவதே!’ என்று அனைவராலும் கொண்டாடப்பட்டு நிரம்பிய புகழ்பெற்றிருப்பவன்; திருக்கண்ணபுரத்திலே நித்ய ஸந்நிதி பண்ணியிருக்கிறான்; அன்னவனுடைய திருவபிஷேகத்திற் சாத்தியுள்ள திருத்துழாயின் பரிமளத்தை முகந்துகொண்டு இங்கே வந்து ஊது; இது செய்வையாகில் ஸத்தை பெறுவேன்; உனக்கு ஏராளமாக மதுவுண்ணக் கிடைக்கும் என்கிறாள் பரகால நாயகி.

1. “தெய்வத்தண்ணந் துழாய்த் தாராயினுந் தழையாயினுந் தண் கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்ற மண்ணாயினுங் கொண்டு வீசுமினே” என்கிற

§ செழித்திருக்கிறேனே என்றபடி.

1. திருவிருத்தம் 52.

படியே எம்பெருமானணியுந் திருத்துழாயின் ஸம்பந்தம் எவ்வகையினாற் பெற்றாலும் தரிப்பும் உவப்பு முண்டாகுமாதலால் அதற்காக இங்ஙனே சொல்லுகிறுளென்க.

வண்ணநறுந்துழாய் வந்தூதாய்—இங்குத் 'துழாய்' என்றது திருத்துழாயின் பரிமளத்தில் நோக்காக. "செவ்வி மாறாத பரிமளத்தையுடைத்தாயிருக்கிற திருத்துழாயிலே படிந்து அங்குத்தைப் பரிமளத்தைக் கொடு வந்து இங்கே ஊது" என்பது வியாக்கியான ஸூக்தி.

ஊதுதல்—தும்பிகளின் இயற்கைத் தொழில். .... .... (க)

வேத முதல்வன் விளங்கு புரிநூலன் *
பாதம் பரவிப் பலரும் பணிந்தேத்தி *
காதன்மை செய்யும் கண்ணபுரத் தெம்பெருமான் *
தாது நறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பீ ! (உ)

| | |
|---|---|
| வேதம் முதல்வன் | வேதங்களால் முழு முதற் கடவுளாகப் பிரதிபாதிக்கப் படுபவனும் |
| விளங்கு | (திருமேனியில்) விளங்குகின்ற |
| புரி நூலன் | யஜ்ஞோபவீதத்தை யுடையவனும் |
| பலரும் | எல்லாரும் |
| பாதம் | திருவடிகளை |
| பரவி பணிந்து ஏத்தி | ஆச்ரயித்து வணங்கித் துதித்து |
| காதன்மை செய்யும் | பக்தி பண்ணுதற்கு உரியவனான |
| | கண்ணபுரத்தெம்பெருமானுடைய,— |
| தாது | தாதுகளையுடைத்தாய் |
| நறு | மணம்மிக்கதான |
| துழாய் | திருத்துழாயிலே |
| தாழ்ந்து | படிந்து |
| | (அந்த நறுமணத்தைக் கொணர்ந்து) ஊதாய் கோல் தும்பீ!— |

* * *—"வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியே ஸகல வேதங்களாலும் முழுமுதற் கடவுளாகப் பிரதிபாதிக்கப்பட்டவனும், அழகிய திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனும் அதிலே பளபள வென்று விளங்குகின்ற யஜ்ஞோபவீதத்தையுடையனும், எல்லாரும் திருவடிகளிலே விழுந்து ஸ்தோத்ரம் பண்ணித் தங்கள் பக்தியைச் செலுத்துமாறு திருக்கண்ணபுரத்திலே நித்யஸந்நிதி பண்ணியிருப்பவனுமான பெருமானுடைய, பூத்துச் செவ்வியையுடைத்தாயிருக்கிற திருத்துழாயிலே தங்கியிருந்து அதிலுள்ள பரிமளத்தை முகந்துகொண்டு வந்து இங்கே ஊதாய் கோல்தும்பீ! நான் ஸத்தை பெறுவதற்காக.

1. "கோலால் நிரைமேய்த்து ஆயனாய்க் குடந்தைக் கிடந்த குடமாடி, நீலார் தண்ணந்துழாய் கொண்டு என்னெறி மென்குழல்மேல் சூட்டீரே" என்று அவனுடைய திருத்துழாய்ப் பிரசாதத்தைக் கொணர்ந்து தன் தலையில் சூட்ட

1. நாச்சியார் திருமொழி 13—2;

வேணுமென்று அபேக்ஷித்தாள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி; இப்பராகால நாயகி அங்ஙனன்றிக்கே துழாயிற் படிந்து வந்து ஊதினாற்போது மென்கிறாள். (உ)

விண்ட மலரெல்லா மூதிநீ யென்பெறுதி ?*
அண்ட முதல்வ னமரர்களெல்லாரும் *
கண்டு வணங்கும் கண்ணபுரத் தெம்பெருமான் *
வண்டு நறுந்துழாய் வந்தூதாய் கோல்தும்பி ! (ரு)

கோல்தும்பி !—;

| | |
|---|---|
| நீ | நீ |
| விண்ட மலர் எல்லாம் | விகஸித்த புஷ்பங்களி லெல்லாம் |
| ஊதி | ஒலிசெய்து |
| என் பெறுதி | என்னபேறு பெறுகின்றாய்? (ஒன்றுமில்லை) |
| அண்டம் முதல்வன் | பரமபதத்துக்கு நிர்வாஹகனும் |
| அமரர்கள் எல்லாரும் கண்டு வணங்கும் | தேவர்களெல்லாரும் (தங்கள் அஹங்காரந் தொலைந்து) ஸேவித்து வணங்கப் பெற்றவனுமான |
| கண்ணபுரத்தெம்பெருமானுடைய,— | |
| வண்டு நறு துழாய் | வண்டுகள்படிந்து பரிமளம் மிக்க திருத்துழாயைக் கொண்டு |
| வந்து ஊதாய்—. | |

* * *—வழக்கப்படி பரகால நாயகியின் தலையில் மதுவுண்ண வந்த தும்பி இங்குப் பூவுமில்லை மதுவுமில்லை என்றறிந்தவாறே வேறு சில மலர்களிலே மது வுண்ணப் புக, அதனைக் கண்ட பரகால நாயகி கூறுகின்றாள்;—திறந்து கிடந்த வாசலெல்லாம் நுழைந்து திரியுமவைபோலே விண்டமலர்கள் தோறும் நீ ஊதித் திரிவதனால் என்ன பேறு பெறப்போகிறாய்? அல்பமாயும் அஸ்திரமாயுமுள்ள மதுவையுடைய இம்மலர்களிலே ஊதித்திரிவது தவிர்ந்து, அண்டாதிபதியாயும் நித்யஸூரிகளெல்லாரும் திரண்டு வந்து கண்டு வணங்கும்படியாகத் திருக் கண்ணபுரத்தில் நித்ய ஸந்நிதிபண்ணி யிருப்பவனுமுள்ள பெருமானுடைய திருத்துழாய் மாலையிலே உனது ஸஹோதரிகளோடே கூடித் தங்கியிருந்து அங் குள்ள பரிமளத்தை இங்குக் கொணர்ந்து ஊதுவாயாகில் அநல்பமும் ஸ்திரமு மான மதுவைப்பருகலா மென்றாளாயிற்று.

1. "வண்ணந்திரிவும் மனங்குழைவும் மானமிலாமையும் வாய்வெளுப்பும், உண்ண லுறாமைப் முள்மெலிவும் ஓத நீர் வண்ணனென்பானொருவன், தண்ணந் துழா யென்னும் மாலைகொண்டு சூட்டத்தணியும்" என்று எம்பெருமானுடைய திருத்துழாய்ப் பிரசாதத்தைக் கொணர்ந்து தன் தலையில் சூட்டினால்தான் தனது நோய்கள் தீருமென்றாள் சூடிக்கொடுத்த பிராட்டி; இவள் அங்ஙனன்றிக்கே துழாயிற் படிந்து வந்து ஊதினாற் போதுமென்கிறாள் காண்மின்.

அண்டமுதல்வன் = அண்டங்கட்கு முதல்வன் என்னவுமாம்; அண்ட மென்னப்படுகிற பரமபதத்துக்கு முதல்வன் என்னவுமாம். .... (ரு)

1. நாச்சியார் திருமொழி 12-7.

நீர்மலிகின்றதோர் மீனாயோ ராமையுமாய் *
சீர்மலிகின்றதோர் சிங்க வுருவாகி *
கார்மலி வண்ணன் கண்ணபுரத் தெம்பெருமான் *
தார்மலி தண்டுழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பீ ! (ச)

கோல்தும்பீ !—;
நீர்மலிகின்றது ஸமுத்ரத்திலே வியாபித்த
ஓர் மீன் ஆய் — அத்விதீயமான மத்ஸ்யாவதார மெடுத்தவனும்
ஓர் ஆமையும் ஆய் — விலக்ஷணமான கூர்மாவதார மெடுத்தவனும்
சீர் மலிகின்றது ஓர் சிங்கம் உரு ஆகி — சீர்மைமிகுந்த நரஸிம்ஹாவதார மெடுத்தவனும்
கார் மலி வண்ணன் — மேகத்திற்காட்டிலும் சிறந்த வடிவு பெற்றவனுமான
கண்ணபுரத்தெம்பெருமானுடைய—;
தார் — மாலையிலே
மலி — பொருந்திய
தண் — குளிர்ந்த
துழாய் — திருத்துழாயிலே
தாழ்ந்து — தாமதித்திருந்து
ஊதாய் — (வந்து) ஊது.

* * *—கோல்தும்பீ! பண்டு மத்ஸ்யாவதாரஞ் செய்தருளி "வானோரளவும் முது முந்நீர் வளர்ந்த காலம் வலியுருவின் மீனாய் வந்து வியந்துய்யக் கொண்டதண்டாமரைக் கண்ணன்" என்கிறபடியே அனைவரையும் பிரளயப் பெருவெள்ளத்தினின்று பாதுகாத்தருளிய பெருமான் என்னை விரஹப் பெருங் கடலில் வீழ்த்தி வருத்துகின்றான்; ஆமையாய் உருவெடுத்து மந்தர மலையைத் தாங்கியிருந்து தேவர்களுக்கு அமுதமளித்தவன் எனக்குச் சோதிவா யமுத மளித்திடாது வஞ்சனை செய்கின்றான்; நரசிங்கமூர்த்தியாய்த் திருவவதரித்து ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பேரருள் செய்த பெருமான் எனக்குச் சிறிதும் அருள் செய்கின்றிலன்; நான் விரஹவ்யஸநத்தாலே உடம்பு வெளுத்து வருந்திக் கிடக்க, தான் சிறிதும் நிறமழியாதே காளமேகத்திற் காட்டிலும் பொலிந்து வர்த்திக்கின்றான்; திருக்கண்ணபுரத்திலே எளியனாய் வந்து நின்றும் அவ் வெளிமையைப் பாவியேன் திறத்தில் பலிக்கச் செய்கின்றிலன்; என்னை இங் ஙனே துடிக்கவிட்டுத் தானே ஸர்வரக்ஷகனென்று தோற்றுமாறு தனிமாலையணிந் திருக்கின்றான்; அதிலுள்ள திருத்துழாயிற் படிந்து அதன் பரிமளத்தையாகிலும் இங்குக் கொணர்ந்து ஊதுவாயாகில் உய்யவிரகுண்டு என்பது இப்பாட்டின் உட்கருத்து. .... .... .... .... .... (ச)

ஏரார் மலரெல்லா மூதிநீ யென்பெறுதி *
பாராருலகம் பரவப் பெருங்கடலுள் *
காராமை யான கண்ணபுரத் தெம்பெருமான் *
தாரார் நறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பீ! (ரு)

| | |
|---|---|
| கோல் தும்பீ!—; | |
| நீ | நீ |
| ஏர் ஆர் மலர் எல்லாம் | அழகு நிரம்பிய (மற்ற) புஷ்பங்களிலெல்லாம் |
| ஊதி | ஒலி செய்து |
| என் பெறுதி | என்னபேறு பெறுவாய்; [ஒன்றும் பெறமாட்டாய்.] |
| பார் | இப்பூமியிலே |
| ஆர் | பொருந்திய |
| உலகம் | ஜனங்களெல்லாம் |
| பரவ | வணங்குமாறு |
| பெருகடலுள் | பெரிய ஸமுத்ரத்தினுள்ளே |
| கார் ஆமை ஆன | பெரிய ஆமையாகத் திருவவதரித்த |
| கண்ணபுரத்தெம்பெருமானுடைய—; | |
| தார் | மாலையிலே |
| ஆர் | பொருந்திய |
| நறு | பரிமளம் மிக்க |
| துழாய் | திருத்துழாயிலே |
| தாழ்ந்து | வைகியிருந்து |
| ஊதாய் | (வந்து) ஊது. |

* * *—கோல்தும்பி!, நான் உனக்கு எத்தனை சொன்னாலும் கேட்கின்றிலையே; உனக்குத்தான் செவியில் துளையில்லையோ? இந்த மலர்களிலெல்லாம் ஊதித்திரிவதனால் உனக்கு என்ன லாபமுண்டு? ஒரு மலரிலே உன் வயிறு நிறையுமோ? பல மலர்களில்தான் திரிந்தாலும் நிறையுமோ? இவ்வீண் செயலை விட்டிடு; முன்பு தூர்வாஸ முனிவின் சாபத்தினால் செல்வமிழந்து துவண்ட தேவர்கட்கு இரங்கிக் கூர்மாவதாரஞ் செய்தருளி அவர்களுடைய ஜீவனத்தை நிர்வஹித்தருளினவன் அத்தேவர்களைப் போலே ப்ரயோஜநாந்தரத்தை நெஞ்சிலும் நினையாதே அவனையே பரமப்ரயோஜநமாக நினைத்திருக்கின்ற என்னுடைய ஜீவனத்தை நிர்வஹியாதிருக்கின்றான்; இருக்கட்டும்; அவன் திருக்கண்ணபுரத்திலே வந்து ஸந்நிதிபண்ணியிருக்குமிருப்பிலே அணிந்திருக்கின்ற மாலையிலுள்ள திருத்துழாயிற் சென்று நீ படிந்து அதன் பரிமளத்தைக் கொணர்ந்து ஊது, உய்யப்பெறுவேன் நீயும் வாழப்பெறுவாய் என்கிறாள்.

ஏரார் மலரெல்லாம்=வெறும் நிறத்தினால் மாத்திரம் அழகாயிருக்கின்ற மலர்களில் ப்ரமியாதே என்றவாறு. .... .... .... (ரு)

மார்வில் திருவன் வலனேந்து சக்கரத்தன் *
பாரைப் பிளந்த பரமன் பரஞ்சோதி *
காரில்திகழ் காயா வண்ணன் கதிர்முடிமேல் *
தாரில் நறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பி! (சு)

| | |
|---|---|
| கோல் தும்பீ!—; | |
| மார்வில் திருவன் | திருமார்பிலே ஸ்ரீ மஹாலக்ஷ்மியை யுடையவனும் |
| வலன் ஏந்து சக்கரத்தன் | வலத்திருக்கையில் தரிக்கப் பட்ட திருவாழியை யுடையவனும் |
| பாரை | (அண்டபித்தியில் ஒட்டிக் கிடந்த) பூமியை |
| பிளந்த பரமன் | (மஹாவராஹமாகிக்) குத்திக் கொணர்ந்த மேன்மை வாய்ந்தவனும் |
| பரம் சோதி | நிகரற்ற சோதியே வடிவெடுத்தவனும் |
| காரில் திகழ் | கறுப்பு நிறத்தினால் விளங்குகின்ற |
| காயா | காயாம்பூப்போன்ற |

| | | | |
|---|---|---|---|
| வண்ணன் | வடிவையுடையனுமான பெருமானுடைய | நறு | பரிமளம் மிக்க |
| கதிர் முடி மேல் | ஒளி பொருந்திய திருமுடி மீதுள்ள | துழாய் | திருத்துழாயில் |
| | | தாழ்ந்து | தங்கியிருந்து |
| தாரில் | மாலையில் (தொடுக்கப்பட்டிருக்கின்ற) | ஊதாய் | (வந்து) ஊது. |

* * *— கோல்தும்பி! கட்டுங்காவலுமா யிருக்கின்ற எம்பெருமான் ஸந்நிதியிலே புகுவதற்கு நாமோ அதிகாரி! என்று தியங்காதே: திருமார்விலே பிராட்டியுண்டு; ஒரு குறையுமில்லை; ப்ராப்திப்ரதிபந்தகங்கள் ஏதேனு மிருந்தாலும் அவற்றைத் தொலைக்க ஸாமக்ரியிலுங் குறையில்லை; 1. "எப்போதுங் கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்" என்கிறபடியே நம்முடைய வினைகளை நீக்குதற்கே எப்போதும் கையுந் திருவாழியுமாய் எழுந்தருளியிருக்கிறான் காண்; ஹிரண்யாக்ஷ னென்பானோ ரஸுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு சென்று மறைய, மஹாவராஹமாகி அவனை நாடிப் பொருது கொன்று அப்பூமியைக் கோட்டாற் குத்திக் கொணர்ந்து பழையபடி விரித்த விறலுடையான் காண்; பிறர்க்கு உதவி புரிவதே அவனுக்குத் தொழில்; உதவா தொழியினும் விடவொண்ணாத வடிவழகு படைத்தவன்காண்; அன்னவனுடைய ஆதிராஜ்ய ப்ரகாசகமான திருவபிஷேகத்தின் மேலுள்ள செவ்வித்துழாயிலே படிந்து இங்கு வந்து ஊது என்கிறாள்.

வலன்—வலமென்றபடி; மகரனகாப் போலி. .... .... (ரு)

வாமனன் கற்கி மதுசூதன் மாதவன் *
தார்மன்னு தாசரதி யாயதடமார்வன் *
காமன்றன் தாதை கண்ணபுரத் தெம்பெருமான் *
தாம நறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பீ! (௬)

| | | | |
|---|---|---|---|
| வாமனன் | வாமநாவதாரஞ்செய்தவனும் | தாசரதி ஆய | தசரத புத்ரனாகத் திருவவதரித்தவனும் |
| கற்கி | கல்கியவதாரம் செய்யப் போகிறவனும் | காமன் தன் தாதை | மன்மதனுக்குத் தந்தையுமான |
| மது சூதன் | மதுவென்னு மசுரனைக் கொன்றவனும் | | கண்ணபுரத்தெம்பெருமானுடைய—; |
| மாதவன் | திருமகள் கொழுநனும் | தாமம் | மாலையிலுள்ள |
| தார் மன்னு | (ரக்ஷகத்வஸூசகமான) மாலை பொருந்திய | நறு | பரிமளம் மிக்க |
| தட மார்வன் | பெரிய திருமார்பை யுடையவனும் | துழாய் | திருத்துழாயில் |
| | | | தாழ்ந்து ஊதாய் கோல்தும்பீ!—. |

* * *— கோல்தும்பீ!, தன்னுடைமையைப் பெறுகைக்குத்தானே யாசகனுய்ச் சென்றவன்காண்; விரோதிகளைக் கிழங்கெடுப்பதற்கு இன்னமும் ஸங்கல

1. பெரிய திருவந்தாதி, 87.

பித்துக் கொண்டிருப்பவன்காண்; கல்கியவதாரஞ் செய்தருளி மண்ணின் பாரம் நீக்கப் போகிறானிறே; மது, கைடபன் என்று சொல்லப்படுகிற அசுரர்களை மாய்த்தவன்காண்; இக் குணங்களெல்லாம் அவனுக்கு வாய்க்கும்படி லக்ஷ்மீபதியாயிருப்பவன்காண்; "ரக்ஷிதா ஜீவலோகஸ்ய ஸ்வஜநஸ்ய ச ரக்ஷிதா" என்ற ஸாமாந்ய ரக்ஷணத்திற்கும் விசேஷரக்ஷணத்திற்கும் தனிமாலையிட்டிருக்குமவன்காண்; ராமாவதார முகத்தாலும் க்ருஷ்ணாவதார முகத்தாலும் தன்னுடைய ரக்ஷகத்வத்தை வெளியிட்டருளினவன்காண்; இப்போதும் திருக்கண்ணபுரத்திலே நித்ய ஸந்நிதிபண்ணி ஸர்வரக்ஷகனாயிருக்குமவன்காண்; அவன் இப்போது என்னுடைய ரக்ஷணத்திலே சோர்வடைந் திருக்கிறான்; இருக்கட்டும்; நீ சென்று அப்பிரானுடைய மாலையிலுள்ள திருத்துழாயிலே படிந்து இங்கே வந்து ஊதாய் என்கிறாள்.

முதலடியிற் பதங்கள் நான்கும் வடசொற்கள். தாசரதி—வடமொழித்தத்திதாந்த நாமம்; தசரதனது குமாரன்.

காமன்றன் தாதை—ருக்மிணிப்பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாகப் பிறந்த ப்ரத்யும்நனுக்குக் கண்ணபிரான் தந்தையாதல் அறிக. 'தாத:' என்னும் வடசொல் தாதை யெனத் திரிந்தது. 'தாம' என்னும் வடசொல் தாமமெனத் திரிந்தது; மாலை. .... .... .... .... (எ)

நீல மலர்கள் நெடுநீர் வயல்மருங்கில் *
சால மலரெல்லா மூதாதே * வாளரக்கர்
காலன் கண்ணபுரத் தெம்பெருமான் கதிர்முடிமேல் *
கோல நறுந்துழாய் கொண்டூதாய் கோல்தும்பீ ! . (அ)

கோல் தும்பீ!—;

| | | | |
|---|---|---|---|
| நெடு நீர் | அதிகமான ஜலத்தையுடைய | வாள் அரக்கர் காலன் | வாட்படையையுடைய ராக்ஷஸர்களுக்கு ம்ருத்யுவான |
| வயல் | வயல்களிலுண்டான | | கண்ணபுரத்தெம்பெருமானுடைய—; |
| நீலம் மலர்கள் | நீலோத்பல மலர்களிலும் | கதிர் முடி மேல் | ஒளிபொருந்திய திருமுடி மீதுள்ள |
| மருங்கில் | சுற்றிலுமுள்ள | கோலம் | அழகிய |
| மலர் எல்லாம் | எல்லா மலர்களிலும் | நறு | பரிமளம் மிக்க |
| சால | மிகவும் | துழாய் | திருத்துழாயை |
| ஊதாதே | ஒலிசெய்வதை தவிர்ந்து. | | கொண்டு ஊதாய்—. |

* * *—கோல் தும்பி!, வயல்களிலுள்ள நீலோத்பல மலர்களிலும் மற்றும் சுற்றிலுமுள்ள மலர்களிலுஞ் சென்று ஊதுவதனால் என்ன பயன் கிடைக்கும்? வீணான காரியத்தைச் செய்யாதே; ராக்ஷஸ குலத்திற்கு ம்ருத்யுவாகத் திருவவதரித்து இலங்கை பாழாளாகப் படைபொருதவனும் அந்த வீரப்பாடு தோன்றத் திருக்கண்ணபுரத்திலே நித்யஸந்நிதிபண்ணியிருப்பவனுமான பெருமானுடைய திருவபிஷேகத்தின் மேலுண்டான திருத்துழாயிலே அவகாஹித்து

வந்து ஊதாய் என்கிருள்.

காலன்— வட சொல். .... .... .... ... (அ)

நந்தன் மதலே நிலமங்கை நற்றுணேவன் *
அந்த முதல்வ னமரர்கள் தம்பெருமான் *
கந்தங்கமழ் காயாவண்ணன் கதிர்முடிமேல்*
கொந்து நறுந்துழாய் கொண்டுதாய் கோல்தும்பீ ! (௯)

கோல் தும்பீ !—;

| | | | |
|---|---|---|---|
| நந்தன் மதலே | நந்தகோப குமாரனும் | காயா வண்ணன் | காயாம்பூப்போன்ற நிறத்தனுமான பெருமானுடைய |
| நிலம் மங்கை நல் துணே வன் | பூமிப்பிராட்டிக்கு இனிய வல்லபனும் | கதிர் முடி மேல் | ஒளிபொருந்திய திருமுடியின் மீதுள்ள |
| அந்தம் முதல்வன் | ஸம்ஹாரத்துக்கும் ஸ்ருஷ்டிக்கும் கடவனும் | கொந்து | கொத்துக் கொத்தான |
| | | நறு | மணம்மிக்க |
| அமரர்கள் தம் பெருமான் | நித்யஸூரிகட்குத் தலேவனும் | துழாய் கொண்டு | திருத்துழாயைக் கொணர்ந்து |
| கந்தம் கமழ் | பரிமளம் கமழப்பெற்றவனும் | ஊதாய் | ஊது. |

* * *— கோல்தும்பி !, எல்லார்க்கும் எளியனுகைக்காக நந்தகோபர்க்குக் குமாரனுய்த் திருவவதரித்தவனும், அப்படி திருவவதரித்தது பூமிபாரத்தைப் போக்குகைக்காக வாகையாலே பூமிப்பிராட்டியின் மனத்துக்கு இனியனுனவனும், துர்ஜனங்கள் மிகைத்தவாறே அவற்றை ஸம்ஹரிப்பதும் 'இனியாகிலும் ஸஜ்ஜனங்களாக வாழ்கிருர்களோ பார்ப்போம்' என்று பாரித்து மீண்டும் ஸ்ருஷ்டி பண்ணுவதுமாக இப்படி அழித்தலும் படைத்தலுமாகிற காரியங்களேச் செய்து கொண்டிருப்பவனும், அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயுள்ளவனும், 'ஸவ-ேமஃ' என்கிறபடியே திவ்யஸுகந்த வாஸிதனும், காயாம்பூப்போன்ற நிறமுடையனுமான எம்பெருமானுடைய கதிர்முடிமேல் கொந்து நறுந்துழாய்கொண்டு ஊதாய் என்கிருள்.

அந்தம்— வடசொல்; ஃ. கந்தம்— மஃ. 'கந்தங்கமழ்' என்ற அடைமொழி காயாவுக்கு இட்டதன்று, காயாவண்ணனுக்கு இட்டது. கொந்து— கொத்து. .... .... .... ... .... .... (௯)

வண்டமருஞ் சோலே வயலாலி நன்ஞ்டன் *
கண்டசீர் வென்றிக் கலியனுெலிமாலே *
கொண்டல் நிறவண்ணன் கண்ணபுரத்தானே *
தொண்டரோம் பாட நினேந்தூதாய் கோல்தும்பீ ! (௰)

சோல் தம்பீ!—;

| | | | |
|---|---|---|---|
| வண்டு அமரும் சோலை | வண்டுகள் படிந்த சோலைகளை யுடையதும் | மாலை | இச்சொல் மாலையைக் கொண்டு, |
| வயல் | கழனிகளை யுடையதுமான | கொண்டல் நிறம் வண்ணன் | மேகத்தின் நிறம்போன்ற நிறத்தையுடையனான |
| ஆலி | திருவாலியென்கிற | | |
| நல் நாடன் | நல்லநாட்டுக்குத் தலைவரும் | கண்ண புரத்தானை | திருக்கண்ணபுரத் தெம்பெருமானை |
| கண்ட சீர் | ப்ரத்யக்ஷமான திருக்குணங்களை யுடையவரும் | தொண்டரோம் | அடியோங்கள் |
| வென்றி | ஜயசீலருமான | பாட | பாடும்படியாக |
| கலியன் | திருமங்கையாழ்வார் | நினைந்து | நீ நெஞ்சிற்கொண்டு |
| ஒலி | அருளிச்செய்த | ஊதாய் | ஊதவேணும். |

* * *— திருமங்கையாழ்வா ரருளிச்செய்த இப் பாசுரங்களைக்கொண்டு தொண்டர்கள் திருக்கண்ணபுரத் தெம்பெருமானைப் பாடுகவென்று நீ உன் ஹ்ருதயத்திலே கொண்டு அவன் பக்கலிலே அறிவித்து எங்களுக்கு அவன் முகந் தரும்படி பண்ணி எங்கள் குறையைத் தீர்க்கப்பாராய் தும்பீ! என்கை.

நிகமநப் ப்ரசுரங்களில் "பூவளரும் கற்பகஞ்சேர் பொன்னுலகில் மன்னவராய்ப் புகழ் தக்கோரே" "நீர்மலி வையத்து நீடு நிற்பார்களே" "நாமருவியிவை பாட வினையாய நண்ணாவே" என்று பயனுரைப்பதுபோல இப்பதிகத்திற்குப் பயனுரைக்கப் படவில்லை; தொண்டர்கட்குத் திருமொழியைப் பாடுதல் ஸ்வயம் ப்ரயோஜநமென்று காட்டப்பட்ட தாயிற்று.

"தொண்டர்கள் பாட" என்று படர்க்கையாகச் சொல்ல வேண்டுமிடத்துத் 'தோண்டரோம்' என்று தன்மையாகச் சொல்லியிருந்தாலும் படர்க்கையில் நோக்காகக் குறையில்லை. ஈற்றடியின் உட்கருத்து யாதெனில்; ஆழ்வார் தாம் குறைதீரப் பெற்றால் தொண்டர்க ளெல்லாரும் தம் குறைதீரப் பெற்றதாக நினைப்பர்களாதலால் அந்த மகிழ்ச்சியினால் இத் திருமொழியை உவந்து பாடுவர்கள்; அப்படி செய்விக்க வேணுமென்று தும்பிபோல்வாரான பாகவதர்களை வேண்டுகிறபடி. .... .... .... .... .... (கo)

அடிவரவு :— விண்ணவர் வேதம் விண்ட நீர் எரார் மார்வில் வாமனன் நீலம் நந்தன் வண்டமரும் தந்தை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஐந்தாந்திருமொழி,

# தந்தை காலில் விலங்கற.

உரையவதாரிகை :— எம்பெருமானைப் பிரிந்து மிகத் தளர்ந்த பரகால நாயகி எம்பெருமானுடைய ஸம்ச்லேஷம் நேராகக் கிடைக்காவிடினும் அவனோடு ஸம்பந்தம் பெற்றதொருவஸ்துவாயினும் கிடைக்கப்பெற்றால் தரிக்கலாமென்று பார்த்துச் சில தும்பிகளை நோக்கித் திருக்கண்ணபுரத் தெம்பெருமானுடைய திருத்துழாய் மாலையிற் படிந்து அங்குள்ள பரிமளத்தை முகந்து கொண்டுவந்து ஊதவேணுமென்று இரந்தாள். அத் தும்பிகள் கருத்தறிந்து காரியஞ் செய்யுமென்றும், தன்னுடைய நிலைமையை எம்பெருமானுக்கு அறிவித்து அவனைக் கொண்டுவருமென்றும், குறைதீரக் கலவி செய்யப் பெறலாமென்றும் பெரிய மநோரதங் கொண்டிருந்தாள்; அத்தும்பிகளோ வென்னில், இவள் பேச்சைச் செவியேலாதே தங்கள் ஜீவனந்தேடி யோடிப் போயின; எம்பெருமானோ வந்திலன்; தன்னை ஹிம்ஸிக்கும் பொருள்கள் மிகைத்தன; அவற்றுக்கு ஆடல்கொடுத்துப் போதுபோக்க வொண்ணுதபடி கண்டவிட மெங்கும் இருள் மூடிப்போகவே இன்னது செய்வதென்று தெரியாமல், திருவாய்ப்பாடியில் க்ருஷ்ணனைப் பிரிந்த பெண்களெல்லாரும் ஒரு ஸங்கையில் பட்ட பாட்டை இவளொருத்தியே பட்டுக் கூப்பிடுகிறதாய்ச் செல்லுகிறது இத்திருமொழி.

இத் திருமொழியின் நிகமனப் பாசுரத்தில் "வார்கொள் மென்முலை மடந்தையர் தடங்கடல் வண்ணனைத் தாள் நயந்து, ஆர்வத்தாலவர் புலம்பியபுலம்பலை யறிந்து முன்னுரை செய்த" என்று திருவாய்ப்பாடியிற் பெண்கள் க்ருஷ்ணன் திருவடிகளை ஆசைப்பட்டுக் கிட்டாமையாலே அபிநிவேசம் கரைபுரண்டு அவர்கள் புலம்பியபுலம்பலை இவ்வாழ்வார் அநுவாதம் பண்ணினதாக அருளிச்செய்யப்பட்டிருந்தாலும் விஷயம் அவ்வளவேயன்று; அவ்வாய்ச்சிகளின் அவஸ்தை தமக்குப் பிறந்து அவர்களைப் போலவே ஆற்றாமை கரைபுரண்டு பேசுகிறாரென்க. "அவ்வவஸ்தை பிறந்து கூப்பிட்ட" என்பர் பெரியவாச்சான்பிள்ளையும். .... *

தந்தைகாலில் விலங்கறவந்துதோன்றிய தோன்றல்பின் * தமியேன்றன்
சிந்தை போயிற்றுத் திருவருளவனிடைப் பெறுமளவிருந்தேனை *
அந்திகாவல னமுதுறுபசுங்கதி ரவைசுட வதனோடும் *
மந்தமாருதம் வனமுலைதடவந்து வலிசெய்வ தொழியாதே. (க)

| | |
|---|---|
| தந்தை | தகப்பனாரான நந்தகோபருடைய |
| காலில் | காலில் பூட்டியிருந்த |
| விலங்கு | விலங்கானது |
| அற | இற்று முறிந்து விழும்படி |
| வந்துதோன்றிய | திருவவதரித்த |
| தோன்றல் பின் | ஸ்வாமியான கண்ணபிரானுடைய பின்னே |
| தமியேன் தன் | தனிப்பட்டிருக்கின்ற என்னுடைய |
| சிந்தை | நெஞ்சானது |
| போயிற்று | போய்விட்டது; |
| அவனிடை | அப்பெருமானிடத்தில் |
| திரு அருள் | க்ருபையை |
| பெறும் அளவு இருந்தேனை | பெறுவதற்கு ஸமயம் பார்த்திருக்கின்ற என்னை |
| அந்தி காவலன் | இராப்பொழுதுக்கு இறைவனை சந்திரனுடைய |
| அமுது உறு | அமுதம் மிக்க |
| பசுங் கதிர் அவை | அப்போதுண்டான கிரணங்களானவை |
| சுட | தஹிக்க, |
| அதனோடும் | அதோடுகூட, |
| மந்த மாருதம் | மெல்லிய தென்றற்காற்றும் |
| வனம் முலை தடம் வந்து | அழகிய முலைத்தடத்திலே வந்து வீசி |
| வலி செய்வது ஒழியாது | ஹிம்ஸைபண்ணுவதில் நின்றும் ஓய்கிறதில்லை. |

* * *—தனிக்கிடை கிடந்து வருந்துகின்ற என்னுடைய நெஞ்சானது கண்ணபிரானைப் பின்பற்றிச் சென்றொழிந்தது; நெஞ்சு கைவிட்ட இந்த ஸமயத்திலே அப்பெருமானுடைய அருளாவது கிடைக்குமோ வென்று பார்த்திருக்குமெனக்கு அவ்வருள் கிடையாதது மன்றிக்கே உலகத்தில் மற்றுள்ளவர்கட்குத் தாபத்தைத் தணித்துக் குளிர்ச்சியைப் பண்ணவல்ல நிலாத் தென்றல் முதலியனவும் என் திறத்திலே விபரீதங்களா யிருக்கின்றனவே! அந்தோ! என்கிறாள்.

தேவகியின் வயிற்றிற் பிறக்கும் பிரஜையினால் தனக்கு மரணமுண்டாகுமென்று ஆகாசவாணியினாலறிந்த கம்ஸன் அவளைக் கத்தியினால் வெட்டிக்கொல்லப் புகுந்தபோது நல்வார்த்தைகளால் ஒருவாறு ஸமாதான மடைந்து வஸுதேவ தேவகிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்துவைக்க, "மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கன வந்து பிறந்து நின்றாய்" என்கிறபடியே கண்ணபிரான் திருவவதரித்தவுடனே அவ்விலங்கு முறிபட்டுக் கழன்றொழிந்ததென்று இதிஹாஸபுராணங்கள் கூறுதலால் 'தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்' எனப்பட்டது. அவன்பின் சிந்தை போயிற்றென்றது—அந்த வரலாற்றை அநுஸந்தித்து நெஞ்சு ஈடுபட்டுப் போயிற்று என்றவாறு. தந்தைதாயருடைய விலங்கைப் பரிஹரித்தவன் காதலியின் விலங்கைப் பரிஹரிக்கத் திருவுள்ளம்பற்றுகிறானில்லையே! என்று நெஞ்சு அழிகின்றதென்பது உட்கருத்து.

அவன்றான் அருள்மறுத்தால் அவனுடைய விபூதியும் அருள்மறுக்கவேணுமோ? உலகுக்கு நன்மையைப் பயக்கவேணுமென்று அவனால் நியமிக்கப்பட்டுள்ள சந்திரன் அம்ருத கிரணனாகையாலே அனைவர்க்கும் குளிர்ச்சியைப் பண்ணாநிற்க, அவனது கிரணங்கள் என்னொருத்திக்கே தாபத்தை விளைக்கக் காரண

மென்னே? இப்படியோ அவன் ஸங்கல்பித்து வைத்தது? அது கிடக்க; மந்த மாருதம் வீசாதோவென்று அதனை யெதிர்பார்த்து அனைவருங் களியாகிற்க அது என் முலைத்தடத்திலே வீசி வலிசெய்கின்றதே!, அது தானும் சற்றுப்போதோ? ஓயாது வலிசெய்கின்றதே! என் செய்வேன் என்கிறாள் பின்னடிகளில். விரஹிகளுக்கு நிலாத்தென்றல் முதலியவை பாதகங்களாகுமென்க.

'தமியேன்' என்றாலும் 'தனியேன்' என்றாலும் ஒக்கும். இருந்தேனை— நிகழ்காலப் பொருளில் வந்த இறந்தகாலம்; இருக்கின்ற என்னை என்றபடி. அந்திகாவலன் = ஸந்த்யா காலத்திற்கு வாசகமான அந்தி என்னுஞ் சொல் இலக்கணையால் இரவைச் சொல்லுகின்றது; இராப்பொழுதுக்குக் காவலன் சந்திரன்; 'நிஶாபதிঃ' என்பர் வடநூலாரும். மந்தமாருதம்—வடசொல் தொடர். .... (௧)

மாரிமாக்கடல் வளைவணற்கிளையவன் வரைபுரை திருமார்பில் *
தாரினாசையிற் போயினநெஞ்சமும் தாழ்ந்ததோர் துணைகாணேன் *
ஊரும் துஞ்சிற் றுலகமுந் துயின்றது ஒளியவன் விசும்பியங்கும் *
தேரும் போயிற்றுத் திசைகளும்மறைந்தன செய்வதொன்றறியேனே. (௨)

| | |
|---|---|
| மாரி | மேகம்போன்றவனும் |
| மா கடல் | நீலக்கடல் போன்றவனும் |
| வளை வணற்கு இளையவன் | சங்குபோன்ற [வெளுத்த] நிறமுடையனான பலராமனுக்குப் பின் பிறந்தவனுமான கண்ணபிரானுடைய |
| வரை புரை | மலைபோன்ற |
| திரு மார்வில் | திருமார்பிலுள்ள |
| தாரின் | மாலையினிடத்து |
| ஆசையின் | ஆசையினால் |
| போயின | என்னைவிட்டு நீங்கின |
| நெஞ்சமும் | மனமும் |
| தாழ்ந்தது | மீண்டுவர்த் தாமதித்தது; [அவனிடத்திலேயேகால் தாழ்ந்துவிட்டது.] |
| ஓர் துணை காணேன் | உதவியான வொருவரையுங் காண்கின்றிலேன்; |
| ஊரும் துஞ்சிற்று | ஊரிலுள்ளாரும் உறங்கினார்கள்; |
| உலகமும் துயின்றது | உலகங்களும் உறங்கின; |
| விசும்பு | ஆகாசத்திலே |
| இயங்கும் | ஸஞ்சரிக்கின்ற |
| ஒளியவன் தேரும் | ஸூர்யனது தேரும் |
| போயிற்று | மறைந்துபோயிற்று; |
| திசைகளும் | திக்குக்களும் |
| மறைந்தன | தெரியவில்லை; |
| செய்வது ஒன்று அறியேன் | (இந்நிலைமையில்) செய்யத்தக்கது ஒன்றுமறிகின்றிலேன். |

* * *—எம்பெருமான் திருமார்பிலணிந்துள்ள மாலையில் ஆசையாலே என்னைவிட்டு அங்குச்சென்ற எனது நெஞ்சானது அதைப் பெற்றுத் திரும்பி வருதலோ அன்றிப் பெறுதற்கரிது என்று ஆசையை விட்டிட்டுத் திரும்பிவருதலோ ஆக இரண்டத்தொன்று செய்யாது 1. "சீரிருக்கு மறைமுடிவு தேடரிய திருவரங்கரை வணங்கியே திருத்துழாய் தரில் விரும்பியே கொடு திரும்பியே வருதலின்றியே, வாரிருக்குமுலை மலர்மடந்தையுறை மார்பிலே பெரிய தோளிலே

1. திருவரங்கக் கலம்பகம்.

மயங்கிப் பின்புற முயங்கி யென்னையு மறந்து தன்னையு மறந்ததே" என்றாப் போலே அவன் பக்கலிலேயே கால் தாழ்ந்துவிட்டது; இதுவரையில் எனக்குத் துணையாயிருந்த நெஞ்சு அகன்று போகையாலும் உற்ற துணைவனான அப்பிரான்றானும் உபேக்ஷிக்கையாலும் இனி யெனக்குத் துணையாவாரில்லையே; உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலத்தோடே * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றிருக்கிற எனக்கு ஒரு சேர்த்தியில்லையாகையாலே ஊராரும் உலகத்தாரும் எக்கேடுகெட்டாலும் அவர்களைப்பற்றி எனக்கு விசாரமில்லை: ஆயினும் யாருடனாவது எதையாவது பேசிக்கொண்டு இப்பாழும் பொழுதைப் போக்கித் தொலைப்போமென்று பார்த்தாலும் ஊராரும் உலகத்தாரும் என்னைப்போலே பகவத்விஷயத்தில் ஈடுபட்டவர்களல்லாமையாலே தாங்கள் விரும்பிய விஷய போகங்களைக் குறைபறப்பெற்றுக் களித்துக் கொறுட்டைவிட்டு உறங்குகிறார்கள்; உலகப்பொருள்களில் எதையேனுங் கண்டு கொண்டாகிலும் இந்தப் பிரிவாற்றாமையை ஒருவாறு ஆற்றுவோமென்று பார்த்தாலோ, * சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும் போய்மறைந்தான்; இருள்மூடிக் கிடப்பதனாலே ஒரு பொருளையுங்காணவிரகில்லை; அந்தோ! புறம்புள்ளாரொருவருமில்லையாயிற்று; நெஞ்சும் குடிபோயிற்று; நாயகனோ வந்தணைகின்றிலன்; காலமோ துயர் நெடுகும்படியான இராக்காலமாயிராநின்றது, என்ன செய்து தரிக்கலாமென்று தெரியவில்லையே என்கிறாள்.

"மாரிமாக்கடல்" என்றதில் உவமவுருபு தொக்கிக் கிடக்கின்றது; மாரி போலவும் மாக்கடல் போலவுமுள்ளவன் என்றவாறு. வேறு வகையாகவுங் கொள்ளலாம்;—மாரி—மேகங்கள் படிகின்ற, மாக்கடல்—பெரிய கடலிலுண்டான, வளை—சங்குபோன்ற, வண்ணற்கு—நிறத்தையுடைய பலராமனுக்கு, இளையவன்—என்று. பலராமன் ஆதிசேஷனுடைய அம்சமாதல்பற்றி வெண்மைநிறமுடையனாதலால் வளைவண்ணனெனப்பட்டான். 1. "முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடு விரைந்தோட" என்றார் பெரியாழ்வாரும். கண்ணபிரான் பெண்களைப் பிரிந்து நெடுநாள் அந்யபரனாயிருந்திடுவன்; அப்போது பிரிவாற்றாமையின்கனத்தினால் அப்பிரான்மீது மிக்கவெறுப்புக் கொண்ட பெண்கள் 'இனி ஒருநாளும் அப் படுபாவியின் முகத்தில் விழிக்கக் கடவோமல்லோம்; அவன்றானே வேறு கதியற்று வந்து நின்றாலும் கதவடைத்துத் தள்ளக்கடவோம்' என்று ஸங்கல்பித்துக் கொண்டிருப்பர்கள்; பலராமன் இதனையறிந்து முன்னடித் தான் பெண்களிடம் வந்து இன் சொற்களாலே கிருஷ்ணனுடைய குற்றங்களை மறப்பித்து அவர்களது சீற்றத்தையும் ஆற்றிச் சேரவிடுவன். ("ஈர்ஷ்யாதுநாவிவ யஸ்ய ஹோவநிதாஃ க்ருஷ்ணஸம் வ்யூஹநு தம் ஸ்வாம் கேசகேசவஸீவஹம் ஹலயாம்" என்றார் பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில்.) அந்த உபகார ஸ்ம்ருதிதோற்ற இங்கு 'வளைவண்ணற்கு இளையவன்' எனப்பட்டதென்ப.

1. பெரியாழ்வார் திருமொழி 1—7—5.

'தாரிணையைசயிற்போயின நெஞ்சமும் தாழ்ந்தது' என்றது—என்னுடைய நெஞ்சானது அப்பெருமான் திருமார்பிலணிந்த திருத்துழாய்மாலையைப் பெறுதற்கே பேராசை கொண்டிருக்கின்றது என்றவாறு. இப்படிப்பட்ட ஆசையுடையார் மற்று எவருமில்லாமையாலும், வேறுவகையான ஆசையுடையாரோடு தனக்குச் சேர்த்தியில்லாமையாலும் 'ஓர் துணைகாணேன்' என்றது.

'ஊருந்துஞ்சிற்று உலகமும் துயின்றது' என்றதற்கு ஸ்வாபதேசப்பொருள் கூறலாம்; ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஊரார் நாட்டார் உலகர் கேவலைச்வர்யகாம ஸ்வதந்த்ரர்" என்றருளிச் செய்திருக்கையாலே, கைவல்யார்த்திகளும் ஐச்வர்யார்த்திகளுமாய் ப்ரயோஜநாந்த்ரபரா யிருக்கின்ற இவ்வுலகத்தவர்கள் செத்த பிணம் போன்றிருக்கின்றனர்; அவர்களைக் கொண்டு நமக்கொரு காரியமில்லை என்றவாறு.

முற்காலத்தில் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்த பிள்ளையுறங்காவில்லிதாஸர் திருநாட்டுக் கெழுந்தருள; அவரை ப்ரஹ்மரதத்திலே யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு செல்ல, அவருடைய தேவியாரான பொன்னாச்சி பிரிவாற்றாமைப் பாசுரமாகிய இத்திருமொழியை அநுஸந்திக்கத் தொடங்கி, முதற்பாசுர மநுஸந்தித்து இரண்டாவதான இப்பாசுர மநுஸந்திக்குமளவிலே முன்னே ப்ரஹ்மரத மெழுந்தருளப் பண்ணிக்கொண்டு செல்பவர்கள் விரைந்து செல்லுகையாலே திருத்தேர் மறைய, அதற்குத் தகுதியாகப் பொன்னாச்சியின் அநுஸந்தானம் "தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன்றறியேனே" என்றாக, அப்போதே பொன்னாச்சியின் பிராணனும் தன்னடையே விட்டு நீங்கிப்போயிற்று என்ற ஐதிஹ்யம் இங்கு அறியத்தக்கது. .... (௨)

ஆயன்மாயமே யன்றிமற்றென்? கையில் வளைகளு மிறைநில்லா *
பேயினாருயி ருண்டிடும்பிள்ளை நம்பெண்ணுயிர்க் கிரங்குமோ? *
தூயமாமதிக் கதிர்சுடத்துணையில்லை யிணைமுலை வேகின்றதால் *
ஆயன்வேயினுக் கழிகின்ற துள்ளமு மஞ்சேலேன்பாரிலையே. (௩)

| | | | |
|---|---|---|---|
| ஆயன் | கண்ணபிரானுடைய | நம் பெண் உயிர்க்கு | (அவளைப்போல்) பெண்ணாய்ப்பிறந்த நம்முடைய பிராணனுக்கு |
| மாயமே அன்றி மற்று என்? | வஞ்சனை தவிர வேறு என்ன இருக்கிறது? (ஒன்றுமில்லை.) | இரங்குமோ | தயைபண்ண ப்ரஸக்தியுண்டோ? |
| வளைகளும் | வளைகளும் | தூய மா மதி | மறுவற்ற சந்திரனுடைய |
| கையில் இறை நில்லா | கையில் க்ஷணகாலமும் தங்குவதில்லை; | கதிர் | கிரணங்கள் |
| பேயினார் | பேய்ச்சியாகிய பூதனையினுடைய | சுட | தஹிப்பதனாலே |
| உயிர் | பிராணனை | இணை முலை | இரண்டு முலைகளும் |
| உண்டிடும் பிள்ளை | உண்டு அவளை முடித்த பிள்ளை | வேகின்றது | தீப்பற்றி யெரிகின்றன |
| | | ஆல் | அந்தோ !; |

துணை இல்லை { (எரியும் நெருப்பைபயவிக்கத்) துணையாவாரில்லை;
உள்ளமும் — மனமும்
ஆயன் — கண்ணபிரானுடைய
வேயினுக்கு — வேய்ங்குழலுக்கு ஈடுபட்டு
அழிகின்றது — மாய்கின்றது;
அஞ்சேல் என்பார் இல்லையே { 'பயப்படாதே' என்று அபயமளிப்பாரொருவரு மில்லையே.

* * *—என் கையில் வளைகள் க்ஷணகாலமும் நிற்கின்றனவில்லை; இப்படியாகைக்கு என்ன காரணமிருக்கும்? எம்பெருமானுடைய வஞ்சகமே இதற்குக் காரணமாயிருக்க வடுக்கும்; வேறொன்றுமில்லை; எல்லார் திறத்திலும் அருள் செய்கின்ற அப்பெருமான் நம்பக்கலில் அருள் செய்யாமைக்குக்காரணமென்னே வென்னில், பூதனை யென்னும் பேய்ச்சி பேய் வடிவை மறைத்துத் தாய் வடிவைப் பூண்டுகொண்டு திருவாய்ப்பாடியேற வந்து நள்ளிருளில் நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துத் தன்னைக் கொல்ல நினைத்தவன்று முதலாக அப்பெருமான் ஸ்த்ரீ ஜாதியில் பரிபூர்ணமான பகைமையைக் கொண்டான்போலும்; 'பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாரும் நம்மைக் கொல்லுங் கருத்துடையாரே யன்றி, ஒருவரும் நம்மிடத்தில் நல்லெண்ண முடையாரில்லை' என்று அவனுக்குக் கருத்துண்டாயிற்றுப் போலும்; ஆகவே பெண்ணாய்ப்பிறந்த நம்முடைய உயிர்க்கு அவன் எங்ஙனே இரங்குவன்? இரங்கவே மாட்டான். அவன் இரங்கியருளாதவளவேயோ? உலகுக்கெல்லாம் குளிர்ச்சியைத் தரவல்ல சந்திரனுடைய கிரணங்கள் நம்மைத் தஹிக்கின்றன; வேறு எந்த அவயவத்தையும் தஹிக்கின்றனவில்லை; இணை முலைகளையாயிற்று தஹிப்பது!; இந்த நிலைமையிலே அப்பிரானுடைய வேய்ங்குழலோசை வந்து நெஞ்சை வலியக்கவர்ந்து கொண்டுபோகின்றது; இதற்கு மேற்படவும் ஒரு ஆபத்து விளையப்போவதுண்டோ? எவ்வளவு கொடிய ஆபத்து நேர்ந்தாலும் அருகில் யாரேனுமிருந்து 'அஞ்சாதேகொள்' என்று தைரியங் கூறினால் ஒருவாறு ஆறியிருக்கலாம்; அப்படி இங்கு அஞ்சேலென்பாரையுங் காணோம். ஆபத்தை நீக்கி அபயமளிக்கவல்ல அவன்றானே ஆபத்தை விளைத்து அச்சத்தை யுண்டாக்கும்போது அஞ்சேலென்னவல்லார் வேறுயாவருளர்? என வருந்திக் கூறுகின்றாள்.

"அஞ்சலென்பாரில்லையே" என்றும் பாடமுண்டு; அது ஓசைக்கு மிகச் சேரும். .... .... .... .... .... .... (௩)

கயங்கொள்புண்தலைக் களிறுந்து வெந்திறற்கழல்மன்னர் பெரும்போரில்
மயங்கவெண்சங்கம் வாய்வைத்த மைந்தனும் வந்திலன் மறிகடல்நீர்
தயங்கு வெண்டிரைத்திவலை நுண்பனியெனும் தழல்முகந் திளமுலைமேல்
இயங்குமாருதம் விலங்கிலென் ஆவியை யெனக்கெனப் பெறலாமே. (௪)

கயம் கொள் புண் தலை { (சீயும் ரக்தமும்) தடாகம் போலே வற்றாதிருக்கிற புண்கள் நிரம்பிய தலையையுடைய
களிறு — யானைகளை
உந்து — தள்ளிநடத்தவல்ல
வெம் திறல் { வெவ்விய வலிமையை யுடையவரும்

| | | | |
|---|---|---|---|
| கழல் | வீரக்கழலையுடையருமான | வெண் திரை | வெண்மையான அலைகளாலுண்டான |
| மன்னர் | அரசர்களினுடைய | திவலை | திவலைகளாகிற |
| பெருபோரில் | பெரிய பாரதயுத்தத்தில் | நுண் பனி எனும் | நுட்பமான பனியென்று சொல்லப்படுகிற |
| மயங்க | அறிவுகலங்கும்படி | தழல் | நெருப்பை |
| வெண் சங்கம் | வெளுத்த பாஞ்சஜந்யத்தை | முகந்து | வாரிக்கொண்டுவந்து |
| வாய் வைத்த | திருப்பவளத்தில் வைத்து ஊதின | இள முலை மேல் | (எனது) இளமைதங்கிய முலைகளின்மீது |
| மைந்தனும் | மஹாபுருஷனும் | இயங்கு | வீசுகின்ற |
| வந்திலன் | (என்னிடம்) வந்து சேர்ந்தானில்லை; | மாருதம் | காற்றானது |
| மறி கடல் | அலைமடிகின்ற கடலினுடைய | விலங்கில் | தணியப்பெற்றால் |
| நீர் | ஜலத்தில் | என் ஆவியை | எனதுஉயிரை |
| தயங்கு | அசைந்துவருகின்ற | எனக்கு என பெறலாம் | எனக்கு உரித்தாக அடையலாகும். |

* * *—"பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரதத்துக், கந்தார்களிற்றுக் கழன்மன்னர் கலங்கச் சங்கம்வாய்வைத்தான்" என்கிறபடியே என்னைப்போல் பெண்ணாய்ப்பிறந்த வொருத்தியான த்ரௌபதியின் விரித்த கூந்தலை முடிப்பதற்காகப் பாரதப்போரில் வியாபரித்து * மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியத் திருப்பவளத்திலே ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை வைத்து ஊதித் தன்னுடைய பக்ஷபாதத்தைக் காட்டியருளின மஹாநுபாவன் இன்று என் விஷயத்திலே அருள் செய்கின்றிலனே!; படாத பாடுகள் பட்டு த்ரௌபதியின் மநோரதத்தைத் தலைகட்டினாப்போலே எனக்காக ஏதேனும் படாதபாடுகள் படச்சொல்லுகிறேனோ? இங்கு வரவேணுமென்று இத்தனையேயன்றோ நான் வேண்டுவது.

அவன்படி அப்படியிருக்கட்டும்; "பீஷாஸ்மாத்வாத: பவதே" [எம்பெருமானுக்கு அஞ்சிக்கொண்டு காற்று வீசுகின்றது] என்று உபநிஷத்திற் கூறியபடியே அப்பெருமானுக்கு அஞ்சி நடக்கின்ற காற்றும் அவன் கருத்தையே பின்சென்று என் ஆவியைக் கொள்ளை கொள்ளப்பார்க்கின்றது: எல்லார்க்கும் ஆவியைத் தளிர்ப்பிக்கின்ற மந்தமாருதமானது இப்போது என் ஆவியைமாய்க்கின்றபடியாலே இஃது எப்போது தணியப்போகின்றதென்று எதிர்பார்க்கவேண்டிற்றாயிற்று; ஒருகால் தணியப்பெறில் என்னுடைய ஆவி என்னுடையதுதானென்று நினைத்துக்கொள்ள இடமுண்டாகுமென்றாளாயிற்று.

பாரதப்போரில் வந்து நின்ற அரசர்கள் எப்படிப்பட்டவர்களென்னில்; **கயங்கொள் புண்தலைக் களிறுந்து வெந்திறல்**=யானைகளைச் சேனைத்தொகையாக நடத்திக்கொண்டு வந்தவர்கள் என்றும் பொருள் கூறலாம், யானைகளையும் கையாலே நெரித்துத் தள்ளவல்ல பெருமிடுக்கர் என்றும் பொருள் கூறலாம்

யானைகளின் மத்தகம் எப்போதும் மாவட்டியினால் குத்தப்பட்டு விரணங் கொண்டு சீயும் ரத்தமும் $ அருக்கயம்போலே யிருக்குமாதலால் 'கயங்கொள் புண்தலை' என்று களிற்றுக்கு விசேஷண மிடப்பட்டது; யானைச்சாதிக்கு இயற்கை விசேஷணமென்க.

காற்று வீசும்போது கடலலைத்திவலைகளைக் கொணர்ந்து வீசும்; அவை விரஹிகளுக்கு நெருப்புப்பொறி போன்றிருக்குமென்க. மாருதம்—வடசொல். விலங்கில்—விலகினால். இந்தக்காற்று இப்படியே சிறிதுபோது வீசிக்கொண் டிருக்குமாகில் என் ஆவி என்னுடையதன்று, இழந்தேபோயிற்றென்ற வாறு. .... .... .... .... .... (ச)

ஏழுமாமரம் துளைபடச்சிலைவளைத் திலங்கையை மலங்குவித்த
ஆழியான் * நமக்கருளிய வருளோடும் பகலெல்லை கழிகின்றதால் *
தோழி! நாமிதற் கென்செய்தும்? துணையில்லை சுடர்படுமுதுநீரில் *
ஆழவாழ்கின்ற ஆவியையடுவதோ ரந்திவந் தடைகின்றதே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| ஏழு மா மரம் | ஸப்தஸாலவ்ருக்ஷங்கள் | தோழி | வாராய் தோழீ!; |
| துளைபட | (ஸுக்ரீவனுடைய நம்பிக்கைக்காகத்) துளைபடும்படி | இதற்கு நாம் என் செய்தும் | இந்த ஆபத்துக்கு நாம் என்ன பரிஹாரம் செய்யவல்லோம்!; |
| சிலை | வில்லை | துணை இல்லை | துணைநிற்பார் ஆருமில்லை; |
| வளைத்து | வளைத்தவனும், | சுடர் | ஸூர்யனானவன் |
| இலங்கையை | லங்காபுரியை | படு | தான்தோன்றின |
| மலங்குவித்த | கலங்கப்பண்ணினவனுமான | முதுநீரில் | ஸமுத்ரத்தினுள் |
| ஆழியான் | அறுகாழி மோதிரத்தைக் கையிலேயுடைய இராமபிரான் | ஆழ | ஆழ்ந்தமறைந்துபோக, |
| நமக்கு அருளிய அருளோடும் | நம்விஷயத்திற்பண்ணின கிருபையோடுகூட | வாழ்கின்ற ஆவியை அடுவது | பிழைத்திருக்க நினைத் திருக்கின்ற பிராணனை முடிப்பதான |
| பகல்எல்லை கழிகின்றது | பகற்போதும் முடிந்து போகாநின்றது; | ஓர் அந்தி | ஒரு ஸாயம்ஸந்த்யாகாலமானது |
| ஆல் | அந்தோ!; | வந்து அடைகின்றதே | வந்து சேர்கின்றதே!. |

* * *—அன்பர்கட்கு அருந்தொழில்கள் செய்யுமவன் என்று புகழ்பெற்ற பெருமான் இதுவரையில் நமக்குச் செய்திருந்த அருளும் போயிற்று, பகற் பொழுதும் போயிற்று; எம்பெருமானருள் மறுத்தாலும் பகற்பொழுதாகிலு மிருந்தால் ஒருவாறு உலகப்பொருள்களையாவது கண்டுகொண்டு ஆற்றலாம்; அவனருளோடு கூடவே பகற்போதும் போயிற்றே; தோழீ! இதற்கு நாம் என் செய்யக்கடவோம்; நமக்கு ஆரும்துணையில்லையே; ஸூர்யன் தான்

$ அறக்கயம்—ஒருநாளும் வற்றாத குளம்.

தோன்றின ஸமுத்ரத்திலேயே சென்று அஸ்தமிக்க, இன்னம் சிறிது நாளைக்கு ஜீவித்திருக்கவல்ல பிராணனை இன்றே முடிப்பதாக மாலைப்பொழுது வந்து சேர்ந்து விட்டதே! அந்தோ! என்கிறாள்.

எழுமாமரந் துளைப்படச் சிலைவளைத்து=ஸுக்ரீவன் இராமபிரானால் அபய ப்ரதானஞ் செய்யப்பெற்ற பின்பும் மனந்தெளியாமல் வாலியின் போற்றலைப் பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒரு யோசனைதூரம் தூக்கி யெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக் கூறி, இவ்வாறு போற்ற லமைந்தவனை வெல்வது ஸாத்தியமாகுமோ? என்று சொல்ல, அது கேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு விச்வாஸம் இல்லையாயின் இப்போது என்ன செய்யவேண்டுவது?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும் போது ஸந்தேஹ முண்டாகின்றது; எழு மராமரங்களையுந் துளைத்து இந்தத் துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கடை தூரம் தூக்கி யெறிந்தால் எனக்கு நம்பிக்கையுண்டாகும்' என்று சொல்ல, ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாக்குமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்து யோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக் கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கியெறிந்தான்; இப்போது உலர்ந்துபோன இதனைத் தூக்கியெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை எழு மராமரங்களின்மேல் எவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு எழுலகங்களையுந் துளைத்துச் சென்று மீண்டு அம்பறாத் தூணியை யடைந்தது என்றாயிற்று வரலாறு; இப்படி எனக்காக ஏதேனும் அருமையான காரியம் செய்யவேணு மென்கிறேனோ. என்றவாறு.

இலங்கையை மலங்குவித்த=1. "உண்ணுதுறங்காது ஒலிகடலை யூடறுத்துப், பெண்ணுக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்" என்னுமாபோலே ஒரு ஸீதாபிராட்டியின் உடம்பிலே ஆசை வைத்துப் பட்டபாடுகள் தெரியுமே; அப்படி ஏதேனும் எனக்காகப் பாடுபடவேண்டுகிறேனோ? என்கை.

[ஆழியான்.] "கைகேயியுடைய வரத்தில் அகப்படாதது அறுகாழியொன்றுமே போலே" என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி.

அருளோடும் பகலெல்லை கழிகின்றது=அருளும் கழிந்தது, பகற்பொழுதுங் கழிந்தது என்றபடி. மூன்றாமடியில், செய்தும்=தன்மைப் பன்மை வினைமுற்று. .... ... .... .... .... (௫)

முரியும் வெண்டிரை முதுகயம்தீப்பட முழங்கழ லெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலை வளைவித்தமைந்தனும் வந்தில னென்செய்கேன் ?
எரியும்வெங்கதிர் துயின்றது பாவியேனிணைநெடுங் கண்துயிலா *
கரியநாழிகை யூழியிற்பெரியன கழியுமா றறியேனே. (௬)

| | |
|---|---|
| முரியும் | கிளர்ந்து அலைகின்ற |
| வெண் திரை | வெளுத்த அலைகளையுடைய |
| முதுகயம் | ஸமுத்ரமானது |
| தீப்பட | தீக்கொளுவியெரியும்படி |
| முழங்கு அழல் எரி அம்பின் | ஒலியுடைய நெருப்பு எரியாநின்றுள்ள அம்புகளையுடைய |
| வரி கொள் வெம் சிலை | அழகியதாய்க் கொடிதாயிருந்துள்ள வில்லை |
| வளைவித்த | வளையச்செய்த |
| மைந்தனும் | மஹாவீரனான இராமபிரானும் |
| வந்திலன் | வரவில்லை; |
| என் செய்கேன் | என்னபண்ணுவேன்?; |
| எரியும் | பிரகாசித்துக்கொண்டிருந்த |
| வெம் கதிர் | ஸூர்யனும் |
| துயின்றது | அஸ்தமித்தான்; |
| பாவியேன் | பாவியான என்னுடைய |
| இணை நெடுங் கண் துயிலா | பெரிய இரண்டுகண்களும் உறங்குகின்றனவில்லை; |
| ஊழியின் | கல்பகாலத்திற்காட்டிலும் |
| பெரியன | பெரியவையாயுள்ள |
| கரிய நாழிகை | இரவு நாழிகைகள் |
| கழியும் ஆறு அறியேன் | எப்படி கழியப் போகின்றனவோ அறிகின்றிலேன். |

* * *—கடற்கரையிலே விபீஷணாழ்வான் வந்து சரணமடைந்து பெருமாளுடைய திருவருளுக்கு இலக்கான பிறகு, விபீஷணன் பெருமாளை நோக்கி 'ஸ்வாமீ! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக்கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம் புகவேணும்' என்ன, இராமபிரான் கடலைக்கடக்க உபாயஞ் சொல்லவேண்டுமென்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்ர ராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையா யிருந்திடவே, ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அனைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச் செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுத்த வரலாறு இங்கு ஸ்மரிக்கத் தக்கது.

ஸர்வலோக சரண்யன் சரணாகதி பண்ணுகிறானென்று சிறிதும் நினையாமல் கீழ்மண் கொண்டு மேல்மண் வீசி அலையெறிந்த செருக்கை உட்கொண்டு 'முரியும் வெண்டிரை முதுகயம்' எனப்பட்டது. எப்போதும் அருள்வடிவமாகவேயிருக்குமப்பெருமான் சீறிச் சிவந்த கண்ணினராய்க் கடலரசன்மேல் அம்பு தொடுத்தது எதுக்காக? கடலைக்கடந்து இலங்கைக்குச் சென்று அங்கு அசோகவனத்திலிருக்கும் மைதிலியோடு கூடி மகிழவேணுமென்கிற ஆசையினாலன்றோ? அங்கு அங்ஙனம் பாரித்தவர் என்னோடு வந்து கலப்பதற்கு ஒரு இடையூறுமில்லையாயிருக்கவும் ஏனோ உதாஸீநராயிருக்கிறார்! என வருந்துகிறாள் பரகால நாயகி.

ஸூர்யனும் அஸ்தமித்து விட்டான்; இரவிலே உறக்கம் வரவேண்டியது ப்ராப்தமாயிருந்தும் பாவியேனுடைய கண்கள் உறங்குகின்றில; 1. "நீணிரவும்,

1. திருவாய்மொழி 5—4—8.

ஓயும் பொழுதின்றி ஊழியாய் நீண்டதால்'' என்னுமாபோலே பிரளயராத்ரியிலும் நெடுகிச் செல்கின்ற இவ்விராப்பொழுது எங்ஙனங் கழியப்போகின்றதோ அறிகின்றிலேன் என்கிறார் பின்னடிகளில்.

கரிய நாழிகை = இராப்பொழுதானது இருண்டு கறுத்திருப்பதனால் நாழிகையிலும் அக்கருமை ஏற்றிக் கூறப்பட்டது. கரிய நாழிகை—கொடிதான நாழிகை என்னவுமாம். .... .... .... .... (சு)

கலங்கமாக்கடல் கடைந்தடைத் திலங்கையர்கோனது வரையாகம்
மலங்க * வெஞ்சமத்தடுசரந் துரந்த எம்மடிகளும் வாரானல் *
இலங்குவெங்கதி ரிளமதியதனேடும் விடைமணியடும் * ஆயன்
விலங்கல்வேயினதோசையுமாயினி விளைவதோன் றறியேனே. (எ)

| | | | |
|---|---|---|---|
| மா கடல் | பெரிய கடலானது | வெம் கதிர் | கரோமான கிரணங்களையுடைய |
| கலங்க | கலங்கும்படியாக | இள மதி அதனேடும் | இளம்சந்திரனேடுகூட |
| கடைந்து | (அதனைக்) கடைந்தவனும் | விடை | எருதினுடைய |
| அடைத்து | (அக்கடலில்) அணைகட்டினவனும் | மணி | (கழுத்தில்கட்டின மணியின்) ஓசையும் |
| இலங்கையர் கோனது | இலங்கையிலுள்ளார்க்கு அரசனன இராவணனுடைய | அடும் | (என்னைக்) கொலைசெய்கின்றது; |
| வரை ஆகம் | மலைபோன்ற மார்பானது | ஆயன் | இடையனன கண்ணபிரானிடத்துள்ள |
| மலங்க | வியாகுலப்படும்படி | விலங்கல் வேயினது | மலைமூங்கிற்குழலினுடைய |
| வெம் சமத்து | கொடியபோரில் | ஓசையும் | த்வநியும் |
| அடு சரம் | கொலையம்புகளை | ஆய் | உண்டாக, |
| துரந்த | பிரயோகித்தவனுமான | இனி விளைவது ஒன்று அறியேன் | இனி உண்டாகப்போகும் ஆபத்தை ஒன்றுமறிகின்றிலேன். |
| எம் அடிகளும் | எமது ஸ்வாமியும் | | |
| வாரான் | வரவில்லை; | | |
| ஆல் | அந்தோ!; | | |
| இலங்கு | விளங்காநின்ற | | |

* * *—(1. "விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே" என்கிறபடியே) தேவர்களுக்கு அமுதமெடுத்துக் கொடுக்கிற வியாஜத்தினால் சிறந்த அமுதமாகிய பிராட்டியைத் தான் பெறுதற்குக் கடலைக் கடைந்தான்; அவளைப்பெறுதற்கே மற்றொரு ஸமயத்தில் கடலையடைத்தான்; இலங்கையிற் புகுந்து எதிரிகள் விட்ட அம்புமாரிகளையெல்லாம் மேலேற்றுப் போர்புரிந்து இராவணனைக் கொன்றான்; இவ்வரிய பெரிய காரியங்களை

1. பெரியதிருமொழி 6—1—2.

யெல்லாம் நோக்குங்கால் அப்பெருமானுக்கு ஸ்த்ரீ வ்யக்தியில் அளவற்ற காதலுள்ளமை நன்குவிளங்கும். ஒரு ஸ்த்ரீவ்யக்தி கிடைப்பதாயிருந்தால் பொறுக்கொணாத ஆயாஸங்களையும் பொறுத்துப் படாதன படுதற்கு ஸித்தனாயிருக்குமப்பெருமான் நான் எளிதிற் கிடைக்கிறேனென்றோ என்னை உபேக்ஷித்திருப்பது! என்கிறாள் போலும்.

அவன்றான் வாராதொழியினும் என்னைக் கொலைசெய்வதற்கும் வழிதேட வேணுமோ? ஒரு புறத்திலே சந்திர கிரணங்களை ஏவி நலிகின்றான்; மற்றொரு புறத்திலே மாட்டுக் கழுத்து மணியோசையை யுண்டாக்கி நலிகின்றான்; பிறரை யிட்டு நலிவது போராதென்று தானே நேரில் நலியக்கருதி வேய்ங்குழலை வாயில் வைத்து ஊதி அவ்வோசையை யிட்டு நலிகின்றான்; இன்னமும் எவ்வெவ்வித மான நலிவுகள் நேரப்போகின்றனவோ அறிகின்றிலேனென்றாளாயிற்று.

விடைமணி அடும்=மாலைப்பொழுதில் மாடுகள் மேய்ந்துவிட்டுத் திரும்பும் போது கழுத்திற் கட்டியுள்ள மணிகளை ஓசைப்படுத்திக்கொண்டே வரும்; அவ்வோசை செவிப்பட்டவாறே மாலைப்பொழுது நெருங்கினமை யறிந்து "மாலையும் வந்தது மாயன்வாரான்" என்று நாயகி வருந்துவளென்க. "மாலைவாய்த் தன்னுடைய நாவொழியாதாடுந் தனி மணியின், இன்னிசை யோசையும் வந்தென் செவிதனக்கே, கொன்னவிலு மெஃகில் கொடிதாய் நெடிதாகும்" என்றார் பெரிய திருமடலிலும்.

விலங்கல் வேய்=கண்ணபிரான் ஊதும் குழல் மூங்கிலினால் செய்யப்பட்டது; அந்த மூங்கில் மலையில் விளைந்தது என்பதுபற்றி 'விலங்கல்வேய்' எனப் பட்டது. விலங்கலென்று மலைக்குப்பெயர். 'வேய்' என்ற மூங்கிலின் பெயர் அதனாற் செய்யப்பட்ட குழலுக்கு வாசகமானது ஆகுபெயர். .... (எ)

முழுதிவ்வையகம் முறைகெட மறைதலும் முனிவனும் முனிவெய்த *
மழுவினால் மன்னராருயிர் வௌவிய மைந்தனும் வாரானால் *
ஒழுகுநுண்பனிக் கொடுங்கிய பேடையையடங்கவஞ் சிறைகோலி *
தழுவுநள்ளிருள் தனிமையிற்கடியதோர் கொடுவினை யறியேனே. (அ)

| | | | |
|---|---|---|---|
| இ வையகம் | இந்த லோகமானது | வௌவிய | கவர்ந்த |
| முழுது | அடங்கலும் | மைந்தனும் | மிடுக்கையுடைய (பரசுராம) பிரானும் |
| முறை கெட மறைதலும் | மரியாதை குலைந்து போனதனால் | | வாரான் ஆல்—; |
| முனிவனும் | ஜமதக்நிமுனிவன் | ஒழுகு | பெருகுகின்ற |
| முனிவு எய்த | சீற்றங்கொள்ள (அதுகாரணமாக) | நுண் பனிக்கு | சிறுபனிக்காக |
| மழுவினால் | கோடாலிப்படையினால் | ஒடுங்கிய | ஒடுங்கிவர்த்திக்கிற |
| மன்னர் | க்ஷத்ரியர்களினுடைய | பேடையை | பெண்பறவையை |
| ஆர் உயிர் | அருமையானபிராணன்களை | அம் சிறை கோலி | அழகிய சிறகுகளைவிரித்து |

| | | | |
|---|---|---|---|
| அடங்கத் தழுவும் | நிபிடமாக அணைத்துக் கொள்வதற்குரிய | கடியது | க்ரூரமான |
| நள்ளிருள் | நடு நிசியில் | ஓர் கொடு வினை | வேறொருபாபத்தை |
| தனிமையின் | (இப்படி) தனிமைப்பட்டி ருப்பதிற்காட்டிலும் | அறியேன் | அறிகின்றிலேன். |

* * *—உலகத்தில் எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமையியற்றிவந்த க்ஷத்ரிய வம்சங்கள் பலவற்றை நாசஞ் செய்தற் பொருட்டு நாராயணமூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான ரேணுகையிடம் இராமனாய்த் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனாற் பாசுராமனென வழங்கப்பெற்று வருகையில், ஒருநாள் கார்த்தவீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப்புகுந்த காலத்து அங்கே அம்முனிவனது ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களையெல்லாம் யதேஷ்டமாக அளித்துக்கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப்பசுவைக் கொள்ளைகொள்ள விரும்பி அதனைக் கவர்ந்து அம்முனிவனையுங் கொன்றிட்டது காரணமாக(ப் பரசுராமன்) அந்தக் கார்த்த வீர்யார்ஜுநனையும் அவனது குமாரர்களையுங் கொன்று அதனாலேயே க்ஷத்ரிய வம்சம் முழுவதன்மேலும் கோபாவேசங்கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டானென்ற வரலாறு இங்கு உணர்த்தக்கது.

அநீதிபுரியுமவர்களைக் கருவழிப்பதற்கென்றே திருவவதாரம் பண்ணின தலைவன் தானே அநீதிசெய்யத் தலைப்பட்டானே! எனவருந்துகின்றாள் பரகால நாயகி. பிரதிபக்ஷிகளான க்ஷத்ரியர்களின் உயிரைக் கவர்ந்த பெருமான் அன்புடையேனான என்னுடைய உயிரையுங் கவரப்பார்க்கிறானே! என்கிறாளாகவுமாம்.

பறவையினங்களும் குளிர்க்கு அஞ்சி ஒடுங்கிக்கிடக்கும் பேடையைச் சிறகினால் அணைத்து ஒன்றிக்கிடக்கும்படியான இந்த நள்ளிருட்போதிலே நாயகனைப் பிரிந்து பரிதபியா நின்ற என்னைப்போலே பாவஞ்செய்தாரு முலகிலுண்டோ என்கிறாள் பின்னடிகளில். நாயகனைப் பிரிந்து தனிக்கிடை கிடப்பதற்கு மேற்பட்ட பாபமில்லை யென்கிறாள். .... ... (அ)

கனஞ்சேய் மாமதிட் கணபுரத் தவனொடும் கனவினி லவன்தந்த *
மனஞ்சே யின்பம்வந்துள்புக வேள்கி யேன் வளைநெக விருந்தேனை *
சினஞ்சேய் மால்விடைச் சேறுமணி யோசையேன் சிந்தையைச் சிந்துவிக்கும் *
அனந்த லன்றிலி னரிகுரல் பாவியே னாவியை யடுகின்றதே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கனம் செய் | திண்ணிதாகச்செய்யப் பட்டுள்ள | மா மதிள் | பெரியதிருமதில் களையுடைத்தான |

| | |
|---|---|
| கண்புரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற |
| அவனொடும் | அப்பெருமானோடு கூடியிருப்பதாக |
| கனவினில் | ஸ்வப்நத்திலே |
| அவன் தந்த | அப்பெருமான் கொடுத்த |
| மனம் செய் இன்பம் | மாநஸிகமாத்ரமான இன்பமானது |
| வந்து உள்புக | நினைவுக்குவர (அத்தாலே) |
| என்றி | ஈடுபட்டு |
| என் வளை நெக இருந்தேனை | என் கைவளை கழலும்படி யிருக்கிறவென்னை |
| சினம் செய் | கோவங்கொண்ட |
| மால் விடை | பெரியவிருஷபத்தினுடைய |
| செறு மணி | க்ரூரமான மணியினுடைய |
| ஓசை | த்வநியானது |
| என் சிந்தையை | என து நெஞ்சை |
| சிந்துவிக்கும் | சிதிலமாக்குகின்றது ; |
| அனந்தல் | உறக்கங்கொண்டிருக்கின்ற |
| அன்றிலின் | அன்றிற்பறவையினுடைய |
| அரி குரல் | தழுதழுத்த பேச்சானது |
| பாவியேன் | பாவியான என்னுடைய |
| ஆவியை | உயிரை |
| அடுகின்றது | ஹிம்ஸிக்கின்றது. |

* * *—இங்ஙனே துடிக்கின்ற பரகால நாயகிக்கு ஒருவகையான தேறுத லுண்டாகும்படி எம்பெருமான் மாநஸிகமான அநுபவத்தைத் தந்து இன்பம் விளைவிக்க, தரித்ரனாயிருப்பானொருவன் பெருஞ் செல்வம் பெற்றதாகக் கனாக் கண்டு கண்விழித்தவாறே ஒன்றுமில்லாமை கண்டு முன்னிலும் விஞ்சிய வருத் தத்தை யடையுமாபோலே இப்பரகாலநாயகியும் ஸ்வப்நகல்பமான அவ் வநுபவத்தினால் பின்னையுந் தளர்ந்திருக்குமளவில் விடைமணி யோசையும் அன் றிற்பறவையின் கூக்குரலும் செவிப்பட்டு இன்னமும் நலிகிறபடி பேசிற்றா யிற்று.

அன்றில் என்பது ஒரு பறவை ; அது பெரும்பாலும் பனை மரத்தில் வாழும்; அது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது நிற்கும். கணப்பொழுது ஒன்று ஒன்றைவிட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றை ஒன்று இரண்டு மூன்று தரம் கத்திக் கூவி அதன் பின்பும் தன் துணை யைக் கூடாவிடின் உடனே இறந்துபடும். இப்பறவையை வட நூலார் க்ரௌஞ் சம் என்பர். ஆணும் பெண்ணுமான அந்த அன்றிற் பறவை இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக்கொண்டு அவ்வுறக்கத்திலே வாயலகு தன்னில் நெகிழ்ந்தவளவிலே துயிலுணர்ந்து அப்பிரிவைப் பொறாமல் மெலிந்து பெருத்தொனியாகக் கத்துகிற மிக இரங்கத்தக்க சிறுகுரல் காமோத் தீபகமாய்ப் பிரிவாற்றாமைத் துயரை வளர்த்து விரஹிகளை மிக வருத்தும் என்ப. .... ... ... .... .... ... (கூ)

வார்கொள்மென்முலை மடந்தையர் தடங்கடல்வண்ணனைத் தாள்நயந்து
ஆர்வத்தாலவர் புலம்பியபுலம்பலை யறிந்துமுன் னுரைசெய்த *
கார்கொள்பைம்பொழில் மங்கையர்காவலன் கலிகன்றி யொலிவல்லார் *
ஏர்கொள் வைகுந்தமாநகர் புக்கிமையவரோடும் கூடுவரே. (கூ0)

| | |
|---|---|
| வார் கொள் | கச்சு அணிந்த |
| மென் முலை | மெல்லியமுலைகளையுடைய |
| மடந்தையர் அவர் | (திருவாய்ப்பாடியிலுள்ள) அப்பெண்கள் |
| தட கடல் வண்ணன் | பெரிய கடலின் நிறம் போன்றநிறமுடைய ஞனகண்ணபிரானுடைய |
| தாளை | திருவடிகளை |
| நயந்து | ஆசைப்பட்டு |
| ஆர்வத்தால் | அன்பினால் |
| முன் புலம்பிய புலம்பலை | முன்பு கதறின கதறலை |
| அறிந்து | உட்கொண்டு, |
| கார் கொள் பை பொழில் மங்கையர் காவலன் | மேகஸஞ்சாரத்தையுடைய பரந்தசோலைகளையுடைத்தான திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரான |
| கலிகன்றி | ஆழ்வார் |
| உரைசெய்த | அருளிச்செய்த |
| ஒலி | இச்சொற்களை |
| வல்லார் | ஓதியுணரவல்லவர்கள் |
| ஏர்கொள் | அழகிய |
| வைகுந்தம் மா நகர் | பரமபதமென்னும் திருநாட்டிலே |
| புக்கு | புகுந்து |
| இமையவரோடும் | நித்யஸூரிகளோடே |
| கூடுவர் | சேரப்பெறுவர்கள். |

* * *—இப்போது தமக்குண்டான பிரிவாற்றாமைத் துயரம் முன்பு யௌவனம் நிரம்பிய திருவாய்ப்பாடியிற் பெண்கள் கண்ணபிரான் திருவடிகளை ஆசைப்பட்டுக் கிடையாமையாலே அவர்களுக்குண்டான துயரத்தோடு ஒத்திருத்தலால் அவர்கள் பேசினதாகத் தலைக்கட்டுகிறார். அவ்வாய்ச்சிமாருடைய அவஸ்தையே தமக்கு உண்டாகி அவர்கள் புலம்பிய புலம்பலே தம் வாயால் வெளிவந்ததென்றாராயிற்று.

எம்பெருமானைப் பிரிந்து வருந்தி அவ்வருத்தத்தின் பரீவாஹரூபமாக நான் சொன்ன இத்திருமொழியை ஓதவல்லவர்கள் என்னைப் போலே எம்பெருமானைப் பிரிந்து வருந்த வேண்டாதே * ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமைசெய்யப் பெறுவர்கள் என்று பயனுரைத்தாராயிற்று. (கo)

அடிவரவு:—தந்தை மாரி ஆயன் கயம் ஒழு முரியும் கலங்க முழுது கனஞ்செய் வார்கொள் தொண்டர்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஆறாந்திருமொழி,

# தொண்டீருய்யும்வகைகண்டேன்.

உரையவதாரிகை:—திருக்கண்ணபுரத் திருப்பதி விஷயமான இவ்வெட்டாம்பத்தில் கீழைந்து திருப்பதிகங்களும் தாய் பாசுரமும் தலைமகள் பாசுரமுமாக அந்யாபதேசத்தாலே சென்றன; இனி, மேல் ஐந்து திருப்பதிகங்களும் ஆழ்வார்தம் பாசுரமாகச் செல்லுகின்றன.

கீழ்த் திருமொழியில் இவர் பட்ட பரிதாபங்களை யெல்லாம் உணர்ந்த எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் இங்ஙனே பரிதபிப்பானேன்? நாம் திருக்கண்ணபுரத்திலே வந்து நித்யஸந்நிதிபண்ணியிருப்பது உம்மைப் போன்ற அடியார்க்காகவன்றோ? நாம் விபவத்திலே செய்த அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூல சிக்ஷணமும் இவ்வர்ச்சையிலும் நடத்தவல்லோமாக ஸந்நிதிபண்ணியிருக்கின்றோமிறே; ஆகையாலே உமக்கொரு குறையுண்டோ?' என்று ஆழ்வாரைத் தேற்ற, அவரும் தேறி அருளிச்செய்வதாய்ச் செல்லுகிறது இத்திருமொழி. ....

தொண்டீருய்யும்வகைகண்டேன் துளங்கா வரக்கர்துளங்க * முன்
திண்டோள் நிமிரச் சிலைவளையச் சிறிதேமுனிந்த திருமார்பன் *
வண்டார் கூந்தல் மலர்மங்கை வடிக்கண்மடந்தை மாநோக்கம்
கண்டான் * கண்டு கொண்டுகந்த கண்ணபுரம் நாம்தொழுதுமே. (௧)

| | |
|---|---|
| தொண்டீர் | பகவத் கைங்கர்யத்தில் ருசியுடையீர்காள்! |
| உய்யும் வகை | உஜ்ஜீவிக்கும் வழியை |
| கண்டேன் | தெரிந்து கொண்டேன்; |
| முன் | முற்காலத்தில், |
| துளங்கா அரக்கர் | ஒருநாளும் கஷ்டப்பட்டறியாத ராக்ஷஸர்கள் |
| துளங்க | கஷ்டப்படும்படியாக |
| திண் தோள் நிமிர | வலிமை பொருந்திய திருத்தோள்கள் நிமிரவும் |
| சிலை வளைய | வில்வளையவும் |
| சிறிதே முனிந்த | ஸ்வல்பமான சீற்றமே கொண்டவனாய் |
| திரு மார்பன் | லக்ஷ்மியைத் திருமார்பிலே உடையவனாய், |
| வண்டு ஆர் கூந்தல் மலர் மங்கை | வண்டுகள் படிந்த கூந்தலையுடைய பெரிய பிராட்டியாரென்ன |
| வடி கண் மடந்தை | கூர்மை பொருந்திய திருக்கண்களையுடைய பூமிப்பிராட்டியாரென்ன |
| | இவர்களுடைய |
| மா நோக்கம் கண்டான் | சிறந்த கடைக்கண் பார்வையை அநுபவிப்பவனான எம்பெருமான் |
| கண்டு கொண்டு உகந்த | (நித்யவாஸத்திற்குப் பாங்கான இடமென்று) திருவுள்ளம்பற்றி மகிழ்ந்து உறையுமிடமான |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| நாம் தொழுதும் | நாம் தொழுவோம். |

* * *—பாசுரம் தொடங்கும்போதே "தொண்டீர்! உய்யும் வகை கண்டேன்" என்று தொடங்குகிற ஆழ்வாருடைய களிப்பை என் சொல்வோம்! இத்திருமொழியில் "வலிசெய்வ தொழியாதே" என்றும் "செய்வதொன் றறியேனே" என்றும் "அஞ்சே லென்பாரில்லையே" என்றும் "என்னுவிலை எனக்கெனப் பெறலாமே" என்றும் "பாவியேனுவிலை அடுகின்றதே" என்றும் கூறின அலமாப்பெல்லாம் பகலவனைக்கண்ட பனிபோல் அகன்றொழிந் தமை தோன்றத் தொண்டீருய்யும்வகைகண்டேன்என்று களித்துப் பேசுகிறார். இது 'கண்ணபுரம் நாம் தொழுதுமே' என்பதில் அந்வயிக்கும். திருக்கண்ணபுரம் தொழும்படியானபாக்கியம் பெற்றதுதானே தாம் கண்ட உய்யும்வகை என்ற வாறு. "ஒழிவில் காலமெல்லாமுடனுய்மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்" என்றாற்போலே தொண்டுபூண் டமுதமுண்பதில் பாரிப்புக் கொண்டிருக்கு மவர்களே! நாம் ஸத்தை பெறுவதற்கு ஒரு நல்விரகுகண்டேன்; (அதாவது) திருக்கண்ணபுரம் தொழுவோம், வாருங்கோள் என்கிறார்.

அங்குள்ள எம்பெருமானுடைய திறம் பேசுவன மற்றவை. [துளங்காவரக் கர் துளங்க வித்யாதி.] துளங்குதலாவது-வருத்தப்படுகையும், அச்சப்படுகையும் கலங்குகையும். ஒரு நாளும் துளங்கியறியாத ராக்ஷஸர்கள் துளங்கும்படியாகத் தோள் நிமிர்த்துச் சிலைவளைந்த பெருமான் எழுந்தருளியிருக்குமிட மென்கை.

சிறிதே முனிந்த=பஞ்சவடியிற் பிராட்டியைப் பிரிந்தவுடனே அளவுகடந்த கலக்க மடைந்த இராமபிரான் 1. "ஜகத்ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம்—ஜகத் ஸசைலம் பரிவர்த்தயாம்யஹம்"—உலகம் முழுவதையும் இதோதலைகீழாகத் திருப்பிவிடுகிறேன் என்று எல்லையற்ற சீற்றத்தை வெளியிட்டருளினன்; அப் படிப்பட்ட சீற்றம் ஒரு லங்கையிலுள்ள ராக்ஷஸரளவிலே தலைக்கட்டிற்றாகை யாலே 'சிறிதே முனிந்த' என்னப்பட்டது. முற்ற முடிய முனிந்திருந்தால் ஜகத்துக்கெல்லாம் உபஸம்ஹாரம் விளைந்திருக்குமே.

"[திருமார்பன்] வீரஶ்ரீக்குக் குடியிருப்பான மார்வுபடைத்தவன்" என் பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான வருளிச்செயல்.

'பிராட்டிமாரும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை' என்ற சாஸ்த்ரார்த்தமும் நமக்குப் பலிக்கப்பெற்றது என்கிறார் மூன்றாமடியால். திருமடந்தை மண்மடந்தை இருபாலுந்திகழ அப்பிராட்டிமார்களது கண்ணழ கிலே துவக்குண்டிருக்கிற ,சௌரிப்பெருமாள் நித்யஸந்நிதி பண்ணியிருக்குமிட மென்கை. வண்டார் கூந்தல் மலர் மங்கை=அபராதியான சேதநன் எம் பெருமானடி பணிந்தால் ஸ்வதந்த்ரனான அப்பெருமான் அவனுடைய குற்றங் குறைகளையே பார்த்துச் சீறி அவனைப்படுகுழியிலே தள்ளவேணுமென்றிருக் கும் நிலைமையில், பிராட்டியானவள் 'அந்தோ! நீர் செய்ய நினைத்தது சாலவும் நன்றாயிருந்தது!, இச்சேதநனுடைய குற்றங்களைக் கணக்கிட்டு நீர் இப்படி தள்

1. ஸ்ரீராமாயணம்—ஆரண்யகாண்டம். 64-75.

ளிக் கதவடைத்தால் இவனுக்கு வேறொரு போக்கிடமுண்டோ? இவனுக்கும் உமக்குமுள்ள ஸம்பந்தம் § கடப்ரஹாரம் பண்ணினாலும் ஒழியாத தொன்றன்றோ? இவனைப் பெறுகை உம்முடைய பேறன்றோ? 'நம் வலையில் ஆர் அகப்படுவார்?' என்று தேடித்திரிகிற உமக்கு நான் சொல்லவேணுமோ? 'ஸ்வாமிந்! ரக்ஷித்தருளவேணும்' என்று வந்தவிவனை ரக்ஷியாவிடில் உம்முடைய ஸர்வரக்ஷகத்வபட்டம் என்னாகும்? 'நெடுநாளாக சாஸ்த்ரவரம்புகளைக் கடந்து பெருங்குற்றவாளனாய்த் திரிந்த இவனைத் தக்கபடி தண்டியாமல் இன்று கைப்பற்றினால் சாஸ்த்ரமரியாதை கெடும்' என்று திருவுள்ளமாகில் அதுகொண்டு இவனை ரக்ஷியாமல் தண்டித்து விட்டால் உம்முடைய க்ருபை முதலிய குணங்களுக்கு எள்ளுந் தண்ணீரும் விடவேண்டியதாகுமன்றோ? பராங்முகராய் [உம்மை வந்து பணியாதே] திரிகின்றவர்களிடத்தில் சிக்ஷாசாஸ்த்ர விதியையும், அபிமுகரான சேதநரிடத்தில் க்ருபாதி குணங்களையுஞ் செலுத்தினீராகில் மிக்க பொருத்தமாயிருக்கும்; ஆனபின்பு இவனைக் கடுகக் காத்தருளீர்' என்று நயமாக உபதேசித்துப் பார்ப்பள்; இவ்வுபதேசங்கேட்ட எம்பெருமான் 'ஆமாம்போ, உனக்கு வேறு வேலை என்ன?' என்று அவளுபதேசத்தை உதறினவாறே கண்ணைப் புரட்டிக் கச்சை நெகிழ்த்திக் கூந்தல் முதலியவற்றின் அழகைக் காட்டி அவனைப் பிச்சேறும்படிபண்ணி, தான் சொன்னபடி செய்தல்லது நிற்கமாட்டாதபடி பண்ணி அங்கீகரிக்கச் செய்வள் என்பவாதலால் இவ்விசேஷார்த்தம் தோன்ற 'வண்டார் கூந்தல் மலர்மங்கை' என்றும் 'வடிக்கண் மடந்தை' என்றும் அவயவச் சிறப்பையுமிட்டு அருளிச்செய்ததாகக் கொள்க. "உபதேசத்தாலே மீளாதபோது சேதநனை அருளாலே திருத்தும், ஈச்வரனை அழகாலே திருத்தும்" என்ற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்தியும் இங்கு அநுஸந்திக்கத்தகும். .... .... .... .... .... (க)

போருந்தா வரக்கர் வெஞ்சமத்துப் பொன்றவன்று புள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலி தலைபுரளப் பேர்ந்தவரக்கர் தென்னிலங்கை *
இருந்தார்தம்மை யுடன்கொண்டு அங்கெழிலார்பிலத்துப் புக்கொளிப்ப *
கருந்தாள்சிலைகைக் கொண்டானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொரு காலத்தில், | புள் ஊர்ந்து | கருடப்பறவையை ஏறிநடத்திக் கொண்டெழுந்தருளி |
| வெம் சமத்து | கொடிய போர்க்களத்திலே | பெரு தோள் மாலி | வலிய தோள்களை யுடையனான மாலியினுடைய |
| பொருந்தா அரக்கர் | சத்ருக்களான ராக்ஷஸர்கள் | தலை | தலையானது |
| பொன்ற | முடியும்படியாக | | |

§ கடப்ரஹாரமாவது—உறவை யறுத்துக் கொள்வதற்காகச் செய்யவேண்டும்படி சாஸ்த்ரங்களில் ஏற்பட்ட ஒரு கருமம்.

| | | | |
|---|---|---|---|
| புரள | (அற்றவிழுந்து நிலத்தில்) புரளும்படியாகவும் | எழில் ஆர் பிலத்து | அழகிய பாதாளத்திலே |
| பேர்ந்த அரக்கர் | அவனைத் தவிர மற்ற ராக்ஷஸர்கள் | புக்கு ஒளிப்ப | புகுந்து மறையும்படியாகவும் |
| தென் இலங்கை இருந்தார் தம்மை உடன் கொண்டு | தென்னிலங்கையிலிருந்த மற்றுமுள்ள ராக்ஷஸர்களையுங் கூட்டிக் கொண்டு | கருந் தாள் சிலை | வயிரம்பற்றித் திண்ணிதான வில்லை |
| | | கை கொண்டான் | திருக்கையிலேதரித்தவனான எம்பெருமானுடைய |
| | | ஊர் | இருப்பிடமான |
| அங்கு | அவ்விடத்திலிருந்து | | கண்ணபுரம், நாம் தொழுதும்—. |

* * *—ஸுகேசனென்னும் இராக்கதனுக்கு மாலியவான், மாலி, ஸுமாலி என மூன்று பிள்ளைகள் பிறந்ததும், அவர்கள் தவம் புரிந்து பெருமை பெற்று இலங்கையிற் குடிபுகுந்து விவாஹஞ் செய்துகொண்டு பல மக்களைப் பெற்றதும், தேவர்கள் சிவபெருமானை அடைக்கலம் புகுந்து அவர் சொன்ன உபாயத்தினால் ஸ்ரீமந் நாராயணனைச் சரணமடைந்ததும், அவர் அவர்கட்கு அபயமளித்ததும், அது தெரிந்து ராக்ஷஸர்கள் கோபங்கொண்டு படையெடுத்துத் தேவலோகஞ் சென்றதும், அப்பொழுது கருடவாஹநாரூடராய்க் கேசவன் அங்கு வந்து தோன்ற அவரைச் சூழ்ந்து அரக்கர் அம்புமாரி பொழியப் புகுந்ததும், பிறகு அரக்கர்கட்கும் திருமாலுக்கும் பெருத்த யுத்தம் நடந்ததும், அதில் மாலி மரண மடைந்ததும், மற்ற மாலியவான் சுமாலி யென்னுமிருவரும் திருமாலுடன் போர்புரிந்து பராஜயமடைந்து மற்றுமுள்ள இலங்கையரையும் கூட்டிக்கொண்டு பாதாளலோகம் போய்ச் சேர்ந்ததும் உத்தர ஸ்ரீராமாயணத்தில் [ரு. கூ. எ. அ] ஸர்க்கங்களில் விரிவாகக் கூறப்பட்டவை. அவ்வரலாறே இப்பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. மேற்சொன்ன மூவருள் ஒருவனான சுமாலியின் மகளான கைகஸிக்கு இராவணன் முதலியவர்கள் பிறந்தனரென்பதும் அறியத் தக்கது.

இப்படி விரோதி நிரஸநம் பண்ணும்பெல்வினரான பெருமாள் மேலுள்ள காலமும் ஆச்ரித விரோதிகளைக் கிழங்கெடுக்கைக்காகக் கோயில் கொண்ட விடமான திருக்கண்ணபுரத்தைத் தொழுவோமென்றாயிற்று. ... (உ)

வல்லியிடையாள் பொருட்டாக மதிள்நீரிலங்கையார் கோவை *
அல்லல்செய்து வெஞ்சமத்துள் ஆற்றல்மிகுத்தவாற்றலான் *
வல்லாளரக்கர் குலப்பாவைவாட முனிதன் வேள்வியை *
கல்விச்சிலையால் காத்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| வல்லி இடையாள் பொருட்டாக | கொடிபோல் மெல்லிய இடையையுடையளான ஸீதைக்காக, | நீர் | கடலை அகழாகவுடையதாய் |
| | | மதிள் | மதிள்களையுமுடைத்தான |

| | | | |
|---|---|---|---|
| இலங்கையார் | லங்காபுரியிலுள்ள அரக்கர்களுக்கு | குலம் | குலத்தில் தோன்றிய |
| கோவை | தலைவனான இராவணனை | பாவை | தாடகை யென்னும் அரக்கியை |
| அல்லல் செய்து | துன்பப்படுத்தி | வாட | முடிய(ச் செய்த) |
| வெம் சமத்துள் | வெவ்விய ே பார்க்களத்திலே | முனி தன் | விச்வாமித்ரமுனியினுடைய |
| ஆற்றல் மிகுத்த | தன்னுடைய மிடுக்கை மிகவும் விளங்கக்காட்டின | வேள்வியை | யாகத்தை |
| ஆற்றலான் | மஹாவீரனும், | கல்வி சிலையால் | தான் கற்றுப் பயின்ற வில்லைக்கொண்டு |
| வல் ஆள் அரக்கர் | வலிய ஆண்மைத்தன முடைய ராக்ஷஸர்களின் | காத்தான் | காத்தருளினவனுமான பெருமானுடைய |
| | | ஊர், கண்ணபுரம், நாம் தொழுதும்—. | |

* * *—கொடிபோன்று மெல்லிய இடைபையுடையளான மைதிலிக்காக இராவணனைப் போர்க்களத்தில் துன்பப்படுத்தித் தனது பராக்ரமத்தைப் பர வச் செய்துகொண்ட பெருவீரனும், பருவம் நிரம்புவதற்கு முன்னமே விச்வா மித்திரமுனிவனுடைய வேள்வியைக் காத்தருளச் சென்று, வழியிடையே வந்து தகைந்து நின்ற தாடகை யென்னு மரக்கியை வில்லைவளைத்து நாணேற்றி அம்பு தொடுத்து எய்து உயிர் தொலைத்திட்டு வேள்வியைத் தலைக்கட்டுவித்தவனுமான பெருமான் உறையுமிடமான திருக்கண்ணபுரத்தைத் தொழுவோம்.

ராமராவண யுத்தத்தில் முதல்நாட்போரிலே இராமனம்புகளால் இராவ ணன் கிரீடங்களையும் ஆயுதங்களையும் சேனைகளையும் இழந்து சோர்ந்து வெள்கி முகங்கறுத்துத் தலைகுனிந்து நின்ற சமயத்தில், இராமபிரான், இப்படி யாவு மிழந்திருக்கின்றவிவனை இப்பொழுது கொல்வது தருமமன்றென்று திருவுள்ளம் பற்றி அவனை நோக்கி 'தனியனாய் வெறுங்கையனாயிருக்கின்ற உன்னை இப் பொழுது நான் கொல்வேனல்லேன்; நீ இன்று உயிர் தப்பிச் சென்று சேனை களையும் ஆயுதங்களையும் ஸித்தஞ் செய்து கொண்டு நாளைக்குப் போர்க்குப் பிரிய மிருந்தால் வா' என்று பலவாறு இரக்கத்தோடு சொல்லியனுப்பி யருளினனாத லால் இவ்விஷயத்தைத் திருவுள்ளம்பற்றியே இங்கு 'வெஞ்சமத்துளாற்றல் மிகுத்தவாற்றலான்'. என்றருளிச் செய்யப்பட்டது போலும். "கைபுகுந்த சத்ருவைக் கடுக முடித்துவிடாதே 'இன்று போய் நாளைவா' என்றானிறே" என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல்.

வல்லாளரக்கர் குலப்பாவை=தாடகையானவள் ஸுகேதுவென்னும் யக்ஷ னது குமாரி; ஸுந்தனென்பவனது மனைவி; ஆயிரம் யானை வலிமைகொண் டவள்; கணவன் அகஸ்த்ய மஹாமுநியின் கோபாக்நிக்கு இலக்காகிச் சாம்ப ரானதை யறிந்த இவள் தன் புத்திரர்களாகிய ஸுபாஹு மாரீசர்களுடனே அம்முனிவனை எதிர்த்துச் சென்றபொழுது அவரிட்ட சாபத்தால் தன் மக்க ளோடு ராக்ஷஸத்தன்மை யடைந்தனள்; இஃது இவளது வரலாறு. 'வாட' என்றது உபசார வழக்கு; மாண்டுபோக என்றபடி.

கல்விச்சிலையால் காத்தான்—ஸீதா விவாஹத்திற்குப் பிறகு பரசுராமனை வென்று கைப்பற்றிக்கொண்ட தன்னதான வில்லினால் விச்வாமித்ர யாகத்தைக் காத்தானல்லன்; பயிற்சிக்குப் பிடித்ததொரு வில்லைக்கொண்டு காத்தானத்தனை.

மல்லைமுந்நீரதர்பட வரிவெஞ்சிலை கால்வளைவித்து *
கொல்லைவிலங்கு பணிசெய்யக் கொடியோனிலங்கை புகலுற்று *
தொல்லை மரங்கள் புகப்பெய்து துவலைநிமிர்ந்து வானணவ *
கல்லாற் கடலையடைத்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (ச)

கொடியோன் — கொடியவனான இராவணனுடைய
இலங்கை — லங்காபுரியில்
புகல் உற்று — பிரவேசிக்கவேண்டி (அதற்காக)
மல்லை முந்நீர் — செழிப்பான கடலானது
அதர் பட — வழிபடும்படியாக
வரி வெம் சிலை — வரிகளையுடைத்தாய் வெவ்விதான வில்லை
கால் வளைவித்து — வளையச்செய்து (அவ்வளவிலே கடலரசன் வந்து இணங்கிநிற்க)
கொல்லை விலங்கு — காட்டுமிருகங்கள் [வாநரமுதலிகள்]
பணி செய்ய — கைங்கரியம் பண்ண
தொல்லை மரங்கள் — பழையமரங்களையும்
புகப் பெய்து — கடலினுட்புகும்படியாக வெட்டிப்போட்டு
துவலை — திவலைகள்
நிமிர்ந்து — கிளர்ந்து
வான் — ஆகாசத்திலே
அணவ — அளாவும்படியாக
கல்லால் — மலைகளைக்கொண்டு
கடலை — ஸமுத்ரத்தை
அடைத்தான் — அணைசெய்த எம்பெருமானுடைய
ஊர், கண்ணபுரம் நாம் தொழுதும்—.

* * *— விபீஷணாழ்வானது வார்த்தையின்படி இராமபிரான் 'கடலைக் கடக்க உபாயஞ் சொல்ல வேண்டும்' என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்து தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக் கிடக்க, ஸமுத்திரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே, ஸ்ரீராமன் அதுகண்டுகோபங்கொண்டு 'அனைவரும்நடந்தே செல்லும்படி கடலைவற்றச் செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு நிற்க, இராகவனும், வாநர வீரர்கள் மலைகளையும் மரங்களையும் பிடுங்கிக் கொண்டுவந்து நீரில்போட, ஸேது கட்டுவித்து அவ்வழியாய் இலங்கைபுகுந்து காரியம் பார்த்தனன் என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது.

"கொடியோனிலங்கை புகலுற்று மல்லை முந்நீரதர்பட வரிவெஞ்சிலைகால் வளைவித்துக் கொல்லை விலங்கு பணிசெய்ய........ கல்லால் கடலையடைத்தான்" என்று அந்வயிப்பது.

[''கோல்லே விலங்கு பணிசெய்ய.] ஒருகாலும் பூசல்கண்டறியாதே என்று மொக்கப் $ பணைகளிலே தாவித்திரியக்கடவ குரங்குகள் பணிசெய்ய; அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான திருவடி திருவனந்தாழ்வான் தொடக்கமானார் செய்யக்கடவ கைங்கர்யத்தை இடக்கைவலக்கையறியாத திர்யக்குகள் செய்ய.'' என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவருளிச்செயல். கோல்லே—மரங்களடர்ந்த சோலே. கொல்லேவிலங்கு—ஶாவாம்ருகமென்றபடி.

மூன்றாமடியில் ''திவலே நிமிர்ந்து'' என்றபாடம் புதியது; "துவலே" என்றே ஓதுக; திவலே என்றே பொருள்: மோனையின்பத்திற்கு இணங்கிய பாடம் இதுவே. .... .... .... .... .... (எ)

ஆமையாகி யரியாகி யன்னமாகி * அந்தணர்தம்
ஓமமாகி யூழியாகி உவரிசூழ்ந்த நெடும்புணரி *
சேமமதிள்சூ ழிலங்கைக்கோன் சிரமுங் கரமும் துணித்து * முன்
காமற்பயந்தான் கருதுமூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. * (அ)

| | |
|---|---|
| ஆமை ஆகி | கூர்மரூபியாயும் |
| அரி ஆகி | நரஸிம்ஹரூபியாயும் |
| அன்னம் ஆகி | ஹம்ஸரூபியாயும் (அவதரித்தவனும்) |
| அந்தணர் தம் | பிராமணர்களினுடைய |
| ஓமம் ஆகி | யாகங்களில் ஆராதிக்கப்படுபவனும் |
| ஊழி ஆகி | பிரளயகாலத்திலு முள்ளவனும் |
| நெடு புணரி | ஓங்கின அலைகளையுடைத்தான |
| உவரி | கடலினால் |
| சூழ்ந்த | சூழப்பட்டதும் |
| சேமம் மதிள் சூழ் | காப்பான மதிள்களாலே சூழப்பட்டதுமான |
| இலங்கை | லங்காபுரிக்கு |
| கோன் | தலைவனான இராவணனுடைய |
| சிரமும் | தலைகளையும் |
| கரமும் | தோள்களையும் |
| துணித்து | அறுத்தொழித்தவனும், |
| முன் | முன்பொருகால் |
| காமன் | மன்மதனை |
| பயந்தான் | பிள்ளையாகப் பெற்றவனுமான எம்பெருமான் |
| கருதும் | திருவுள்ளம்பற்றியிருக்கப்பெற்ற |

ஊர், கண்ணபுரம் நாம் தொழுதும்—.

* * *—துர்வாஸமுனிவனது சாபத்தினால் தரித்திரர்களான அமரர்கட்குக் கடலினின்று அமுதமெடுத்துக் கொடுத்தருள்வதற்காக மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகி யென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக் கடையும்போது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிடாதபடி அம்மலையின் கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீது தாங்கிக் கொள்வதற்காக ஆமையாய்த் திருவவதரித்தவனும், இரணியனது செருக்கை நீக்கி ப்ரஹ்லாதாழ்வானைப் பாதுகாத்தருள்வதற்காக நரஸிம்ஹரூபியாய்த் திருவவதரித்தவனும், அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டுக் கொணர்ந்து பிரமனுக்கு உபதேசித்

$ பணை—கிளை.

தருள்வதற்காக ஹம்ஸரூபியாய்த் திருவவதரித்தவனும், அந்தணர்கள் நிகழ்த்தும் யாகங்களுக்கு ஆராத்ய தேவதையாயிருப்பவனும், பிரளய காலத்திலும் உலகுண்டு நிலைநிற்பவனும், இலங்கையரசனைப்பாழ்படுத்தினவனும், காமனைப்பயந்த காளையுமான பெருமானுறைபுந் திருக்கண்ணபுரத்தைத் தொழுவோம்.

'ஹோம:' என்னும் வடசொல் ஓமமெனத் திரிந்தது; லக்ஷணையால், யாகங்களிலிடும் ஹவிஸ்ஸுக்களைக் கொள்பவனென்றவாறு. ''உலகுசூழ்ந்த நெடும்புணரி' என்று பெரும்பாலும் வழங்கி வரும் பாடம் வியாக்கியானத்தில் பாடாந்தரமாகக்கொள்ளப்பட்டுள்ளது. "உவரி சூழ்ந்த நெடும்புணரி" என்றேயோதுக. புணரி— அலைக்கும் கடலுக்கும் பெயர்; இங்கு அலையைச் சொல்லக்கடவது. 'நெடும்புணரி உவரி சூழ்ந்த சேமமதிள் சூழிலங்கை' என்று அந்வயிப்பது. உவரி —கடல் சேமம் —க்ஷேமம். சிரம், கரம்—வடசொற்கள்.

கண்ணன் மன்மதனுடைய அம்சமாகிய ப்ரத்யும்நனுக்கு ஜநகனானதலால் காமற்பயந்தானாயினன். .... .... .... .... (ரு)

வருந்தாதிருநீ மடநெஞ்சே! நம்மேல் வினைகள் வாரா * முன்
திருந்தாவரக்கர் தென்னிலங்கை செந்தீயுண்ணச் சிவந்தொருநாள் *
பெருந்தோள்வாணற் கருள்புரிந்து பின்னைமணாளனாகி * முன்
கருந்தாட்களிறொன் றொசித்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (சு)

மட நெஞ்சே — ஸாதுவானநெஞ்சே!,
நீ வருந்ாது இரு — நீ வருத்தப்படாமலிரு;
நம் மேல் — நம்மிடத்து
வினைகள் — பாவங்களின் பலன் ஒன்றும்
வாரா — வந்து சேரமாட்டாது; (ஏனென்றால்)
முன் — முன்னே
திருந்தா அரக்கர் — திருந்தாமலிருந்த ராக்ஷஸர்களின் ஊராகிய
தென் இலங்கை — தென்னிலங்காபுரியை
செம் தீ உண்ண — சிவந்த நெருப்பு ஆக்ரமித்து உண்ணும்படியாக
சிவந்து — சீற்றங்கொண்டவனும்
ஒருநாள் — மற்றொருகாலத்தில்
பெரு தோள் வாணற்கு — பெரியதோள்களையுடைய பாணாஸுரன்விஷயத்தில்
அருள் புரிந்து — (உயிரைக் கவராது விட்டிடுகையாகிற) கிருபையைச் செய்தருளினவனும்
பின்னை மணாளன் ஆகி — நப்பின்னைப் பிராட்டிக்கு நாதனானவனும்
முன் — முன்பொருகால்
கரு தாள் — வலிமையுள்ள கால்களையுடைய
களிறு ஒன்று — (குவலயாபீடமென்கிற) ஒரு யானையை
ஒசித்தான் — தொலைத்தவனுமான பெருமானுடைய
ஊர், கண்ணபுரம், நாம், தொழுதும்—.

* * *—நெஞ்சமே! நாம் உய்யும்வகை காணப்பெற்ற பின்பும் நீ வருந்துவது தகுதியோ? அவசியம்பலன்களை அநுபவித்தே தீரவேண்டும் படியான பாவங்களை நாம் அளவறச் செய்துள்ளோமாயினும் அப்பாவங்கள் இனி நம்மைவந்தணுக ப்ர

ஸக்தியுண்டோ? இவ்வாறு சொல்லுகைக்கு இப்போது வந்த அதிசயம் என்ன? என்கிறாயோ? கண்ணபுரம் தொழப் பெற்றோமன்றோ இன்று நாம்; ஆதலால், வருந்தாதிரு நீ மடநெஞ்சே!, நம்மேல் வினைகள் வாரா.

அங்கு உறையும் பெருமான் எப்படிப்பட்டவன் தெரியுமா? கேளாய்; திருந்தாவரக்கர் தென்னிலங்கை செந்தீயுண்ணச் சிவந்தவன்; கொடிய அபராதியான வாணனைச் சிரமறுத் தொழிக்க வேண்டியிருந்தும் அது செய்யாதே, 'தேவதாந்தரபஜநம் பண்ணினார்க்குக் கைகண்ட பலன் இதுவே' என்று ப்ரஸித்தமாம்படியாகப் பரமசிவனுடைய பிரார்த்தனைக்கிணங்கி நான்கு தோள்களையும் உயிரையும் நிறுத்திவைத்து அருள் செய்தவன்; கலவிக்கு விரோதிகளாய்நின்ற எருதுகளை வலியடக்கி நப்பின்னைப் பிராட்டியைத் தழுவிக்கொண்டவன்; குவலயாபீடமென்னுங் கஞ்சனது யானையை எளிதில் உயிர்தொலைந்திட்டவன். .... (௬)

இலையார் மலர்ப்பூம் பொய்கைவாய் முதலைதன்னா லடர்ப்புண்டு *
கொலையார் வேழம் நடுக்குற்றுக் குலைய அதனுக் கருள்புரிந்தான் *
அலைநீரிலங்கைத் தசக்கிரீவற்கு இளையோற்கரசை யருளி * முன்
கலைமாச்சிலையா லெய்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (எ)

| | |
|---|---|
| கொலை ஆர் வேழம் | கொலைத் தொழிலை இயற்கையாகவுடைய யானை [கஜேந்திராழ்வான்] |
| இலை ஆர் | இலைகள் நிரம்பிய |
| மலர் | மலர்களை யுடைத்தான |
| பூ | அழகிய |
| பொய்கை வாய் | தடாகத்திலே |
| முதலை தன்னால் | முதலையினால் |
| அடர்ப்புண்டு | துன்பமடைந்து |
| நடுக்குற்று | நடுங்கி |
| குலைய | கையோய்ந்து நிற்க, |
| அதனுக்கு | அவ்யானைக்கு |

| | |
|---|---|
| அருள் புரிந்தான் | கிருபைபண்ணி யருளினவனும், |
| அலை நீர் இலங்கை | கடல்சூழ்ந்த இலங்கைக்குத் தலைவனான |
| தசக்கிரீவற்கு | இராவணனுடைய |
| இளையோற்கு | தம்பியான விபீஷணனுக்கு |
| அரசை அருளி | லங்காராஜ்யத்தைக் கொடுத் தருளினவனும் |
| முன் | அதற்குமுன்பே |
| கலைமா | (மாரீசனாகிற) மானை |
| சிலையால் | ஒருவில்லாலே |
| எய்தான் | அம்பெய்து கொன்றவனுமான பெருமானுடைய |

ஊர், கண்ணபுரம் நாம் தொழுதும்—.

* * *—நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக் கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்துவருவதை விரதமாகக் கொண்ட கஜேந்திராழ்வான் ஒருநாள் பூப்பறிக்கப்போன பெரியதொரு தாமரைப் பொய்கையில் முதலையின் வாயிலகப்பட்டுத் துடித்தபோது அதனுக்கு அருள்செய்தவன் பஞ்சேந்திரியங்களாகிற பல முதலைகளின் வாயிலே அகப்பட்டுத்துடிக்கின்ற நம்மையும் காத்தருள விரும்பித் திருக்கண்ணபுரத்தில் வந்து நிற்கிறான்;

இராவணனோடு கூடப் பிறந்தவன் என்று கைவிடாதே பக்தியையே கணி சித்து விபீஷணாழ்வானைக் கைக் கொண்டு ‘என்னிலங்கு நாமத்தளவு மரசு’ என்று சொல்லி அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்த பெருமான் நம்மையும் கைக் கொண்டு நமக்கும் கைங்கர்ய ஸாம்ராஜ்யமளிக்கத் திருக்கண்ணபுரத்திலே வந்து நிற்கிறான்;

மாரீசனென்னும் மாய மானை அம்பெய்து முடித்தாற்போலே நம்முடைய மாயங்களையும் முடிக்கவந்து நிற்கிறான்; அத்திருக்கண்ணபுரத்தை நாம் தொழு வோம்.

தசக்கிரீவன்—வடசொல்விகாரம். .... .... (௭)

மாலாய் மனமே! அருந்துயரில் வருந்தாதிருநீ * வலிமிக்க
காலார் மருதும் காய்சினத்தகழுதும் கதமாக்கழுதையும் *
மாலார் விடையும் மதகரியும் மல்லருயிரும் மடிவித்து *
காலாற் சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (௮)

| | |
|---|---|
| மனமே | நெஞ்சே! |
| நீ | நீ |
| மால் ஆய் | மயக்கங்கொண்டு |
| அரு துயரில் | அநுபவித்து முடிக்கப் போகாத துக்கங்களில் (ஈடுபட்டு) |
| வருந்ாது இரு | வருத்தப்படாமலிரு; |
| | (ஏனென்றால்,) |
| வலி மிக்க | மிகுந்த வலிமையை யுடையதாய் |
| கால் ஆர் | வேரூன்றியிருந்தான |
| மருதும் | இரட்டை மருதமரத்தையும் |
| காய் சினத்த | மிகுந்த கோபங்கொண்டு வந்த |
| கழுதும் | பேய்ச்சியாகிய பூதனையை யும் |

| | |
|---|---|
| கதம் | கோபத்தையுடைய |
| மா | (கேசியென்னும்) குதிரையையும் |
| கழுதையும் | கழுதைவடிவங்கொண்டுவந்த தேநுகாஸுரனையும் |
| மால் ஆர் விடையும் | பெரியவடிவம் பூண்டுவந்த விருஷபங்களையும் |
| மத கரியும் | (குவலயாபீடமென்னும்) மதயானையையும் |
| மல்லர் உயிரும் | மல்லர்களின் உயிரையும் |
| மடிவித்து | முடித்தவனும் |
| காலால் | திருவடியினால் |
| சகடம் | சகடாஸுரனை |
| பாய்ந்தான் | பாய்ந்து முடித்தவனுமான பெருமானுடைய |

ஊர், கண்ணபுரம் நாம் தொழுதும்—.

* * *—நெஞ்சே! நாம் திருக்கண்ணபுரத்தைத் தொழும்படியான பாக்கியம் பெற்றோமாதலால் இனி நீ ஸம்ஸாரத்தில் வீணாக மயங்கி வருந்துதலை விட்டிடு; அத் திருக் கண்ணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் பிரான் எப்படிப்பட்டவன்?; விரோதி நிரஸநமே தொழிலாயிருப்பவன். அஸுராவேசங் கொண்ட இரட்டை மருதமரங்களை முறித்தொழித்தவன், நஞ்சுதீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லவந்த பேய்ச்சியை முலையுண்கிறபாவனையிலே உயிரையுண்டு

முடித்தவன்; கழுதை வடிவு கொண்டு நலியவந்த தேநுகாஸுரனை மாய்த்தவன், நப்பின்னைப்பிராட்டியின் கலவிக்கு இடையூறாயிருந்த எழ்விடைகளைச்செற்றவன், கம்ஸனரண்மனைவாசலில் மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீட மென்னும் மதயானையைப் பாகனோடுங்கூட உயிர் தொலைத்திட்டவன்; கம்ஸனது ஸபையிற் செல்லுகையில் எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்டிருந்த சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்களைப் பொடிபடுத்தினவன்; மிக்க இளம்பிராயத்திலேயே மேல் விழுந்து கொல்லவந்த சகடாஸுரனைப் பாலுக்கழுகிற பாவனையிலே நிமிர்த்தப்பட்ட திருவடியினால் உதைத்தொழித்தவன்; இப்படிப்பட்ட பெருமானன்றோ இன்னமும் நம்முடைய விரோதிகளைக் கிழங்கெடுப்பதற்கு வந்து நிற்கிறான்.

கழுது—பிசாசு; பேய்ச்சியாகிய பூதனையைச் சொன்னபடி. கழுதையின் வரலாறு:—கம்ஸனுடைய ஏவுதலால் கழுதையான வடிவைக் கொண்டு காட்டுக்குள்ளே கண்ணனை நலிவதாக வந்தவன்தேநுகனென்னுமசுரன். கண்ணபிரான் பலராமனோடும் ஆயர்சிறுவர்களோடும் மாடுமேய்த்துக் கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப் பழுத்து வாசனை வீசிக்கொண்டிருந்த ஒருபனங் காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில், அவ்வனத்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங் கொண்ட தேனுகாசுரன் கோபமுண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர் செய்ய, உடனே கண்ணன் அதிலாகவமாய்ப் பின்னங்காலிரண்டையும் பற்றி அவ்வசுரக் கழுதையைச்சுழற்றி உயிரிழக்கும்படி பனைமரத்தின் மேலெறிந்து அழித்தனன். மதகரி—வடசொல் தொடர். .... .... (௮)

குன்றால் மாரிபழுதாக்கிக் கோடியேரிடையாள் பொருட்டாக *
வன்றாள் விடையேழன் றடர்த்த வானோர் பெருமான் மாமாயன் *
சென்றான் தூது பஞ்சவர்க்காய்த் திரிகாற் சகடம் சினமழித்து *
கன்றால் விளங்கா யெறிந்தானூர் கண்ணபுரம் நாம்தொழுதுமே. (௯)

| | | | |
|---|---|---|---|
| குன்றால் | கோவர்த்தன மலையினால் | வானோர் பெருமான் | நித்யஸூரிகளுக்குத் தலைவனும் |
| மாரி | பெருமழையை | மா மாயன் | ஆச்சரிய சேஷ்டிதங்களை யுடையவனும் |
| பழுது ஆக்கி | பயனற்றதாம்படி செய்தவனும், | பஞ்சவர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| அன்று | முன்பொருகால், | தூது சென்றான் | (துரியோதனன் பக்கல்) தூது சென்றவனும் |
| கொடி ஏர் இடையாள் பொருட்டாக | கொடிபோன்று அழகிய இடையை யுடையளான நப்பின்னைப் பிராட்டிக்காக | திரி கால் சகடம் | ஊர்ந்து செல்லுங்காலை யுடைய சகடத்தின் |
| வல் தாள் எழ் விடை | வலிய கால்களை யுடைய எழு ரிஷபங்களை | சினம் | பகையை |
| அடர்த்த | வலியடக்கினவனும் | அழித்து | அழித்தவனும் |

| | | |
|---|---|---|
| கன்றால் | வத்ஸாஸுரனைக் கொண்டு | ஊர், கண்ணபுரம் நாம் தொழுதும்—. |
| விளங்காய் எறிந்தான் | கபித்தாஸுரன்மேல் வீசியெறிந்து இருவரையும் முடித்தவனுமான பெருமானுடைய | |

* * *—பசிக் கோபத்தினால் இந்திரன் ஏழுநாள் பெய்வித்த விடாமழையைக் கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்துப்பிடித்து நடத்து ஆயர்களையும் ஆநிரைகளையும் சிறிதும் தளக்கமின்றிக் காத்தருளி அப்பெருமழையைப் பயனற்றதாகச் செய்தவனும், காலுருமுடைய ரிஷபங்களேழையும் நப்பின்னைப் பிராட்டிக்காக அழியச்செய்தவனும், அயர்வறுமமரர்களதிபதியாயிருப்பவனும், ஆச்சரியமான செய்கைகளையுடையனாயிருப்பவனும், தன்னுடைய மேன்மையைச் சிறிதும் பாராதே கால்நடையே கழுத்திலே ஓலைகட்டிப் பாண்டவர்கட்காகத் துரியோதனன் பக்கலிலே தூது போனவனும், மெல்ல ஊர்ந்து வந்து மேல்விழுந்த சகடாஸுரனுடைய சினத்தை அவன்றன்னோடே போக்கினவனும், முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவதுபோல வத்ஸாஸுரனையும் கபித்தாஸுரனையும் ஒருசேர முடித்தவனுமான பெருமான் உறையுமிடமான திருக்கண்ணபுரத்தைத் தொழுவோம். .... .... (கூ)

கருமாமுகில்தோய் நெடுமாடக் கண்ணபுரத் தெம்மடிகளை *
திருமாமகளா லருள்மாரி செழுநீராலி வளநாடன் *
மருவார் புயற்கைக் கலிகன்றி மங்கைவேந்த னொலிவல்லார் *
இருமாநிலத்துக் கரசாகி யிமையோரிறைஞ்ச வாழ்வாரே. (க௦)

| | |
|---|---|
| கரு மா முகில் | கறுத்துப் பெருத்தமேகங்கள் |
| தோய் | வந்து படியப் பெற்ற |
| நெடு மாடம் | பெரிய மாளிகைகளை யுடைத்தான |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தி லெழுந்தருளியிருக்கிற |
| எம் அடிகளை | எம்பெருமான் விஷயமாக, |
| திரு மா மகளால் | பெரியபிராட்டியாரடியாக |
| அருள்மாரி | 'அருள்மாரி' என்று திருநாமம் பெற்றவரும் |
| செழு நீர் ஆலி வளம் நாடன் | ஜலஸம்ருத்தியையுடைய திருவாலி வளநாட்டுக்குத் தலைவரும் |
| மருவு ஆர் புயல் கை | எப்போதும் நிலைத்திருக்குந் தன்மைவாய்ந்த காளமேகத்தோடொத்த ஔதார்யத்தையுடையவரும் |
| மங்கை வேந்தன் | திருமங்கைக்குப் பிரபுவுமான |
| கலிகன்றி | ஆழ்வார் அருளிச்செய்த |
| ஒலி | இப்பாசுரங்களை |
| வல்லார் | கற்றுவல்லவர்கள் |
| இரு மா நிலத்துக்கு அரசு ஆகி | (பூமியும் ஸ்வர்க்கமுமாகிற) இரண்டு உலகங்களுக்கும் அரசராயிருக்கப்பெற்று, (மேல் பரமபதத்திலுஞ்சென்று) |
| இமையோர் | நித்யமுக்தர்கள் |
| இறைஞ்ச | ஸத்கரிக்கும்படி |
| வாழ்வார் | வாழப்பெறுவர்கள். |

* * *—நீர்கொண்டெழுந்த காளமேகங்கள் வந்து படியும்படி ஓங்கின மாடங்களையுடைய திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருக்கு மெம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் பாடின இப்பாசுரங்களைக்கற்று வல்லவர்கள் இவ்விபூதியாட்சிகளிலொன்றுங் குன்றுமே யநுபவித்து, விருப்ப முண்டாகில் ஸ்வர்க்கலோகாநுபவங்களையு மநுபவித்துப் பின்னைப் பரமபதத்தேறப் புகுந்து 1. "விதிவகை புகுந்தனரென்று நல் வேதியர், பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்னுமாபோலே நித்யஸூரிகள் திருவடிகளிலே வந்து விழும்படியான பேற்றைப் பெறுவர்கள் என்று இத் திருமொழிகற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

[திருமாமகளா லருள்மாரி.] "பெரிய பிராட்டியாருடைய முழுநோக்குக்கு இலக்கானபடியாலே 'அருள் மாரி' என்றதுதன்னையே திருநாமமாகவுடையரானாராயிற்று". [மருவார் புயற்கைக் கலிகன்றி] "என்று மொக்கவுண்டாய்க் குறைவற வர்ஷிப்பதானவொரு புயலுண்டாகிலாயிற்று இவர்கைக்கு ஒப்புச் சொல்லலாவது; என்று மொக்கக் குறைவறக் கொடுக்கிற விவர்க்கு காதாசித்கமாகத் தோற்றி ப்ராதேசிகமாக வர்ஷிக்கிறமேகம் ஒப்பாகமாட்டாதே" என்ற வியாக்கியான வாக்கியங்கள் காண்க.

இருமா நிலத்துக்கு அரசாகி=இரண்டு மாநிலத்துக்கும் [—பூமிக்கும் ஸ்வர்க்கத்துக்கும்] அரசாகி— என்று பொருள் கொள்வதன்றியே, இருமை—பெருமையாய், பெரிதான இம்மா நிலத்துக்கு அரசாகி என்று கொள்ளவுமாம்.. .... (கo)

அடிவரவு:—தொண்டீர் பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாது இலை மால் குன்றால் கரு வியம்.

ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

1. திருவாய்மொழி 10—9—10.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—ஏழாந்திருமொழி,

# வியமுடை விடையினம்.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியில் தமது திருவுள்ளத்தை நோக்கி 'வருந்தாதிரு'' என்று ஒருமுறைக்கு இருமுறை சொன்னார்; என்ன வாசிகண்டு 'வருந்தாதிருப்ப தென்ன; பரமபதம் நமக்கு உத்தேச்யமாகிறதும் ப்ராப்யனான எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகையாலே யன்றோ; அப்பெருமான்றானே தனக்கு ப்ராப்யமென்று விரும்பி நித்யவாஸம் பண்ணுகிற தேசம் திருக்கண்ண புரமானபின்பு நமக்கும் இவ்விடமே ப்ராப்யமன்றோ? இதை ப்ராபித்த பின்பும் வருந்த வேண்டுவதுண்டோ? என்று அத்திருப்பதி தன்னையே அநுபவிக்கிறார்.

இத்திருமொழி பெரும்பாலும் குற்றெழுத்துக்களே நிரம்பப் பெற்றுச் சித்திரகவியின்பாற் படும். 'உடை' 'விடை' 'வரை' என்னுமிடங்களில் நெட்டெழுத்தாகிய ஐகாரம் வரக்கண்டாலும் அது ஒலிவடிவில் குற்றெழுத்தே போலும். பாட்டுத் தோறும் ஈற்றடியின் முடிவில் ஏகாரம் வருதலும், நான்காம்பாட்டில் நான்கடிகளிலும் முதலெழுத்து நெட்டெழுத்தா யிருத்தலும் குறையாகா தென்க. .... .... .... .... *

வியமுடை விடையின முடைதர மடமகள் *
குயமிடை தடவரை யகலம துடையவர் *
நயமுடை நடையன மிளையவர் நடைபயில் *
கயமிடை கணபுர மடிகள் தமிடமே. (க)

| | |
|---|---|
| நயம் உடை நடை | அழகிய நடையையுடைய |
| அனம் | அன்னப்பறவைகள் |
| இளையவர் | இளம்பெண்களினுடைய |
| நடை | நடையை |
| பயில் | அப்யஸிக்கப் பெற்றதும் |
| கயம் | தடாகங்கள் |
| மிடை | நெருங்கியிருக்கப் பெற்றதுமான |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— |
| வியம் உடை விடை இனம் | வலிமை பொருந்திய விருஷபங்களின் கூட்டமானது |
| உடைதர | அழிந்தவளவிலே |
| மட மகள் | மடமைக் குணமுடைய நப்பின்னைப் பிராட்டியினது |
| குயம் | திருமுலைகள் |
| மிடை | நெருங்கியணையப்பெற்ற |
| தட வரை அகலமது உடையவர் | பெரிய மலை போன்ற திருமார்பையுடையவரான |
| அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| இடம் | திவ்யதேசமாம். |

* * *-முன்னடிகளில் திருக்கண்ணபுரத் தெம்பெருமானுடைய பெருமையும் பின்னடிகளில் திருக்கண்ணபுரத்தின் சிறப்பும் சொல்லப்படுகின்றன. அன்னப்

பறவைகள் இளமகளிரது அழகிய நடையை அநுகரித்துநடைபயிலப் பெற்றதும் பலவகைத் தடாகங்கள் நெருங்கியிருக்கப் பெற்றதுமான திருக்கண்ணபுரம்-ஏழ் விடைகளைச் செற்று நப்பின்னைப்பிராட்டியின் திருமுலைத்தடங்களைத் திருமார்பாரத் தழுவிய பெருமான் உறையுமிடம் என்பதாம்.

வியமுடை விடையினம்='வியம்' என்னுஞ் சொல்லுக்குப் பல பொருள்களுண்டு; வலிமையென்னும் பொருள் இங்குக் கொள்ளப்பட்டது. வேறுபாடு என்னும் பொருளுங் கொள்ளலாம்; கறுக்கொண்ட கஞ்சனால் ஏவப்பட்டு வந்தவையாகையாலே எங்குங் கண்டறியாத வேறுபட்ட வடிவையுடைய விடையினம் என்றவாறு. இனி, 'வியம்' என்று ஏவலுக்கும் பெயராதலால் (கம்ஸனுடைய) ப்ரேரணையையுடைய விடையினம் என்னவுமாம்.

உடைதர—உடைய; தா-துணைவினை. உடைதல்—அழிதல்.

'குமுதம்' என்னும் வடசொல் குய மெனத்திரிந்தது. மிடைதல்-நெருங்குதல். "குயமுடை தடவரை" என்றும் வியாக்கியானத்திற் பாடம் கொள்ளப்பட்டது. அப்பாடத்தில் "குயமுடைத் தடவரை" எனத் தகரவொற்று மிக்கிருக்கவேண்டுவது இல்லாமை—ஓசையின்பம் பற்றி வேண்டுழிக் கொண்ட விகாரமெனக் கொள்க. மூன்றாமடியில், 'அன்னம்' அனமெனத் தொக்கியிருக்கிறது. (க)

இணைமலி மருதினொ டெருதிற இகல்செய்து *
துணைமலி முலையவள் மணமிகு கலவியுள் *
மணமலி விழவினொ டடியவ ரளவிய *
கணமலி கணபுர மடிகள்த மிடமே. (உ)

| | |
|---|---|
| மணம் மலி | மகிழ்ச்சி மிகுந்த |
| விழவினொடு | திருவிழாக்களில் |
| அடியவர் | ஸ்ரீவைஷ்ணவர்கள் |
| அளவிய | நெருங்கப் பெற்ற |
| கணம் | திரள் |
| மலி | நிறைந்துள்ள |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— |
| இணை மலி | சேர்த்தி பொருந்திய |
| மருது | (இரட்டை) மருதமரங்களை |
| இற | இற்று முறிந்துவிழும்படி (செய்தவனும்) |
| எருதினொடு | (எழு) எருதுகளோடே |
| இகல் செய்து | போர்புரிந்து |
| துணை மலி முலையவள் | சேர்த்தியழகுவாய்ந்த முலைகளையுடையளான நப்பின்னைப் பிராட்டியின் |
| மணம் | விவாஹத்தாலுண்டாகக் கூடிய |
| மிகு கலவி | மிகுந்த ஸம்ச்லேஷத்தை |
| உள் | உட்கொண்ட |
| அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| இடம் | திவ்யதேசமாம். |

* * *—நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களென்று சொல்லப்படுகிற மஹோத்ஸவங்கள்தோறும் ஸ்ரீவைஷ்ணவர்கள் குழாங்கூடி அநுபவிக்கப்பெற்ற திருக்கண்ணபுரம்—இரட்டை மருதமரங்களைத் தவழ்

நடைப் போக்கிலே முறித்தொழித்தவனும், எழ்விடை செற்று நப்பின்னைப் பிராட்டியின்கலவியை அநுபவித்தவனுமான பெருமான் உறையுமிடம் என்பதாம்.

இகல்—பகையும், யுத்தமும். கலவியுள்—கலவிக்காக, எருதினோடு இகல் செய்து, அந்தவிடாய் தீர உறையுமிடம் திருக்கண்ணபுரம் என்னவுமாம்,

ஈற்றடியில் 'கணம்' என்னும் வட சொல் கணமெனத் திரிந்தது; கணம்—கூட்டம், ஸ்ரீவைஷ்ணவகோஷ்டி. .... .... .... (உ)

புயலுறு வரைமழை பொழிதர மணிநிரை *
மயலுற வரைகுடை யெடுவிய நெடியவர் *
முயல்துளர் மிளைமுயல் துள வள விளைவயல் *
கயல்துளு கணபுர மடிகள்த மிடமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| முயல் துளர் | முயற்சிசெய்கிற களைக் கொட்டுகளையுடைய | வரை மழை | கல்மழை |
| மிளை | சிறுதூறுகளில் நின்றும் | பொழிதர | பொழியுமளவில் |
| முயல் | முயல்களானவை | மணி நிரை | அழகிய பசுக்கள் |
| துள | துள்ளவும், | மயல் உற | கலங்கிநிற்க |
| வளம் | செழிப்பாக | | (அப்போது) |
| விளை | விளைகின்ற | வரை | (கோவர்த்தன) மலையை |
| வயல் | கழனிகளிலே | குடை | குடையாக |
| கயல் | கயல்மீன்கள் | எடுவிய | எடுத்த |
| துளு | துள்ளவும் பெற்ற | நெடியவர் | மஹாபுருஷனான |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— | அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| புயல் உறு | பெருங்காற்றோடு கூடின | இடம் | திவ்ய தேசமாம். |

* * *—களைபறிக்கிறவர்கள் களைக்கொட்டுகளைக் கொண்டு வியாபரிக்குமளவிலே சிறுதூறுகளில் நின்றும் புறப்பட்ட முயல்கள் அவர்களது முகத்திலே துள்ளவும், செழிப்பு மிக்க வயல்களிலே உழுகிறவர்கள் முகத்திலே கயல்மீன்கள் துள்ளவும் பெற்ற திருக்கண்ணபுரம்—பண்டு இந்திரன் பசிக் கோபத்தாலே எழுநாள் கல்மழை பெய்வித்த காலத்துக் கோநிரைகள் கலங்கிநிற்க அக்கலக்கந் தீருமாறு கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்துப்பிடித்த பெருமானுறையுமிடம் என்பதாம்.

மணி நிரை என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல் காண்மின்;—"மணி யென்று அழகாய், அதாகிறது—அவனும் ரக்ஷிக்கத் தானும் ஒரு தலைபற்றுகையன்றிக்கே அவனே ரக்ஷகனும்படியிருக்கை" என்று. "ஸமவத்வ்ருத்திவிரோதிஸ்வவ்ருத்திநிவ்ருத்திஃ ஸ்வவ்ருத்திஃ" என்கிறபடியே, எம்பெருமான் கைவைத்து ரக்ஷிப்பதற்குத் தடையான தன்முயற்சி அற்றிருப்பதாகிற அழகு பொருந்திய பசுக்கள் என்றவாறு. நம்மை நாமே ரக்ஷித்துக் கொள்ள முயற்சி

செய்வோமாகில் எம்பெருமான் உதாஸீநனாயிருந்துகொண்டு 'ஆந்தனையும்முயற்சி செய்து பார்க்கட்டும்' என்று வாளா இருந்திடுவன்; சபைநடுவே பரிபவிக்கப் பட்ட த்ரௌபதி தன் மானத்தைக் காத்துக்கொள்ளத் துகிலை இறுக்கிக்கொள் ளுகையாகிற ஸ்வப்ரவ்ருத்தியில் ஊன்றியிருந்ததனையும் எம்பெருமான் ரக்ஷிக்க முன் வந்திலன்; அவள் தான் இருகையும் விட்டவாறே காரியஞ்செய்யப்புகுந் தான் கண்ணபிரான். முதலைவாய்க் கோட்பட்ட கஜேந்திராழ்வான் தன்வலிமை கொண்டு போராடினவளவும் எம்பெருமான் ரக்ஷிக்க முன்வந்திலன்; அது தன் கையோய்ந்த பின்பே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காத்தருளினன். இப் படிப்பட்ட பல த்ருஷ்டாந்தங்களினால் நாம் தெரிந்துகொள்வதென்ன? நம்மை நாமே ரக்ஷித்துக்கொள்ள நாம் செய்யும் முயற்சியானது நம்முடைய ரக்ஷணத்து க்கு உபயோகப்படாததோடு எம்பெருமான் புகுந்து ரக்ஷிப்பதற்கு இடையூறா கவுமாகின்றது; அப்படிப்பட்ட ஸ்வவ்யாபாரவிரோதியில்லா ஸ்வவ்யாபாரத்தியில் நின்றும் நிவ்ருத்தி பெறுவதே அழகு; இந்திரன் ஓயாமழை பெய்வித்த காலத்தில் ஆநி ரைகள் ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தி யொன்றுஞ் செய்யாதிருந்தமை இங்கு அழகாகக் கொள்ளப்பட்டதென்க.

மயல்—மயக்கம், கலக்கம்.

நெடியவர்—ஆபத்ரக்ஷண குணத்தில் தமக்கு மேற்பட்டாரில்லாதவர்.

துள—துள்ள. துளு—துள்ளு. "குறிஞ்சிநிலமும் மருதநிலமும் கலந் தாற்போலேகாணு மிருப்பது" என்று பின்னடிகட்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தது அறிக. .... .... .... .... (௩)

ஏதலர் நகைசெய இளையவ ரளைவெணெய் *
போதுசெய் தமரிய புனிதர் நல்விரைமலர் *
கோதிய மதுகரம் குலவிய மலர்மகள் *
காதல்செய் கணபுர மடிகள்த மிடமே. (௪)

| | | | |
|---|---|---|---|
| நல் விரை | நல்ல பரிமளத்தையுடைய | ஏதலர் | பகைவரான சிசுபாலாதிகள் |
| மலர் | பூக்களை | நகை செய | சிரிக்கும்படியாக |
| கோதிய | கொந்தி, அவை அஸார மென்று விட்டு வந்த | இளையவர் அளை வெணெய் போது செய்து | இளமகளிர் கடைந்து வைத்த வெண்ணெயைத் திருத்தியாக அமுதுசெய்து |
| மதுகரம் | வண்டுகள் | | |
| குலவிய | சூழ்ந்து பரவப்பெற்ற | | |
| மலர் | (தாமரை) மலரிலவதரித்த | அமரிய | ஸந்தோஷித்த |
| மகள் | பெரிய பிராட்டியார் | புனிதர் | பவித்திரரான |
| காதல் செய் | விரும்பப்பெற்ற | அடிகள் தம் இடம் | ஸ்வாமியின் திவ்ய தேசமாம். |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— | | |

* * *—"விரைமலர் கோதிய மதுகரம் குலவிய" என்ற விசேஷணம் மலர்க்கும் ஆகலாம், கணபுரத்துக்கும் ஆகலாம்; மலர்க்கு ஆகும் பக்ஷத்தில்,

வண்டுகள் வந்து மொய்க்கும்படியான செவ்வியாய்ந்த தாமரைமலரில் தோன்றிய பெரிய பிராட்டியார் விரும்பும்படி ஸ்ரீமத்தான திருக்கண்ணபுரம் என்றதாகும். கணபுரத்துக்கு விசேஷணமாகும் பக்ஷத்தில், எங்கும் வண்டுகள் மொய்க்கும்படியான மதுவெள்ளம் பொருந்திய திருக்கண்ணபுரம் என்றதாகும். விரை மலர் கோதிய மதுகரம் குலவியதும், மலர்மகள் காதல் செய்வதுமான கணபுரம் என்றவாறு. இப்படிப்பட்ட திருக்கண்ணபுரமானது பலருமேச வெண்ணெயுண்ட பெருமானுறையுமிடம் என்கை. ஏதலர்நகைசெய= 1. "பாலேயில் பாலைப்பருகிப்பற்றுதா ரெல்லாஞ் சிரிப்ப" என்றார் பெரியாழ்வார்; 2. "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியு மாகப்பெற்றான், பற்றியுரலிடை யாப்பு முண்டான் பாவிகாளுங்களுக்கேச்சுக் கொலோ?" என்றாள் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியும். ஸௌலப்ய ஸௌசீல்ய குணங்களில் ஈடுபடாதே, வயிறுவளர்க்க வெண்ணெய் திருடினனென்று வசைகூறுவார் சிசுபாலன் போன்ற ஆஸுரப்ரக்ருதிகளேயிறே.

அளை வெணெய்—வினைத்தொகை; இனி, 'அளை' என்று தயிர்க்கும் பெயராதலால் உம்மைத் தொகையாகக் கொண்டு, இளையவருடைய தயிரையும் வெண்ணெயையும் உண்ட புனிதர் என்றுரைக்கவுமாம்.

செய—செய்ய. வெணெய்—வெண்ணெய். தொகுத்தல்கள். போது செய்தல்—த்ருப்தியாக வுண்ணுதல். புனிதர்—பரிசுத்தர்; நவநீதக்களவு முதலிய சேஷ்டிதங்களை அநுஸந்தித்த மாத்திரத்தில் நாமெல்லாரும் பாவங்கள் தொலையப்பெற்றுப் புண்ணியம் பெறுவோமாதலின் இவ்வகையாலே நம்மைப் பரிசுத்தராக்கவல்ல பெருமான் என்றுங் கொள்க. .... (ச)

தொண்டரு மமரரும் முனிவருந் தொழுதெழ *
அண்டமோ டகலிட மளந்தவ ரமர்செய்து *
விண்டவர் படமதி ளிலங்கைமுன் னெரியெழ *
கண்டவர் கணபுர மடிகள்த மிடமே. (ரு)

| | |
|---|---|
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— |
| தொண்டரும் | ஸ்ரீவைஷ்ணவர்களும் |
| அமரரும் | பிரமன்முதலிய தேவர்களும் |
| முனிவரும் | யோகிகளும் |
| தொழுது எழ | வணங்கி உஜ்ஜீவிக்கும்படியாக |
| அண்டமொடு | மேலுலகங்களையும் |
| அகல் இடம் | பரம்பிய நிலவுலகங்களையும் |
| அளந்தவர் | அளந்துகொண்டவரும் |
| விண்டவர் பட | சத்ருக்கள் அழிந்து போம்படி |
| அமர் செய்து | யுத்தம் பண்ணி |
| மதிள் இலங்கை | மதிளையுடைய இலங்காபுரி |
| முன் | முன்பொருகால் |
| எரி எழ | தீக்கொளுவி யெரியும்படியாக |
| கண்டவர் | ஸங்கல்பித்தவருமான |
| அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| இடம் | திவ்யதேசமாம். |

1. பெரியாழ்வார் திருமொழி 2-7-1. 2. நாச்சியார் திருமொழி 12-8.

* * *—(இப்பாசுரத்தில் திருக்கண்ணபுரத்துக்கு விசேஷண மொன்று மில்லை; எம்பெருமானுக்கே விசேஷணங்களுள்ளன.) ஸ்ரீவைஷ்ணவர்களும் பிரமன் முதலிய தேவர்களும் ஸநகஸநந்தநாதி மஹர்ஷிகளும் தொழுது உஜ்ஜீவிக்கும்படியாக மேலுலகங்களையும் கீழுலகங்களையும் அளந்து கொண்டவரும், ஆஸுரப்ராக்ருதிகள் அடியறும்படி இலங்கையைப் பாழ்படுத்தியவருமான பெருமாள் உறையுமிடம் திருக்கண்ணபுரம் என்பதாம். .... .... (௫)

மழுவியல் படையுடை யவனிடம் மழைமுகில் *
தழுவிய வுருவினர் திருமகள் மருவிய *
கொழுவிய செழுமலர் முழுசிய பறவைபண் *
எழுவிய கணபுர மடிகள்த மிடமே. (௬)

| | |
|---|---|
| திருமகள் மருவிய | பெரிய பிராட்டியார் பொருந்தியிருக்கப்பெற்ற |
| கொழுவிய செழு | மிகவும் செழுமைதங்கிய |
| மலர் | தாமரைப்பூவிலே |
| முழுசிய | அவகாஹித்த |
| பறவை | (வண்டுகளாகிய) பறவைகளினுடைய |
| பண் | இசைப்பாட்டுகள் |
| எழுவிய | எங்கும் வியாபிக்கப்பெற்ற தான |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— |
| மழு | மழுவை |
| இயல் படை உடையவன் இடம் | விதேயமான ஆயுதமாகவுடைய பெருமானது இருப்பிடம்; |
| | (இன்னமும்) |
| மழை முகில் தழுவிய உருவினர் | நீர்கொண்டெழுந்த மேகம் போன்ற திருவுருவத்தை யுடையரான |
| அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| இடம் | திவ்ய தேசமாம். |

* * *—இப்பாட்டில் 'இடம்' என்பது இருமுறையுள்ளது, முதலடியிலும் ஈற்றடியிலும். ஆழ்வாருடைய திருவுள்ளமே இதற்கு நியாமகம்.

சிறந்த தாமரை மலரில் மதுவைப் பருக இழிந்த வண்டுகள் களிப்பினால் பாடுகின்ற பண்கள் எங்கும் மலிந்திருக்கப்பெற்ற திருக்கண்ணபுரம்—மழுப் படையை ஆயுதமாகக் கொண்டவரும் கார்முகில் வண்ணருமான பெருமானுடைய திவ்ய தேசம் என்பதாம்.

பரசுராமாவதாரத்தைக் கணிசித்து 'மழுவியல் படையுடையவன்' என்றது. பரசுராமாவதாரம் அஹங்கார யுக்தஜீவனை அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு உபாஸிக்கத்தகுந்த தன்றாயினும் விரோதிநிரஸநம்பண்ணின உபகாரத்துக்குத் தோற்றுத் துதிக்கிறமாத்திரத்திற்குக் குறையொன்றுமில்லை யென்பது அறியத்தக்கது.

'திருமகள் மருவிய' என்ற விசேஷணம் மலர்க்கும் ஆகலாம், கணபுரத்துக்கும் ஆகலாம். கணபுரத்துக்காகில் செல்வம் மல்கியவூர் என்றவாறும். மலர்க்கு ஆகில், எம்பெருமானர் கத்யத்தில் "பத்மவநாலயாம்" என்று அருளிச்செய்த

படியே தாமரை மலர்தோறும் பெரிய பிராட்டியார் உறைகின்றமை உணரத் தக்கது. .... .... .... .... (சு)

பரிதியோ டணிமதி பனிவரை திசைநிலம் *
எரிதியோ டெனவின வியல்வினர் செலவினர் *
சுருதியோ டருமறை முறைசொலு மடியவர் *
கருதிய கணபுர மடிகள்த மிடமே. (எ)

| | |
|---|---|
| சுருதியொடு | ஸ்வரத்தோடு கூடின |
| அரு மறை | அருமையான வேதங்களை |
| முறை | முறைப்படியே |
| சொலும் | ஓதுகின்ற |
| அடியவர் | ஸ்ரீ வைஷ்ணவர்கள் |
| கருதிய | (நமக்கு இவ்விடமே ப்ராப்யம் என்று) அநுஸந்திக்கப்பெற்ற |
| கணபுரம் | திருக்கண்ணபுரமானது,— |
| பரிதியொடு | ஸூர்யனென்ன |
| அணி மதி | அழகிய சந்திரனென்ன |
| பனி வரை | இமயமலை முதலிய குலபர்வதங்களென்ன |
| திசை | திக்குக்களென்ன |
| நிலம் | பூமண்டலமென்ன |
| எரி | ஜ்வலிக்கின்ற |
| தியொடு | அக்நியென்ன |
| என | என்று சொல்லப்படுகிற |
| இன | இப்படிப்பட்டபொருள்களையெல்லாம் |
| இயல்வினர் | ப்ரகாரமாகவுடையவரும் |
| செலவினர் | இவற்றை நடத்திக்கொண்டு போருகிறவருமான |
| அடிகள் தம் இடம் | ஸ்வாமியின் திவ்ய தேசமாம். |

* * *—வைதிக ஸ்ரீவைஷ்ணவர்களால் புகலிடமாகக் கொள்ளப்பட்ட திருக்கண்ணபுரம்—கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையு மொரு தனி நாயகனுடைய திவ்யதேசம் என்பதாம். முன்னடிகளால் எம்பெருமானுடைய ஸர்வாத்மகத்வம் சொல்லுகிறது. ஸூர்யன் சந்திரன் முதலிய ஸகல பதார்த்தங்களிலும் அநுப்பிரவேசித்திருந்து ஜகத்துக்களை நிர்வஹித் தருள்பவன் என்றவாறு.

'வரியிः' என்னும் வடசொல் சந்திரனையும் ஸூர்யனையுஞ் சுற்றியிருக்கிற 'ஊர்கோள்' எனப்படும் பரிவேஷத்தைச் சொல்லுவதாயினும், அவ்வடசொல்லின் திரிபாகிய 'பரிதி' என்னுந் தமிழ்ச்சொல் ஸூர்யவாசகமாக வழங்கும். 'பனிவரை' என்று இமயமலையொன்றைச் சொன்னது மற்றுமுள்ள குலபர்வதங்களுக்கும் உபலக்ஷணமென்ப.

இரண்டாமடியில் 'தி' எனக் குறுகிநிற்பது செய்யுள் விகாரம்.

'சுருதி' என்பது வேதவாசகமாயினும் அடுத்து 'அருமறை' என வந்திருத்தலால் ஸ்வரமென்று பொருள் கொள்ளப்பட்டது. ... (எ)

படிபுல்கு மடியிணை பலர்தொழ மலர்வைகு *
கொடிபுல்கு தடவரை யகலம துடையவர் *
முடிபுல்கு நெடுவயல் படைசெல வடிமலர் *
கடிபுல்கு கணபுர மடிகள்த மிடமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| முடி புல்கு | நாற்று முடிகளோடு கூடியிருக்கிற | படி புல்கும் அடி இணை உடையவர் | பூமியை யளாவிய திருவடியிணையை யுடையவரும் |
| நெடு வயல் | விசாலமான கழனிகளிலே | மலர் வைகு | தாமரைமலரில் பொருந்திய |
| படை | கலப்பைகளை | கொடி | கொடிபோன்ற பெரிய பிராட்டியார் |
| செல | செலுத்தும்போது | புல்கு | அணையப்பெற்ற |
| அடி | கால்பட்ட | தட வரை அகலம் அது உடையவர் | பெரிய மலைபோன்ற திருமார்பை யுடையவருமான |
| மலர் | (தாமரை முதலிய) பூக்களானவை | அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| கடி புல்கு | பரிமளத்தைப் புறப்பட விடப்பெற்ற | இடம் | திவ்யதேசமாம். |
| கணபுரம் | திருக்கண்ணபுரம்;— | | |
| பலர் தொழ | பல பக்தர்கள் வணங்கும்படியாக; | | |

* * *—கழனிகளில் நடுகைக்காக எங்கும் பரம்பிக்கிடக்கிற நாற்று முடிகள் மூன்றுமடியிலுள்ள 'முடி' என்னுஞ் சொல்லுக்குப் பொருள். அவை நிரம்பிய பெரிய வயல்களிலே உழவர்கள்கலப்பையைக்கொண்டு புகுந்து நடத்துவர்கள்; காலாலே ஒருகால் குழப்புவர்கள்; அவ்வளவிலே இடையிலே தப்பிக்கிடந்த தாமரைப்பூவானது பரிமளத்தைப் புறப்படவிடுமாம். "படைநின்ற பைந்தாமரையோடு அணிநீலம் மடைநின்றலரும் வயலாலிமணாளா" (11-8-6) என்றபாசுரம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.—வயல்களிலெங்கும் தாமரை முதலிய மலர்கள் மணங்கமழப் பெற்ற திருக்கண்ணபுரம் * அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கை யுறைமார்பனுடைய திவ்ய தேசம் என்றதாயிற்று.

படிபுல்குமடியிணை பலர்தொழ=முன்பு உலகமளந்த திருவடிகளைத் திருக்கண்ணபுரத்திலே பலரும் வணங்கும்படியாக என்றுமாம். படி—பூமி. மலர்வைகு கொடி—பெரிய பிராட்டியார். 'கொடி' என்பது ஸ்த்ரீஜாதிக்கு உவமையாகு பெயர். ... ... ... .... .... (அ)

புலமனு மலர்மிசை மலர்மகள் புணரிய *
நிலமக ளெனவின மகளிர்களிவரோடும் *
வலமனு படையுடை மணிவணர் நிதிகுவை *
கலமனு கணபுர மடிகள்த மிடமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நிதி குவை | பொற்குவியல்களை யுடைய | | (ஸமுத்ரத்தை |
| கலம் | மரக்கலங்கள் | | சமீபத்திலுடைத்தான) |
| மனு | பொருந்தியிருக்கப்பெற்ற | கணபுரம் | திருக்கண்ணபுரம்;— |

| | |
|---|---|
| புலம் மனு | இந்த்ரியங்கள் அருந்திக்கிடக்கும் படியாக அழகுவாய்ந்த |
| மலர் மிசை | தாமரைப்பூவிலுண்டான |
| மலர்மகள் | பெரிய பிராட்டியோடு |
| புணரிய | கூடின |
| நிலம் மகள் | பூமிப்பிராட்டியார் |
| என இன | என்று இப்படிப்பட்ட |
| மகளிர்க ளிவரொடும் | திவ்ய மஹிஷிகளோடும் |
| வலம் மனு | வலத்திருக்கையில் பொருந்திய |
| படை உடை | திருவாழிப்படையை யுடையவரும் |
| மணி வணர் | நீலமணிபோன்ற நிறத்தை யுடையவருமான |
| அடிகள் தம் | ஸ்வாமியினுடைய |
| இடம் | திவ்யதேசமாம். |

* * *—திருக்கண்ணபுரம் ஸமுத்ரத்திற்கு ஸமீபத்திலுள்ளதாதலால் 'நிதி குவைக்கலமனு கணபுரம்' எனப்பட்டது. த்வீபாந்தரங்களி லிருந்து சிறந்த சாக்குக்களை ஏற்றிக்கொண்டு வருகின்ற கப்பல்கள் கடலில் பெரும்பான்மையாகக் காணப்படுதல் இயல்பு. கீழ், திருக்கடல்மல்லைத் திருப்பதிகத்தில் "புலங்கொள் நிதிக்குவையோடு புழைக்கைம்மா களிற்றினமும், நலங்கொள் நவமணிக்குவையும் சுமந்தெங்கும் நான்றொசிந்து, கலங்களியங்கும் மல்லை" என்றருளிச்செய்த பாசுரமும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

'நிதி' என்னும் பலபொருளொருசொல் இங்கு பொன் என்ற பொருளில் வந்தது. இங்கே பெரியவாச்சான்பிள்ளை வியாக்யான வாக்கியம்;—" பொற்குவை மாறாத மாக்கலங்களையுடைய திருக்கண்ணபுரம். கடலொருபுறமாயிருக்கும் போலேகாணும்" என்பதாம். "கலங்கல் முந்நீர்க்கண்ணபுரத்து" என்று மேல் திருமொழியிலுங் காண்க.

திருமடந்தை மண்மடந்தை யிருபாலுந் திகழநிற்கும் பெருமானுடைய உறைவிடம் திருக்கண்ணபுரம் என்றதாயிற்று.

புலமனுமலர்—கண் முதலிய இந்திரியங்களை ஆகர்ஷித்துத் தன்னிடத்திலேயே நிலைநிற்கச் செய்யவல்ல [மிக அழகிய] மலர் என்றவாறு. "புலமனு மலர்மிசை மகள்" என்னுமளவே போதுமாயிருக்க, மீண்டும் 'மலர்மகள்' என்றதில் புநருக்தி சங்கிக்க வேண்டா; 'மலர்மகள்' என்றது ஸம்ஜ்ஞையாகக் கொள்ளத்தக்கது.

வலமனுபடை=இங்குப் படையென்னும் பொதுச்சொல் ஆழிப்படையென்ற சிறப்புப் பொருளில் வந்தது. மணிவணர்—மணிவண்ணர்; தொகுத்தல்.

மலிபுகழ்க் கணபுர முடையவெம் மடிகளை *
வலிகெழு மதிளயல் வயலணி மங்கையர் *
கலியன தமிழிவை விழுமிய விசையினொடு *
ஒலிசொலு மடியவ ருறுதுய ரிலரே. (க0)

| | |
|---|---|
| மலி புகழ் | நிறைந்த புகழையுடைய |
| கணபுரம் | திருக்கண்ணபுரத்தை |
| உடைய | இருப்பிடமாகவுடைய |
| எம் அடிகளை | எம்பெருமான் விஷயமாக, |
| வலி கெழு | திண்மை பொருந்திய |
| மதிள் | மதிளையும் |
| அயல் | சுற்றுப்புறங்களில் |
| வயல் | கழனிகளையும் |
| அணி | அலங்காரமாகக்கொண்ட |

| | |
|---|---|
| மங்கையர் | திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரான |
| கலியன | திருமங்கையாழ்வாருடைய |
| இவை தமிழ் | இத்தமிழ்ப் பாசுரங்களை |
| விழுமிய இசையினொடு | சிறந்த இசையோடு கூட |
| ஒலி சொலும் | அப்யஸிக்கின்ற |
| அடியவர் | பக்தர்கள் |
| உறு துயர் இலர் | அவச்யமநுபவிக்கும்படியாக ஏற்பட்ட துக்கங்களினின்றும் விடுபட்டவராவர். |

* * *—திருக்கண்ணபுரத் தெம்பெருமான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த இத் திருமொழியை இதற்குரிய இசை குன்றாமல் ஓதுமவர்கள், அநுபவித்தே தீரவேண்டும்படியான பாபபலன்களையும் அநுபவிக்க மாட்டார்கள்—முக்தி பெறுவர்கள் என்பதாம்.

மலிபுகழ்க்கணபுரம்=“வாஸுதேவோஸி பூர்ண:” என்கிறபடியே பரவாஸுதேவனாயிருக்கும் பரத்வ நிலையிலும் ஸகலகுணங்களும் நிறைந்திருந்தாலும், உபாயமாகப் பற்றுமிடத்தில் வேண்டுமவையான ஸௌலப்யவாத்ஸல்யாதி குணங்கள் அங்கு ப்ரகாசிப்பதில்லை; அது பரம ஸாம்யாபந்நர்க்கு முகங் கொடுத்திருக்கிற விடமாகையாலே அங்கு அக்குணங்கள் பகல்விளக்குப்போலே ஒளி மழுங்கப்பெற்றிருக்கும்; அர்ச்சாவதாரமானவிடத்தில் நைச்யத்துக்கு எல்லை நிலமான ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துக் கொண்டிருக்கையாலே அக்குணங்கள் இங்கு இருட்டறையில் விளக்குப்போலே பேரொளி பெற்று விளங்கும் என்பவாதலால் பரமபதத்திற் காட்டில் புகழ்மலிந்திருக்குமிடமென்று விசேஷிக்கப்பட்டது.

‘வலிகெழு மதிள்’ என்பதும் ‘வயலணி’ என்பதும் மங்கைவிசேஷணங்கள்.

கலியன= அ—ஆறும் வேற்றுமையுருபு.

இத் திருமொழியின் இசை பரமபோக்யமாதலால் ‘விழுமிய விசையினொடு’ என்றது. .... .... .... (கூ)

அடிவரவு:—வியம் இணை புயல் ஏதலர் தொண்டர் மழு பரிதி படி புலம் மலிபுகழ் வானோர்.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து—எட்டாந்திருமொழி,

# வானோரளவும்முதுமுந்நீர்.

உரையவதாரிகை:—திருக்கண்ணபுரத் தெம்பெருமான் தன்னுடைய பல அவதார திவ்ய சேஷ்டிதங்களை அடைவே ஆழ்வார்க்கு ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமாக ஆக்குவிக்க, அவற்றையெல்லாம் அநுபவித்துப் பேசி இனியராகிறார் இத் திருமொழியில்.

மத்ஸ்ய கூர்ம வராஹ நரஸிம்ஹ வாமந பரசுராம தசரதராம பலராம ஸ்ரீக்ருஷ்ணாவதாரங்களைப் பாட்டடைவே அநுபவிக்கிறாராய்ச் செல்லுகிறது.

வானோரளவும் முதுமுந்நீர் வளர்ந்தகாலம் * வலியுருவின்
மீனாய்வந்து வியந்துய்யக்கொண்ட தண்டாமரைக்கண்ணன் *
ஆனாவுருவி லானாயனவனை அம்மா விளைவயலுள் *
கானார்புறவிற் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (க)

| | |
|---|---|
| முது முந்நீர் | கடல் வெள்ளம் |
| வானோர் அளவும் | தேவர்களின் எல்லையளவும் |
| வளர்ந்த காலம் | பரந்து சென்ற காலத்திலே |
| வலி உருவின் மீன் ஆய் வந்து | வலிமைகொண்ட வடிவையுடைய மீனாய்த் திருவவதரித்து |
| வியந்து | ஆச்சரியப்படும்படியாக |
| உய்யக் கொண்ட | எல்லாரையும் பிழைப்பித்தருளின |
| தண் தாமரை கண்ணன் | குளிர்ந்த தாமரை போன்ற திருக்கண்களையுடையவனும் |
| ஆனா உருவின் ஆன் ஆயன் அவனை | விகாரமற்ற உருவையுடைய ஸ்ரீகிருஷ்ணனாகத் திருவவதரித்தவனுமான பெருமானை, |
| அம் | அழகிய |
| மா | பரந்த |
| விளை | விளைவுமிக்க |
| வயலுள் | வயல்களையுடையதும் |
| கான் ஆர் புறவில் | காடுகள் செறிந்த பர்யந்தங்களையுடையதுமான |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |

அடியேன் கண்டு கொண்டேன்—.

* * *—மத்ஸ்யாவதாரம் செய்தருளின பெருமானைத் திருக்கண்ணபுரத்தில் காணப்பெற்றேனென்கிறார். ஒரு பிரமகல்பமுடிவில் பிரம சம்பந்தமான நைமித்திக ப்ரளயம் உண்டாயிற்று; அப்பொழுது பூமிமுதலிய உலகங்கள் கடலாற் சூழப்பட்டு மூழ்கும் ஸமயத்தில் நித்திரை தெளிந்தெழுந்து அந்த ஜலத்தில் படுக்க யத்தனித்த பிரமனது முகத்தினின்றும் வெளிக்கிளம்பின நான்கு வேதங்களையும் ஹயக்ரீவனென்னுமோர் தானவன் அபஹரித்துக் கொண்டுபோய் விட்டான்; அப்போது வேதங்கள் தொலைந்தது கண்டு திருமால்

ஓர் சிறிய மீன்வடிவு கொண்டார்; அக்காலத்தில் தவத்தின் பெருமையினுல் ஜீவித்து, கிருதமாலா நதியின் கரையில் திருமாலை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்த ஸத்யவ்ரதனென்னுமோர் ராஜர்ஷி ஜலபானம் பண்ணிக்கொண்டு பிழைத்திருந்தார்; அவர் ஜலதர்ப்பணஞ் செய்கையில் அவரது இரண்டு கைகளுக்குள் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது; அதனை அவர் ஜலத்தில் விட்டார்; அப்போது அந்த மீன் 'ஓ தயாளுவான ராஜரிஷியே! என்னை இப்படி ஜலத்தில் விட்டீரே, என் இனத்தார் என்னை விழுங்கிவிடுவார்களே; என்னை நீர் காப்பாற்றியருளவேணும்' என்ன அவர் அதனைத் தன் கமண்டலதீர்த்தத்தில் எடுத்து விட்டார்; அதனுட்புகுந்த அந்த மீன் ஓரிரவுக்குள் கமண்டலத்துக்குள் நிரம்பி மறுநாள் காலையில் 'ஓ தயாளுவே! நான் எப்படி உம்முடைய கலசத்துக்குள் கஷ்டப்பட்டு வஸிப்பது? என்மீது சிறிது அருள்புரியலாகாதா?' என்றது; உடனே அவர் அதைக் கமண்டலத்தினின்றும் எடுத்துத் தன்னிடத்துள்ள சந்தன ஜலத்தில் புகவிட்டார்; உடனே மூன்றடி பிரமாணம் வளர்ந்த அந்த மீன் 'என்னை இப்படி கஷ்டப்படுமாறு விட்டுவைப்பது உமக்குத்தருமமா?' என்றது; அன்புகூர்ந்த அவர் உடனே அதை யெடுத்து ஓர் குளத்தினுள் விட்டார்; அங்கும் மிகவளர்ந்த அந்த மீன் 'நான் சுகமாக வஸிக்க இடம்பெறுமல் வருந்துவது உமது திருவுள்ளத்திற்கு உகப்போ?' என்றது: உடனே அவர் அதை யெடுத்து ஒரு ஏரியில் விட்டார்; அக்கணமே அந்த ஏரி நிரம்பவளர்ந்த அந்த மீன் 'ஸ்வாமிந்! என்னை யிப்படி அலையவிடுவது நியாயமா?' என்றது; அதைக்கேட்டுக் கருணைகூர்ந்த அவர் அதனையெடுத்துக் கடலில் விட்டார்; அப்பால் அந்த ஸத்யவிரதர் அம்மீனிடத்துப் பெருமயல்கொண்டு அதனை நோக்கி 'ஓ மத்ஸ்யராஜனே! உன்னுடைய வரலாற்றைத் தெரிந்துகொள்ள மிக்க ஆவலுள்ளவனுய் இருக்கிறேன்; நூறுயோஜனை நீளமும் அதற்குத் தக்க பருமனும் வாய்ந்துள்ள நீயார்? உனது தத்துவத்தை வெளியிடவேணும்' என்று கைகூப்பிப் பிரார்த்திக்க, அந்த மத்ஸ்யராஜன் 'ஓ மஹாநுபாவரே! இன்று முதல் ஏழு நாட்களுக்குள் இந்த மூன்று உலகங்களும் மூழ்கிவிடப்போகின்றன; அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது; அந்தப்படகில் ஸப்தரிஷிகளும் நீரும் எல்லா ஒஷதிகளும் ஸமஸ்த பிராணிகளும் ஏறி மனத்திற்கு வருத்தமொன்று மின்றி உலாவக்கடவீர்கள்; இப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருக்குமளவில் ஓர் பெருங்காற்று அடிக்கப் போகிறது; அதனுல் அந்த ஓடமானது பெருநீரில் அலையப்போகின்றது; அப்பொழுது எனது சிரஸ்ஸில் முளைத்துள்ள பெரியதொரு கொம்பில் பெரியதொரு ஸர்ப்பத்தினுல் அந்த ஓடத்தைக் கட்டிவிடும்; பிறகு நான் அந்தப் படகுடன் உம்மையும் எல்லாப்பிராணிகளையும் ரிஷிகளையுஞ் சுமந்துகொண்டு அந்தப் பேரிருள் நீங்கும்வரையில் நான் கடலில் ஸஞ்சரிக்கப்போகின்றேன்; அப்போது எனது பெருமையை நீர் உணர்வீர்' என்றுரைத்துவிட்டு மறைந்திடவே, ஆச்சரியமடைந்த அந்த ஸத்யவிரதர் பகவானுலே குறிக்கப்பட்ட அக்காலத்தை எதிர்பார்த்திருக்கையில் ஸப்த மேகங்களினுடைய ஆ

வாரத்தால் கடல் கிளர்ந்தெழத் தொடங்கிற்று; பகவான் குறித்த தினத்தில் ஒரு பெரிய ஓடம் அந்தக்கடலில் வரக்கண்டு மகிழ்ந்து எல்லாக் கொடி செடி பீஜங்களையும் அந்தப் படகிலேற்றித் தாமும் ஏறினர்; ஏறி, ஸப்தரிஷிகளுந் தாமுமாய்ப் பகவானைச் சிந்தனை செய்து கொண்டிருக்கையில், பெரிய கொம்புள்ள மத்ஸ்யருபங்கொண்ட பகவான் காணப்பட்டார்; லக்ஷம் யோஜனை நீளமும் பதினாயிரம் யோஜனை பருமனும் ஒற்றைக்கொம்பும் ஸுவர்ணவர்ணமும் ஸகல லோகமநோஹரரூபமும் வாய்ந்தவராகக் காணப்பட்டார்; உடனே அந்த ஸத்யவிரதர் ஒரு பெரிய நாகத்தைக் கொண்டு அந்த மத்ஸ்யபகவானது கொம்பிலே அப்படகைக் கட்டிவிட அப்பெருமான் அதை வஹித்துக்கொண்டு அண்டகடாஹத்தளவும் செல்லத் துள்ளிவிளையாடி, முன்பு அசுரர் கவர்ந்துசென்ற வேதங்களையும் மீட்டுக்கொணர்ந்தருளி, ஆக இவ்வண்ணம் பிரளயகாலத்தில் நின்றும் பிரஜைகளைக் காத்தருளியதும் வேதங்களை உபகரித்தருளினதும் மத்ஸ்யாவதார வரலாறும்.

ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் தசாவதாரங்களையும் அழகாக அநுபவித்து வரும் பட்டர் மத்ஸ்யாவதார விஷயமாக அருளிச் செய்த "ஶ்ரீநத நாஶம் நாவி நியாய ஸ்ரோதஸாவஸிதாமஷநா ஹரவநு। வெதவஸநாஹிஸ்ஸோக்ஷிவிஷநாஸெஃ ஊக்ஷிதஜய ஹயஜவ ஜிஜாஷவஹஃ॥ ஶ்ரீநய நாஹெஹாஹூரவஸாஷதீவஷீவு விவாஜஸநாஷாஹிரவஸாஹிஸிஸிரவவாஃ। வக்ஷநிதீணெஷாதீணஷிஹாஷுஸஜஜவிஹாரணஷ தமதிரவாஃ." என்ற இரண்டு ச்லோகங்களும் இங்கு அநுஸந்திக்கத் தக்கன.

வலியுருவின் மீனய் வந்து = இவ்விடத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம்;—"கடல் வெள்ளத்தைத் தன்னுடைய ஒரு செலுவிலே அடக்க வல்ல மத்ஸ்யமாய் வந்து" என்பதாம். செலுவாவது—மீனின் உட்புறத்தேயுள்ள முள்; 'செதில்' எனவும் படும். அன்றி, செலுவாவது—மீன்செட்டையெனப்படும் மீன் சிறகு என்னுஞ் சொல்லுவர். "மான யோசனை யளவொழி மெய்புருவாய்ந்த, மீனமாயினனெடுங்கடற் பரவையின் வீழ்ந்து, கானவெண்டிரைக் கருங்கடலளறெழக் கலக்கிப், போன வாளெயிற் றசுரனைத் தடவுறும் புகுந்து" (கந்த புராணம்—உபதேச காண்டம்) என்றபடி எம்பெருமான் எண்ணிடற்கரிய மிகப்பல யோஜனை நீளமும் அதற்கேற்ற பருமனும் வாய்ந்த பெருமீனனபோது அந்த மத்ஸ்யத்தின் ஒரு செலுவினகத்தே கடல் வெள்ளம் முழுவதும் ஒடுங்கும்படி யிருந்ததென அதன் பெருமை தோன்ற 'வலியுருவின் மீனய்' என்றது.

ஆனவுருவின் = "ஸதைகரூபரூபாய" "அவிகாராய சுத்தாய" என்கிறபடியே என்றும் ஒருபடிப்பட நின்று விகாரமற்ற வுருவையுடையவன் என்கை. அப்படியாகில், மத்ஸ்ய கூர்மாதி ரூபமான விகாரவுருக்களைக் கொண்டது என்னேவெனின்; கருமமடியாகக் கொண்டிலன்; க்ருபையடியாகக் கொண்டவத்தனை.

விகாரமற்றவனென்று பிரமாணங்கள் சொல்லுவதெல்லாம் கருமநிபந்தனமான விகாரமில்லாமையையே யென்றுணர்க. "அஜாயமாநோ பஹுதா விஜாயதே. தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்." என்றதுங் காண்க. .... (க)

மலங்கு விலங்குநெடுவெள்ளம் மறுக அங்கோர்வரை நட்டு *
இலங்கு சோதியாரமுத மெய்துமளவோ ராமையாய் *
விலங்கல் திரியத் தடங்கடலுட் சுமந்துகிடந்த வித்தகனை *
கலங்கல்முந்நீர்க் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (உ)

| | |
|---|---|
| மலங்கு | (உள்ளுக்கிடக்கிற) மீன்சாதிகள் |
| விலங்கு | தடுமாறும்படியான |
| நெடு வெள்ளம் | பெரிய வெள்ளம் |
| மறுக | குழம்பும்படியாக |
| அங்கு | ஆழமான அவ்விடத்திலே |
| ஓர் வரை நட்டு | ஒரு (மந்தர) பர்வதத்தை நாட்டி |
| இலங்கு சோதி ஆர் அமுதம் | விளங்குகின்ற தேஜஸ்ஸோடு கூடின அம்ருதமானது |
| எய்தும் அளவு | தோன்றும் வரையில் |

| | |
|---|---|
| ஓர் ஆமை ஆய் | ஒப்பற்ற ஆமையா யிருந்துகொண்டு |
| விலங்கல் | அந்த மந்தரமலையானது |
| திரிய | நாற்புறமும் திரிந்து வரும்படியாக |
| தட கடலுள் | பெரிய அக்கடலிலே |
| சுமந்து கிடந்த | (அம்மலையைத்) தாங்கிக்கொண்டிருந்த |
| வித்தகனை | ஆச்சரியபூதனான பெருமானை |
| கலங்கல் முந்நீர் கண்ணபுரத்து | கலக்கமுள்ள கடலை அணித்தாகவுடைய திருக்கண்ணபுரத்திலே |

அடியேன் கண்டுகொண்டேன்—.

* * *—கூர்மாவதாரம் செய்தருளின பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே ஸேவிக்கப் பெற்றேனென்கிறார். முன்னொரு காலத்தில் இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி அவளால் ஒரு பூமாலை பிரஸாதிக்கப்பெற்ற ஒருவித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு ப்ரஹ்மலோகவழியாய் மீண்டு வருகையில், துர்வாஸமஹாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையை உணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது, அங்குவெகுஉல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனிவந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதவிலங்கு அதனைத் துதிக்கையாற்பிடித்து இழுத்துக்கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவரன் கோபங்கொண்டு இந்திரனை நோக்கி, 'இவ்வாறு செல்வச்செருக்குற்ற நினது ஐச்வரியங்களெல்லாம் கடலில ஒளிந்துவிடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர் செல்வம்யாவும் ஒழிந்தன;

ஒழியவே, அசுரர்வந்துபொருது அமரரைவெல்வாராயினர்; பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து, அப்பிரான் அபயமளித்துக்கட்டளை யிட்டபடி, அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி, வாசுகி யென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக்கடையலாயினர்; அப்பொழுது, மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று அதனைத்தனது முதுகின்மீதுகொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமற் கடைவதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந் தருளியிருந்தனனென்பது கூர்மாவதார வரலாறு.

ஆழத்துக்கு அவதியில்லாத விடத்திலே மந்தரமலையைக் கொண்டு போய் நிறுத்துமளவிலே அப்போதுண்டான குழப்பத்தைச் சொல்லுகிறது 'மலங்கு விலங்கு நெடு வெள்ளம் மறுக' என்று. மலங்கு—மீன்களில் ஒருவகைச்சாதி. அமுதமென்பது—போன வுயிரை மீட்குந் தன்மையதான புகர் பெற்றிருத்தல் பற்றி 'இலங்கு சோதியாரமுதம்' எனச்சிறப்பித்துக் கூறப்பட்டது. விலங்கல் திரிய=“மன்னும் வட மலையை மத்தாக மாசுணத்தால், மின்னுமிருசுடரும் விண்ணும் பிறங்கொளியும், தன்னினுடனே சுழல மலை திரித்து” என்ற பெரிய திருமடல் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. .... (உ)

பாராரளவும் முதுமுந்நீர் பரந்தகாலம் * வளைமருப்பில்
ஏராருருவத் தேனமாயெடுத்த வாற்றலம்மானை *
கூராராலிரைகருதிக் குருகுபாயக் கயலிரியும் *
காரார்புறவிற் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (ங)

| | | | |
|---|---|---|---|
| முது முந்நீர் | கடல் வெள்ளம் | குருகு | நாரைகளானவை |
| பாராரளவும் | பூமிப்பரப்படங்கலும் | ஆரல் | ஆரல்மீன்களை |
| பரந்த காலம் | சூழ்ந்த காலத்தில் | இரை கருதி | ஆஹாரமாகக் கொள்ள நினைத்து |
| வளை மருப்பின் | வளைந்த கோரப்பல்லையுடைய | பாய | (நீரில்) பாய்ந்தவளவிலே |
| ஏர் ஆர் உருவத்து | அழகுமிக்க திருமேனியையுடைய | கயல் | கயல்மீன்கள் |
| ஏனம் ஆய் | வராஹமூர்த்தியாகி | இரியும் | அஞ்சியோடும்படியுள்ளதும் |
| எடுத்த | (பூமியை) உத்தரிப்பித்த | கார் ஆர் புறவில் | மேகங்கள் படிந்த சோலைகளையுடையதுமான |
| ஆற்றல் | மிடுக்கையுடையனான | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தில் |
| அம்மானை | ஸர்வேச்வரனை | | அடியேன் கண்டுகொண்டேன்—. |
| கூர் ஆர் | கூர்மை பொருந்திய (வாயலகுகளையுடைய) | | |

* * *—மஹாவராஹமாய்த் திருவவதரித்தருளின பெருமானைத் திருக் கண்ணபுரத்திலே ஸேவிக்கப்பெற்றேனென்கிறார். இப்பொழுது நடக்கிற

ச்வேதவாராஹ கல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தின்கண் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவாராஹாவதாரத்தைச் செய்தருளிக் கோட்டுநுனியாற் பூமியை யெடுத்து வந்தனனென்ற வரலாறு அறியத்தக்கது.

ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அஸுரராஜன் தன்வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக் கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது, தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் மஹாவராஹ ரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டு பொருது கோட்டினாற் குத்திக்கொன்று பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்று எடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளினன் என்ற வரலாறும் உண்டாயினும் அஃது இங்கு அவிவக்ஷிதம்.

பின்னடிகள் வயல்வளமும் பொழில் வளமும் சொல்வன. .... (௫)

உளைந்த வரியும் மானிடமும் உடனாய்த் தோன்ற வொன்றுவித்து *
விளைந்த சீற்றம் விண்வெதும்ப வேற்றோ னகலம் வெஞ்சமத்து *
பிளந்து வளைந்த வுகிரானைப் பெருந்தண் செந்நெற் குலைதடிந்து *
களஞ்செய் புறவிற் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (௬)

| | |
|---|---|
| உளைந்த | கண்டபோதே அஞ்சி நடுங்கவேண்டும்படியான |
| அரியும் | சிங்கவுருவத்தையும் |
| மானிடமும் | மனிதவுருவத்தையும் |
| உடனாய் ஒன்றுவித்து | ஒருசேரப் பொருந்தச் செய்து |
| தோன்ற | (நரஸிம்ஹரூபியாய்த்) தோன்ற |
| | (அப்போது) |
| விளைந்த | உண்டான |
| சீற்றம் | கோபத்தைக் கண்டு |
| விண் வெதும்ப | விண்ணுலகத்தவர்களும் அஞ்சி நடுங்க |
| வேற்றோன் | பகைவனான இரணியனுடைய |
| அகலம் | மார்பை |
| வெம் சமத்து | வெவ்விய போர்க்களத்திலே |
| பிளந்து | இருபிளவாக்கி |
| வளைந்த உகிரானை | வளைந்த நகங்களையுடைய பெருமானை, |
| பெரு | பெருத்த |
| தண் | அழகிய |
| செந்நெல் குலை | செந்நெற்கதிர்கள் |
| தடிந்து | வயிரம்பற்றி |
| களம் செய் | இருள் மூடியிருக்கப்பெற்ற |
| புறவில் | சுற்றுப்பிரதேசங்களையுடைத்தான |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |
| | அடியேன் கண்டுகொண்டேன்—. |

* * *—நரஸிம்ஹாவதாரம் செய்தருளின பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே ஸேவிக்கப் பெற்றேனென்கிறார். திருத்துழாய் நறுமணத்தோடே அங்குரிக்குமா போலே இயற்கையான பகவத் பக்தியோடே பிறந்த ப்ரஹ்லாதாழ்வான் ஸ்ரீமந் நாராயண நாமத்தையே உருச்சொல்லிக் கொண்டிருந்தது

காரணமாக அவனிடம் கறுக்கொண்ட அவனது தந்தையான ஹிரண்யகசிபு வென்பான் மைந்தனைத் தன்வழிப்படுத்தப் பலவாறு முயன்றும் அங்ஙனம் வழிப்படாத அவனைக் கொல்லுதற்கு என்னவுபாயஞ் செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, ஒருநாள் ஸாயங்காலத்தில் அவ்விரணியன் மகனைநோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்கு உளன்? காட்டு' என்ன, 'தூணினுமுளன், துரும்பினுமுளன், எங்கு முளன்' என்று அவன் உறுதியாய்ச் சொல்ல, உடனே இரணியன் 'இங்கு உளனோ?' என்று சொல்லி எதிரில் நின்ற தூணைப் புடைக்க, அதிலிருந்து திருமால் உடனே மனிதரூபமும் சிங்கவடிவமுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி இரணியனைப் பிடித்து வாயிற்படியில் தன் மடிமீது வைத்துக்கொண்டு தனது திருக்கைநகங்களால் அவன்மார்பைப்பிளந்து அழித்திட்டானென்ற வரலாறு உலகப்பிரசித்தம்

ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்தப் பிராணியினாலும் சாகாதபடியாக இரணியன் பிரம ருத்திராதிகளிடத்துப் பெற்ற பெருவரம் பழுதுபடாமைக்காக நரங்கலந்த சிங்கமாய்த் தன்னைத் தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பது தோன்ற ''அரியும் மானிடமும் உடனாய் ஒன்றுவித்துத் தோன்ற' எனப்பட்டது.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் நாஸிம்ஹாவதாரத்தை அநுபவித்துப் பேசுமிடத்து ''ஸிதாக்ஷீரந்யாயேந ஸங்கமிதாஜகம்—ஸிதாக்ஷீரந்யாயேந ஸங்கமிதாங்சகம்'' என்கிறார்; சர்க்கரையும் பாலுங் கலந்தாற்போலே நரவுருவும் சிங்கவுருவும் பொருந்திற்றென்றார்; அது இப்பாசுரத்தின் முதலடியை அநுஸந்தித்துப் போலும்; ''உடனாய் ஒன்றுவித்து'' என்றதற்கு அது மிகப் பாங்கு.

**வளைந்த சீற்றம் விண்வேதும்ப**—''ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை யென்று ஜீயரருளிச் செய்வர்'' என்று ஸ்ரீவசநபூஷணத்திற் பாசுரம். அதாவது—ஸங்கல்பமாத்திரத்தாலே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னை யழியமாறி இதர ஸஜாதியனா யவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநரூபமான அதிமாநுஷ க்ருத்யங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் முதலான பாகவதர் திறத்தில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலேயே என்று நஞ்சீய ரருளிச்செய்வராம். எம்பெருமான் தன்னளவிலே நிரக்கழிய அபராதப் படுமவர்களைப் பற்றி ஒன்றும் கணிசியான்; அடியார் திறத்தில் ஸ்வல்ப அபராதம் பண்ணுவானுண்டாகிலும் அவனை அப்போதே தலையறுத்துப் பொகடுவானென்பது இதிஹாஸ புராணப்ரஸித்தம். [த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம ?—த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம.] இராமபிரான் எழுந்தருளி நிற்கச்செய்தே இராவணன் கோபுர சிகரத்திலே வந்து தோன்றினவாறே 'ராஜத்ரோஹியான இப்பயல் பெருமாள் திருமுன்பே நிற்கையாவதென் ?' என்று ஸுக்ரீவமஹாராஜர்

அவன் மேலே பாய்ந்து வென்று வந்தபோது அவரை நோக்கி இராமபிரான் இங்ஙனே அருளிச்செய்கிறார்;—'நீர் மஹாராஜாரான தரம் குலைய [உம்மைத் திரஸ்கரித்து] அந்த ராக்ஷஸப் பயல் ஒரு தீங்கு செய்யாதிருந்தானாகில் நீர் பரிபவப்பட்ட பிறகு ஸீதைதானும் எனக்கு எதுக்கு?' என்றார். ஆச்ரிதர் விஷயத்தில் எம்பெருமானுடைய பக்ஷபாதம் இப்படியன்றோ இருப்பது தன் உயிர் நிலையான பாகவதர்களுக்கு ஒரு தீங்கு நேர்ந்தால், தனக்குத் தீங்கு நேரும் போது பிறக்கும் சீற்றம் அற்பமென்னும்படி சீற்றம் பெருகிச் செல்லும். தான் ஸமுத்ரராஜனைச் சரணம் புகச்செய்தேயும் அவன் முகங்காட்டிற்றிலனாகை "கோபமாஹாரயத் தீவ்ரம்" என்னும்படி சீற்றத்தை வரவழைத்துக் கொண்டார் பெருமாள்; பின்பு இராவணனாலே அனுமான் நோவுபட்டபோது "ததோ ராமோ மஹாதேஜா: ராவணேந க்ருதவ்ரணம்—த்ருஷ்ட்வா ப்லவக சார்த்தூலம் கோபஸ்ய வசமேயிவாந்" என்னும்படி கோபமிட்ட வழக்கானார். இங்ஙனேயிறே பாகவத விஷயத்திலே எம்பெருமானுக்குள்ள பரிவின் மிகுதியிருப்பது. இரணியன் எம்பெருமான் திறத்திலே நேராக அபசாரப்பட்டுத் திரிந்த நாள்கள் எண்ணிறந்தவையுண்டு; அந்நாட்களிலே எம்பெருமானுடைய திருவுள்ளம் அவ்வளவாக்கனளவிலே சீற்றங்கொள்ளவில்லை; பள்ளியிலோதிவந்த தன் சிறுவன் வாயிலோராயிரநாமம் ஒள்ளியவாகிப்போத ஆங்கதனுக்கு ஒன்றுமோர் பொறுப்பிலனாகிப் பிள்ளையைச் சீறி வெகுண்டு நலிந்தானென்று அறிந்தவாறே 'நம்மளவிலே எத்தனை தீம்பனாயிருந்தாலும் பொருந்திருப்போம்: நம்முடையனை சிறுக்கனை நலிந்த பின்பும் பொறுத்திருக்கவோ' என்று ஆறியிருக்கமாட்டாதே அப்போதே வந்த தோன்றிப் புடைத்தானாயிற்று. ஆகவே, 'தனக்குப் பகைவன்' என்கிற காரணத்தினாலுண்டாகும் சீற்றத்திற் காட்டிலும் 'தன்னடியார்க்குப் பகைவன்' என்கிற காரணத்தினாலுண்டாகும் சீற்றம் வாசாமகோசரமாதலால் 'விளைந்த சீற்றம் விண்வேதும்ப' எனப்பட்டது. அப்போதுண்டான சீற்றத்தைக் கண்டு தேவஜாதியடங்கலும் 'இது எவ்வளவாய் முடியப் புகுகிறதோ!, என்ன ப்ரளயம் நேரிடப் புகுகிறதோ!' என்று அஞ்சிற்றுப் போலும்.

செந்நெற்குலை தடிந்து களஞ்செய் புறவிற் கண்ணபுரத்து—'களம்' என்பதற்கு உள்ள பல பொருள்களில் 'இருள்' என்னும் பொருள் இங்குக் கொள்ளப் பட்டது.

நெற்கதிர்கள் செழிப்பாக முற்றி எங்கும் இருண்டுகிடக்கின்றபடி. இனி, 'களம்' என்பதற்கு நெற்களம் என்றே பொருள் கொள்ளவுமாம். நெற்களத்தின் செய்கைஎங்கும் என்றும் மாறுதிருக்கும்படியைக் கூறினவாறு .... (௫)

தொழுநீர்வடிவிற் குறளுருவாய் வந்துதோன்றி * மாவலிபால்
முழுநீர்வையம் முன்கொண்ட மூவாவுருவி னம்மானை *
உழுநீர் வயலுட் பொன்கிளைப்ப வொருபால் முல்லைமுகையோடும் *
கழுநீர்மலரும் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (௬)

| | | | |
|---|---|---|---|
| தொழும் நீர் | கண்டவாறே வணங்க வேண்டும்படியான நீர்மையையுடைய | அம்மானை | ஸர்வேச்வரனை, |
| வடிவின் | வடிவு கொண்ட | உழு நீர் | (எப்போதும்) உழுவதையே இயல்வாகவுடைய |
| குறள் உரு ஆய் | வாமந ரூபியாய் | வயலுள் | வயல்களிலே |
| வந்து தோன்றி | அவதரித்து | பொன் கிளைப்ப | பொன் விளையப் பெற்றதும் |
| மாவலிபால் | மஹாபலியினிடத்தில் | ஒருபால் | வேறு சில இடங்களில் |
| முன் | முன்பொருகால் | முல்லை | முல்லைமலர்களும் |
| முழுநீர் வையம் | கடல் சூழ்ந்த வுலகத்தை | முகையோடும் | கருமுகைமலர்களும் |
| கொண்ட | இரந்து பெற்ற | கழுநீர் | செங்கழுநீர்ப்பூக்களும் |
| மூவா உருவின் | விகாரமற்ற ரூபத்தை யுடையனான | மலரும் | மலரப் பெற்றதுமான |
| | | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |
| | | | அடியேன் கண்டு கொண்டேன்—. |

* * *—வாமநமூர்த்தியாய் தோன்றி த்ரிவிக்ரமமூர்த்தியாகி மூவுலகளந்த பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே காணப்பெற்றேனென்கிறார்.

தொழுநீர்வடிவிற் குறளுருவாய்=கண்டாரடங்கலும் தொழும்படியாவதையே இயற்கையாவுடையதாம் எம்பெருமானுடைய திருவுருவம்; வாமநமூர்த்தியைப் பற்றிச் சொல்லவும் வேணுமோ? கண்ணபிரான் துர்யோதந ஸபைக்குத் தூதுநடந்தபோது அங்குள்ள அரசர்கள் தங்களுக்கு இயற்கையாகவுள்ள ஆஸுரத்தன்மையினால் கண்ணபிரானுக்கு மரியாதை செய்யக்கூடாதென்று கெட்ட எண்ணங்கொண்டு 'இப்போது க்ருஷ்ணன் இங்கே வரப்போகிறான்; அவன்வந்தவாறே அவனைக்கண்டு எழுந்திருக்கவாவது, கைகூப்பவாவது, தலை வணங்கவாவது கூடாது ; ஒருவரும் ஒருவகையான உபசாரமும் செய்யவே கூடாது; இடித்த புளிபோல் ஆடாது அசையாது உட்கார்ந்தபடியே யிருக்கக்கடவோம்' என்றுஎல்லாருமாக ஸங்கேதம் செய்துகொண்டிருந்தும், § "மணிவிடம்பிநி தஸ்ய மநோஹரே வபுஷி மக்நமநா முநிமண்டலீ। ஜபமமுஞ்சத ஹோமமமுஞ்சத வ்ரதமமுஞ்சத வேதமமுஞ்சத=மணிவிடம்பிநி தஸ்ய மநோஹரே வபுஷி மக்நமநா முநிமண்டலீ—ஜபமமுஞ்சத ஹோமமமுஞ்சத வ்ரதமமுஞ்சத வேதமமுஞ்சத." என்னும்படியான திவ்யரூபத்துடனே கண்ணபிரான் ஸபையில் எழுந்தருளினவாறே அவர்களெல்லாரும் தங்களுடைய ஸங்கேதத்தை அடியோடே மறந்து பரவசமாகவே ஆஸனத்தை விட்டெழுந்து மரியாதை செய்ததாக "யதார்ஹம் கேசவே வ்ருத்திமவசா: ப்ரதிபேதிரே—யதார்ஹம் கேசவே

§ கண்ணபிரானுடைய நீலமணிநிறத்ததான திவ்ய மங்கள விக்ரஹத்திலே ஆழ்ந்துகாற்பட்ட மஹர்ஷிகளின் திரளானது நியமத்துடனே ஜபஞ் செய்வதையும் ஹோமஞ் செய்வதையும் மற்றும் விரதங்களனுஷ்டிப்பதையும் வேத மோதுதலையும் பரவசமாகவே விட்டிட்டது என்பதாம்.

வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே" என்கிறமஹாபாரதமும் "கழல்மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி, ஏழலுற்று மீண்டேயிருந்துன்னை நோக்கும், சுழலைபெரி துடைத் துச்சோதனன்" என்கிற பெரியாழ்வார் திருமொழியும் வெளியிடு கின்றன. ஆகையாலே எம்பெருமானது திவ்ய ரூபத்தைக் கண்டவாறே பர வசமாகவே தொழ நேர்ந்து விடுமென்பது தோன்றத் 'தொழுநீர் வடிவின்' என அடைமொழி கொடுக்கப்பட்டது. 'தொழுநீர்' என்பதில் நீர்மை யென்னும் பண்பு ஈறு போயிற்று; வணங்கப்படுந்தன்மையையுடைய வடிவுபடைத் தவனென்றவாறு.

மாவலிபால் முழுநீர்வையங் கொண்ட=மஹாபலி தாரை வார்த்துத் தத்தம் செய்தது மிகச் சிறிய அளவுடையதான மூவடி நிலமேயாகிலும் எம்பெருமானுடைய திருவுள்ளத்தால் அந்த மூவடி நிலமும் மூன்று லோகமாதலாலும் மேற்காரியமும் அங்ஙனே ஆயிற்றாதலாலும் மாவலிபால் முழுநீர்வையங் கொண்டதாகக் கூறக் குறையில்லை யென்க.

மூவாவுருவினம்மானை=இரவும் பகலும் லோகரக்ஷணமே செய்யா நிற்கச் செய்தேயும் ஒன்றுஞ் செய்யாதானைப் போன்று இன்னமும் இளகிவரும் உருவத்தையுடையவன்; ஜகத் ரக்ஷண குதூஹலத்தில் கிழத்தன மடையாதே கீழ் நோக்கிப் பிராயம் புகுமவன் என்க.

திருக்கண்ணபுரத்தின் வயல்வளமும் தோட்டவளமும் பின்னடிகளிற் சொல்லப்படுகின்றன. வயலுள் பொன் விளைவதாகச் சொன்னது உபசாரம்; "இராமழை பெய்த வீரவீரத்துள், பனைநுகங்கொண்டு யானையேர் பூட்டி, வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும், வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே" என்றதிற்போல. பொன்போன்ற நெற்களின் விளைவைச் சொன்னவாறு. .... .... .... .... .... .... (ரு)

வடிவாய் மழுவே படையாக வந்துதோன்றி மூவெழுகால் *
படியாரரசு களைகட்ட பாழியானை யம்மானை *
குடியா வண்டு கோண்டுண்ணக் கோலநீலம் மட்டுகுக்கும் *
கடியார் புறவிற் கண்ணபுரத்து அடியேன் கண்டு கோண்டேனே. (சு)

| | | | |
|---|---|---|---|
| வடி வாய் | கூர்மை பொருந்திய வாயையுடைய | அரசு | க்ஷத்ரியர்களாகிற |
| மழுவே | கோடாலியையே | களை | விரோதிகளை |
| படை ஆக | ஆயுதமாகக் கொண்டு | கட்ட | தொலைத்த |
| வந்து தோன்றி | (பரசுராமனாய்த்) திருவவதரித்து | பாழியானை | மிடுக்குடையவனான |
| மூ எழுகால் | இருபத்தொரு தலைமுறையளவும் | அம்மானை | எம்பெருமானை,— |
| படி | பூமியில் | வண்டு | வண்டுகளானவை |
| ஆர் | நிறைந்திருக்கிற | குடி ஆ | குடும்பமாக |
| | | கொண்டு உண்ண | (மதுவை) எடுத்துப் பருகும்படியாக |

| | | | |
|---|---|---|---|
| கோலம் நீலம் | அழகிய நீலோற்பல மலர்கள் | சடி ஆர் புறவின் | பரிமளம் மிக்க சுற்றுப் 'பிரதேசங்களை யுடைய |
| மட்டு | மதுவை | கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தில் |
| உகுக்கும் | பெருகச்செய்யப் பெற்ற | | அடியேன் கண்டுகொண்டேன்—. |

* * *—பரசுராமாவதாரம் செய்தருளின பெருமானைத்' திருக்கண்ணபுரத்திலே காணப்பெற்றே னென்கிறர்.

உலகில் தண்டிப்பாரொருவருமில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமை இயற்றிவந்த க்ஷத்திரிய வம்சங்கள் பலவற்றை அழிக்கும் பொருட்டு ஸ்ரீமந்நாராயண மூர்த்தி ஜமதக்நி முனிவரது மனைவியான இரேணுகையிடம் இராமனைத் திருவவதரித்துப் பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனுற் பரசுராமனென வழங்கப்பட்டு வருகையில், ஒரு நாள் கார்த்த வீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்த காலத்தில், அங்கே அம்முனிவனது ஹோம தேநுவானது வேண்டின வஸ்துக்களை யெல்லாம் யதேஷ்டமாக அளித்துக் கொண்டிருப்பதைக்கண்ட இவர்கள் அப்பசுவைக் கைக்கொள்ள விரும்பி 'இந்தப்பசுவை எனக்குக் கொடுக்க வேணும்' என்று ஜமதக்நியைக் கார்த்தவீரியன் கேட்க, அதற்கு மஹர்ஷி 'அது என்வசமன்று; ரிஷிகளின் உபயோகத்திற்காக இதனைத்தேவர்கள் அனுப்பி வைத்திருக்கிறார்கள்' என்று சொல்ல, அது கேட்ட கார்த்தவீரியன் தன்னை வெல்வாரில்லை யென்னுஞ் செருக்குடைமையாலே. அக்காமதேநுவைப் பலாத்காரமாகப் பிடித்திழுத்துக் கொண்டு தன் நகர்க்குச் சென்றான். வனத்திற்குச் சென்றிருந்து மீண்டு வந்த பரசுராமன் ஆச்ரமத்தில் பசுவைக் காணுமல், கார்த்தவீரியன் வலியக் கவர்ந்து கொண்டு போனதாகத் தந்தை சொல்லக் கேட்டுக் கடுங்கோபங் கொண்டு அவனிருக்கும் மாஹிஷ்மதி நகரத்திற்குச் சென்று அங்குள்ள த்வாரபாலர்களை விளித்து 'உங்களரசன் எங்கள் பசுவைக் கொடுத்துப் பிழைத்துப்ப நினைக்கிறனு? அன்றி என்னுடன் போர் செய்து முடிய நினைக்கிறனு? கேட்டு வாருங்கள்' என்று சொல்ல, அவர்கள் சென்று கார்த்தவீரியனுக்கறிவிக்க, அவன் ''பரசுராமனுடன் நாம் எதிர்த்தால் நமக்கு ப்ரஹ்மஹத்யை வரும்; காமதேநுவைக் கொடுத்து விட்டால் இவனொரு பார்ப்பானுக்கு எதிர்நிற்கமாட்டாத அஸமர்த்தன் என்று உலகர் சிரிப்பர்; இதற்கென் செய்வோம்'' என்று ஆலோசித்து, தனக்குக் கீழ்ப்பட்ட அரசர்களைப் பரசுராமனுடன் போர்புரிய அனுப்ப, பரசுராமன் அவர்களைக் கொன்று வென்றிட்டனன். அவ்வரசர் மாண்டு போனதைக் கேட்கலுற்ற கார்த்தவீரியன் தானே எதிர்த்து வந்தான். அவனைப்பரசுராமன் தனது கோடாலிப் படையினுல் ஆயிரம் கைகளையும் வெட்டிக் கொன்றுவிட்டுத் தன் தேநுவைத் தன் ஆச்ரமத்திற்குக் கொண்டு சேர்த்தார். கார்த்தவீரியனது புதல்வர் 'பரசுராமன் நம் தந்தையைக் கொன்றிட்டானுதலின் நாம் அவனது தந்தையைக்' கொன்றிடல் வேண்டும்' என்றெண்ணிப் பரசுராமன் வனஞ் சென்றிருந்த வேளை பார்த்து

அவர்து ஆச்ரமத்திற்கு வந்து ஜமதக்நியைக் கொன்று விட்டனர். பரசுராமன் ஆச்ரமத்திற்கு மீண்டுவந்ததும் செய்தியறிந்து அதனால் க்ஷத்திரிய வம்சம் முழுவதன் மேலும் கோபாவேசங் கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது ஒழித்திட்டான்.

இப்பரசுராமன் எழுசிரஞ்சீவிகளில் ஒருவன்; இவனது வலிமையும் வெற்றியும் அற்புதமானது. சிவபிரானது கைலாஸகிரியைப் பெயர்த்தெடுத்த இராவணன் மிகவலியவனென்றும், அவனிலும் கார்த்தவீரியன் வலியவனென்றும், அவனிலும் பரசுராமன் வலியவனென்றும் இதிஹாஸங்களால் விளங்கும். சிவனோ விஷத்தையுண்டு கங்கையைந் தரித்து மேருவில்வளைத்துத் திரிபுரமெரித்து மன்மதனை நீறுபடுத்தி யமனையுதைத்து ஸம்ஹாரத் தொழில் நடத்தும் பேராற்றலையுடைய உக்ர மூர்த்தியாவான். அக்கடவுள் வீற்றிருக்கின்ற கைலாஸ கிரியை இராவணன் ஒருகால் வேரோடு பெயர்த்தனன். அங்ஙனம் மிகவலியவனைத் திக்விஜயஞ் செய்து திக்கஜங்களையும் வென்ற இராவணனைக் கார்த்தவீரியன் கட்டிச் சிறையிலிட்டனன்; அன்னவனைப் பரசுராமபிரான் தோள் துணித்துத் தொலைத்திட்டன னென்றால் இவனது ஆற்றல் பேச்சுக்கு நிலமன்றே.

இப்படிப்பட்ட பரசுராமன் ஏழாமவதாரமான தசரதராமன் மீது கோபித்தலும் இவ்விருவரும் ஒருவரோடொருவர் போர் செய்தலும், ஒருவர் மற்றொருவரை வெல்லுதலும் பொருந்துமோ வெனின்; துஷ்டர்களாய்க் கொழுத்துத் திரிந்த அரசர்களைக் கொல்லும்பொருட்டுப் பரசுராமனிடத்தில் ஆவேசித்திருந்த விஷ்ணுசக்திவிசேஷம் அக்காரியம் முடிந்த பின்பு அவ்விஷ்ணுவின் அம்சாவதாரமான தசரதராமனாற் கவர்ந்து கொள்ளப்பட்டதாகையால் பொருந்துமென்க. இதனால் ஆவேசாவதாரத்திற் காட்டிலும் அம்சாவதாரத்திற்கு உள்ள ஏற்றம் விளங்கும்.

ஸ்ரீமந்நாராயணனது விபவாவதாரங்கள் அளவற்றவை; அவை முக்கியம் அமுக்கியம் என இருவகைப்படும். இவற்றில் முக்கியமது சிறந்தது. பிக்கியது அதனிலும் தாழ்ந்தது. முக்கியமாவது ஸாக்ஷாதவதாரம். அமுக்கியமாவது ஆவேசாவதாரம். ஆவேசம் ஸ்வரூபாவேச மென்றும் சக்த்யாவேச மென்றும் இருவகையதாம். ஸ்வரூபாவேசமாவது—சேதநருடைய சரீரங்களில் எம்பெருமான் தன்னுடைய ரூபத்துடன் ஆவேசித்து நிற்பது. பரசுராமன் பலராமன் போல்வார் இத்திறத்தார்கள். சக்த்யாவேசமாவது—சேதனர்பக்கல் காரிய காலத்தில் எம்பெருமான் சக்திமாத்திரத்தால் தோன்றி விளங்குதல். கார்த்தவீரியார்ஜுநன், அர்ஜுநன், வியாஸர்போல்வார் இத்திறத்தார். இவற்றில் சக்த்யாவேசத்தைவிட ஸ்வரூபாவேசம் பிரபலம். இவற்றின் உண்மை நிலையை விஷ்வக்ஸேநஸம்ஹிதைமுதலிய ஸ்ரீபாஞ்சராத்ரஸம்ஹிதைகளிலும் தத்வத்ரயத்திலும் அதன் வியாக்கியானத்திலும் பரக்கக் காணலாம். பரசுராமாவதாரம் ஸ்வரூபாவேசாவதாரம்.

முமுக்ஷுக்களுக்குப் பரசுராமாவதாரம் உபாஸனைக்கு உரியதன்றாகிலும் விரோதிகளைக் களைந்தொழித்த உபகாரத்துக்குத் தோற்றுத் துதிப்பது மாத்திரமுண்டு; இதில் பாதகமொன்றுமில்லை. "கோக்குலமன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால் போக்கிய தேவனைப்போற்றும் புனிதன்" என்ற இராமாநுசநூற்றந்தாதிப் பாசுரத்தின் வியாக்கியானமும் காண்க.

க்ஷேத்ரத்தின் போக்கியதை பின்னடிகளிற் கூறப்பட்டது. மூன்றாமடிக்கு இருவகையாகப் பொருள்கூறலாம்; வண்டுகள் உண்ணுமாறு மலர்கள் மதுவைப் பெருக்குகின்றனவாக உரைத்தல் ஒன்று. வண்டுகள் மதுவை யதேஷ்டமாக உண்டபின்னும் மலர்கள் மதுவை மேன்மேலும் பெருக்கிக்கொண்டே யிருக்கின்றனவாக உரைத்தல் மற்றொன்று. இரண்டாவது நிர்வாஹமே பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம்பற்றியது. "கடலிலே ஒரு சிறுங்கையைப் புஜிக்குங் காட்டில் கடல்வற்றாதிறே" என்ற ஸ்ரீஸூக்திகாண்க. .... .... (சு)

வையமெல்லா முடன்வணங்க வணங்காமன்னனாய்த் தோன்றி *
வெய்யசீற்றக் கடியிலங்கை குடிகொண்டோட வெஞ்சமத்து *
செய்தவெம்போர் நம்பரனைச் செழுந்தண் கானல் மணநாறும் *
கைதைவேலிக் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (எ)

| | |
|---|---|
| வையம் எல்லாம் | உலகமெல்லாம் |
| உடன் வணங்க | ஒருமைப்பட்டு திருவடிகளில் விழுந்துவணங்க |
| வணங்கா | தான்ஒருவரையும் வணங்க வேண்டும்படியிராத |
| மன்னன் ஆய் | ராஜாதிராஜனாய் [இராமபிரானாய்] |
| தோன்றி | திருவவதரித்து, |
| வெய்ய சீற்றம் | கடுமையான சீற்றத்தை யுடையதும் |
| கடி | அரண்களையுடையதுமான |
| இலங்கை | இலங்காபுரியிலுள்ளவர்கள் |
| குடிகொண்டு ஓட | குடும்பத்தோடும் (யமலோகத்திற்கு) ஓடிச் செல்லும்படியாக |
| வெம் சமத்து | வெவ்விய போர்க்களத்தில் |
| வெம் போர் செய்த | கடுமையான யுத்தத்தை நடத்தின |
| நம் பரனை | எம்பெருமானை,— |
| செழு | அழகிய |
| தண் | குளிர்ந்த |
| கானல் | நெய்தல்நிலத்தை யுடையதும் |
| மணம் நாறும் கைதை | பரிமளம்மிக்க தாழைகளை |
| வேலி | வேலியாகவுடையதுமான |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |
| | அடியேன் கண்டுகொண்டேன்—. |

* * *—ஸ்ரீதசரதராமனாய்த் தோன்றின பெருமானைத் திருக்கண்ணபுரத்திலே ஸேவிக்கப்பெற்றேனென்கிறார்.

அநுகூலர்களோடு பிரதிகூலர்களோடு வாசியற எல்லாரும் இராமபிரானை வணங்கும்படி யிருக்குமேயன்றி, அப்பெருமான் வணங்குதற்குரிய பிறரொருவர் இலாதலால் "வையமெல்லா முடன்வணங்க வணங்கா மன்னனாய்த்

தோன்றி" எனப்பட்டது. இவ்வவதாரத்தில் "த்வியா ஸஜ்யேயஃவேஷ்வம் நந ஸயம்த் கஸ்யவிஷ—த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்" [இருபிளவாகப் பிளந்து இருபக்கங்களிலும் இருதுண்டமாக விழுந்தாலும் விழுவனேயன்றி ஒருவர்காலில் தலைசாய விழமாட்டேன்] என்று வணங்காமுடி மன்னனாய் இறுமாந்திருந்தவன் இராவணனொருவனே போலும். அவனைக்குடும் பத்தோடு களைந்தொழித்தமை இரண்டடையடிகளிற் கூறப்பட்டது.

கைதை—'கேதகீ' என்னும் வடசொல்லின் சிதைவு. .... (எ)

ஒற்றைக்குழையும் நாஞ்சிலு மொருபால் தோன்றத் தான் தோன்றி *
வெற்றித்தொழிலார் வேல்வேந்தர் விண்பாற் செல்ல வெஞ்சமத்து *
செற்ற கொற்றத் தொழிலானைச் செந்தீ மூன்று மில்லிருப்ப *
கற்றமறையோர் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (அ)

| | |
|---|---|
| ஒற்றை குழையும் | ஒருகாதில்தொங்குகிற திருக்குண்டலமும் |
| ஒருபால் | ஒருபக்கத்தில் |
| நாஞ்சிலும் | கலப்பையும் |
| தோன்ற | விளங்க |
| தான் தோன்றி | (பலராமனாய்த்) திருவவதரித்து, |
| வெற்றி தொழிலார் | ஜயம்பெறுவதையே இயல்வாகவுடையரும் |
| வேல் | வேற்படையையுடையரு மான |
| வேந்தர் | அரசர்கள் |
| விண் பால் செல்ல | வீரஸ்வர்க்கத்திற்குச் சென்று சேரும்படி |
| வெம் சமத்து | வெவ்விய போர்க்களத்தில் |
| செற்ற | (அவ்வரசர்களை) அழியச் செய்ததனாலுண்டான |
| கொற்றம் | வெற்றியை |
| தொழிலானை | தொழிலாகவுடைய பெருமானை,— |
| செம் தீ மூன்றும் | த்ரேதாக்நிகளெனப்படுகிற மூன்று அக்நிகளும் |
| இல் | திருமாளிகை தோறும் |
| இருப்ப | ஜ்வலித்துக் கொண்டிருக்கப் பெற்றதும் |
| கற்ற மறையோர் | கலைகளைக் கற்ற வைதிகர் களுடையதுமான |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்தில் |
| | அடியேன் கண்டுகொண்டேன்—. |

* * *—நம்பிமூத்தபிரானாய்த் திருவவதரித்த பெருமானைத் திருக்கண்ண புரத்திலே ஸேவிக்கப்பெற்றேனென்கிறார்.

ஸ்ரீராமாவதாரத்தில் ஆதிசேஷனது அம்சமாய்த் தோன்றிய லக்ஷ்மணன் தனக்குச் செய்த அரிய பெரிய பணிவிடைக்கு உவந்து பகவானாகிய ஸ்ரீமந் நாராயணன் அவ்வாதிசேஷனை நோக்கி 'மற்றோரவதாரத்தில் உமக்கு நான் தம்பியாய்ப் பிறந்து உம்மைப் பூஜிக்கக்கடவேன்' என்று வரமளித்திருந்தார். அவ்வவதாரங்கழிந்த வெகுநாளைக்குப் பின்னர் த்வாபரயுகத்தில், இப்பூமியில் முன் ராமாவதாரத்தில் ராமபாணங்களால் அடிபட்டு மரணமடைந்த அரக்கர்கள் க்ஷத்ரியஜாதியிற் பிறந்து ஜனங்களை நலிந்துகொண்டிருக்கையில், பகவான் மீண்டும் அவதரித்து முன்போலவே அவர்களையழிக்கக்கருதி ஆதிசேஷனை நோக்கி 'எனக்குமுன் நீர்போய் வஸுதேவர்க்குப் பிள்ளையாகப் பிறக்கவேணும்' என்ன,

ஆதிசேஷனும் அப்படியே வடமதுரையில் வஸிக்கும் வஸுதேவரென்கிற யது வம்சத்து க்ஷத்ரியனுடைய மனைவியாகிய தேவகியின் கருவில் புகுந்தார். பின்பு பகவான் தன்னுடைய யோகமாயையை யழைத்து 'நம்முடைய ஆதிசேஷன் தேவகியின் கருவிற் புகுந்திருக்கிறார், நீ போய் அந்தக் கருப்பிண்டத்தை அப்படியே யெடுத்து வஸுதேவருடைய முதல்மனைவியும் நந்தகோபருடைய கோகுலத்தில் வஸிப்பவளுமான ரோஹிணியின் கர்ப்பத்தில் வைத்திடு' என்று கட்டளையிட, அப்படியே தேவகியின் ஆறுமாதத்துக் கருப்பிண்டத்தை யோகமாயை பெயர்த்தெடுத்துக் கொண்டுபோய் ரோஹிணியின் வயிற்றிற் சேர்த்துவிட, சரத்காலத்துத் திங்கள் போன்ற வடிவையுடையாரய்ப் பலராமன் அவதரித்தார். பிறகு, ஒருத்திமகனுப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனுய் ஒளித்து வளருங் கண்ணபிரானிடத்தில் மிகவும் விருப்பமுற்றவராய் அப்பெருமானுக்கு ஒருவகைத் தீங்கும் நேரிடாதபடி பாதுகாவலாக இருந்துகொண்டு இணைபிரியாது வாழ்ந்துவந்தார். இவர்க்கு நம்பிமூத்தபிரான் என்பது ஸம்ப்ரதாயத் திருநாமம். இவர்க்குக் கலப்பை ஆயுதம். அதனுல் இவர்க்கு 'ஹலீ' என்றும் 'ஹலாயுதன்' என்றும் திருநாமங்கள் வழங்கும். ஒருகாலத்தில் பலராமர், பக்கத்தில் ஓடுகின்ற யமுநாநதியை நோக்கி 'ஓ யமுனுய்! நீ இங்கேவா; நான் நீராடவேண்டும்' என்றழைக்க, அவ்யமுனை அவர் மதுபானமயக்கத்தினுல் இப்படிச் சொல்லுகின்ருரென்று அவரது வார்த்தையை அவமதித்து அங்கே வாராதொழிய, அது கண்டு அவர் வெகுண்டு தமது கலப்பையைக் கையிலெடுத்து அதன் நுனியாலே அந்நதியை இழுக்க, அந்நதி தான்போகும்வழியை விட்டு அவரெழுந்தருளியிருக்கும் வனத்தில் வந்து பெருகியதன்றியும், தன்னுடைய சரீரத்தோடு அவர்க்கெதிரில் வந்து பயத்தினுலே மிகவும் நடுநடுங்கி விசேஷமாக வேண்டிக்கொள்ள, பின்பு அந்நதியை க்ஷமித்து அதில் நீராடின ரென்றும்,—ஒருகால் ஹஸ்திநாபட்டணத்தில் துரியோதனன் தன்மகளான லக்ஷணைக்கு ஸ்வயம்வரம் கோடிக்க, அக்கன்னிகையை ஸ்ரீக்ருஷ்ணனது மஹிஷிகளுள் ஒருத்தியாகிய ஜாம்பவதியின் குமாரனுன ஸாம்ப னென்பவன் பலாத்காரத்தால் தூக்கிக்கொண்டுபோக, துரியோதனுதியர் எதிர்த்து யுத்தஞ்செய்து அவனைப் பிடித்துக் காவலிலிட்டுவைக்க, அச்செய்திகேட்ட பலராமன், தான் அவனை விடுவித்து வருவதாய்ச் சொல்லிப்புறப்பட்டு அஸ்திநபுரத்திற் கெழுந்தருளி 'நம்முடைய ஸாம்பனை விடவேண்டும்' என்றருளிச் செய்ய, அக் கௌரவர்யாவரும் 'துஷ்டகாரியஞ்செய்த அவனை நாங்கள் விடமாட்டோம்' என்று ஒரேகட்டுப்பாடுடையவர்களாய் இகழ்ந்துபேச, பலராமர் அளவுகடந்த கோபங்கொண்டு எழுந்திருந்து 'குருகுலத்தார் வாஸஞ்செய்து கொண்டிருக்கின்ற இந்நகரத்தைக் கங்கையிற் கவிழ்த்துவிட்டுப் பூமியிற் கௌரவப்பூண்டில்லாமற் செய்துவிடுகிறேன், பாருங்கள்' என்று சொல்லித் தமது கலப்பையை மதிலின்மேலுள்ள நாஞ்சிலென்னும் உறுப்பில் மாட்டியிழுக்க, அதனுல் அப்பட்டணமுழுவதும் அசைந்து சாயவே, அது கண்டு கௌரவரெல்லாரும் மனங்கலங்கி வணங்கிவேண்ட, நம்பி மூத்த

பிரான் அவ்வளவோடு கலப்பையை வாங்கியருளினன் என்றுமுள்ள பலகதைகளினல் இவரது கலப்பையின் ஆற்றல் அறியத்தக்கது.

"ஒற்றைக்குழையும்—ஒருகாதுக்குழையும்" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம். இதற்கு அரும்பதவுரைகாரர்—"ஒருகாது என்றது கலப்பையை ஒருதோளிற் சுற்றிக்கொண்டு புறப்படுகையாலே ஒருகாதுக் குழையே புறம்புள்ளார்க்குத் தோற்றுமென்னுங் கருத்தாலே என்று கொள்வது" என்றுரைத்துள்ளார். மற்றும் பிரமாணகதிக்குப் பொருந்திய நிர்வாஹமுண்டேல் கண்டு கொள்வது.

கண்ணபிரானல் பல வேல்வேந்தர்கள் அமர்க்களத்தில் வீரஸ்வர்க்கத்திற்குச் செலுத்தப்பட்டபோது அதற்குப் பலராமன் துணையாயிருந்தது பற்றியும், கம்ஸனுடைய தம்பியாகிய ஸுநாமாமுதலிய பலமன்னர்களைத் தானே கொன்றிட்டதுபற்றியும் "வெற்றித் தொழிலார் வேல்வேந்தர் விண்பாற் செல்ல வெஞ்சமத்துச் செற்ற கொற்றத்தொழிலானை" என்றது.

செந்தீமூன்றுமில்லிருப்பக் கற்றமறையோர் கண்ணபுரம்—நித்தியாக்நிஹோத்ரிகளும் வித்வான்களுமான ஞானுனுட்டான ஸம்பந்நர்கள் திரண்டுவாழுமிடம் திருக்கண்ணபுரம் என்க. .... .... .... (அ)

துவரிக்கனிவாய் நிலமங்கை துயர்தீர்ந்துய்யப் பாரதத்துள் *
இவரித்தரசர் தடுமாற இருள்நாள் பிறந்த வம்மானை *
உவரியோதம் முத்துந்த வொருபாலொருபாலொண்செந்நெல் *
கவரி வீசும் கண்ணபுரத்து அடியேன் கண்டு கொண்டேனே. (கூ)

| | |
|---|---|
| துவரி கனி வாய் | இலவம் பூப்போலவும் கொவ்வைக்கனி போலவும் சிவந்த அதரத்தையுடையளான |
| நிலம் மங்கை | பூமிப்பிராட்டியானவள் |
| துயர் தீர்ந்து | (பாவிகளைச் சுமப்பதனு லுண்டான) துக்கம் தொலைந்து |
| உய்ய | சுகப்படும்படியும், |
| பாரதத்துள் | பாரதப் போரில் |
| இவரித்த | எதிரிட்ட |
| அரசர் | ராஜாக்கள் |
| தடுமாற | நிலைகுழம்பும்படியாகவும் |
| இருள் நாள் | இராப்பொழுதில் |
| பிறந்த | திருவவதரித்த |
| அம்மானை | ஸ்வாமியை,— |
| ஒரு பால் | ஒரு புறத்தில் |
| உவரி ஓதம் | கடலலைகள் |
| முத்து | முத்துக்களை |
| உந்த | ஒதுக்கித்தள்ளவும் |
| ஒரு பால் | இன்னொருபுறத்தில் |
| ஒண் | அழகிய |
| செந்நெல் | செந்நெற்பயிர்கள் |
| கவரி வீசும் | சாமரம்போல் வளைந்து வீசவும் பெற்ற |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே அடியேன் கண்டுகொண்டேன்—. |

* * *—பூமிதேவிக்குத் தன்மீது ஸஜ்ஜநங்கள் எத்தனை கோடிக் கணக்காக இருந்தாலும் அவர்களைச் சுமப்பது இலவம்பஞ்சைச் சுமப்பது போல வருத்தமற்றிருக்கும். ஒருதுஷ்டனுண்டாகிலும் இரும்பு மூட்டையைத் தாங்குவதுபோல

மிகவருத்தமாம். ஆகையால், த்வாபரயுகத்தில் இப்பூமியின்கண் பிறந்திருந்த கம்ஸன் சிசுபாலன் முதலிய அஸுரர்களின் பாரத்தைப் பொறுக்கமாட்டாமல் பூமிப்பிராட்டி கோரூபத்தைத் தரித்து மேருமலையினுச்சியிலுள்ள தேவர்களின் ஸபையையடைந்து, அச்சபை நடுவில் வீற்றிருக்கும் நான்முகனை வணங்கித் தனது துயரத்தை முறையிட்டு இவ்வஸுரர்களைத் தொலைத்துத் தன்னை ஸுகப் படுத்தவேணுமென வேண்டிக் கொள்ள, அதற்கு நான்முகன் சிறிதுகாலம் யோசித்து 'இது நம்மாலாகாது; ஸர்வஜ்ஞனுய் ஸர்வசக்தனுய் ஸர்வலோக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு அறிவித்து அவர் மூலமாக இக்காரியத்தை நிறைவேற்றுவிக்க வேணும்' எனக்கருதி அந்தப் பூமிதேவியையும் மற்றுமுள்ள தேவர்களையுங் கூட்டிக் கொண்டு போய்ப் பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமனைத் தொழுதுதுதித்தனர். பின்பு திருமால் அருள்புரிந்த சிந்தை கொண்டு அவர்கட்குக் காட்சிதந்து யோகக்ஷேமங்களை விசாரித்து அவர்கள் வந்த வரலாற்றை உணர்ந்தருளி 'ஓதேவர்களே! உங்கள் கருத்தை அறிந்து கொண்டேன்; முற்காலத்தில் வருணனுடைய சாபத்தினல் கச்யபரும் அவரது மனைவியான அதிதியும் இப்பொழுது வஸுதேவ தேவகிகளாகப் பிறந்திருக்கின்றனர்; இப்பிறவியில் அவர்களுக்கு நான் பிள்ளையாகப் பிறக்கிறேனென்று முன் வரமளித்திருக்கிறேன்; அங்ஙனமே நான் அவர்களுடைய கருவில் தோன்றி ஸாது பரித்ராணமும் துர்ஜந விநாசமும் தர்மஸம்ஸ்தாபநமும் செய்யக்கடவேன், நீங்கள் போகலாம்' என்று சோதிவாய் திறந்து அருளிச் செய்ய, அவர்கள் பரமாநந்தத்துடன் விடை பெற்றுப்போக, அவர்கட்கு அபயமளித்த வண்ணமாகவே வந்து அவதரித்தபடியைப் பேசுவன முன்னடிகள்.

மண்ணைக் காணப்படுகிற பூமிக்கு அதிஷ்டாந தேவதையாகிய பிராட்டிக்கு விசேஷணம் துவரிக்கனிவாய் என்பது.

இவரித்தரசர் தடுமாற = இவரித்தல்-எதிர்த்தல். இவரித்த + அரசர்-இவரித்தவரசர் எனச் சந்தியாக வேண்டுவது அங்ஙனம் ஆகாதது தொகுத்தல் விகாரம். "அரசர் தடுமாற இவரித்து இருள் நாள் பிறந்த அம்மானை" என்றும் அந்வயிக்கலாம்; அப்போது 'இவரித்து' என்பதை எச்சத்திரிபாகக் கொண்டு இவரிக்க என்றுரைத்துக் கொள்க. அன்றியே, உருபுபிரித்துக் கூட்டி 'இருள் நாள் பிறந்து பாரதத்துளரசர் தடுமாற இவரித்த அம்மானை' என்னவுமாம்.

க்ருஷ்ணபக்ஷத்தில் நடுநிசியில் அவதரித்ததுபற்றி 'இருள் நாள் பிறந்த' எனப்பட்டது.

ஒரு பக்கத்தில் கடலலைகள்வந்து முத்துக்களைக் கொழித்துத்தள்ளவும் மற்றொருபக்கத்தில் செந்நெற் பயிர்கள் கதிர்களை வணக்கிச் சாமரம் வீசுவது போல் அசையவும் அழகுமிக்கதாம் திருக்கண்ணபுரம்.

இங்கே ஒரு சங்கை:—திருக்கண்ணபுரத்திற்கு ஏறக்குறைய யோஜனை தூரத்திற்கப்பால் கடலுள்ளது; அப்படியிருக்க, கடல் அணித்தாயிருப்பது போல் மேற்றிருமொழியிலும் இத்திருமொழியிலும் அருளிச்செய்தது என்

கொண்டு? என்று; இந்த சங்கைக்கு நாம் என்னபரிஹாரம் சொல்வோம்; நம்மாழ்வாரும் திருவாய் மொழியில் (9–10–1.) வேலை மோதும் மதிள் சூழ் திருக்கண்ணபுரம் "என்றருளிச் செய்யக் காண்கிறோம்; முற்கால நிலைமையில் கடல் மிக அணித்தா யிருந்ததென்னலாம் போலும். .... .... (௯)

> மீனோடாமை கேழலரி குறளாய் முன்னு மிராமனாய்த்
> தானாய் * பின்னு மிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியு
> மானான்றன்னை * கண்ணபுரத்தடியன் கலிய னொலிசெய்த *
> தேனாரின்சொல் தமிழ்மாலை செப்பப் பாவம் நில்லாவே. (௧௦)

| | |
|---|---|
| மீனோடு | மத்ஸ்ய ரூபியாயும் |
| ஆமை | கூர்ம ரூபியாயும் |
| கேழல் | வராஹரூபியாயும் |
| அரி | நரஸிம்ஹ ரூபியாயும் |
| குறள் ஆய் | வாமநமூர்த்தியாயும் |
| முன்னும் இராமன் ஆய் | பரசுராம மூர்த்தியாயும் |
| தான் ஆய் | ஸாக்ஷாதவதாரமான ஸ்ரீராமபிரானாயும் |
| பின்னும் இராமன் ஆய் | பலராமனாயும் |
| தாமோதரன் ஆய் | கண்ணபிரானாயும் |
| கற்கியும் ஆனான் தன்னை | கல்கியாயும் திருவவதாரஞ் செய்யுமியல்பினனான எம்பெருமானை |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே (ஸேவித்து) |
| அடியன் | சேஷபூதரான |
| கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஒலி செய்த | அருளிச் செய்த |
| தேன் ஆர் இன் சொல் | தேன்போன்று மதுரமான சொற்களையுடைய |
| தமிழ் மாலை | இத்தமிழ்ப்பாசுரங்களை |
| செப்ப | அப்பயிக்குமளவில் |
| பாவம் | பாவங்கள் |
| நில்லா | நிற்கமாட்டாமல் அகன்றொழியும். |

* * *—தசாவதாரங்களையும் அடைவே அநுஸந்திக்கத் தொடங்கிய ஆழ்வார் கீழ்ப்பாட்டில் க்ருஷ்ணாவதாரத்தோடு நிறுத்தி இந்தநிகமநப் பாசுரமருளிச் செய்கிறாராயினும், பத்தாவது அவதாரமும் இனி நடக்கப்போகிறதுமான கல்கியவதாரம் இப்பாட்டில் சுருக்கமாக அநுஸந்திக்கப்படுகிறதென்று கொள்க.

புருஷோத்தமனாகிய ஸ்ரீமந்நாராயணன் க்ருஷ்ணாவதாரம் செய்தருளி மண்ணின் பாரத்தை நீக்கித் தருமநெறிகளை நிலைநிறுத்தித் தன்னடிச் சோதிக்கெழுந்தருள, உடனே இப்புவியில் கலிபுருஷன் செங்கோல்செலுத்தப் புகுந்து அதர்மம் அவிவேகம் அநாசாரம் முதலியவற்றை மெல்ல ஜனங்களிடத்தில் உண்டு பண்ணிக்கொண்டு வந்து நெடுநாள் வரையில் முற்றிவிட்டான். இங்ஙனம் கலி முற்ற முற்ற ஜனங்கள் அல்பாயுஸ்ஸுக்களாவர்கள்; சரீரத்தில் வளர்த்தியும் வலிவும் குறைந்துவிடப்போகிறது; அழகும் தெளிவும் தேஜஸ்ஸும் அடியோடே அழியப்போகிறது; அல்பபுத்திகளாகவும் ஆசாரஹீநர்களாகவும் கல்வியற்றவர்களாகவும் ஆகப்போகிறார்கள். பலசொல்லியென்? எல்லாம் தலைகீழாகப்போகி

றது. பாவிகள் எல்லையில்லாமல் நிற்கப்போகிறார்கள். அப்போது நிலமங்கை தாங்கமாட்டாமல் முன்போலவே எம்பெருமானிடம் சென்று முறையிடவும் அதற்கு அவர் நானே மீண்டும் வந்து அவதரித்துத் துயர்தீர்ப்பேன் என்று அபயமளிக்கவும் நேரப்போகிறது. பிறகு பகவான் வடதிசையின் கணுள்ள சம்பளக்கிராமத்தில் வாஸம் செய்கிற வைதிகோத்தமனான விஷ்ணுயசஸ் என்பவருடைய மனைவியாகிய ஸுமதியினுடைய கருவிற் புகுந்து பன்னிரண்டாண்டு உறைந்து வைசாகசுக்லத்வாதசியினன்று திருவவதரிக்கப்போகிறார். பிறகு வ்யாஸர் முதலிய பெரியோர்கள் சென்று அக்குழந்தைக்குக் கல்கியென்று பெயரிடப் போகிறார்கள். பிறகு கல்கிபகவான் வேதமோதுகைக்காகப் பரசுராமனை நாடிச் சிறிது நாள் குருகுலவாஸஞ்செய்து வேதங்களையும் அஸ்த்ரசஸ்த்ரங்களையுங் கற்று 'தருமபரிபாலனஞ் செய்வதே குருதக்ஷிணை' என்று அப்பரசுராமனளிப்பதைக் கொண்டாடி அதிலே கண்ணுங்கருத்துமாயிருந்து அவதாரகாரியத்தை முடிக்கைக்காக ஸங்கல்பம் செய்துகொண்டு, விச்வஜித் அச்வமேதம் முதலிய யாகங்களைச்செய்ய வேண்டுமென்று தந்தையிடம் அநுஜ்ஞைபெற்று அதற்காகத் திக்விஜயஞ்செய்யப் புறப்பட்டு, முந்துறமுன்னம் பௌத்தர்களின் ராஜ்யத்தை நோக்கிச்சென்று அவர்கள்மேல் படை யெடுத்து அங்குள்ளாரை யெல்லாம் தொலைத்திட்டு அங்குநின்றும் யவநர்களுடைய ராஜ்யத்திற் சென்று அங்குள்ள மிலேச்ச ஸேனைகளையும் அரசர்களையும் தான் குதிரைமேலேறிக் கத்தியைக் கையில் பிடித்துத் துண்டுதுண்டாக வெட்டியெறிந்து அத்தேசமெங்கும் ரக்த வெள்ளமும் பிணக்காடுமாக ஆக்கி, அத்தேசங்களில் தன்னை அநுவர்த்தித்து வரும் அரசர்களைப் பட்டாபிஷேகம் செய்வித்துத் தருமமார்க்க பரிபாலனம் செய்விக்கப்போகிறார். பிறகு கலிபுருஷன் மிக்க கோபத்துடனே உருவமெடுத்துக் கொண்டு அதர்மம் அஜ்ஞாநம்முதலியவற்றுக்கு அதிஷ்டாந தேவதைகளையுங் கூட்டிக்கொண்டு கோரரூபியாய்ப் படையெடுத்து வந்தெதிர்ப்பான். பின்பு பகவான் குதிரைமீதேறி அதிவிசித்திரமாக அச்சேனைத்திரளில் ஸஞ்சரித்துத் தான் பிடித்த கத்தியினால் அவர்களுடன் யுத்தஞ்செய்து அவர்கள் பிரயோகிக்கும் ஆயுதங்களையும் மாயைகளையும் நீறுக்கிச் சேனைகளை ஒன்றொழியாமற் கொன்று கலிபுருஷனைப் பலவகைகளிலும் பங்கப்படுத்தி அவனுடைய பராக்கிரமத்தை யெல்லாம் ஓய்வித்துப் பின்பு அவன் குடுமியைப்பிடித்திழுத்து அவனது கழுத்தின்மேற் கத்தியையெறிந்து வெட்டப்புகுங்காலத்தில் அக்கலிபுருஷன் பகவானைப் பலவகையாகவேண்டிக்கொண்டு பாதங்களிற்பணிந்து தன்னுயிரைமாத்திரம் தப்பவைத்துக்கொண்டு இவ்வுலகைவிட்டு ஓடிப்போய் ஒளிந்துகொள்வான். அதன்பின் அவனுடைய தோழர்களாகிய கோகன் விகோகன் என்ற இரண்டு பெயர் கலிபுருஷ னோடிப்போனதைக் கேட்டுக் கல்கிபகவான்மீது வெகு கோபங்கொண்டு எதிர்த்துவந்து யுத்தஞ்செய்ய, அவர்களை எத்தனையடி அடித்தாலும் அவர்கள் சாவின்றியே யிருப்பதைக் கண்டு இதற்கென்ன காரணமென்று யோசித்துக் கொண்டிருக்கையில் பிரமதேவன் வந்து 'ஸ்வாமின்! இவர்களிரு

வரையும் ஒருபொழுதே கொல்லவேணும்; தனித்தனியே இவர்கட்கு மரண முண்டாகாதபடி நான் வரங்கொடுத்திருக்கிறேன்' என்று சொல்லக்கேட்டுக் கல்கிபகவான் தன்னுடைய வஜ்ராயுதத்தையெடுத்து ஓங்கி இருவர்தலையிலும் அடிக்க அவர்கள் கீழேவிழுந்து மாண்டுபோவர்கள். இப்படி கல்கிபகவான் உலகத்தி லுள்ள துஷ்டர்களையெல்லாம் ஸம்ஹரித்து அதர்மத்தை வேரறுத்துத் தருமத்தை எங்கும் பரவச்செய்து கிருதயுகத்தைப் பிரவர்த்திப்பித்துத் தன் தாய்தந்தையர்க்கும் முத்தியளித்து, இங்ஙனம் தன்னுடைய அவதாரப்ரயோஜ நம் தலைக்கட்டினவாறே பதரிகாச்ரமத்துக் கெழுந்தருளி மற்றவர்களைப்போல் யோகாப்யாஸஞ் செய்து திருவாழி திருச்சங்கு முதலிய ஸகலலக்ஷணங்களோடுங் கூடிய தனது அப்ராக்ருத திவ்யஸ்வரூபத்தை ஆவிஷ்கரித்து, பின்பு பரம பதத்திலிருந்து அநந்த கருட விஷ்வக்ஸேநாதி நித்யஸூரிகள் பூர்ணகும்பமேந்தி ஸாமகானஞ் கோஷித்துக்கொண்டு வந்து திருவடிதொழ, சிறப்புடனே தன்னடிச் சோதிக் கெழுந்தருளப்போகிறார்—என்பது கல்கியவதார கதைச்சுருக்கம்.

இப்பாசுரத்தில் ஸ்ரீராமாவதாரத்தை "தானாய்" என்ற சொல்லால் குறிப் பிட்டதனால் மற்ற அவதாரங்களிற் காட்டிலும் ஸ்ரீராமாவதாரத்திற்குள்ள ஏற் றம் விளங்கும்.

ஆக, தசாவதாரங்கள் செய்தருளின பெருமான் விஷயமாகப் பாடின இத் திருமொழியைக் கற்போர் நித்ய நிஷ்கல்மஷராவர் என்று பயனுரைத்துத் தலைக் கட்டினாராயிற்று. .... .... .... ... . (௧௦)

அடிவரவு:—வான் மலங்கு பார் ஊன தொழு வடி வையம் ஒற்றை தவரி மீன் கைம்மானம்.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர்திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம்பத்து — ஒன்பதாந் திருமொழி,

# கைம்மானமதயானை.

திருக்கண்ணபுரத்தம்மானுக்கன்றி அடியேன் வேறொருவர்க்கு உரியேனல்லேன் என்கிறார் இத்திருமொழியில். .... .... .... *

கைம்மான மதயானை யிடர்தீர்த்த கருமுகிலை *
மைம்மான மணியை அணிகோள் மரதகத்தை *.
எம்மானை யெம்பிரானை யீசனை யென்மனத்துள்
அம்மானை * அடியேனடைந்துய்ந்து போனேனே. (க)

| | |
|---|---|
| மானம் கை மதம் யானை | நீண்ட துதிக்கையை யுடையதும் மதங்கொள்ளு மியல்வுடையதுமான கஜேந்திரனுடைய |
| இடர் | துயரத்தை |
| தீர்த்த | போக்கியருளின |
| கரு முகிலை | காளமேகம் போன்றவனும் |
| மை | மைபோன்ற நிறத்தையுடைய |
| மானம் மணியை | பெருவிலைபெறும் நீல ரத்னம்போன்றவனும் |
| அணி கொள் மரதகத்தை | அழகுபொருந்திய மரதகப்பச்சை போன்றவனும் |
| எம்மானை | எமக்கு ஸ்வாமியும் |
| எம்பிரானை | எமக்கு மஹோபகாரம் செய்தருள்பவனும் |
| ஈசனை | ஸர்வேச்வரனும் |
| என் மனத்துள் அம்மானை | என் நெஞ்சினுள் இருக்கும் ஸ்வாமியுமான ஸ்ரீசௌரிராஜனை |
| அடியேன் அடைந்து | அடியேன் ஆச்ரயித்து |
| உய்ந்து போனேன் | உஜ்ஜீவித்துப் போனேன். |

* * *—முதலையின் வாயிலகப்பட்டு இடர்ப்பட்ட கஜேந்திராழ்வானுடைய துயரத்தைத் தீர்த்து அதனால் திருமேனி புகரெழுந்து விளங்கப்பெற்று இன்னமும் அப்படிப்பட்ட திருமேனிவிளக்கத்துடனே திருக்கண்ணபுரத்திலே காட்சி தந்தருளும் பெருமானை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பெற்றேனென்கிறார்.

கைம்மானம்=கையில் பெருமையையுடையது; முன்கை மிடுக்குடைமையாலே அஞ்சாமல், மேல்விளைவதறியாதே பொய்கையிலிழிந்து ஆபத்துக்கு ஆளாயிற்றென்க. மதயானை=கஜேந்திராழ்வான் மதங்கொண்டிருந்தானென்று பொருளல்ல; மதங்கொள்ளுமியல்வுடையதென்று ஜாதிப்ராயுக்தவிசேஷணம் இது. யானையிடர்தீர்த்த=யானையின் இடராவது முதலைவாயிலகப்பட்ட துக்கமன்று; கையில்பறித்து வைத்துக் கொண்டிருக்கிற செந்தாமரைப்பூ செவ்வியழிவதற்கு முன்னே எம்பெருமானது திருவடிகளில் சாத்தப்பெறவேணுமென்பதே

கஜேந்திராழ்வானுடைய அபிநிவேசமாதலால் அவ்வாசை நிறைவேறப்பெருமை யால் வந்த துக்கமே இங்கு இடரெனப்படுகிறது; "𑌨𑌾𑌹𑌂 𑌕𑌲𑍇𑌬𑌰𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨! 𑌕𑌰𑌸𑍍𑌥𑌕𑌮𑌲𑌾𑌨𑍍𑌯𑍇𑌵 𑌪𑌾𑌦𑌯𑍋𑌰𑌰𑍍𑌪𑌿𑌤𑍁𑌂 𑌹𑌰𑍇𑌃 = நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந!—கரஸ்தகமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் ஹரே:" என்றது காண்க: இவ்வுடம்பைக் காப்பாற்றிக் கொள்ள நான் கரையவில்லை; கையிலுள்ள தாமரைப்பூவைத் திருவடிகளில் ஸமர்ப்பிக்கப் பெறவேணுமே என்றே கரைகின்றேனென்றவாறு.

இடர்தீர்த்தகருமுகிலை=அடியார்கள் துயர்தீர்ந்தால் அதனால் எம்பெருமானுடைய திருமேனியில் ஒரு புதியபுகர் உண்டாகும்; அதனை நினைக்கிறது இங்கு; "𑌅𑌭𑌿𑌷𑌿𑌚𑍍𑌯 𑌚 𑌲𑌙𑍍𑌕𑌾𑌯𑌾𑌂 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑌿𑌭𑍀𑌷𑌣𑌂। 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌦𑌾 𑌰𑌾𑌮𑍋 𑌵𑌿𑌜𑍍𑌵𑌰𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌮𑍋𑌦 𑌹 = அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்—க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்றதிறே ஸ்ரீராமாயணத்தில். ஸ்ரீராமபிரான் விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டி, அதனால் தன் காரியம் தலைக்கட்டிற்றாகவும் தன் துயர் தீர்ந்ததாகவுங்கொண்டு பொலிவுற்றான் என்பது இந்தச்லோகத்தின் கருத்து.

மைம்மாண்மணியை=ரத்நத்திற்கும் எம்பெருமானுக்கும் பலபடிகளாலே ஸாம்யமுண்டு;—

1. ரத்நத்தை ஸ்வயம் போக்யமாகவுங் கொள்ளலாம்; விற்பனை செய்து வேறுபொருள்களையும் பெறலாம். அப்படியே, எம்பெருமானை ஸ்வயம் புருஷார்த்தமாகவுங் கொள்ளலாம்; அன்றி அவனை உபாயமாக்கி வேறு புருஷார்த்தங்களையுங் கொள்ளலாம்; அதாவது—எம்பெருமானுடைய உபேயத்வ உபாயத்வங்களைச் சொன்னபடி. 'எம்பெருமானே! எனக்கு நீயே அமையும்; உன்னிடத்திற் பெறுவதொரு பேறும் எனக்குவிருப்பமில்லை' என்றிருக்குமதிகாரிகள் ரத்நத்தை ஸ்வயம்போக்யமான ஹாரமாகக் கொள்ளுமதிகாரிகளோடும், எம்பெருமானைக் கொண்டு ஐச்வர்ய கைவல்யாதிகளைப் பெற விரும்புவார் ரத்நத்தை விற்று ஜீவிக்குமதிகாரிகளோடும் ஒப்பர்களிறே.

2. ரத்நத்தை மதிப்பறியாதவன் அற்பவிலைக்கு விற்பன்; மதிப்பறிந்தவன் உள்ளவிலைக்கு விற்பன்; உத்தமாதிகாரி அதனை விற்பனை செய்யாதே மார்பிலணிந்து அநுபவித்து மகிழ்வன்; ஆகவே, அற்பவிலைக்கு மாறுதல், உள்ளவிலைக்கு மாறுதல், விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம்போக்யமாகக் கொள்ளப்படுதல் என மூன்று தன்மைகள் ரத்நத்துக்கு அதிகாரிபேதத்தால் கூடுகின்றன. காண்மின்;—கடலிலே வலைவீசி மீன்பிடித்து ஜீவிக்கும் செம்படவன்கையில் மீன்களிடையே விலையுயர்ந்த ரத்னமொன்று கிடைத்தால் அதன் மதிப்பை அவன் அறியமாட்டாதவனாதலால் அவன் அந்த ரத்நத்தைக் கொண்டுபோய் ஒரு வர்த்தகனிடத்திலே மிகக்குறைந்தவிலைகூறி விற்றுவிடுகிறான்; அந்த வியாபாரி, தான் ரத்தினத்தின் மதிப்பு நன்குணர்ந்தவனாகையாலும் வியாபாரமே ஜீவிகை

யாகவுமுடையவனுகையாலும் அவன் அதைக் கொண்டுபோய் ஒரு மஹாராஜனிடத் திலே கிரமமாக அதற்குள்ள விலைகூறி விற்றுவிடுகிறுன்; பின்பு அந்த மஹா ராஜன் அந்த ரத்னத்தை தான் விற்பனைசெய்ய நினையாதே அதனைப் பெரிய தொரு ஹாரத்திலே இணைத்து ஸ்வயம்போக்யமாக அமைத்துக்கொள்ளுகிறுன்: ஆக இச்செய்தியில் ஒரு ரத்தினத்துக்கே மூன்று தன்மைகள் உண்டாகின்றன. எம்பெருமானுகிற ரத்நத்துக்கும் இங்ஙனே மூன்று தன்மைகள் கூடாநின்றன;— ரத்நத்தின் மதிப்பை அறியமாட்டாது அதனை அற்பவிலைக்கு விற்கும் செம்பட வனைப் போல எம்பெருமானது சீர்மையையறிய மாட்டாத சிற்றறிவாளர் அவ னைக்கொண்டு ஐச்வர்ய கைவல்யாதி க்ஷுத்ரபலன்களைக் கொள்வர்; ரத்நத்தைக் குறைந்தவிலைக்குக் கொடாதே தகுந்தவிலைக்கு விற்கும் வர்த்தகனைப்போன்ற மத்யம அதிகாரிகள் எம்பெருமானை மோக்ஷோபாயமாக அபிமாநித்து க்ஷுத்ர பலனைக் கொள்ளாதே மோக்ஷபுருஷார்த்தத்தைக் கொள்வர்; ரத்நத்தை ஒன்றுக் கும் ஸாதநமாக்காதே ஸ்வயம்போக்யமாகக் கொள்ளும் மஹாராஜனைப் போன்ற உத்தமாதிகாரிகள் எம்பெருமானை ஒன்றுக்கும் ஸாதநமாகக்கோலாதே 'எனக் குத் தேனேபாலே கன்னலேயமுதே திருமாலிருஞ் சோலைக்கோனே' என்று ஸ்வயம்போக்யமாகக் கொண்டு வர்த்திப்பர்கள்.

3. ரத்நத்தை இழந்தவன் கதறிக் கதறியழுவன். எம்பெருமானையிழந்தவ னும் அப்படியே. ஸ்ரீராமரத்நத்தையிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதானிறே; "தச்ருத்வா பரதோ வாக்யம் சோகேநாபிபரிப்லுத:......விலலாப ஸபாமத்யே = தத் ச்ருத்வா பரதோ வாக்யம் சோகே நாபிபரிப்லுத:—விலலாப ஸபாமத்யே" என்றது காண்க. பழுதேபலபகலும் போயினவென்று கதறியழுவர்கள். "இன்பத்தையிழந்த பாவியேனெனதாவி நில் லாதே" "எழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந் தன்னையுமிழந்தேனிழந் தேனே" "உன்னைக் காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கியழுவன்" என் றிப்படி யெல்லாம் கதறுவர்கள். "ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே। தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம் = ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாகவர்ஜிதே—தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்." எம்பெருமானுடைய சிந்தனையையிழந்து ஒரு கணப்பொழுது கழியப் பெற்றாலும், கள்வர் ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண் டால் எப்படி கதறியழக்கூடுமோ அப்படி கதறியழவேணுமென்பர் அறிவுடை யார்.

4. ரத்நமுடையவன் மார்பு நெறிப்பன். எம்பெருமானைக் கைக்கொண்ட வர்களும் "எனக்காரும்நிகரில்லையே" "மாறுளதோ இம்மண்ணின்மிசையே" "எனக்கென்னினிவேண்டுவதே" "இல்லை யென்க்கெதிரில்லை யெனக்கெதிரில்லை யெனக்கெதிரே" என்று செருக்கிப் பேசுவர்கள்.

5. ரத்நமுள்ளவனை உலகமெல்லாம் அநுவர்த்திக்கும். எம்பெருமானைக் கைக்கொண்டவனையும் அப்படியே; "ஸ்ரேயஸ் ஸரிஸ்ருஷ்டு ஸ்ருஷ்டவந்தும்

ஸிவாஜ்ஞ்வ—மைத்ரேயः பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச." இத்யாதிகள் காண்க.

6. இடையில் ஒரு புருஷனைக்கொண்டே ரத்நம் வாங்கப்படும்; புருஷகாரமின்றி எம்பெருமானைப் பெறமுடியாது; "வேதம்வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" இத்யாதி.

7. ரத்நத்திற்குச் சிலசில ஆச்ரயங்களில் மதிப்பு அதிகப்படும்; எம்பெருமானுக்கும் அப்படியே. ஆழ்வார்கள் திருவாக்கில் புகுந்துபுறப்பட்ட திருப்பதிகளிலேயிறே எம்பெருமானுக்கு மதிப்பு அதிகம்.

8. ரத்நம் ஒளியைவிட்டு இராது; எம்பெருமானும் பிராட்டியைவிட்டு இரான். "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ=தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ." இத்யாதிகள் காண்க.

9. ரத்நத்துக்கு ஒளியால் மஹிமை; எம்பெருமானுக்கும் பிராட்டியால் ஏற்றம்; "ஸ்ரியா தேவோ தேவஸம்ஸ்ருதே" என்றான் வேதபுருஷன். இராவணன் மாரீசனிடம்வந்து 'இராமனை அடர்க்க நீ துணை நிற்கவேணும்' என்று இரக்க, "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா—அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்றன்றோ விடைகூறினது; ஸீதாபிராட்டியைக் கைப்பிடித்தவனன்றோ இராமபிரான்; அவனை அடர்க்கலாகுமோ? என்றான்.

10. ரத்நத்துக்கு ஒளியால் ஏற்றமென்றாலும் ரத்நத்தின் ஸ்வதந்த்ர மஹிமைக்கு ஒருகுறையில்லை; எம்பெருமானுக்கு மப்படியே. இவ்விஷயத்தை ஸ்ரீபட்டர் அருளிச்செய்த ஸ்ரீகுணரத்நகோசத்தில்—"ஸ்ருதः ஸ்ரீஸூக்தம் விஷ்ணோः ஸூக்தமபி ததனவேக்ஷ மஹிமா ஸ்வதாயத்தே தேவஸ்ய மஹிமா ஸ்ரீநவீந வः ஸ்ரியா ஸ்த்ரீத்வாத் ரத்நம் மஹிமா ஸாஹாயம் நவித்ராணம் நகாண்ஸ்ரீதாத்ரம் மஹிம நவாந்யாஹிதத்ராணம்." என்ற ச்லோகத்தினால் தெளிக.

11. ரத்நம் கடல், மலை முதலிய இடங்களில் உள்ளது; எம்பெருமானும் திருப்பாற்கடல் திருமலை முதலான இடங்களில்.

12. ரத்நம் எவ்வளவு விலையுயர்ந்ததாயினும் தலைப்பில் முடிந்து ஆளலாம்படி யிருக்கும்; எம்பெருமானும் பரத்வத்தைமறைத்து ஸௌலப்யத்தைக் காட்டுவனிறே.

13. ரத்நம்பெற்றவர்கள் இரவும்பகலும் கண்ணுறங்கமாட்டார்கள்; எந்த வேளையில் யார்கொள்ளைகொள்வரோ வென்று துஞ்சாதிருப்பர்கள்; எம்பெருமானைப் பெற்றவர்களும் அப்படியே; "கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் * ஸதாபச்யந்தியாகையாலே உறக்கமில்லை.

இங்ஙனே மற்றும் பல உவமைப்பொருத்தங்கள் கண்டு கொள்க.

அணி கோள் மரதகத்தை=பசுமை நீலம் கருமை என்ற நிறங்களை அபேதமாகக் கூறுவது கவிமரபாதலால் எம்பெருமானுடைய காளமேகத் திருவுருவத்திற்கு மாதகப்பச்சையையும் உவமை கூறுவதுண்டு: "பச்சை மாமலைபோல் மேனி" என்ற திருமாலையுங்காண்க; காணப்புக்கவர்களின் கண்ணையும் நெஞ்சையும் குளிர்வித்து அவர்களுடைய ஸம்ஸார தாபங்களையெல்லாம் போக்குந்தன்மையும் இவ்வுவமையினுல் தொனிக்கும். .... .... (க)

தருமான மழைமுகிலைப் பிரியாது தன்னடைந்தார் *
வருமானம் தவிர்க்கும் மணியை அணியுருவில் *
திருமாலை யம்மானை யமுதத்தைக் கடற்கிடந்த
பெருமானை * அடியேனடைந்துய்ந்து பிழைத்தேனே (உ)

| | |
|---|---|
| தரு | கல்பவிருக்ஷம் போன்றவனும் |
| மானம் | பெரிய |
| மழை முகிலை | காளமேகம்போன்றவனும், |
| பிரியாது | ஒரு காலும் விட்டுநீங்காமல் |
| தன் அடைந்தார் | தன்னைவந்து பணிந்தவர்கட்கு |
| வரும் | நேர்கின்ற |
| மானம் | அவமானத்தை |
| தவிர்க்கும் | போக்குகின்றவனும் |
| மணியை | நீலமணிபோன்றவனும் |
| அணி உருவின் | அழகியவடிவத்தையுடைய |
| திரு மாலை | லக்ஷ்மீநாதனும் |
| அம்மானை | ஸர்வசேஷியாயிருப்பவனும் |
| அமுதத்தை | அமிருதம்போன்றவனும் |
| கடல் கிடந்த பெருமானை | திருப்பாற்கடலில் திருக்கண்வளர்ந்தருளும் பெருமானுமான ஸ்ரீசௌரிப் பெருமாளை |
| அடியேன் அடைந்து உய்ந்து பிழைத்தேன்.— | |

* * *—"தருமான மழை முகிலை" என்றது—'தருவை, மானமழை முகிலை' என்றபடி. தரு என்னும் வட சொல் விருக்ஷமென்று பொதுப் பொருள் படுமாயினும் இங்கே கல்பவ்ருக்ஷமென்று சிறப்புப் பொருள் படும். வேண்டுவார் வேண்டின பலன்களைக் கொடுப்பதில் கல்பவிருக்ஷத்தை நிகர்த்தவன் என்க. "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்று கல்பவ்ருக்ஷத்திற்காட்டிலும் ஏற்றமும் அருளிச்செய்வர் நம்மாழ்வார்; கல்பவ்ருக்ஷமானது தன்பக்கலிலுள்ளவற்றைக் கொடுக்குமே யன்றித் தன்னைக் கொடுக்க மாட்டாது; எம்பெருமான் அங்ஙனன்றியே, பலன்களையுங் கொடுத்துத் தன்னையுங் கொடுத்தருள்வன் என்று.

இருந்தவிடத்திலிருந்து கொண்டே உதவுகின்ற கல்பவ்ருக்ஷத்தை உவமை கூறினவளவால் த்ருப்திபெருதவராய்ப் பெரிய காளமேகத்தை உவமைகூறுகின்ருர் மான மழை முகிலை என்று. 1. "உயிரளிப்பான் மாகங்களெல்லாந் திரிந்து நன்னீர்கள் சுமந்து" என்ருற்போலே நீரைச்சுமந்து கொண்டு நாடெங்குஞ் சென்று ஆங்காங்கு வர்ஷிக்கும் மேகமே 2. "விண்மீதிருப்பாய் மலைமேல்

1. திருவிருத்தம்-32. 2. திருவாய்மொழி 6—9—5.

நிற்பாய் கடல் சேர்ப்பாய், மண்மீதுழல்வாய்" என்னப்படுகிற எம்பெருமானுக்குப் பொருத்தமான உவமையாகும். அடியாருள்ள விடந்தேடிச் சென்று உதவுமவனிறே.

பிரியாது தன்னடைந்தார் வருமானந்தவிர்க்கும்=அடியர்கட்கு ஏதேனும் அவமானமுண்டானல் ஆனைத்தொழில்களுஞ் செய்து அதைப் போக்கியருள்பவன் எம்பெருமான். இதற்குப்பல இதிஹாஸங்களுள்ளன வாகிலும் இங்கே ஒரு இதிஹாஸங்காட்டுவோம்;—பண்டைக்காலத்தில் ஸூர்யவம்சத்து அரசர்களில் அம்பரீஷனென்பானெருவன் பரமபகவத்பக்தனய் விளங்கி வந்தான். இவனுடைய ஞானபக்தி விரக்திகளை நோக்கி மிகத் திருவுள்ள முவந்த எம்பெருமான் ஸர்வகாலத்திலும் இவனைப் பாதுகாத்தற் பொருட்டுத் தனது திருவாழியாழ்வானை எப்போதும் இவ்வரசனுடைய மாளிகையிலேயே கோயில்கொண்டிருக்கும்படி நியமித்திருந்தான். இப்படியிருந்து வருகையில், அவ்வரசன் பகவதாராதநரூபமாய் ஒரு ஸம்வத்ஸரம் அநுஷ்டித்துத் தலைக்கட்ட வேண்டியதான த்வாதசீவ்ரதமொன்றை அநுஷ்டித்து, விரதம் முடிவாகும் த்வாதசியன்று விசேஷமாக அந்தணர்கட்கு தக்ஷிணைகள்கொடுத்து அவர்களுடைய நியமனம்பெற்றுக்கொண்டு பாரணை பண்ணப் புகுமளவில், துர்வாஸ மஹர்ஷி அதிதிபூஜைபெற்றுக்கொள்ள அங்கு வந்து சேர்ந்தார். மிகச்சிறந்த தபோநிதியாகிய இந்த அதிதி எழுந்தருளினதைக் கண்டு பரமஸந்தோஷமடைந்த பிரபு உபசாரங்களை விதிப்படி நடத்தி 'தேவரீரும் பாரணை கோஷ்டியில் எழுந்தருளியிருந்து அமுது செய்யவேணும்' என்று விநயமுடன் வேண்டிக் கொண்டான். மஹர்ஷியும் அதற்கு இசைந்து 'மாத்யாஹ்நிக அநுஷ்டாநங்களை நிறைவேற்றி வருகிறேன்' என்று சொல்லி யமுனைக்குச் சென்றார். சென்றவர் அநுஷ்டாநங்களில் மிக ஊன்றித் தாமதிக்கையில் த்வாதசிதிதியானது கழிந்துபோகுந்தருணமாயிற்று; ஸங்கல்ப பூர்வகமாக இந்த விரதத்தை அனுட்டித்து வந்த அரசன் "த்வாதசிதிதி ஸமாப்தியடைவதற்கு முன்னே பாரணை செய்யாவிடில் வ்ரத லோபம் விளையும்; எழுந்தருளின அதிதியை உபேக்ஷித்துப் பாரணை செய்தால் மஹத்தான பாபம் விளையும்; இங்ஙனே தர்மஸங்கடமாக நேர்ந்து விட்டதே!, இதற்கு என் செய்வோம்!" என்று மிக்க கவலைகொண்டு வல்லவர்களான அந்தணர்களைத்திரட்டி இப்போது என்னசெய்யத்தக்கதென்று விமர்சித்தான். 1. "ஸவொஹூாதி தநூவாஶிதம் நெவாநஶிதம் நக்ஷொயூகொ ஹவதி" என்ற வேதவாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு "ஸம்ஹஸா கெவடுெநாய கஶிஷெ்ாவூதவாரணாம் ஸூஹூரஷூக்ஷணம் விஹூா ஸூஶிதாநஶிதம்வ யஜ." என்று தீர்மானித்து, தீர்த்தபாரணை செய்து விட்டு ப்ரஸாத பாரணைக்காக துர்வாஸமஹர்ஷியின் வரவை எதிர்பார்த்திருந்தான். பிறகு வந்து சேர்ந்த மாமுனிவர், தம்மை அவமதித்து அரசன் ஜலபாரணை செய்து விட்டதாகக் கருதி மிகுந்த சீற்றங் கொண்டு தம் தலையில் நின்று ஒரு சடைமயிரைக் களைந்தெடுத்து அதனல் காலாக்நியோ

1. தைத்திரீயயஜுஸ்ஸம்ஹிதா 1—6—

டொத்த ஒரு $ க்ருத்யையை உண்டாக்கி, அம்பரீஷனை நலியுமாறு ஏவினர். மிக்கபயங்கரமாய்த்தன்னை நோக்கி விசைத்து வருகின்ற அதனைக் கண்டும் அம்பரிஷன் சிறிதும் நிலைகலங்காது எம்பெருமானையே சிந்தித்திருந்தான். இவனுடைய பாதுகாவலின் பொருட்டு மாளிகையில் ஸ்தாபிக்கப்பட்டிருந்த சக்கரத்தாழ்வான் அந்த க்ருத்யையை நீறுக்கிவிட்டது மல்லாமல் துர்வாஸ முநியைத் தான் தொடாத் தொடங்கவே, அம்முனிவர் எத்திசையு முழன்றோடியும் புகல் பெறுமல் திருமால் திருவடிகளில் வந்துவிழ, ஸ்ரீமந்நாராயணனும் 'அம்பரீஷர் திருவடியே உமக்குப் புகல்' என்று காட்டிக் கொடுக்க, பிறகு முனிவன் அரசனையே சரணம்புகுந்து உயிர் பிழைத்து வாழ்ந்தார் என்பதாம். (உ)

விடையே ழன்றடர்த்து வெகுண்டு விலங்கலுற *
படையா லாழிதட்ட பரமன் பரஞ்சோதி *
மடையார் நீலமல்கும் வயல்சூழ் கண்ணபுரமொன்
றடையானுக்கு * அடியேன் ஒருவர்க் குரியேனோ? (௩)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் (நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக) | பரம் சோதி | சிறந்த தேஜஸ்ஸ்வரூபியும் |
| | | மடை ஆர் | மடைகளெங்கும் நிரம்பிய |
| | | நீலம் | நீலோற்பல மலர்கள் |
| ஏழ்விடை | எழுரிஷபங்களை | மல்கும் | வியாபித்திருக்கப் பெற்ற |
| வெகுண்டு | சீறிக்கொண்டு | வயல் | கழனிகளாலே |
| அடர்த்து | வலியடக்கினவனும், | சூழ் | சூழப்பட்ட |
| விலங்கல் | த்ரிகூடபர்வதத்தில் | கண்ணபுரம் ஒன்று | திருக்கண்ணபுரமென்கிற ஒரு விலக்ஷண திவ்யதேசத்தை |
| உற | சென்று சேரும்படியாக | | |
| படையால் | (வாநர) ஸேனைகளைக் கொண்டு | உடையானுக்கு | (இருப்பிடமாக) உடைய பெருமானுக்கு |
| ஆழி | ஸமுத்ரத்தை | அடியேன் | சேஷபூதனான நான் |
| தட்ட | அடைத்தவனும், | ஒருவர்க்கு | வேறுசிலர்க்கு |
| பரமன் | எல்லாரினுஞ் சிறந்தவனும் | உரியேனோ | உரிமைப்படுவேனோ? |

* * *—நப்பின்னைப்பிராட்டியின் கலவிக்கு இடையூறாயிருந்த ஏழு காளைகளைவலியடக்கி அவளை மணந்து கொண்டவனும், வானரப்படைகளைக் கொண்டு கடலில் அணைகட்டினவனும், திருக்கண்ணபுரமென்கிற ஒரு விலக்ஷணமான திருப்பதியை இருப்பிடமாகக் கொண்டு மேனணித் திருப்பவனுமான எம்பெருமானுக்கன்றி வேறொருத்தனுக்கும் உரியேன்னல்லே னென்று திருமந்த்ரார்த்தமான அநந்யார்ஹசேஷத்வத்தை அநுஸந்தித்தாராயிற்று.

விலங்கலுறப் படையாலாழிதட்ட பரமன்=ஆழி விலங்கலுறப் படையால் தட்ட பரமன் என்றும் அந்வயித்து உரைப்பர். ஆழி—ஸூர்யனெனவன், விலங்

$ க்ருத்யையாவது—பிசாச முதலிய வுருவமான ஏவல் தேவதை.

கல் ஊற—(அஸ்தமன) பர்வதத்தில் சேர்க்து விட்டானென்னும்படி, படையால்—சக்கரப்படையினால், தட்ட—மறைத்த—என்று பொருள் காண்க. அர்ஜுநன் பதின்மூன்றாம் நாட்போரில் தன்மகனான அபிமந்யுவைக்கொன்ற ஜயத்ரதனை மறுநாள் ஸூர்யன் அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்வதாகப் பல பிரதிஜ்ஞைகள் செய்ய, அது நிறைவேறக் கூடாதென்று அந்த ஜயத்ரதனை எதிரிகளால் உட்புக முடியாதபடியாக வியூஹத்திலே நிறுத்திக் காப்பாற்றிக் கொண்டிருந்த ராஜாக்களின் முன்னே ஸ்ரீக்ருஷ்ணன் பகல் நாழிகை முப்பதும் சென்றதாகத் தோன்றும்படி, நினைவறிந்து காரியஞ் செய்யும் தனது சக்ராயுதத்தைக் கொண்டு ஸூர்யனைமறைக்க, 'ஆதித்யன் அஸ்தமித்தான், இனி நமக்குப் பிராணபயமில்லை; அர்ஜுநன் பிரதிஜ்ஞை செய்திருக்கிறபடியே அக்நிப்ரவேசம் செய்யப் போவதைக் கண்டுகளிப்போம்' என்றெண்ணி ஜயத்ரதன் வெளிப்பட்டு நின்றவளவிலே, கண்ணபிரான் ஸுதர்சநாழ்வானை மீட்டுக் கொள்ள, ஸூர்யன் இன்னும் அஸ்தமிக்கவில்லையென்று உணர்ந்து கொண்ட அர்ஜுநன் உடனே தனது அம்பைக் கொண்டு அந்த ஜயத்ரதனைத்தலையறுத்து விட்டனன் என்ற வரலாறு அறிக. "ஸுதர்சநம் பாஸ்கர கோடிதுல்யம்" என்கிறபடியே கோடிஸூர்ய ப்ரகாசமான திருவாழியைக் கொண்டு ஸூர்யனைமறைத்தல் எங்ஙனம் கூடுமெனில்; ஸூர்யனுடைய ஒளி கண்ணாலே காணலாம்படி அளவுபட்டிருத்தலால் இருட்டைப்போக்கும்; அப்படியல்லாமல் திருச்சக்கரத்தினொளி நேராகக்கண் கொண்டு பார்க்கமுடியாதபடி அளவுபடாத மிக்க பேரொளியைக் கொண்டுள்ளதனால் பளபளத்துக் கண்களை இருளப்பண்ணுமெனச் சமாதானங் கூறுவர் பெரியோர். மற்றுஞ் சிலவகையான ஸமாதானங்களுங் கூறுவாருளர்.

'கண்ணபுரமுடையானுக்கு' என்னாமல் 'கண்ணபுரம் ஒன்று உடையானுக்கு' என்றது இத்திருப்பதியின் சிறப்பை விளக்கும்; எம்பெருமான் எத்தனையோ இடங்களை உடையனாயிருந்தாலும் திருக்கண்ணபுரமே அத்விதீயமான இடம் என்பது போதரும். .... .... .... (௩)

மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை * என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையை *
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த *
அக்காரக்கனியை அடைந்துய்ந்து போனேனே. (௪)

| | |
|---|---|
| மிக்கானை | சிறந்தவனும் |
| மறை ஆய் விரிந்த விளக்கை | வேதமாக விரிவுபெற்ற விளக்குப் போன்றவனும் |
| என்னுள் புக்கானை | என்னெஞ்சினுள்ளே புகுந்திருப்பவனும் |
| புகழ் சேர் | கீர்த்தி வாய்ந்தவனும் |
| பொலிகின்ற பொன் மலையை | ஜ்வலிக்கின்ற பொன் மலை போன்றவனும், |
| தக்கானை | தகவுடையவனும் |
| கடிகை தட குன்றின் மிசை இருந்த | கடிகையென்னும் பெரிய திருமலையின்மீது எழுந்தருளியிருக்கின்ற |
| அக்காரக் கனியை | அக்காரக் கனியுமான திருக்கண்ணபுரத்தெம்பெருமானை |
| | அடைந்து உய்ந்து போனேன்— |

* * *—மிக்கான்—மிகுந்தவன்; ஸர்வஸ்மாத்பரன் என்றபடி. "மறையாய் விரிந்த விளக்கை" என்பதற்கு இரண்டு வகையான நிர்வாஹங்களுண்டு; "வேறொன்றால் காணவேண்டாதே தனக்குத்தானே ப்ரகாசகமாயிருப்பது; ப்ரமாணங்களாலே அறியப் பார்க்குமன்று அவற்றாலே ப்ரகாசிக்கிற மேன்மைக்கு எல்லையின்றிக்கே யிருப்பது." என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான அருளிச்செயல். இதனால், எம்பெருமானே மறையாய் விரிந்தவன் என்றதாகிறது. ஆசார்யஹ்ருதயத்தின் முதல் சூர்ணிகையில் "மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதிபமான கலைகளை நீர்மையினாலருள் செய்தான்" என்றருளிச் செய்தபடியை நோக்குங்கால் மறையாய் விரிந்த விளக்கென்று அகாரத்தைச் சொல்லிற்றாக விளங்குகின்றது. அவ்விடத்து ஸ்ரீமணவாளமாமுனிகள் வியாக்கியானத்தில் அகாரபரமாகவே தெளிவாக வியாக்கியானம் செய்தருளப்பட்டிருக்கிறது. "அகாரோ வை ஸர்வா வாக்" (எல்லாவாக்குக்களும் அகாரமே) என்கையாலே, அகாரந்தானே நான்மறைகளாகப் பரம்பிற்றென்ப. ஆக, 'மறையாய் விரிந்த விளக்கு' என்று அகாரத்தைச்சொல்லிற்றாகிலும் அகாரவாச்யனை எம்பெருமானே இவ்விடத்திற்குப் பொருள்; வாச்யவாசகபாவஸம்பந்தத்தைப் பற்றினது ஸாமாநாதிகரண்யம் ஆக, இரண்டுவகையான நிர்வாஹங்களும் அறியத்தக்கன.

போலிகின்ற பொன் மலையை="கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன்" என்றார் பெரிய திருமடலிலும்.

தக்கான் = சோளஸிம்ஹபுரமென்று வழங்கப்படுகிற திருக்கடிகைப்பதியெம்பெருமானுடைய திருநாமம். பரமதயாளு என்றபடி.

கடிகைத் தடங்குன்று = 'கடிகா' என்னும் வடசொல் கடிகையெனத் திரிந்தது; நாழிகை என்றபடி. ஒருவர் ஒரு நாழிகைப்பொழுது இத்தலத்தி லுறைந்தாலும் அவர்க்கு முத்தி கிடைக்குமாதலால் இத்தலத்திற்குக் கடிகையென்று திருநாமமென்பர். இது சோளதேசம் போன்று வளம்மிக்கு நரசிங்கமூர்த்தி உறைதற்கு இடமாயிருத்தல் பற்றி சோளஸிம்ஹபுரமென்று வழங்கப்படும். சோளஸிம்ஹராஜனது புரமென்றும் பொருள் கூறுவர்.

அக்காரக்கனி=இதுவும் அத்தலத்து எம்பெருமானது திருநாமம். அக்காரம் (வெல்லக்கட்டி) போலவும் கனி போலவும் மதுரமாயிருப்பவன் என்க. அக்காரத்தில் தோன்றிய கனி எனவுமாம். அதாவது—அக்காரத்தைக் கொம்பு ஸ்தானத்திலே நிறுத்தி, அதில் நின்று முண்டான கனி எப்படி விலக்ஷணமான இனிப்போடு கூடியிருக்குமோ, அப்படி எம்பெருமான் விலக்ஷணபோக்யன் என்றவாறு.

இத்திருமொழியில் பல பாசுரங்களில் திருக்கண்ணபுரத்தின் திருநாம இலச்சினை இல்லையாயினும் நிகமனப் பாசுரத்தில் "கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை" என்று நலக்கட்டுகையாலே சௌரிப்பெருமாளையே தக்கானாகவும் அக்காரக்கனியாகவும் திருக்குடந்தையாராவமுதனாகவும் வயலாலிமைந்தனாகவும்

பேசி யநுபவிக்கிறாரென்று கொள்க. இம் ஏழாம்பத்தில் திருநறையூர்ப் பதிகங்களுள் "கறவாமடநாகு" "சினவிற்செங்கண்" என்னுந் திருமொழிகளின் போக்கும் இத்தகையதே. .... ... .... (௪)

வந்தா யென்மனத்தே வந்துநீ புகுந்தபின்னை *
எந்தாய்! போயறியா யிதுவே யமையாதோ? *
கொந்தார் பைம்பொழில்சூழ் குடந்தைக் கிடந்துகந்த
மைந்தா! * உன்னை யென்றும் மறவாமைப் பெற்றேனே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| எந்தாய் | எம்பெருமானே! | பை பொழில் | பரந்த சோலைகளினால் |
| என் மனத்தே | என் நெஞ்சினுள்ளே | சூழ் | சூழப்பட்ட |
| நீ வந்தாய் | நீ வந்துபுகுந்தாய்; | குடந்தை | திருக்குடந்தையிலே |
| வந்து புகுந்த பின்னை | அங்ஙனம் வந்து சேர்ந்த பின்பு | கிடந்து | சாய்ந்தருளி |
| போய் அறியாய் | திரும்பிப்போவதை அடியோடு மறந்திட்டாய்; | உகந்த | திருவுள்ளமுவந்த |
| இதுவே | இந்தப் பேறுதானே | மைந்தா | ஸுந்தரனே!, |
| அமையாதோ | போராதோ? | உன்னை | உன்னை |
| கொந்து ஆர் | கொத்துக்கள் நிரம்பிய | என்றும் | என்றைக்கும் |
| | | மறவாமை பெற்றேன் | மறவாமலிருக்கப் பெற்றேன். |

* * *—தாம்பெற்ற பேற்றை வாயாரச்சொல்லி மகிழ்கிறார். "என்மனத்தே வந்து நீ புகுந்தபின்னை எந்தாய் போயறியாய்" என்று ஒருவாக்கியமாகவே சொல்லிவிடலாமே; முதலில் "வந்தாய்" என்றொன்று தனிப்படவேண்டாவே என்னலாமாயினும், தம்முடைய ஆநந்தம் நன்கு விளங்குமாறு "எந்தாய்! என் மனத்தே வந்தாய்—நீவந்து புகுந்தபின்னைப் போயறியாய்" என்று தனித்தனி வாக்கியமாக நீட்டிநீட்டி யருளிச்செய்கின்றார்.

வந்தாய்—பரமபதம் திருப்பாற்கடல் முதலான அஸாதாரண ஸ்தலங்களை விட்டு இவ்விடம்வந்தாய்; என்மனத்தேவந்து நீபுகுந்தபின்னை=வந்தவிடத்திலும் ஜ்ஞாநாநுஷ்டாநங்களிற் சிறந்த யோகிகளின்மனத்தைத் தேடிப்போகாமல் நாயினேனுடைய மனத்தைத் தேடிப்பிடித்து வந்துபுகுந்தபின்பு, போயறியாய்—'இனிய இடங்களிலே நாம் சுகமாகவாழ்வதைவிட்டு இவருடைய அழுக்கு நெஞ்சிலே சிறைப்பட்டுக் கிடப்பானேன்?' என்று வெறுத்து நெஞ்சைவிட்டு நீங்கிப்போக நினையாமல் 'இதனில் சிறந்தஸ்தாநம் வேறொன்று நமக்கில்லை' என்று கொண்டு என்னெஞ்சிலேயே ஸ்திரப்ரதிஷ்டையாக இருக்கின்றாய்—என்றும் விரித்துரைக்கலாம்.

இதுவே அமையாதோ?—ஒருவனுக்கு இதற்கு மேற்படவும் ஒருபேறு உண்டோ? என்றவாறு.

சௌரிப்பெருமானை அநுபவித்துவருகிற ஆழ்வாருடைய திருவுள்ளம் திருக்குடந்தை ஆராவமுதன்பக்கல் சென்றுசேர, ஆராவமுதப் பெருமானே! நீர் உம்

முடைய பேருக என்னெஞ்சிலே வந்துபுகுந்தாலும் பாவியேன் மறந்தொழிய லாமே; அப்படி மறந்தொழிகையின்றியே "எந்நன்றி செய்தேனோ என்னெஞ்சில் திகழ்வதுவே" என்றாப்போலே நன்றிபாராட்டப் பெற்றேனே!, நீர்வந்து புகுந்த பேற்றுக்கு மேற்பட்ட பேறன்றோ இது! என்றவாறு. .... (ரு)

எஞ்சா வெந்நரகத் தழுந்தி நடுங்குகின்றேற்கு *
அஞ்சேலென் றடியேனை ஆட்கொள்ள வல்லானை *
நெஞ்சே! நீநினையாது இறைப்பொழுது மிருத்திகண்டாய் *
மஞ்சார் மாளிகைசூழ் வயலாலி மைந்தனையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| எஞ்சா | ஒருகாலும் குறைதலில்லாத | வயல் | வயல்களையுடைத்தான |
| வெம் நரகத்து | கொடிய நரகத்திலே | ஆலி | திருவாலியில் எழுந்தருளியிருக்கிற |
| அழுந்தி | ஆழங்காற்பட்டு | | |
| நடுங்குகின்றேற்கு அடியேனை | நடுங்குகின்ற என்னை | மைந்தனை | ஸ்வாமியுமான ஸ்ரீசௌரிப்பெருமாளை |
| | | நெஞ்சே | மனமே! |
| அஞ்சேல் என்று | 'பயப்படாதே' என்று தேற்றி | நீ | நீ |
| ஆட்கொள்ள வல்லானை | அடிமைகொள்ள வல்லவனும் | இறைப் பொழுதும் | க்ஷணகாலமும் |
| மஞ்சு ஆர் மாளிகைசூழ் | மேகமண்டலத்தளவும் ஓங்கின திருமாளிகைகளால் சூழப்பட்ட | நினையாது இருந்தி கண்டாய் | நினையாமலேயிருக்கிறாயே. |

* * *—கீழ்ப்பாட்டில் "உன்னையென்றும் மறவாமைப் பெற்றேனே" என்றருளிச்செய்தவர்தாமே இப்போது "நெஞ்சே! நீ இறைப்பொழுதும் நினையாது இருந்திகண்டாய்" என்கிறார்; கருத்தென்?; எம்பெருமான் செய்தருளின பேருதவிக்குத் தம்முடைய மறவாமை ஈடல்ல; அந்த உபகாரத்தின் கனத்தையும் தம்முடைய நினைவையும் ஒத்திட்டுப் பார்க்குமளவில் தம்முடைய மறவாமை அஸத்கல்பமாய்த் தோற்றிற்றுப் போலும்; அதனால் அருளிச் செய்கிறபடி.

பலவகைகளாலும் கனக்கப் பாவங்களைப்பண்ணி அவற்றின் பலன்களையநுபவிக்கக் கொடிய நரகங்களிலே சென்று நோவுபடுங்கால் 'தான்பண்ணின பாவங்களின் பலனைத் தான் அநுபவிக்கட்டும்; நமக்கு வந்ததென்ன?' என்றிராமல் அங்கே யெழுந்தருளி 'நாம் இருக்க, நீ பாபங்களின்பலனை அநுபவிக்க ப்ராப்தியுண்டோ? அஞ்சாதே' என்று அபயப்ரதானம் பண்ணி ரக்ஷித்தருளு மெம்பிரான் என்பன முன்னடிகள்.

நரகத்திலே அழுந்தி நடுங்கும்போது அஞ்சேலென்று ஆட்கொள்வதாகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து என்? எனில்; * தென்னவன்தமர் செப்பமிலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின்முன்னாக இழுப்பதாகிற யமதண்டனைகளை அநுபவித்துக் கொண்டிருக்கையில்

எம்பெருமான் அங்கே வந்து அபயமளித்துக் காத்தருள்கின்றானென்கிறதன்று; 'ஐயோ! நாம் எல்லையில்லாத பாவங்களைப் பண்ணிவிட்டோமே! வெவ்விய நரகங்களிலே சென்று கொடியதுன்பங்களை யநுபவிக்க நேருமே, என்செய்வோம்?' என்று கவலைப்பட்டு வருந்தியிருக்குமிருப்பிலே அபயப்ரதானம் பண்ணும்படியைச் சொன்னவாறு என்க. இங்கு வெந்நரகமென்றது ஸம்ஸாரத்தை என்று கொள்ளும் பக்ஷத்தில் எளிதாகவே பொருளாகும். இப்பொருளே வியாக்கியானத்திற் கிணங்கியது.

"நடுங்குகின்றேற்கு அடியேனை" என்றவிடத்து, வடமொழியில் ஆர்ஷப்பிரயோகங்களிற்போல உபபத்தி கூறவேண்டும்: "நடுங்குகின்றேற்கு" என்பது 'நடுங்குகின்ற எனக்கு' என்று பொருள்தர நின்றாலும் இங்கு அங்ஙனம் பொருள் படாது 'நடுங்குகின்ற' என்று விசேஷணமாத்திரமாக நிற்கும்; அடியேனில் அந்வயிக்கவேண்டுதலால். திருமாலையில் "மழைக்கன்று வரைமுனேந்தும்" என்றபாசுரத்தில் "உழைக்கின்றேற்கு என்னை" என்ற பிரயோகமும் பிறவும் காணத்தக்கன.

இருத்தி—முன்னிலையொருமை நிகழ்காலவினைமுற்று. கண்டாய்—முன்னிலையசை. .... .... .... (௬)

பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும்நின் றடியேனுக்கு *
உற்றானாய் வளர்த்து என் னுயிராகி நின்றானை *
முற்றாமாமதிகோள் விடுத்தானை யெம்மானை *
எத்தால் யான்மறக்கேன் இதுசொல்லென் னேழைநெஞ்சே! (எ)

என் ஏழை நெஞ்சே!—;

| | |
|---|---|
| பெற்றார் | என்னைப் பெற்ற தாய்தந்தையர் |
| பெற்று ஒழிந்தார் | பெற்றுப் போட்டுப் போய்விட்டார்கள்; |
| பின்னும் | பின்பு |
| அடியேனுக்கு | அடியேனுக்கு |
| உற்றான் ஆய் நின்று | ஸகலவித பந்துவுமாயிருந்துகொண்டு |
| வளர்த்து | என்னைவளரச்செய்து |
| என் உயிர் ஆகி நின்றானை | (அவ்வளவோடும் விடாமல்) எனக்கு உயிராயிருந்துகொண்டு மேலும் நன்மைகளைச் செய்பவனும் |
| முற்றா மா மதி | பருவம் நிரம்பாத சந்திரனுடைய |
| கோள் | க்ஷயரோகத்தை |
| விடுத்தானை | போக்கினவனுமான |
| எம்மானை | எம்பெருமானை |
| எத்தால் | எக்காரணம்பற்றி |
| யான் மறக்கேன் | நான்மறக்கவல்லேன்? |
| இது சொல் | இவ்விஷயத்திற்கு விடைகூறு. |

* * *—சரீரபிண்டத்தை மாத்திரமே உற்பத்தி பண்ணுமவர்களான மாதாபிதாக்கள் என்னைப் பெற்றுப் போட்டுப் போய்விட்டார்கள்; ஞானபக்தி

முதலிய குணங்கள் எனக்கு வளர்தற்குரிய வழிகளில் ஒரு முயற்சியும் அவர்கள் செய்தார்களில்லை. இப்படி அவர்கள் கைவிட்டகாலத்தில் எனக்கு எல்லாவுறவு முறையாய் நின்று என்னை வளரச்செய்து வருகின்ற எம்பெருமானை நெஞ்சே! என்ன காரணம் பற்றி மறந்தொழிய முடியும்? சொல்லாய் என்று தம்திரு வுள்ளத்தோடு உசாவுகிறார்.

உற்றானாய் வளர்த்து = "பிதா ச ரக்ஷகஶ்ஶேஷீ பர்தா ஜ்ஞேயோ ரமாபதி:। ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமனூதித:—பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி:-ஸ்வாம் யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்யமநூதித:" என்கிறபடியே திருமந்த்ரத்தில் தேறுகின்ற ஒன்பதுவகை யான உறவுகளையுமுடையவன் எம்பெருமான் என்க. உடன் பிறந்தவர்கள், வயிற்றில் பிறந்தவர்கள், தாய்தந்தையர், பிரமன் ருத்ரன் முதலானவர்கள் ஒருவரும் ரக்ஷகரல்லர், எம்பெருமானொருவனே ரக்ஷகன் என்பதை இப்பாசுரத்தில் விளங்கவைக்கிறார். உடன் பிறந்தவர்கள் ரக்ஷகரல்லர் என்பதை வாலியிடத்திலும் இராவணனிடத்திலும் காணலாம். தாய்தந்தையர் ரக்ஷகரல்லர் என்பதைக் கைகேயியிடத்திலும் ஹிரண்யகசிபுவிடத்திலும் காணலாம். மாதா பிதாக்கள் தங்கள் புத்திரர்களை யௌவநவிரோதி யென்று உபேக்ஷித்தல், க்ஷாமகாலம் வந்தவாறே ஆள்பார்த்துத் தூற்றிலே போடுதல், விலைகூறி விற்பனை செய்தல், மரணஸமயத்திலாவது எம்பெருமானை நினைந்துக் கரைசேர வொட்டாதபடி "சோர்வினால் பொருள் வைத்த துண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து" என்கிறபடியே அலைத்தல் முடித்தல் செய்யாநிற்பர்கள். ஸ்த்ரீகளுக்குக் கணவன் ரக்ஷகனல்லன் என்பது தருமபுத்திராதிகளிடத்திலும் நளனிடத்திலும் காணலாம். இவர்களெல்லாம் ரக்ஷகரல்லரேயாகிலும் நாட்டுக்குக் கண்காட்டியாய்ப் போருகிற சந்திரன் ஸூரியன் முதலானோர் ரக்ஷகர்களாகக் குறையென்னென்னில்; அவர்களும் ஸர்வேச்வரனுடைய ஆணைக்கு அஞ்சித் தாங்கள் நினைத்தபடி ஸஞ்சரிக்கப் பெறாமல் நாழிகை கூறிட்டு உதிப்பதும் அஸ்தமிப்பதுமாய்ப் போருகையாலும், இரணியன் இராவணன் முதலானோர் கையில் அகப்பட்டு இழிதொழில் செய்து திரிபவர்களாகையாலும் ரக்ஷகராக மாட்டார்கள். த்ரிலோக பாலகனான இந்திரனும் 'நம்முடைய பதவி எப்போது நழுவப்போகிறதோ!' என்று அஞ்சியிருப்பவனும் இந்திரஜித்தின் கையிலே அகப்பட்டுக்கொண்டு கட்டுண்டவனும், மஹாபலிபோல்வார்கையிலே செல்வத்தைப்பறிகொடுத்துக் கண்ணுங் கண்ணீருமாய்த் திரிபவனாகையாலே ரக்ஷகனாக மாட்டான். நான்முகனும் மதுகைடபர்கையிலே வேதங்களைப்பறிகொடுத்து 'கண்இழந்தேன், தனமிழந்தேன்' என்று நிலம் துழாவுகையாலே ரக்ஷகனாக மாட்டான். ருத்ரனும் ஸகலப்ராணிகளையும் ஸம்ஹரிப்பதையே தொழிலாக வுடையனும் விடாயர் முகத்திலே நெருப்பைச் சொரிந்தாற் போலே தழல்நிற வண்ணனும், தன்னையாச்ரயித்தவர்களை 'அறுத்துத்தா, பொரித்துத்தா' என்று கொடுந்தொழில்களைச் செய்வித்துக் கொள்ளுகையாலும், தன்னையடுத்த

வீரணனை 'தலையில் பூவாடாதே ரக்ஷிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி வைத்து, தன்னைத் தொழுத கைகளைக் கள்ளிக்காடு செய்த்தாற்போலே செய்க்கக் கண்டு 'உயிருண்டாகில் உப்புமாறியுண்ணலாம்' என்று நெற்றிக்கண்ணை மறைத்துக் கொண்டு நழுவினவனுகையாலும், லோககுருவாய்த் தனக்குப் பிதாவான பிரமனது தலையைத் திருகிப் பாதகியாய்க் கையுங்கபாலமுமாய்த் திறந்துகிடந்த வாசல்தோறும் புக்குத் தன்னை வெளியிட்டுக் கொண்டு திரிந்த வனுகையாலும் ரக்ஷகனுகமாட்டான்.

ஸ்ரீமந்நாராயணனொருவனே மாதாபிதாக்கள் கைவிட்ட நிலைமையிலும் தன்னுருக்கெடுத்து வேற்றுருக் கொண்டு தாய்முகங்காட்டியும் இன்சொற்கள் சொல்லியும் அகவாயிலே நின்று ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரும் ஸர்வரக்ஷகனுவன். இந்த ரக்ஷகத்வம் தம்மளவில் பலித்தபடியை முன்னடிகளால் அருளிச்செய்தாராயிற்று.

பருவம் நிரம்பாத பாலசந்திரனுக்கு வந்த க்ஷயத்தைப் போக்கினவனும், தன்னுடைய ரக்ஷகத்வத்தைக் காட்டி என்னை ஆட்படுத்திக் கொண்டவனுமான பெருமானை என்னகாரணம் பற்றி மறக்கலாம்? மறக்கவழியுண்டாகில் சொல்லாய் நெஞ்சமே! என்கிறார் பின்னடிகளில்.

எத்தால் யான் மறக்கேன்—எம்பெருமான் நமக்கு ஒரு நன்மையும் செய்யவில்லையென்கிற காரணத்தினுல் மறக்கவோ? அல்லது, அற்பமான உபகாரமே நமக்குப் பண்ணியிருக்கிறுனென்று கொண்டு மறக்கவோ? நம்மை ரக்ஷிக்கவல்லார் பிறருளரென்று கொண்டு அவனை மறக்கவோ? .... .... (எ)

கற்றார் பற்றறுக்கும் பிறவிப் பெருங்கடலே *
பற்று வந்தடியேன் பிறந்தேன் பிறந்தபின்னை *
வற்று நீர்வயல்சூழ் வயலாலி யம்மானைப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமைப் பெற்றேனே. (அ)

| | |
|---|---|
| கற்றார் | விவேகிகள் |
| பற்று அறுக்கும் | 'இதன்ஸம்பந்தமே நமக்கு வேண்டா' என்று வெறுத்து ஒழிக்கும்படியான |
| பிறவி பெரு கடலே | ஸம்ஸாரமாகிற பெரியகடலையே |
| பற்று | போக்யமாகப் பற்றி |
| அடியேன் வந்து பிறந்தேன் | (இந்நிலத்திலே) அடியேன் வந்து (பலபிறப்பும்) பிறவாநின்றேன்; |
| பிறந்த பின்னை | இப்படி பிறந்து வருமளவிலே, |
| வற்று நீர் வயல் சூழ் | ஒருகாலும் வற்றாத நீர்வளமுடைய கழனிகளாலே சூழப்பட்ட |
| வயலாலி | 'வயலாலி' என்றேபெயர் பெற்ற திருவாலியில் எழுந்தருளியிருக்கிற |
| அம்மானை | எம்பெருமானை |
| பெற்றேன் | ப்ராப்தனுனேன்; |
| பெற்றதுவும் | அவனைப்பெற்றவாறே |
| பிறவாமை பெற்றேன் | மறுபிறப்பில்லாமை பெற்றேன். |

* * *—தன்னை மறக்கமுடியாதபடி எம்பெருமான் உமக்குப் பண்ணித்தந்த உபகாரந்தான் ஏதென்ன, தன்னுடைய அநுபவத்துக்கு இடையூறு வாராதபடி பண்ணித்தந்த மஹோபகாரகனன்றோ வென்கிறார்.

1. "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்றும், 2. "நோயே மூப்பிறப்பிறப்புப் பிணியே யென்றிவை யொழியக், கூயேகொள் ளடியேனைக் கொடுவுலகங்காட்டேலே" 3. "இருள்தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்" என்றும் விவேகிகள் வெறுத்துத் தள்ளும்படியான ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே அலைமேல் அலையாகக் கொண்டு வந்து தள்ளுமாபோலே ஒருஜன்மம் ஒருஜன்மத்திலே கொண்டு தள்ள மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து போந்தேன்; இப்படி பிறந்து வாராநிற்கச்செய்தே நான் பிறந்த ஸம்ஸாரத்திலே அவன் வந்து நெருங்குகையாலே அவனைப் பெற்றுக்கொண்டு நின்றேன். இப்படிப்பட்ட ஸம்ஸாரப் பிறவி மீண்டும் எனக்கு நேராதபடியான பெரும் பேற்றைப் பெற்றேன், இதுவன்றோ அவன் செய்தருளின உபகாரம் என்றாராயிற்று. மூன்றாமடியில் திருவாலிப்பதிக்கு விசேஷணமாக 'வயல்' என்னுஞ் சொல் இரண்டுமுறை வந்துள்ளது புநருக்தியன்று; 'வயல்சூழ்' என்பதே விசேஷணம்; 'வயலாலி' என்பது திருவாலியென்பது போலே திருப்பதியின் ப்ரஸித்தவ்யவஹாரத்தின் அநுகாரமாகும். வயலாலிமணவாளன் என்றே வழங்குவர்களிறே.

"பிறவாமைப் பெற்றேனே" என்பதற்குப்பலபடி பொருளருளிச் செய்வர்; பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங் காண்மின்:—"இப்பேற்றுக்கு விச்சேதத்தைப் பண்ணக்கடவ ஜன்மம் மறுவலிடாதபடி பெற்றேனென்னுதல்; அன்றிக்கே இப்பேற்றுக்கடியாக என்பக்கல் ஒரு நன்மை பிறவாதிருக்கச் செய்தே பெற்றேனென்னுதல்; அங்ஙனுமன்றிக்கே, பெற்றேனென்னும் உபகாரஸ்ம்ருதியும் வர்த்தியாதபடி பெற்றேனென்னுதல். உபகாரஸ்ம்ருதி அநுவர்த்தித்தவன்று ப்ரத்யுபகாரம் தேடி நெஞ்சாறல்பட வேண்டும்படியிருக்குமிறே; அது வேண்டாதே 'ப்ராப்தம் இது' என்றிருக்கும்படி உபகரித்தானாயிற்று." என்று.

இனிப் பிறப்பில்லாமையைப் பெற்றேன் என்பது முதல்அர்த்தம்; (என்னிடத்தில் ஒரு ஹேதுவும்) பிறவாமல் பேறுபெற்றேன். என்பது இரண்டாம் அர்த்தம்; நன்றியறிவும் பிறவாமலே பேறுபெற்றேன் என்பது மூன்றாவது அர்த்தம். .... .... .... .... (௮)

கண்ணார் கண்ணபுரம் கடிகை கடிகமழும் *
தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்க மேல்திசையுள் *
விண்ணோர் நாண்மதியை விரிகின்ற வெஞ்சுடரை *
கண்ணாரக் கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்றுகொலோ? (௯)

1. திருவிருத்தம் 1. 2. திருவாய்மொழி 4—9—7.
3. திருவாய்மொழி 10—6—1.

| | | | |
|---|---|---|---|
| கண் ஆர் | கண்பொருந்தும்படியான [ஸௌந்தரமான] | நாள் மதியை | நாள்தோறும் சந்திரன்போலே அநுபவிக்கவுரியனாய், |
| கண்ணபுரம் | திருக்கண்ணபுரத்திலும் | விரிகின்ற வெம் சுடரை | உதயகாலத்தில் விரியும் ஸூர்யன்போலே ப்ரதாபம் மிக்கவனான எம்பெருமானை |
| கடிகை | திருக்கடிகாசலத்திலும் | இங்கு | இந்நிலத்திலே |
| கடி கமழும் | பரிமளம்மிக்க | கண் ஆர கண்டு கொண்டு | கண்கள் த்ருப்திபெற மனவும் காணப்பெற்று |
| தண் ஆர் | குளிர்ச்சிபொருந்திய | களிக்கின்றது | ஆநந்திப்பது |
| தாமரை சூழ் | தாமரைகளாலே சூழப்பட்ட | என்று கொல் | என்றைக்கோ? |
| தலைச்சங்கம் மேல் திசையுள் | தலைச்சங்கமென்னும் பதியில் மேலைப்பக்கத்திலும் | | |
| விண்ணோர் | நித்யஸூரிகளுக்கு | | |

* * *—திருக்கண்ணபுரத்திலும் திருக்கடிகையிலும் தலைச்சங்கமேல் திசையிலும் நித்யஸந்நிதிபண்ணியிருக்கின்ற எம்பெருமானைக் கண்ணாரக்கண்டு களிக்கப் பெறும் நாள் என்றைக்கோ என்று குதூஹலிக்கிறார்.

கண்ஆர் கண்ணபுரம்=வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே யிருக்கவேண்டும்படி மிகஅழகிய திருக்கண்ணபுரம் என்றவாறு. அன்றியே, இடமுடைத்தான [—விசாலமான] திருக்கண்ணபுரம் என்றுமாம். கண்-இடம்.

தலைச்சங்க மேல்திசையுள் விண்ணோர் நாண்மதியை=சோழநாட்டுத் திருப்பதிகளுள் 'தலைச்சங்க நாண்மதியம்' என்பது ஒரு திருப்பதி. (திருநாங்கூர் ஸமீபத்திலுள்ளது.) அங்குள்ள எம்பெருமானுக்கு 'நாண்மதியப் பெருமாள்' என்று திருநாமம் சிறந்த திருச்சங்கையேந்திய நாண்மதியப் பெருமானையுடைய தலமாதல் பற்றித் தலைச்சங்க நாண்மதியம் என்று திருநாமமென்பர். இது 'தலைச்சங்காடு' என்றும் வழங்கப்படும். 'தலைச்சங்காடு' என்பது மருவிற்றுப் போலும். தலைச்சங்கப் பெருமாளுடைய இருப்பிடமென்றவாறு. "கைப்பால் அலைச்சங்கமேந்து மணியாங்கத் தம்மான், தலைச்சங்கநாண்மதியத்தான்" என்பது ஐயங்காரது நூற்றெட்டுத் திருப்பதியந்தாதிப் பாசுரம். இத்தலத்திற்குப் பாடல் ஆழ்வார் திவ்யஸூக்திகளுள் இஃதொன்றும், பெரியதிருமடலில் "நன்னீர்த் தலைச்சங்க நாண்மதியை" என்பதும்.

நாண்மதியை விரிகின்ற வெஞ்சுடரை="கதிர்மதியம் போல் முகத்தான்"—"திங்களுமாதித்தியனு மெழுந்தாற் போல் அங்கணிரண்டுங்கொண்டு"— "உதயபருப்பதத்தின் மேல் விரியுங்கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே." .... .... .... .... (௯)

செருநீர வேல்வலவன் கலிகன்றி மங்கையர்கோன் *
கருநீர் முகில்வண்ணன் கண்ணபுரத்தானை *
இருநீரின் தமிழின்னிசை மாலைகள் கொண்டு தொண்டீர்! *
வருநீர் வையமுய்ய இவைபாடியாடுமினே. (௧௦)

| | |
|---|---|
| கரு | கர்ப்பத்தில் |
| நீர் | நீர்கொண்ட |
| முகில் | மேகம்போன்ற |
| வண்ணன் | திருநிறத்தையுடையரான |
| கண்ண புரத்தானை | சௌரிப்பெருமாள் விஷயமாக,- |
| செரு நீர வேல் வலவன் | யுத்தம்செய்வதையே இயல்வாகவுடைய வேற்படையைப் பிரயோகிக்கவல்லவரும் |
| மங்கையர் கோன் | திருமங்கையிலுள்ளார்க்கு அரசருமான |
| கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செய்த) |
| இரு நீர் | மிக்க நீர்மையையுடைய |
| இன் தமிழ் | இனிய தமிழினாலாகிய |
| இன் இசை | இனிய இசையையுடைய |
| இவை மாலைகள் கொண்டு | இச்சொல்மாலைகளைக் கொண்டு |
| தொண்டீர் | தொண்டர்களே! |
| வரு நீர் வையம் உய்ய | கடல்சூழ்ந்த உலகம் உஜ்ஜீவிக்கும்படி |
| பாடி | வாயாரப்பாடி |
| ஆடுமின் | மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக் கூத்தாடுங்கள். |

* * *—இத்திருமொழியில் திருவாலி திருக்குடந்தை திருக்கடிகை முதலானபல திருப்பதிகளை அநுஸந்தித் திருந்தாலும் இப்போது இவர் கவி பாடுகிறது திருக்கண்ணபுரத்தையே என்பது இப்பாட்டில் விளக்கப்பட்டது. பகவத்பக்திமிகுந்து தொண்டர்களென்று பெயர் பெற்றவர்களை விளித்து, நீங்கள் இத்திருமொழியைப் பாடியாடுங்கோள்; உலகமெல்லாம் உஜ்ஜீவிக்கும்— என்கிறார்.

வருநீர்வையம்—கடல் சூழ்ந்த பூமியிலே, உய்ய—நீங்கள் உஜ்ஜீவிக்கும்படி, இவைபாடி யாடுமின் என்னவுமாம். .... .... .... (கo)

அடிவரவு:—கைம்மானம், தரு, விடை, மிக்கான், வந்தாய், எஞ்சா, பெற்றார் கற்றார், கண்ணர், செரு, வண்டார்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர்திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எட்டாம்பத்து—பத்தாந்திருமொழி,

## வண்டார்பூமாமலர்மங்கை.

(இதுவும் திருக்கண்ணபுரத் திருப்பதிகம்.)

வண்டார் பூமா மலர்மங்கை மணநோக்க
முண்டானே! * உன்னை யுகந்துகந் துன்றனக்கே
தொண்டானேற்கு * என்செய்கின்றாய்? சொல்லு நால்வேதம்
கண்டானே! * கண்ணபுரத்துறை யம்மானே! (க)

| | | | |
|---|---|---|---|
| வண்டு ஆர் பூ | வண்டுகள் நிறைந்து அழகிய | அம்மானே | ஸ்வாமியே!, |
| மா மலர் | சிறந்த (தாமரைப்) பூவிற் பிறந்த | உன்னை உகந்து உகந்து | உன்னையே மிகவும் உகந்து |
| மங்கை | பெரிய பிராட்டியாருடைய | உன் தனக்கே | உனக்கே |
| மணம் நோக்கம் | மகிழ்ச்சியோடு கூடின திருக்கண்பார்வையை | தொண்டு ஆனேற்கு | அடிமைசெய்யப் பெறவேணுமென்று ஆவல்கொண்டிருக்கு மென்விஷயத்தில் |
| உண்டானே | தாரகமாகக் கொண்டுள்ளவனே! | என் செய்கின்றாய் | என்னசெய்வதாக இருக்கிறாய்? |
| நால் வேதம் கண்டானே | நான்கு வேதங்களாலும் காணப்பட்டவனே! | சொல்லு | இதை அருளிச்செய்ய வேணும். |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே | | |
| உறை | நித்யவாஸஞ்செய்தருள்கிற | | |

* * *—கீழ்த்திருமொழியில் "கண்ணாக்கண்டுகொண்டு களிக்கின்றதிங் கென்று கொலோ" என்றார்; அது எம்பெருமான் திருவுள்ளப்படியே ஆக வேண்டியதாதலால் 'பிரானே! உன் திருவுள்ளம் எங்ஙனே யிருக்கிறது? சொல்ல வேணும்' என்கிறார்.

'என்செய்கின்றாய் சொல்லு' என்ற கேள்வியினால் ஸகலசாஸ்த்ர ஸாரப் பொருளை வெளியிடுகிறாராழ்வார் என்று குறிக்கொண்மின்; சேதநனுடைய க்ரியா கலாபமொன்றும் பேற்றுக்கு ஸாதனமன்று; பரமபுருஷனுடைய திருவுள்ளத்தி லிரக்கமே பலனைப் பெறுவிக்க வல்லது என்க. பெரியபிராட்டியார் புருஷ காரமாயிருந்து எம்பெருமான் திருவுள்ளத்திலிரக்கத்தை வளரச் செய்வ ளென்பது தோன்ற 'வண்டார் பூமாமலர்மங்கை மணநோக்கமுண்டானே!' என்கிறார். 'பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை' என்கிற சாஸ்த்ரார்த்தத்தை வெளியிடுகிறாராகவுமாம்; "உன்றனக்கே தொண்டா னேற்கு" என்றிறே அடுத்துள்ளது. பிராட்டியின் கடைக்கண் நோக்கத்தை எம்பெருமான் பரம போக்யமாகக்கொண்டு அதையே தனக்கு ஜீவகாதாரமாக

வுகா கொள்வனுதலால் 'மலர்மங்கை மணநோக்கம் உண்டானே!' என்றார்: பிராட்டியின் கடாக்ஷவீக்ஷணத்தை உணவாகக்கொள்வனும். அதாவது—1. "யஸ்யா வீக்ஷ்ய முகம் தடிங்கிதபராயணோ விதத்தேகிலம்—யஸ்யா வீக்ஷ்ய முகம் தடிங்கிதப்பராதீநோ விதத்தேகிலம்" என்கிறபடியே பிராட்டியின் புருவநெறிப்புப்படியே காரியம் நிர்வஹிக்குமவன் என்றவாறு.

உன்னை உகந்துகந்து= பிராட்டியுமவனுமான சேர்த்தியிலே உண்டான உகப்பாகையாலே இரட்டிப்பு.

தொண்டானேற்கு= தொண்டுசெய்ய விருப்பங்கொண்டிருக்கிற எனக்கு என்றபடி: பகவத்கீதையில் "தேஷாம் ஸததயுக்தாநாம்" என்றவிடத்தில், ஸததயுக்தாநாம்— ஸததயோகத்தை விரும்புகின்றவர்களுக்கு என்று பொருள் கொள்வது போல.

நால்வேதங்கண்டானே!= இங்கே பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான வருளிச்செயல்;—

"பட்டர் அருளிச் செய்தாராகச் சிறியாத்தான் பணிக்கும்படி— இது கர்த்தரி அன்று, கர்மணி கிடாய், என்று."

என்பதாம்.

இதனை விவரிப்போம்;— 'கண்டான்' என்பதற்கு கண்டவன் என்றும் காணப்பட்டவன் என்றும் பொருள் படுவது தமிழ்மரபு. இப்பொருள்கள் வடமொழியில் முறையே கர்த்தரி யென்றும் கர்மணி யென்றும் வழங்கப்படும். இங்கு, நால்வேதங்களையும் கண்டவனே! எனப் பொருள்கொள்வது கர்த்தரிப்பொருளாகும்; நால் வேதங்களாலும் காணப்பட்டவனே! எனப் பொருள் கொள்ளுதல கர்மணிப்பொருளாகும். கர்மணிப் பொருள் கொள்ளவேணுமென்பது பட்டர் திருவுள்ளம். நால்வேதங்களையுங் கண்டவனே! என்பதில் விசேஷமில்லை; நால்வேதங்களாலுங் காணப்பட்டவனே! என்பதில் ஸ்வாரஸ்யமுண்டு. உபாயமும் உபேயமும் தானேயாக நால்வேதங்களாலும் நிஷ்கர்ஷிக்கப்பட்டவனே! என்றவாறு. 'நான்கண்ட பொருள்' என்றால் 'என்னாலே காணப்பட்ட பொருள்' என்று பொருள்படுவதுபோல 'நால் வேதங்கண்டானே என்றதற்கு நால் வேதங்களாலும் காணப்பட்டவனே! எனப் பொருள்படுதல் எளிதே யென்றுணர்க. .... .... .... (க)

பெருநீரும் விண்ணும் மலையு முலகேழும் *
ஒருதாரா நின்னுளொடுக்கிய நின்னையல்லால் *
வருதேவர் மற்றுளரென் றென்மனத்திறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறை யம்மானே! (உ)

கண்ணபுரத்து உறை அம்மானே!—; பெரு நீரும் ஸமுத்ரங்களையும் | விண்ணும் ஆகாயத்தையும் மலையும் மலைகளையும்

1. ஸ்ரீஸ்தவம்—1.

| | | | |
|---|---|---|---|
| உலகு ஏழும் | ஏழுலகங்களையும் | வரு தேவர் மற்று உளர் என்று | (நான் ஆச்ரயணீயன் என்று சொல்லிக்கொண்டு) வரக்கூடிய தேவதை வேறொன்று இருப்பதாக |
| ஒரு தார் ஆ | ஒருமாலையாக | என் மனத்து | என்னெஞ்சிலே |
| தின்னுள் | தன்னுள்ளே | இறையும் | சிறிதும் |
| ஒடுக்கிய | (ஒருமாலையில்) அடங்கச் செய்துகொண்ட | நான் கருதேன் | நான் நினைத்தறியேன். |
| நின்னை அல்லால் | உன்னைத்தவிர | | |

* * *—கீழ்ப்பாட்டில் 'உன்றனக்கே தொண்டானேற்கு' என்றார்; இப்படி சொல்லுவானேன்? மற்றும்பல தெய்வங்களுமில்லையோ? உலகிற் பலர் பல தெய்வங்களை ஆச்ரயிக்கக் காண்கிறோமே; அந்த வழிகளில் உமக்குப் பற்றில்லையோ? என்று எம்பெருமான் திருவுள்ளமாக, பிரானே! நீ உண்டு உமிழ்ந்த எச்சிலான தேவர்களை ஒரு பொருளாகவும் நான் நெஞ்சிற் கொள்வேனல்லேன் என்கிறார்.

1. "அங்கண் ஞாலமுண்டபோது வெள்ளி வெற்பு அகன்றதோ" என்றபடி கைலாஸகிரியுமுட்பட எல்லாவற்றையும் ப்ரளயகாலத்தில் திருவயிற்றில் கொண்டிருந்த உன்னைத் தெய்வமாக நினைப்பேனே, அன்றி, உன் திருவயிற்றில் ஒடுங்கியிருந்து பின்பு வெளிவந்த எச்சில்களைத் தெய்வமாக நினைப்பேனோ என்கை.

'ஒரு தாரா' என்பதை விளியாகவுங் கொள்ளலாம்; (ஆச்ரிதரக்ஷணத்துக்கு இட்ட) தனிமாலையையுடையவனே! என்றபடி.

"[வருதேவர் இத்யாதி.] ப்ரளயம் வந்தபோதாக உன்வயிற்றிலே போய்ப்புக்கு, நீ வெளிநாடுகாணப் புறப்படவிட்டவாறே 'நான் ஆச்ரயணீயன்' என்று வருவதொரு தேவதையுண்டாக நான் அறியேன்" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்திகாண்க.

கண்ணபுரத்துறையம்மானே!— முன்பு மஹாப்ரளயத்தைப் போக்கினாய்; இப்போது ஸம்ஸாரப்ரளயத்தைப் போக்கத் திருக்கண்ணபுரத்திலே வந்து நித்யஸந்நிதி பண்ணியிருக்கிறாய்; இப்படி நீ யிருக்க மற்ற தெய்வாபாஸங்களைப் பூர்வபக்ஷமாகவும் நெஞ்சிலிட்டு நினையேன் என்றாராயிற்று. .... (உ)

மற்றுமோர் தெய்வ முளதென்றிருப்பாரோ
டுற்றிலேன் * உற்றது முன்னடியார்க்கடிமை *
மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும்
கற்றுநான் * கண்ணபுரத்துறை யம்மானே! (ங)

---

1. பிள்ளைப்பெருமாளையங்கார் தனிப்பாடல்.

கண்ணபுரத்து உறை அம்மானே! —;

| | |
|---|---|
| மற்றும் ஓர் தெய்வம் உளது என்று இருப்பாரோடு | உன்னைக்காட்டிலும் வேறொரு தெய்வம் ஆச்ரயிக்கவுரியதாக உண்டு என்று நினைத்திருப்பவர்களோடே |
| உற்றிலேன் | இணங்கமாட்டேன்; |
| மின் திரு எட்டெழுத்தும் | உனது திருவஷ்டாக்ஷர மந்திரமானது |
| மற்று எல்லாம் பேசிலும் | அறியவேண்டிய எல்லாப் பொருள்களையும் சொன்னாலும் |
| நான் கற்று உற்றது | (அத்திருமந்திரத்தை) நான் அதிகரித்துத் தெரிந்துகொண்ட பொருள் |
| உன் அடியார்க்கு அடிமை | பாகவத சேஷத்வமேயாம். |

* * *— வேறு சிலரைத் தெய்வமாக நெஞ்சிலும் நினைக்கமாட்டேனென்றார் கீழ்ப்பாட்டில்; அவ்வளவேயோ? தாமஸபுருஷர்களோடு சேர்க்கையுமில்லை, ஸாத்விகபுருஷர்களை யொழியக் காலம் செலுத்தவும் மாட்டேனென்கிறார் இதில்.

திருவஷ்டாக்ஷரமென்னும் பெரிய திருமந்திரத்தில் தாம் ஸாரமாக ப்ரதிபத்திபண்ணின அர்த்த விசேஷம் பாகவத சேஷத்வமே என்பதை இப்பாட்டில் வெளியிட்டருளுகிறார்.

வேதங்களும் வேதாங்கங்களு மெல்லாம் ஐந்து அர்த்தங்களையே முக்கியமாகப் பிரதிபாதிக்கின்றன; அவையாவன:— ப்ராப்யனான எம்பெருமானுடைய ஸ்வரூபம், ப்ராப்தாவான சேதநனுடைய ஸ்வரூபம், எம்பெருமானை யடைதற் குறுப்பான உபாயத்தின் ஸ்வரூபம், அடைந்து பெறவேண்டிய பேற்றின் ஸ்வரூபம், அப்பேற்றைப் பெறவொட்டாத பிரதிபந்தகத்தின் ஸ்வரூபம் என்பனவாம். இவையே அர்த்தபஞ்சகமெனப்படும். 1. "மிக்க இறை நிலையும் மெய்யாமுயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலு மூழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன், யாழினிசை வேதத்தியல்." என்கிறபடியே திருவாய்மொழி ஆயிரத்தினுள்ளும் இவ்வர்த்தபஞ்சகமே விவரிக்கப்பட்டுள்ளதென்பதும் இங்கு உணரத்தக்கது. திருவஷ்டாக்ஷரத்தில், ப்ரணவத்தாலே சேதநஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோதியினுடையவும் உபாயத்தினுடையவும் ஸ்வரூபங்களையும், நாராயணபதத்தாலே பரமபுருஷனது ஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தியாலே புருஷார்த்தஸ்வரூபத்தையும் பிரதிபாதிக்கையாலும், அறியவேண்டிய ஸகலார்த்தங்களும் இவையே யாகையாலும் 'மற்றெல்லாம் பேசிலும்' எனப்பட்டது. பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த முமுக்ஷுப்படியில் "மற்றெல்லாம் பேசிலு மென்கிறபடியே அறியவேண்டுமர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு; அதாவது அஞ்சர்த்தம்." என்றருளிச்செய்ததுங் காண்க.

இப்படி திருமந்திரத்தில் அனேக அர்த்தங்கள் கிடந்தாலும் அவற்றில் தமக்கு ஊற்றமில்லை யென்பதை 'பேசிலும்' என்ற உம்மையினால் வெளியிடுகிறார். பின்னை எவ்வர்த்தத்தில் ஊற்ற மென்ன, "உற்றதுமுன்னடியார்க்கடிமை" என்கிறார்.

1. திருவாய்மொழித்தனியன்.

திருமந்திரத்தில் எந்த சொல்லில் பாகவத சேஷத்வம் காணக்கிடக்கின்றது? என்னில், கேண்மின் ;—அஹங்காரமும் மமகாரமும் நீங்கப்பெற்று பகவத் சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற நமஸ்ஸிலே அந்த பகவத்சேஷத்வத்தின் எல்லைநிலமான பாகவத சேஷத்வம் அநுஸந்திக்கப் படவேணுமென்பது ஆழ்வார் திருவுள்ளம். இந்த பாகவத சேஷத்வம் திருமந்திரத்திநுள் ப்ரணவத்தின் உள்ளீடான அகாரத்திலே தோற்றுமென்று சிலரும் உகாரத்திலே தோற்றுமென்று சிலரும் சொல்லுவதுமுண்டு. எங்ஙனேயெனில், அகாரத்தின்மேல் ஏறிக்கிடந்து லோபமடைந்துள்ள சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவத் சேஷத்வம் சொல்லப்படுகையாலே அந்தபகவச் சேஷத்வத்தின் எல்லையான பாகவத சேஷத்வத்தை அகாரத்திலே அநுஸந்திக்கலாமென்பர் சிலர். அநந்யார்ஹசேஷத்வத்துக்கு எல்லை பாகவத சேஷத்வமாகையாலே அந்த அநந்யார்ஹத்வத்தைச் சொல்லுகிற உகாரத்திலே அதன் எல்லையான பாகவத சேஷத்வத்தை அநுஸந்திக்கலாமென்பர் சிலர். அர்த்தாத் ஸித்தமாக அநுஸந்திக்க வேண்டுவதை எந்த இடத்தில் அநுஸந்தித்தாலும் குறையில்லை. யாகிலும் அஹங்கார மமகாரங்கள் கழிவதைக் காட்டுகின்ற நமஸ்ஸிலே அதனை அநுஸந்திப்பது மிகப் பொருந்துமென்பது நம் ஆசார்யர்களின் திருவுள்ளம்.

இப்பாட்டின் ஈற்றடி "கற்று நான்வல்லது கண்ணபுரத்தானே" என்றும் ஓதப்பட்டுவந்ததாக வியாக்கியானத்தில் தெரிகிறது. அது இப்போது எங்கும் வழங்காதபாடம். ... .... .... (௩)

பெண்ணானாள் பேரிளங் கொங்கையி னாரழல்போல் *
உண்ணாநஞ்சுண் டுகந்தாயை யுகந்தேன் நான் *
மண்ணாளா! வாள்நெடுங்கண்ணி மதுமலராள்
கண்ணாளா! * கண்ணபுரத்துறை யம்மானே! (௪)

| | |
|---|---|
| மண் ஆளா | பூமிப்பிராட்டியை ஆள்பவனே! |
| வாள் நெடு கண்ணி | ஒளிபொருந்திப் பெருத்த கண்களையுடையவளும் |
| மது மலராள் | மதுபெருகுகின்ற மலரிற் பிறந்தவளுமான ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு |
| கண்ணாளா | வல்லபனானவனே! |
| கண்ணபுரத்துறையம்மானே !—; | |
| பெண் ஆனாள் | பெண்வடிவுகொண்டுவந்த பூதனையினுடைய |
| பேர் இள கொங்கையின் | பெரிதும் இளையதுமான ஸ்தநத்திலுள்ள |
| ஆர் அழல் போல் | நெருப்புப்போன்றதான |
| உண்ணா | உண்ணமுடியாத |
| நஞ்சு | விஷத்தை |
| உண்டு | உறிஞ்சியுண்டு |
| உகந்தாயை | திருவுள்ளமுவந்தவுன்னை |
| நான் உகந்தேன் | நான் அடைந்து மகிழப் பெற்றேன். |

* * *—அடியேன், கைக்கொள்வதற்குரிய சிறந்தவஸ்து அல்லேனாகிலும், பேய்ச்சியாகிய பூதனை உன்னைக் கொல்வதற்காகத் தன்முலையில் தடவிக்கிடந்த விஷமே உனக்கு விரும்பத்தக்கதான போது அடியேன்தானோ விரும்பத் தகாத

வனுகப்போகிறேன் ; அந்த விஷத்திற் காட்டிலும் கொடியவனோ நான் ? அப்படி கொடியவனேயாயினும், புருஷகாரம் பண்ணிச் சேர்ப்பிக்கவல்ல பிராட்டிமார் இணைபிரியாதிருக்க நான் இழக்க வேண்டுவதுண்டோ ? என்கிற கருத்தை யடக்கி இப்பாசுர மருளிச்செய்கிறார்.

கம்ஸனுடைய ஏவுதலாலே பேயுருவத்தை விட்டு (யசோதையாக)ப்பெண்ணுருவத்தை ஏறிட்டுக்கொண்டமை தோன்றப் 'பெண்ணனள்' என்றது. பேர்இளங்கொங்கை=பேய்த்தன்மைக்குத் தகுந்தபடி பெருமையும், யசோதையுருவத்தின் ஏறிடலுக்குத் தகுந்தபடி இளமையும் கொங்கைக்குக் கூறப்பட்டனவென்க.

விஷம் தாரகமானவனுக்கு ஆகாதாரில்லை ; நீ கைவிடப் பார்க்கு டன்றும் விடவொண்ணுத புருஷகாரமுண்டு என்பது பின்னடிகட்கு அவதாரிகை. பொறுமைதானே வடிவெடுத்துள்ள பூமிப்பிராட்டி. பென்ன, உசிதமான உபாயங்களாலே பொறுப்பிக்க வல்ல பெரிய பிராட்டியாரென்ன இவர்களோடே கூடித் திருக்கண்ணபுரத்திலே ஸந்நிதி பண்ணியிருக்கும் பெருமானே ! உன்னை நானுகந்தேன் — நீ கைவிடாது ரக்ஷிக்கக் கடவையென்று விச்வஸித்திருக்கிறேனென்றவாறு. .... .... .... .... (ச)

பெற்றரும் சுற்றமுமென்றிவை பேணேன் நான் *
மற்றரும் பற்றிலேனுதலால் நின்னடைந்தேன் *
உற்றனென்றுள்ளத்து வைத்தருள்செய்கண்டாய் *
கற்றர்சேர் கண்ணபுரத்துறை யம்மானே! (ரு)

| | |
|---|---|
| கற்றர் சேர் | பண்டிதர்கள் சேர்ந்து வாழுமிடமான |
| கண்ணபுரத்து, உறை அம்மானே!—; | |
| பெற்றரும் | மாதாபிதாக்களென்ன |
| சுற்றமும் | உறவினரென்ன |
| என்ற இவை | என்று சொல்லப்படுகிற இப்படிப்பட்டவர்களை |
| நான் பேணேன் | நான் உற்றாராக விரும்ப மாட்டேன் ; |
| மற்று ஆரும் | மற்று யாரிடத்திலும் |
| பற்று இலேன் | பற்று உடையேனல்லேன்; |
| ஆதலால் | ஆகையாலே |
| நின் அடைந்தேன் | உன்னைவந்து ஆச்ரயித்தேன்; |
| உள்ளத்து | திருவுள்ளத்திலே |
| உற்றான் என்று வைத்து | இவன் நம்முடையவன் என்று அபிமானித்து |
| அருள் செய் | கிருபைபண்ணவேணும். |

* * *—காமத்தாலே பெற்றுவிட்டுப் போட்டுப் போகிற தாய்தந்தையரையும், 1. "பொருள் கைபுண்டாய்ச் செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர், இருள்கொள் துன்பத்தின்மை காணில் என்னே யென்பாருமில்லை", என்கிறபடியே கையில் துட்டுகாசு நடையாடுங் காலங்களில் உறவு கொண்டாடியும் அஃதில்லாத வறுமையில் விட்டொழிந்தும் போருகிற ஆபாஸபந்துக்களை

1. திருவாய்மொழி 9—1—3.

யும், புகலாக நெஞ்சிலும் நினைக்கின்றிலேன். விவேகமில்லாமல் வேண்டியபடி வரங்களையளித்துத் தடுமாறியும், ஆபத்காலத்தில் முதுகுகாட்டியோடியும் போரு கிற தேவதாந்தரங்களிடத்திலும் ஒரு பற்றாசு உடையேனல்லேன். ஆக, பரி பூரணமான அநந்யகதித்வத்தையுடையேனை நான் "களைவாய் துன்பங் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றாற்போலே உன்னைவந்து பணிந் தேன். 'எங்கும் புகலற்று நம்மையேபற்றி வந்தானிவன்' என்று திருவுள்ளம் பற்றி அடியேன்பால் அருள்புரியவேணும். இல்லையாகில், பரமபதம் திருப் பாற்கடல் முதலிய இடங்களைவிட்டுத் திருக்கண்ணபுரத்தே கோயில் கொண்டெ ழுந்தருளியிருப்பது பயனற்றதாகுங்காண். நீ வர்த்திக்கிற ஊரிலே உள்ளவர் கள் ஸாமாந்யரல்லர்; கலையறக்கற்றுணர்ந்த மாஞானிகள்; வேறு புகலற்று வந்த வனைக் கைக்கொள்வது தகுதியோ? கைவிடுவது தகுதியோ? என்று அவர்களைக் கேட்டாகிலும் நீ உணரப்பெறலாம்—என்கிறார் போலும். 'உற்றேனென்று' என்ப தற்கு 'படாதபாடுகளும் பட்டானென்று' என்றும் பொருளுரைப்பர். அதா வது— இக்கலியன் நம்மைவிட்டுப் புறம்பேபுக்குப் படவேண்டியதெல்லாம் பட்டுவந்தான்; எங்குமுழன்றலைந்து வருந்தி வந்து சேர்ந்த இவனை இனி நாம் பரீக்ஷிக்கத் தேவையில்லை என்று கடுகக் கிருபைசெய்தருளவேணும் என்கை. உற்றான்— அநர்த்தப்பட்டான் என்றபடி. இச்சொல்லுக்கு இப்பொருள்படு தலை "மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள், உற்றபோதன்றி நீங்கள் ஒருவனென்றுணரமாட்டீர்" என்ற திருமாலைப் பாசுரத்திலுங் காண்க.(ரு)

ஏத்தியுன் சேவடி யெண்ணி யிருப்பாரை *
பார்த்திருந் தங்கு நமன்றமர் பற்றாது *
சோத்தம் நாமஞ்சுது மென்று தொடாமை * நீ
காத்திபோல் கண்ணபுரத்துறை யம்மானே! (சு)

கண்ணபுரத்துறையம்மானே !—;

| | | | |
|---|---|---|---|
| உன் | உன்னுடைய | அங்கு | அந்த சமயத்தில் |
| சே அடி | திருவடிகளை | பற்றாது | வந்து கிட்டமாட்டாமல், |
| ஏத்தி | துதித்து | சோத்தம் | "நமஸ்காரம், |
| எண்ணி இருப்பாரை | சிந்தித்திருக்குமவர்களை | நாம் அஞ்சுதும் | நாம் (அணுகுவதற்கும்) அஞ்சுகின்றோம்" |
| நமன் தமர் | யமபடர்கள் | என்று | என்றுசொல்லி |
| பார்த்து இருந்து | உயிர்போகுங்காலத்தை எதிர்பார்த்திருந்து | தொடாமை | தொடுதலும் செய்யாதபடி |
| | | நீ காத்தி போல் | ரக்ஷித்தருளுகிறாயன்றோ. |

* * *—பிரானே! நீ என் குற்றங்களைப்பாராதே என்னைக் கைக்கொண் டருள்வதுமாத்திரம் போராது; செய்த குற்றங்களை ஆராய்வதற்கென்று நீ நிய மித்துள்ள யமன் முதலானாரும் என்னருகு வாராதபடி நோக்கியருளவேணு மென்று பிரார்த்தித்தல் இப்பாட்டின் உள்ளுறை.

"உன்சேவடி செவ்விதிருக்காப்பு" என்று உன் திருவடிகட்குப் பல்லாண்டு பாடுவதே தொழிலாய் "ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்று அத்தாணிச் சேவகத்தையே இடைவிடாது சிந்தித்திருப்பவர்களான பாகவதர்களை சரீர விபோகசமயத்தில் யமதூதர்கள் வந்து அணுகக்கூசிக் கடக்கநின்று அஞ்சலிசெய்துவிட்டுப் போகும்படியாக நீ நோக்கியருள்கின்றாயென்றது, இங்ஙனே அடியேனை நோக்கியருளவேணுமென்ற குறிப்பு. 'வடை திருப்பணியாரம் இனிமையாகச் சமைத்திருக்கிறது' என்றால் 'இதுஎனக்கு வேணும்' என்று குறிப்பிடப்படுதல்போலக் கொள்க.

சேவடியேத்தி யெண்ணியிருப்பாரை நமன்தமர் அஞ்சியணுகாமைக்குக் காரணம் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (3-7-14.) "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே, பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யநுணாம் ந வைஷ்ணவாநாம்" = ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கிலதஸ்ய கர்ணமூலே, பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" என்ற ச்லோகத்திலும் "திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம், மறந்தும் புறந்தொழாமாந்தர்— இறைஞ்சியும், சாதுவராய்ப் போதுமின்களென்றான் நமனுந்தன் தூதுவரைக் கூவிச் செவிக்கு." [நான்முகன் திருவந்தாதி-68.] என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்திலும் காண்க. யமனுடைய தூதர்கள் பாசங்களைக் கையிற்கொண்டு தங்கள் கடமையைச் செலுத்தப்புறப்படும்போது யமன் அத்தூதர்களையழைத்து ரஹஸ்யங்கள் சொல்லுமாபோலே காதோடே ஒரு வார்த்தை சொல்லுவான்;— ஓ தூதர்களே! நீங்கள் பாகவதர்களிடத்தில் சிறிதும் அதிகாரம் செலுத்தவேண்டா; அவர்கள்கிட்ட நீங்கள் செல்லவே கூடாது; ஒருகால் அவர்கள் நேர்ப்பட்டால் வணங்கி வலஞ்செய்து பரம ஸாத்விகர்களாய் விலகுங்கோள் என்றானாம். இதனால் பாகவதர்கட்கு யம பயப்ரஸக்தியேயில்லை யென்றதாம். "அவன்தம ரெவ்வினையராகிலும் எங்கோனவன்தமரே யென்றொழிவதல்லால்—நமன்தமரா லாராயப்பட்டறியார் கண்டீர் அரவணைமேல் பேராயர்க்காட்பட்டார் பேர்." என்றார் பொய்கையாழ்வார். "கெடுமிடராய வெல்லாம் கேசவாவென்ன நாளுங், கொடுவினை செய்யுங் கூற்றின்தமர்களுங் குறுககில்லார்" என்றார் நம்மாழ்வார். "மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின் நாமங்கற்ற, ஆவலிப்புடைமைகண்டாய்—நாவலிட்டுழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள்மீதே" என்றார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

சோத்தம்— அஞ்ஜலிபண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சி தோற்றச் சொல்லுவதொரு சப்தவிசேஷமாம் இது. 'ஸ்தோத்ரம்' என்றவடசொல் சோத்தமெனச் சிதைந்துகிடக்கிறது என்பாருமுளர். "சோத்தம் பிரான் இங்கேவாராய்" என்ற பெரியாழ்வார் பிரயோகமுங்காண்க.

அஞ்சுதும்—தன்மைப்பன்மை வினைமுற்று. காத்திபோல்— போல்— உவமைப்பொருளதன்று; ஒப்பில்போலியாய்வந்ததென்க. வடமொழியில்

1, "கிநிவ்ஹி ஐயாராணாம்" இத்தியாதிஸ்தலங்களில் இவசப்தம்போல வாக்யாலங்காரமென்க. .... .... .... .... (௬)

வெள்ளைநீர் வெள்ளத் தணைந்த வரவணைமேல் *
துள்ளுநீர் மெள்ளத் துயின்ற பெருமானே! *
வள்ளலே! யுன்றமர்க் கென்றும் நமன்றமர்
கள்ளர்போல் * கண்ணபுரத்துறை யம்மானே. (எ)

வெள்ளை நீர் திருப்பாற்கடலினுடைய
வெள்ளத்து வெள்ளத்திலே
அணைந்த சேர்ந்த
அரவு அணை மேல் } சேஷசயனத்தின்மேலே
துள்ளு நீர் சிறுதிவலைகள்
மெள்ள மெதுவாகவீச
துயின்ற திருக்கண்வளர்ந்தருள்கின்ற
பெருமானே ஸ்வாமியே!
வள்ளலே உதாரனே!
கண்ணபுரத்துறை அம்மானே!—;
உன் தமர்க்கு உன் அடியார் விஷயத்தில்
நமன் தமர் யமபடர்கள்
என்றும் எக்காலத்திலும்
கள்ளர் போல் { திருடர்போலே மறைந்தொளிப்பர்கள்.

* * *—யமதூதர்கள் பாகவதர்களை அணுகமாட்டார்களென்றது கீழ்ப் பாசுரத்தில். . அவர்கள் கிட்டாதமாத்திரமேயோ? அவர்கள் கள்ளர்போலே மறைந்தொளிந்து கிடக்கும்படியாயன்றோ உன் பிரபாவமிருப்பதுஎன்கிறார் இப் பாட்டில். "சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக்கோன் பொறியொற்றி, வைத்த இலச்சினைமாற்றித் தூதுவரோடியொளித்தார்" என்றார் பெரியாழ்வாரும்.

நோவுபட்டுக் கூவுமடியார்களின் கூக்குரல் செவிப்படுவதற்கு அணித்தாகத் திருப்பாற்கடலிலே சிறுதிவலைகள் துடைகுத்தத் திருவனந்தாழ்வான்மீது உறங்குவான்போல் யோகுசெய்யும் பெருமானே!, அத்தனை தூரமும் பொறாமல் திருக்கண்ணபுரத்திலேவந்து மிக அணியனாகவுள்ள பெருமானே! நான் யமதூதர்களுக்கு அஞ்சவேண்டிற்றுண்டோ? உனக்கு அடியனாருமத்தனையே வேண்டுவது; யமபடர்கள் அவ்வளவிலே ஓடியொளிக்கப் பெறுவர்களன்றோ—என்றதாயிற்று. .... .... .... .... (எ.)

மாணாகி வைய மளந்ததுவும்* வாளவுணன்
பூணாகம் கீண்டதும் ஈண்டு நினைந்திருந்தேன் *
பேணாத வல்வினையேன் இட ரெத்தனையும்
காணேன்நான். * கண்ணபுரத்துறை யம்மானே! (அ)

கண்ணபுரத்துறை அம்மானே!—;
மாண் ஆகி { (முன்பு) வாமநப் பிரமசாரியாகி
வையம் உலகங்களை
அளந்ததுவும் அளந்துகொண்டதையும்
வாள் அவுணன் } வாள்கொண்ட இரணியாசுரனுடைய
பூண் ஆகம் ஆபரணங்களணிந்தமார்பை
கீண்டதுவும் கிழித்தெறிந்ததையும்
ஈண்டு இப்போது

1. சாகுந்தளநாடகம்.

நினைந்திருந்தேன் } நான் அநுஸந்திக்கின்றேன்;
பேணாத { ஆத்மோஜ்ஜீவநத்துக்கு ஒரு நன்மையும் செய்து கொள்ளாதவனும்

வல் வினையேன் நான் } வலியபாபங்களையுடையவனுமான நான்
இடர் எத்தனையும் } தளி பாவத்தையும்
காணேன் { (என்னிடத்தில்) காண்கிறேனில்லை.

* * *—ஆழ்வீர்! யமபடர்கள் பாகவதர்களுக்கு அஞ்சி யொளிப்பர்கள் என்றது உண்மையே; அதனாலென்ன? நீரோ பாவங்களைப் பிரபலமாகச் செய்திருக்கின்றீரே! அவற்றின் பலன்களை அநுபவித்துத் தீரவேண்டுமே என்று எம்பெருமான் திருவுள்ளமானதாகக் கொண்டு, தம்முடைய பாவங்கள் "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோ வொருங்கிற்றுக் கண்டிலமால்" என்றாற்போலே போனவிடந் தெரியாதபடி போயினகாண் என்கிறார் இப்பாட்டில்.

குறள்பிரமசாரியாய் மாவலியின் வலிதொலைத்த சரிதையென்ன, பிரஹ்லாதாழ்வானுக்காக நரசிங்கமூர்த்தியாய்த் தூணில்தோன்றி இரணியனதுலம்பிளந்த சரிதையென்ன இவைபோல்வன மற்றும் பல சரிதைகளையும் நெஞ்சாரநினைத்தேன்; அதனால், என்னுடைய பாவங்களில் லவலேசமும் காணக்கிடைக்காதபடி அற்றொழிந்ததுகாண் என்கிறார்.

பேணாத = தேஹத்திற் காட்டில் வேறுபட்டவனான ஆத்மா ஒருவன் உண்டென்று நினைத்து அவனுக்கு உரிய நன்மைகளை நாடாதவனாயிருந்தவன் நான் என்றபடி. ... ... (௮)

நாட்டினாயென்னை யுனக்குமுன் தொண்டாக *
மாட்டினேனத்தனையே கொண்டேன் வல்வினையை *
பாட்டினாலுன்னையென் நெஞ்சத் திருந்தமை
காட்டினாய் * கண்ணபுரத்துறை யம்மானே! (௯)

கண்ணபுரத்து உறை அம்மானே!—;
முன் முந்துற
என்னை அடியேனை
உனக்கு உனக்கு
தொண்டு ஆக அடியவனாக
நாட்டினாய் நிறுத்திக்கொண்டாய்;
(அதற்குப்பிறகு அடியேன்)
அத்தனையே கொண்டு } அவ்வளவேகாரணமாக

என் வல் வினையை } எனது கொடிய பாவங்களை
மாட்டினேன் மாளச்செய்தேன்;
(அதுவுமன்றி)
பாட்டினால் { இப்படிப்பட்ட பாசுரங்களினால்
உன்னை என் நெஞ்சத்து இருந்தமை } நீ எனதுநெஞ்சினுள் இருக்கிறபடியை
காட்டினாய் விளங்கச்செய்தாய்.

* * *—தம்முடைய பாவங்கள் அகன்றுபோன படியையும் தாம் பெற்ற பேற்றையும் பேசித்தலைக்கட்டுகிறார்.

மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து விஷயாந்தரங்களிலே மண்டிக் கைகழிந்து போன என்னை நிர்ஹேதுகக்ருபையாலே திருமந்திர முணர்த்தித் தொண்டர் திரளிலே நிலைநிறுத்தியருளினாய்; இப்படிப்பட்ட சேஷத்வமாகிற ராஜகுல மாஹாத்மியத்தாலே என்னுடைய பாபங்களை யெல்லாம் அறுத்தொழிக்கப் பெற்றேன், அவ்வளவேயோ? என்நாவினுள் நீ வந்து புகுந்து இனிய பாசுரங்களைப் பாடுவிக்கையாலே என்ஹ்ருதயத்தினுள்ளே நீ நித்யவாஸம் செய்தருள் கின்றாயென்பதையும் நிச்சயித்துக் கொண்டேன் என்றாராயிற்று.

இப்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யான முடிவில் "இவரைப் பாடுவித்த முக்கோட்டை யிருந்தபடி" என்றொரு வாக்கியமுள்ளது. அதன் கருத்தாவது—மலையாளத்தில் 'முக்கோட்டை' என்று ஒரு இடமாம்; அவ்விடத்தில் ஊமைகள் சென்றாலும் அந்நில மிதியால் வெகு அழகாகக் கவி பாடுவர்களாம். (இது முற்கால வழக்கம் போலும்.) திருக்கண்ணபுரத்தை அந்த முக்கோட்டையாக ஆழ்வார் திருவுள்ளம்பற்றினபடி. .... (௯)

கண்டசீர்க் கண்ணபுரத்துறை யம்மானை *
கொண்டசீர்த் தொண்டன் கலியனொலிமாலை *
பண்டமாய்ப் பாடு மடியவர்க் கெஞ்ஞான்றும் *
அண்டம்போ யாட்சி அவர்க்கதறிந்தோமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| கண்ட சீர் | கண்ணாலே ப்ரத்யக்ஷமாகக் காணக்கூடிய செல்வம் பொருந்திய | ஒலி | அருளிச்செய்த |
| கண்ணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே | மாலை | இப்பாமாலையை |
| உறை | நித்யவாஸஞ்செய்தருள்கின்ற | பண்டம் ஆய் | நிதியாகக்கொண்டு |
| அம்மானை | சௌரிப் பெருமான் விஷயமாக, | பாடும் | பாடவல்ல |
| சீர் கொண்ட | ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மி வாய்ந்த | அடியவர்க்கு | ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு |
| தொண்டன் | தாஸனான | எஞ்ஞான்றும் | எப்போதும் |
| கலியன் | திருமங்கைமன்னன் | அண்டம் போய் ஆட்சி | பரமபதத்திலிருந்து கொண்டு வானகமாளப் பெறுவதாகும்; |
| | | அவர்க்கு அது அறிந்தோம் | அவர்கட்கு அதுவே பேறு என்பதை நிச்சயமாகத் தெரிந்து கொண்டோம். |

* * *—திருக்கண்ணபுரத் தெம்பெருமான் விஷயமாகக் கலியன் சொன்ன இப்பாமாலையை நிதியாகக் கொண்டு பாடும் அடியவர்கட்குத் திருநாட்டுச் செல்வத்தை ஆளப்பெறுவதே பேறாகும் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

கண்டசீர்க்கண்ணபுரம்=பரமபதத்தின் சிறப்பை ஸ்ரீவைகுண்டகத்யம் முதலான ஏட்டுப்புறங்களிலே காணலாமத்தனை யொழியக் கண்கொண்டு காணவொண்ணாது; அங்ஙனன்றியே திருக்கண்ணபுரத்தின் சிறப்பு ப்ரத்யக்ஷலக்ஷ்யமென்கை.

கொண்டசீர்த் தொண்டன்—சீர்கொண்ட தொண்டன் என்க: சீர்—ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மியைச் சொன்னபடி. இலங்கைச்செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்து நின்ற விபீஷணாழ்வானை “அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந் - அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்” என்றார் வால்மீகி முனிவர். அப்போது அவ்விபீஷணரிடத்து இருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம்; இராமபிரான் பின்னே காட்டுக்குப் புறப்பட்ட இளையபெருமாள் “லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:—லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:.” எனப்பட்டார்; அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது ஸ்ரீவைஷ்ணவலக்ஷ்மியேயாம். முதலையின் வாயிலே அகப்பட்டுத் துடியாநின்ற கஜேந்திராழ்வான் “ஸ து நாகவர: ஸ்ரீமாந்—ஸ து நாகவர: ஸ்ரீமாந்” எனப்பட்டான்; அப்போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயேயாம். .... .... (கo)

அடிவரவு:—வண்டார் பெரு மற்று பெண் பெற்றார் எத்தி வெள்ளை மாண் காட்டினாய் கண்டசீர் வங்கம்.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
பெரியதிருமொழி எட்டாம்பத்துஉரை
முற்றுப்பெற்றது.

—

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பெரிய திருமொழியின் 6, 7, 8 பத்துக்களில்

ஆழ்வார் அநுஸந்தித்தருளின

# இதிஹாஸ புராண கதைகளின் அடைவும். அக்கதைகள் அமைந்த பாசுரங்களின் தலைப்பும்.

| [கதைகள்.] | [பாசுரங்களின் தலைப்புக் குறிப்பு.] |
|---|---|
| 1. திருமால் மீனாய்த் திருவவதரித்தது, விவரணப் பக்கம் 822. | கொழுங்கயலாய். முந்நீரைமுன்னாள். வானோரளவும்முது. |
| 2. ஹயக்ரீவாவதாரம் செய்தருளியது. | முன்னிவ்வுலகேழுமிருள். |
| 3. ஆமையாய்த் திருவவதரித்தது. வி—ப. 1091. | ஏரார்மலரெல்லாம். மலங்குவிலங்குநெடுவெள்ளம். |
| 4. கடல் கடைந்தது. | அண்ணல்செய்து. கலங்கமுந்நீர்கடைந்து. முந்நீரைமுன்னாள். கலங்கமாக்கடல்கடைந்து. |
| 5. அரனுக்கு நஞ்சுண்ணக்கொடுத்தது. வி—ப. 765. | அண்ணல்செய்தலைகடல். |
| 6. பன்றியாகிப் பாரகங்கீண்டது. வி—ப. 1092. | கிடந்தநம்பி. விடந்தானுடைய. பண்டேனமாயுலகை. சிலம்புமுதல். மார்வில் திருவன். |
| 7. நரசிங்கவுருக் கொண்டதும் இரணியனகலம் பிளந்ததும். | முனையார்சீயமாகி. பைங்கணாளரியுருவாய். அன்றுலகமூன்றினையும். ஓடாவரியாய். என்செய்கேனடியேன். வந்திக்கும்மற்றவர்க்கும். சிங்கமதாயவுணன். விண்டான்விண்புக. சினமேவுமடலரியின். மடலெடுத்த நெடுந்தாழை. உளைந்தவரியும். மாணாகிவையம். |
| 8. உலகமளந்தது. | வண்டுணுநறுமலர். அன்றுலகமூன்றினையும். மான்கொண்டதோல். கிடந்தநம்பி. விடந்தானுடைய. வானவர்தம்துயர்தீர. தொண்டருமமரும். தொழுநீர்வடிவிற்குறள். மாணாகிவையமளந்ததுவும். |
| 9. பரசுராமாவதாரம். வி—ப. 1097. | முனியாய்வந்துமூவெழுகால். கோவாணர்மடிய. முழுதிவ்வையகம். வடிவாய்மழுவேபடையாக. |
| 10. (கார்த்தவீரியனைக் கொன்றொழித்தது.) | மன்னஞ்சவாயிரந்தோள். |

| | |
|---|---|
| 11. தாடகையைமுடித்து மாமுனிவேள்வியைக் காத்தது. | வல்லியிடையாள்பொருட்டாக. |
| 12. சூர்ப்பணகையை அங்கபங்கஞ் செய்தது. | மீதோடிவாளெயிறு. |
| 13. மாய மானை மாய்த்தது. | தெள்ளார்கடல்வாய். இலையார்மலர்ப்பூம்பொய்கை. |
| 14. மராமரமேழெய்தது. வி—ப. 895. | சினவிற்செங்கண். எழுமாமரந்துளைபட. |
| 15. விபீடணனுக்கு அரசளித்தது. | இலையார்மலர்ப்பூ. |
| 16. கடலில் அணைகட்டினது. | கலங்கமாக்கடல்கடைந்தடைத்து. மல்லைமுந்நீரதர்பட. விடையேழன்றடர்த்து. |
| 17. இலங்கை பாழ்படுத்தது. | கல்லாவைம்புலன்கள். மின்னேரிடையார். ஆனைப்புரவி. குடையாவரையால். உரங்காலியன்ற. தோளும்வாளரக்கன். தொண்டருமமரும். வையமெல்லாமுடன். |
| 18. மாலியைமடித்ததும், சுமாலிமுதலானுரைப் பாதாளலோகம் செலுத்தியதும். | பொருந்தாவரக்கர் வெஞ்சமத்து. |
| 19. பலராமாவதாரம். | ஒற்றைக்குழையும் நாஞ்சிலும். |
| 20. தந்தைகாலில் விலங்கறக் கண்ணன் திருவவதரித்தது. | தந்தைகாலில்பெருவிலங்கு. தந்தைகாலில்விலங்கற. தவரிக்கனிவாய்நிலமங்கை. |
| 21. பேய்ச்சி முலையுண்டது. | பகுவாய்வன்பேய். முலைத்தடத்தநஞ்சு. கண்சோரவெங்குருதி. கஞ்சனைக்காய்ந்தானை. சினமேவுமடலரியின். பேய்முலைத்தலை. வெஞ்சினக்களிற்றை. ஆயன்மாயமேயன்றி. மாலாய்மனமே. பெண்ணுனன். |
| 22. சகடுமுறித்தது. | ஊடேறுகஞ்சனொடு. மாலாய்மனமே. குன்றால்மாரிபழுதாக்கி. |
| 23. இரட்டை மருதமரங்களை முறித்தது. வி—ப. 1034. | விடையேழ்வென்று. கணமருவுமயிலகவு. மாலாய்மனமே. இணைமலிமருதினொடு. |
| 24. காளியனுச்சியில் நட்டம்பாய்ந்தது. | வில்லார்விழவில். விடந்தானுடைய |
| 25. கேசியைக் கொன்றது. வி—ப. 1026. | ஆங்குவெந்நரகத்து. அப்பனைத்தாங்கம்பட. திருத்தனைத்திசை. நாங்கணீர்பேசிலும். |
| 26. தேனுகாஸுரவதம். | மாலாய்மனமே. |
| 27. கொக்கின்வாயைக் கிழித்தெறிந்தது. | புள்வாய்பிளந்தபுனிதா. |

| | |
|---|---|
| 28. விளங்கனி வீழ்த்தது. | அம்புருவவரிநெடுங்கண். வெஞ்சினக்களிற்றை.<br>குன்றால்மாரிபழுதாக்கி. |
| 29. குன்றெடுத்துக்<br>கோநிரைகாத்தது. | மிடையாவந்தவேல்மன்னர். அன்றாளித்திவில்.<br>குடையாவரையால். நின்றவரையும். கடுங்கால்மாரி.<br>குன்றால்மாரிதடு. விண்டான்விண்புக.<br>கரையெடுத்துசுரிசங்கும். குன்றால்மாரிபழுதாக்கி.<br>புயலுறவரைமழை. |
| 30. ஆய்ச்சியர்வளைகளைக்<br>கொண்டது. | மூலைத்தடத்தஞ்சுண்டு. |
| 31. குடக்கூத்தாடினது. | சொல்லாய்திருமார்பா. |
| 32. குரவை ஆய்ச்சிய<br>ரோடு கோத்தது.<br>(ராஸக்ரீடை.) | கும்பமிகுமதவேழம். |
| 33. ஏழ்விடை செற்றது. | உறியார்வெண்ணெயுண்டு. விடையேழ்வென்று.<br>குடையாவரையால். கறுத்துக்கஞ்சனை.<br>கும்பமிகுமதவேழம். அங்கமாமணிமாட.<br>மாலாய்மனமே. குன்றால்மாரிபழுதாக்கி.<br>வியமுடைவிடையினம். இணைமலிமருதிறொடு.<br>விடையேழன்றடர்த்து. |
| 34. குவலயாபீட<br>யானையைக் கொன்றது. | பகுவாய்வன்பேய். பூணுதனலும். கும்பமிகுமதவேழம்.<br>ஊடேறுகஞ்சனொடு. தாராயதண்துளபம்.<br>அரிவிரவுமுகில். வருந்தாதிருநீ. மாலாய்மனமே. |
| 35. மல்லர்களை<br>மடித்தது. | கல்லாவைம்புலன்கள். வில்லார்விழவில்வடமதுரை.<br>ஊடேறுகஞ்சனொடு. மாலாய்மனமே. |
| 36. கஞ்சனது<br>வில்விழவைச் செற்றது. | ஊடேறுகஞ்சனொடு. |
| 37. கஞ்சனைக்<br>கொன்றது. | வில்லார்விழவில். கஞ்சனைக்காய்ந்தானை.<br>ஊடேறுகஞ்சனொடு. |
| 38. வாணன்<br>தோள்களைத்துணித்தது. | வள்ளிகொழுநன்முதலாய. |
| 39. வாணனுக்கு<br>அருள் புரிந்தது. | வருந்தாதிருநீ. |
| 40. அரன் அஞ்சியோடு<br>மாறு ஆழியை விசைத்தது. | உடையானையொலிநீர். |
| 41. ஸத்யபாமைக்காகக்<br>கற்பகத்தரு கொணர்ந்தது.<br>வி—ப. 853. | கட்டேறுநீள்சோலை. |
| 42. காண்டவ வனத்தைத்<br>தீ மூட்டிவிட்டது.<br>வி—ப. 852. | கட்டேறுநீள்சோலை. |
| 43. பாண்டவர்க்காகத்<br>தூது சென்றது. | போதார்தாமரையாள். குன்றால்மாரிபழுதாக்கி. |

| | |
|---|---|
| 44. பார்த்தன் தேரில் பாகனாயிருந்தது. வி—ப. 818. | பாரையூரும். மிடையாவந்தவேல். மண்ணின்மீபாரம். உரங்களாலியன்ற பாரித்தெழுந்த- |
| 45. பாரதப்போரில் சங்கு ஊதினது. | பந்தார்விரலாள். கயங்கொள்புண்டலை. |
| 46. ஜயத்ரதனை மடிவித்தது. (ஆழியால் இரவியைமறைத்தது.) வி—ப. 817. | வெள்ளைப்புரவித்தேர். அகிற்குறடும். விடையேழன்றடர்த்து. |
| 47. ஸாந்தீபிநிபுத்திரனை மீட்டுக் கொடுத்தது. வி—ப. 816. | முந்துநூலும்முப்புரிநூலும். |
| 48. கஜேந்திரனைக் காத்தருளியது. | தூவாயபுள்ளூர்ந்து. குன்றால்மாரிதடுத். குலத்தலையமதவேழம். இலையார்மலர்ப்பூ. கைம்மானமதயானை. |
| 49. அரனது சாபத்தை அகற்றினது. வி—ப. 845 | ஆறும்பிறையுமரவமும். பெடையடர்த்தமடவன்ன ,, |
| 50. அரனுக்குத் தன் திருமேனியில் கூறு கொடுத்தது. வி—ப. 977. | வானார்மதிபொதியும். எங்களுக்கருள்செய்கின்ற. திருத்தனைத்திசை. |
| 51. சிவன் திரிபுரமெரித்த போது அந்தர்யாமியாகவும் அம்பாகவும் அமைந்தது. வி—ப. 766. | குழல்நிறவண்ண. |
| 52. மதிகோள் விடுத்தது. வி—ப. 787. | தீவாய்வல்வினையார். கனிசேர்ந்திலங்கு. தங்கமாமணிமாட. பெற்றார்பெற்றொழிந்தார். |
| 53. காமனுக்குத் தந்தையானது. வி—ப. 1047. | வாமனன்கற்கி. ஆமையாகியரியாகி. |
| 54. உலகமுண்டதும் ஆலிலைத்துயின்றதும். | பாரொழுகடலெழு. அம்பரமும்பெருநிலனும். வற்றாமுதுநீரொடு. தூயாய்சுடர். வண்டமரும்மலர். பெருநீரும் விண்ணும். நிலகொடுவெய்யில். சிறியாயோர்பிள்ளையுமாய். வெள்ளத்துள்ளோராலிலை. மெய்ந்நலத்தவத்தை. |
| 55. கல்கியவதாரம். வி—ப. 1105. | வாமனன்கற்கி. மீனோடாமைகேழல். |

கதைக் குறிப்பு முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

